

# விழிப்புணர்வு

தியானத்தின் விஞ்ஞான விளக்கம் முழுவதுமே மையப்படுதல், மையத்தை நோக்கி செல்லுதல், அங்கு நிலைகொள்ளுதல், அங்கு வசித்தல் என்பதைத் தவிர வேறொன்றுமல்ல. அதன்பிறகு முழுப் பார்வையும் மாறிப்போகும்.



கவிதா
பப்ளிகேஷன்



ISBN: 978-81-8345-104-8
9 788183 451048

ஓஷோ
விழிப்புணர்வு
கவிதா



# விழிப்...

சமநிலை...





ஓஷோ

புது வாழ்விற்கான பார்வைகள்

**VIZHIPPUNARVU**
Tamil Translation Copyright © 2008



| | | |
|---|---|---|
| Translated by | : | **Shyamanand** |
| Coordination by | : | **DhyanSanjay** |
| Publishing Editor | : | **Sethu Chockalingam** |
| First Edition | : | December, 2008 |
| Pages | : | XII + 260 = 272 |
| Price | : | **Rs. 150.00** |
| Printed at | : | ZIGMA Graphics, Chennai - 5 |

Published by :
**KAVITHA PUBLICATION**
Post Box No. 6123,
#8, Masilamani Street, Pondy Bazaar,
T. Nagar, Chennai - 600 017
Ph : 044 - 2436 4243 / 2432 2177 Tele Fax: 044-24364243
e-Mail: kavitha_publication@yahoo.com
website: www.kavithapublication.com

ISBN : **978-81-8345-104-8**



# வாசக நெஞ்சங்களுக்கு...

உண்மையான உணர்வுகளோடு நமக்குள்ள தொடர்பை நாம் இழந்துவிட்டோம். நமது அதிவேகமும், பரபரப்பும், ஓட்டமும், போட்டியும், அநாவசிய தேவைகளின் அதிகரிப்பும் நமது சக்தியை பெரிதும் உறிஞ்சி விடுகின்றன.

நுண்ணுணர்வுகளை உணரக்கூடிய தளர்வும், கூர்மையும், தீவிரமும் நம்மிடம் இல்லை. அப்படி சக்தியோடிருக்க நமக்கு வழியும் தெரியவில்லை.

இந்நிலையில் நாம் உணர்வுகளுக்கு பதிலாக, அதைக் குறிக்கும் வெற்றுச் சொற்களில் சிக்கிக் கிடக்கிறோம்.

அந்த சொற்களின் உணர்வுகளை நாம் இழந்துவிட்டோம். அதனால் மதம், அரசியல், அதிகாரம், செல்வம் படைத்த சுயலாபக் கும்பல், அதற்குத் தவறான விளக்கங்களைக் கூறி அதை நம்மை நம்ப வைத்து, நம்மைஆண்டுகொண்டிருக்கின்றனர்.

ஓஷோ இப்போது நம்மை அந்த முக்கியமான சொற்களின் நிஜ உணர்வுகளுக்குக் கூட்டிச் செல்ல முயற்சிக்கிறார்.

நாம் எப்படி தவறான விளக்கங்களில் சிக்கிக் கிடக்கிறோம் என்று சிக்கல் எடுக்கிறார். மேலும் அந்த உணர்வுகளின் உச்சிகளைத் தொட்டுக்காட்டி விழிப்பூட்டுகிறார்.

இதுதான் இந்த புதியதொரு வாழ்க்கைக்கான பார்வைகள் புத்தகவரிசை. இவை புத்தகங்களல்ல விழிப்புணர்வூட்டும் ஓர் விடியலின் வைகறை அனுபவங்கள்.

இவை மூலம் மன இருளிலிருந்து விழிப்புணர்வு வெளிச்சத்திற்கு வர அனைவரையும் அழைக்கிறேன்.

நன்றியும் அன்பும்
**தியான் சித்தார்த்**

*தியானத்தின்*
*விஞ்ஞான விளக்கம் முழுவதுமே*
*மையப்படுதல், மையத்தை நோக்கிச் செல்லுதல்,*
*அங்கேயே நிலை கொள்ளுதல், அங்கு வசித்தல் என்பதைத்*
*தவிர வேறொன்றுமல்ல.*
*அதன்பிறகு முழு பார்வையும் மாறிப்போகும்*

# பொருளடக்கம்

THE VISION FOR A NEW MAN



Meditation
The only way

– Osho

# முன்னுரை

மனிதனைப் பற்றி நாம் புரிந்து கொள்ள வேண்டிய முக்கியமான விஷயம் என்னவென்றால், மனிதன் தூங்கிக் கொண்டிருக்கின்றான் என்பது தான். அவன் விழித்துக் கொண்டிருப்பதாக நினைக்கும் போதும் கூட அவன் விழித்துக் கொண்டு இல்லை. அவனது விழிப்புநிலை என்பது மிகவும் மெலியது; அவனது விழிப்புநிலை மிகவும் சிறியதாக இருப்பதால், அதைப் பற்றி அவன் அறிய முடியவில்லை. அவனது விழிப்புநிலை என்பது அழகானதொரு பெயர் மட்டும் தானே தவிர, அது முற்றிலும் வெறுமை நிறைந்தது.

நீங்கள் இரவில் தூங்குகிறீர்கள், நீங்கள் பகலில் தூங்குகிறீர்கள் - பிறப்பிலிருந்து இறப்புவரை நீங்கள் உங்களது தூங்கும் முறையை மாற்றிக் கொண்டு தான் இருக்கிறீர்களே தவிர, நீங்கள் ஒருபோதும் உண்மையில் விழிப்புடன் இல்லை. உங்களது அகக்கண்கள் திறக்காத வரையில் - உங்களது உள் பகுதி முழுவதும் வெளிச்சத்தால் நிறையாத வரையில், நீங்கள் உங்களையே பார்க்காத வரையில், நீங்கள் யார் என்று அறியாத வரையில் - நீங்கள் விழித்துக் கொண்டிருப்பதாக நினைக்காதீர்கள். மனிதன் வாழ்வில் உள்ள மிகப்பெரிய கற்பனை இதுதான். மேலும், நீங்கள் ஏற்கனவே விழிப்புடன் இருப்பதை நீங்கள் ஏற்றுக் கொள்ளும் போது, அதன்பிறகு விழிப்புடன் இருப்பதற்கு முயற்சி மேற்கொள்ள வேண்டும் என்கிற கேள்விக்கே இடமில்லாமல் போய் விடுகிறது.

உங்களது உள்ளத்தில் மிகவும் ஆழமாகப் பதிய வேண்டியதொரு விஷயம்என்னவென்றால், நீங்கள் தூக்கத்தில் - முழுமையான தூக்கத்தில் இருக்கிறீர்கள் என்பது தான். பொழுது விடிந்து பொழுது போனால், நீங்கள் கனவு கண்டு கொண்டு தான் இருக்கிறீர்கள். சில நேரங்களில் நீங்கள் கண்களைத் திறந்து கொண்டு கனவு காண்கிறீர்கள், சில நேரங்களில் கண்களை மூடிக் கொண்டு கனவு காண்கிறீர்கள். ஆனால், எப்போதும் நீங்கள் கனவு தான் காண்கிறீர்கள் - நீங்களே கனவாகத் தான் இருக்கிறீர்கள். இன்னமும் நீங்கள் உண்மையில் இருப்பவராக இல்லை.

எனவே, கனவில் நீங்கள் எதைச் செய்தாலும், அது அர்த்தமற்றதாகத் தான் இருக்கும்; எதை நீங்கள் சிந்தித்தாலும், அது கருத்தற்றதாகத் தான் இருக்கும். நீங்கள் செய்வதெல்லாம், உங்களது கனவின் ஒரு பகுதியாகத் தான் இருப்பதால், அது உண்மையில் அங்கே என்ன உள்ளதோ அதைப் பார்ப்பதற்கு ஒரு போதும் அனுமதிப்ப

தில்லை. எனவே, புத்தர்கள் எல்லோரும் ஒரே ஒரு விஷயத்தை மட்டுமே வலியுறுத்தி வந்தார்கள் : விழித்திரு! தொடர்ந்து, பல நூற்றாண்டுகளாக அவர்களின் முழு போதனையையும் ஒரே ஒரு வாக்கியத்தில் அடக்கிவிடலாம்; விழிப்புடன் இரு! என்பது தான் அது. எனவே, அவர்கள் இதற்கான வழிமுறைகளையும், உபாயங்களையும் கண்டுபிடித்தனர்; உங்களுக்கு விழிப்புணர்வு என்னும் அதிர்ச்சியை உண்டாக்குவதற்கான எல்லாவிதமான சூழ்நிலைகளையும், இடத்தையும், சக்தி நிலைகளையும் உருவாக்கினார்கள்.

ஆம், உங்களை அதிர்ச்சிக்குள்ளாக்காமல், உங்களது அஸ்திவாரத்தை ஆட்டம் காணச் செய்யாமல், உங்களை விழிப்பு நிலைக்கு கொண்டுவர முடியாது. உங்களது தூக்கம் மிகவும் நெடியதாக இருந்து வந்துள்ளதால், அது உங்கள் உயிரின் மையம் வரை சென்றடைந்துவிட்டது. நீங்கள் அதில் ஊறிப் போய்விட்டீர்கள். உங்களது உடலின் ஒவ்வொரு செல்லும், உங்களது மனதில் ஒவ்வொரு இழையும் தூக்கம் நிறைந்து உள்ளது. இது ஒரு சிறிய விஷயம் அல்ல. ஆகவே, உஷாராக இருப்பதற்கும், கவனிப்புடன் இருப்பதற்கும், கண்காணிப்புடன் இருப்பதற்கும், ஒரு சாட்சியாளனாக மாறுவதற்கும் அதிகப்படியான முயற்சி தேவை.

இந்த உலகில் உள்ள புத்தர்கள் எல்லாம் ஒத்துப் போகின்ற ஒரே விஷயம் இதுதான் - மனிதன் இப்போது இருக்கின்ற நிலையில், அவன் தூங்கிக் கொண்டிருக்கிறான். மேலும், மனிதன் இருக்க வேண்டிய நிலை என்னவென்றால், அவன் விழிப்புடன் இருக்க வேண்டிய நிலை தான். விழிப்புநிலை என்பது தான் அவர்களின் போதனைகளின் குறிக்கோள், விழிப்புநிலை என்பது தான் அவர்களின் போதனைகளின் ருசி. ஜரதுஷ்ரர், லா வோத்ஸு, இயேசு, புத்தர், பஹா யுதீன், கபீர், நானக், இப்படி விழிப்புநிலை அடைந்த எல்லோரும் ஒரே ஒரு கருத்தை, வெவ்வேறு மொழிகளில், வெவ்வேறு உருவகங்களுடன் கூறி வந்திருக்கிறார்கள். ஆனால், அவர்களின் பாடல் ஒன்று தான். கடல்நீரின் சுவை எல்லா இடத்திலும் ஒன்றாக இருப்பதைப் போல - நீங்கள் கடல்நீரை வடதிசையில் சுவைத்தாலும் அல்லது கீழ்திசையில் இருந்து சுவைத்தாலும் அல்லது மேற்கு திசையில் இருந்து சுவைத்தாலும், அந்தக் கடல்நீர் எப்போதும் உப்புச் சுவையுடன் தான் இருக்கும் - அதே போன்று, புத்த நிலையின் சுவை என்னவென்றால், அது விழிப்புநிலை தான்.

ஆனால், நான் ஏற்கனவே விழித்துக் கொண்டு தானே இருக்கிறேன் என்று நீங்கள் நம்பிக் கொண்டிருந்தால், நீங்கள் விழிப்புடன் இருப்பதற்கு எந்த ஒரு முயற்சியும் எடுக்க மாட்டீர்கள். அதன்பிறகு, ஏதாவது முயற்சி செய்ய வேண்டும் என்கிற கேள்விக்கே இடமிருக்காது, ஏன் கவலைப்பட வேண்டும்?



மேலும், நீங்கள் உங்களது கனவுகளில் இருந்து மதங்கள், கடவுள்கள், பிரார்த்தனைகள், மதச் சடங்குகள் ஆகியவற்றை உருவாக்கி விட்டீர்கள். மற்ற விஷயங்கள் எப்படி உங்களது கனவின் ஒரு பகுதியாக உள்ளனவோ, அப்படித் தான் உங்களது கடவுள்களும் உள்ளனர். உங்களது அரசியல், உங்களது கனவின் ஓர் அங்கம் தான்; உங்களது மதங்கள், உங்களது கனவின் ஒரு பகுதி தான்; உங்களது கவிதை, உங்களது ஓவியம், உங்களது கலை - இப்படி, நீங்கள் எதைச் செய்தாலும், நீங்கள் தூக்க நிலையில் இருப்பதால், நீங்கள் உங்களுக்குச் சொந்தமான அந்த மனநிலையில் தான் காரியங்களைச் செய்வீர்கள்.

உங்களது கடவுளர்கள், உங்களிலிருந்து அந்நியமானவர்கள் அல்ல. அவர்களை யார் படைப்பார்கள்? அவர்களுக்கு உருவமும், வடிவமும், வண்ணமும் கொடுப்பது யார்? நீங்கள் தான் அவர்களை உருவாக்குகிறீர்கள், நீங்கள் தான் அவர்களை சிலையாக வடிக்கிறீர்கள். அவர்களும் உங்களைப் போலத் தான் கண்களைக் கொண்டுள்ளனர், உங்களைப் போல் தான் மூக்குகளைக் கொண்டுள்ளனர் - அதே போன்று, உங்களைப் போலத் தான் மனதினையும் கொண்டுள்ளனர்! பழைய வேதாகமத்தில் உள்ள கடவுள், "நான் மிகவும் பொறாமை பிடித்த கடவுள்," என்று கூறுகிறார். இப்போது, இப்படிப்பட்ட பொறாமை குணம் படைத்த கடவுளைப் படைத்தது யார்? கடவுள் பொறாமையுள்ளவராக இருக்க முடியாது. மேலும், அப்படி அவரே பொறாமை உள்ளவராக இருந்தால், அதன்பிறகு நாம் எல்லோரும் பொறாமையோடு இருப்பதில் என்ன தவறு உள்ளது? கடவுளே பொறாமை குணம் படைத்தவராக இருக்கும் போது, நீங்கள் மட்டும் பொறாமை கொள்ளும் போது அதை ஏன் தவறானதாக எண்ண வேண்டும்? பொறாமை என்பது தெய்வீகம் தானே!

பழைய ஆகமத்தில் உள்ள கடவுள், "நான் ஒரு கோபக்கார கடவுள்! நீங்கள் எனது கட்டளைகளைப் பின்பற்றி நடக்காவிட்டால், நான் உங்களை அழித்துவிடுவேன். நீங்கள் காலாகாலத்திற்கும் நரக நெருப்பில் தூக்கி எறியப்படுவீர்கள். மேலும், நான் பொறாமை குணம் படைத்தவன் ஆகையால், நீங்கள் வேறு யாரையும் வழிபடக் கூடாது. என்னால் அதை பொறுத்துக் கொள்ள முடியாது," என்று கூறுகிறார். இப்படிப்பட்ட கடவுளைப் படைத்தது யார்? நமக்குச் சொந்தமான பொறாமை, நமக்குச் சொந்தமான கோபம் ஆகிய இவற்றின் மூலமாகத் தான், நீங்கள் இப்படிப்பட்டதொரு கடவுள் உருவத்தை உருவாக்கி இருக்க வேண்டும். இது, உங்களின் நீட்டிப்பு தான்; இது, உங்களின் நிழல்

தான். இது, உங்களைத் தான் எதிரொலிக்கிறதேயொழிய, வேறு யாரையும் அல்ல. இதே கதை தான் எல்லா மதங்களிலும் உள்ள எல்லாக் கடவுள்களுக்கும் பொருந்தும்.

இந்த காரணத்தினால் தான், புத்தர் ஒருபோதும் கடவுளைப் பற்றி பேசியதில்லை. அவர், "தூங்கிக் கொண்டிருக்கிற மனிதர்களிடம் கடவுளைப் பற்றி பேசுவதில் என்ன முக்கியம் இருக்கப் போகிறது?" என்று கூறுவார். அவர்கள் தூக்கத்தில் தான் கவனிப்பார்கள். அவர்களிடம் கூறப்பட்டதைப் பற்றி, அவர்கள் கனவு தான் காண்பார்கள். மேலும் அவர்கள், அவர்களுக்குச் சொந்தமான கடவுளைத் தான் உருவாக்குவார்கள். மேலும், அது முற்றிலும் பொய்யானதாகவும், முற்றிலும் சக்தியற்றதாகவும், முற்றிலும் அர்த்தமற்றதாகவும் தான் இருக்கும். இப்படிப்பட்ட கடவுள்களை வைத்துக் கொள்ளாமல் இருப்பது மிகவும் நல்லது.

அதனால் தான், புத்தர் கடவுளைப் பற்றி பேசுவதில் அதிக ஆர்வம் காட்டவில்லை. அவரது முழு ஆர்வமும் உங்களை தட்டி எழுப்பி விழிப்படையச் செய்வதாகத் தான் இருந்தது.

ஒரு மெய்ஞானம் பெற்ற புத்த குருவைப் பற்றி கூறப்பட்டது இது. அவர் ஒருநாள் மாலையில், ஒரு நதியின் கரையில் உட்கார்ந்து கொண்டிருந்தார். அந்த தண்ணீரின் ஓசையையும் அனுபவித்துக் கொண்டிருந்தார். அப்போது, ஒருவன் அங்கே வந்து, அவரிடம், "உங்களது மதத்தின் சாரத்தை ஒரே ஒரு வார்த்தையில் நீங்கள் எனக்கு கூற முடியுமா?" என்று கேட்டான்.

அந்த குருவோ, அந்தக் கேள்வியை அவர் காது கொடுத்து கேட்காதவர் போன்று அமைதியாக, முற்றிலும் அமைதியாக இருந்தார். உடனே அந்த ஆள், "நீங்கள் என்ன செவிடா?" என்று கேட்டான்.

உடனே அந்த குரு, "நான் உனது கேள்வியையும் கேட்டேன். மேலும், நான் அதற்கு பதிலும் கூறி விட்டேன்," என்றார். "மௌனம் தான் அதற்கான பதில். நான் அமைதியாக இருந்தேன் - அந்த மௌனம், அந்த இடைப்பட்ட அமைதி தான் எனது பதில்," என்றார்.

அதற்கு அந்த மனிதர், "இப்படிப்பட்ட புதிரானதொரு பதிலை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. இன்னும் கொஞ்சம் தெளிவாகக் கூற முடியுமா?" என்று கேட்டான்.

அந்த குரு மீண்டும், "தியானம்," என்று எழுதினார். ஆனால், இந்த முறை அவர் அதை பெரிய எழுத்தில் எழுதினார். இதைப் பார்த்த அந்த மனிதன், ஆச்சரியமும் கோபமும் அடைந்தான். அவன் அவரிடம், "நீங்கள் இன்னும் கொஞ்சம் தெளிவாகக் கூற முடியுமா?" என்றான்.



உடனே அந்த குரு பெரிய எழுத்தில், தனித்தனியான எழுத்தில், "தி யா ன ம்," என்று எழுதினார்.

இதைப் பார்த்த அந்த மனிதன், "நீங்கள் பைத்தியக்காரர் போல் தெரிகிறது!" என்றான்.

அதற்கு அந்த குரு, "நான் ரொம்ப தூரம் இறங்கி வந்துவிட்டேன். எனது முதல் பதில் தான் மிகவும் சரியான பதில். இரண்டாவது, அந்த அளவுக்கு சரியானதல்ல. மூன்றாவது, கொஞ்சம் தவறானது. நான்காவது, மிகவும் தவறாகப் போய்விட்டது. ஏனெனில், 'தியானம்' என்று நான் பெரிய எழுத்தில் எழுதியதன் மூலம், நீ அதை ஒரு கடவுளைப் போன்று உருவகப்படுத்திக் கொள்வாய்," என்றார்.

அதனால் தான், கடவுள் என்பதில் உள்ள 'க' என்பது பெரிய எழுத்தில் எழுதப்படுகிறது. எப்போதெல்லாம் நீங்கள் ஏதோ ஒன்றினை உயர்ந்ததாகவும், முடிவானதாகவும் காட்ட நினைத்தால், நீங்கள் அதை பெரிய எழுத்தில் எழுதுகிறீர்கள். எனவே, இப்போது நான் பாவம் செய்துவிட்டேன்," என்று கூறிவிட்டு, அவர் தான் எழுதிய எல்லா வார்த்தைகளையும் அழித்துவிட்டு, அவனிடம், "தயவுசெய்து எனது முதல் பதிலை கூர்ந்து கவனி. அப்போது மட்டுமே நான் சொல்வது உண்மையாகும்," என்றார்.

மௌனம் என்னும் திறந்த வெளியில் தான் ஒருவன் விழிப்பு நிலையை அடைய முடியும். அதே போன்று கூச்சல் நிறைந்த மனம் என்னும் திறந்த வெளியில், ஒருவன் தூங்கத் தான் முடியும். உங்களது மனம் இடைவிடாது பேசிக் கொண்டே இருந்தால், நீங்கள் தூங்கிக் கொண்டிருப்பதாகத் தான் அர்த்தம். அமைதியாக உட்கார்ந்திருக்கும் போது, உங்களது மனம் என்பது மறைந்துவிட்டால், உங்களுக்குள் மனம் என்பது இல்லாமல் - உங்களால் இந்தப் பறவைகளின் ஒலியைக் கேட்க முடியுமெனில், அந்த அமைதியில், உங்களது மண்டைக்குள் மனம் என்பது வேலை செய்யாமல் அந்தப் பறவைகளின் ஒலியை, கிரீச்சிடுதலை மட்டுமே கேட்க முடிந்தால், அந்த அமைதியில், உங்களுக்குள் விழிப்புணர்வு மேலே எழுந்து வரும். அது, வெளியில் இருந்து வராது. அது, உங்களுக்குள் இருந்து தான் எழுந்து வரும்; அது, உங்களுக்குள் தான் வளரும். இப்படி நடக்கவில்லையென்றால், நீங்கள் தூங்கிக் கொண்டிருக்கிறீர்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள்.





# புரிந்து கொள்ளல்

நான் ஒருபோதும் துறவறம் என்கிற வார்த்தையை உபயோகிப்பது இல்லை. வாழ்க்கையில் மகிழ்ச்சி அடையுங்கள் - அன்பில், தியானத்தில், இந்த உலகின் அழகில், இந்த இயற்கையென்னும் பேரானந்தத்தில் - இப்படி எல்லாவற்றிலும் மகிழ்ச்சி அடையுங்கள்! சாதாரணமானவற்றையும், புனிதமானதாக மாற்றுங்கள். இக்கரையை அக்கரையாக மாற்றுங்கள்; இந்த பூமியை சொர்க்கபுரியாக மாற்றுங்கள்.

அதன்பின்னர், மறைமுகமாக ஒருவித துறவு நிலை நிகழ ஆரம்பிக்கும். ஆனால், அது தானே நிகழ்வது; நீங்கள் அதை நிகழ்த்துவதில்லை. அது, நீங்கள் செய்கின்ற ஒரு காரியமாகாது. அது, தானே நிகழ்கின்ற ஒரு நிகழ்வு. நீங்கள் உங்களது முட்டாள்தனங்களை துறவு கொள்ள ஆரம்பித்துவிடுவீர்கள்; நீங்கள் குப்பைகளை விட்டொழிக்க ஆரம்பித்து விடுவீர்கள். அர்த்தமற்ற உறவுகளை நீங்கள் துறந்துவிட ஆரம்பிப்பீர்கள். உங்களுக்கு ஆத்ம திருப்தியைத் தராத வேலைகளை நீங்கள் விட்டுவிடுவீர்கள். உங்களால் வளர்ச்சி பெற முடியாத இடங்களை நீங்கள் துறவு கொண்டுவிடுவீர்கள். ஆனால், இதை நான் துறவறம் என்று கூற மாட்டேன்; இதை நான் புரிந்து கொள்ளுதல், விழிப்புணர்வு என்று தான் அழைக்கிறேன்.

> ஒவ்வொரு நொடிப்பொழுதும் நாம் நம்முடனேயே முரண்பட்டுக் கொண்டிருக்கிறோம். நமது செயல் ஒரு திசையில் செல்கிறது, சிந்தனை மற்றொரு திசையில் செல்கிறது, உணர்வுகள் வேறு எங்கோ செல்கிறது. நாம் பிரிந்து பிரிந்து செல்கிறோம், நாம் மேலும் மேலும் பிளவுபட்டுச் செல்கிறோம். அது தான் துன்பம் ஆகும் - நாம், நமக்குள் ஒருங்கிணைந்து இருப்பதில்லை; நாம், நமக்குள் ஒற்றுமையை இழந்துவிட்டோம்.

நீங்கள் உங்கள் கைகளில் கூழாங்கற்களை வைத்துக் கொண்டு, அவைகளை நீங்கள் வைரங்கள் என்று எண்ணிக் கொண்டிருந்தால், நான் அந்த கூழாங்கற்களை தூக்கி எறியும்படி

கூற மாட்டேன். நான் உங்களிடம், "கொஞ்சம் உஷாராக இருந்து, மீண்டும் உங்கள் கையில் உள்ளதைப் பாருங்கள்!" என்று தான் கூறுவேன். நீங்களாகவே அவைகள் வைரங்கள் அல்ல என்பதைக் கண்டு கொண்டுவிட்டால், அதன்பிறகு அதை துறவு கொள்ள வேண்டிய அவசியம் உள்ளதா? அவைகள் தானாகவே உங்கள் கைகளில் இருந்து கீழே விழுந்துவிடும். உண்மையில், இன்னமும் நீங்கள் அதை சுமந்து செல்ல விரும்பினால், நீங்கள் அதற்கு பெரிய முயற்சியை கொண்டுவர வேண்டும். அதற்கு, நீங்கள் பெரியதொரு மன திடத்தை, அவைகளை இன்னமும் சுமந்து செல்வதற்கான மன திடத்தை கொள்ள வேண்டும். ஆனாலும் கூட, நீங்கள் அதை நீண்ட காலம் கடந்து செல்ல முடியாது; நீங்கள் அது வெறும் கூழாங்கல் தான் என்றும், அது பயனற்றது என்றும், அர்த்தமற்றது என்றும் கண்டு கொண்டால், அதன்பிறகு நீங்கள் அதை நிச்சயமாக வெளியே தூக்கி எறிந்து விடுவீர்கள்.

எனவே, இப்படி உங்களது கைகளில் ஒன்றும் இல்லாமல் வெறுமையாக ஆகிவிடும் போது, நீங்கள் உண்மையான பொக்கிஷங்களைத் தேட முடியும். மேலும், உண்மையான பொக்கிஷங்கள் எங்கோ எதிர்காலத்தில் இல்லை. உண்மையான பொக்கிஷங்கள், இந்த நொடிப் பொழுதே, இங்கேயே இருக்கின்றன.

## மனிதனும் எலிகளும்

*விழிப்புநிலைதான் வாழ்க்கைக்கான பாதை.*

*தான் ஏற்கனவே இறந்துவிட்டதைப் போன்று முட்டாள் தூங்குகிறான்;*

*ஆனால் ஒரு குரு எப்போதும் விழித்துக் கொண்டே இருக்கிறார்*
*அதனால் அவர் எப்போதும் வாழ்கிறார்.*

*அவர் கவனிக்கிறார். அவர் தெளிவாக இருக்கிறார்.*

*அவர் எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறார்! ஏனெனில் நிறைகவனம் தான் வாழ்க்கை என்பதை அவர் காண்கிறார்.*

*விழிப்படைந்தவர்களின் பாதையைப் பின்பற்றி அவர் நடப்பதால் அவர் எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறார்.*

*விடுதலையையும், சந்தோஷத்தையும் தேடி, மாபெரும் பாதுகாப்புடன் அவர் தியானம் செய்கிறார்.*

- கௌதமபுத்திரன் தம்மபதத்திலிருந்து



நம்மைச் சுற்றிலும் என்ன நடக்கிறது என்று முற்றிலும் கவனமில்லாமல் தான் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். ஆம், நாம் காரியங்களைச் செய்வதில் மிகவும் திறமையானவர்களாக ஆகிவிட்டோம். நாம் எதைச் செய்தாலும், அதைத் திறமையுடன் செய்வதற்கு எந்தவிதமான விழிப்புணர்வும் அவசியமில்லாதபடிக்கு திறமைமிக்கவர்களாக ஆகிவிட்டோம். அந்தச் செயல் இயந்திரத்தனமாக, தானியங்கித்தனமாக ஆகிவிட்டது. நாம் இயந்திர மனிதன் போன்று செயல்படுகிறோம். நாம் இன்னமும் மனிதர்களாக இல்லை; நாம் இயந்திரங்களாகத் தான் இருக்கிறோம்.

மனிதன், இப்போது இருப்பது ஒரு இயந்திரம் போன்று தான் என்கின்ற இந்த கருத்தை ஜார்ஜ் குர்ட்ஜியப் மீண்டும் மீண்டும் கூறுவதுண்டு. இது, பலருக்குத் தங்களை தரம் தாழ்த்துவதாகத் தெரிந்தது. ஏனெனில், யாரும் தன்னை ஒரு இயந்திரம் என்று அழைக்கப்பட விரும்புவதில்லை. அதே இயந்திரங்களை நீங்கள் கடவுள்கள் என்று அழைத்தால், அவர்கள் எழுச்சி பெற்றவர்களாகி மிகவும் சந்தோஷமடைகின்றனர். ஆனால் குர்ஜியப், மக்களை இயந்திரங்கள் என்று தான் அழைப்பார். மேலும், அவர் அழைப்பது சரிதான். நீங்கள் உங்களை கூர்ந்து கவனித்தால், நீங்கள் எந்த அளவுக்கு இயந்திரத்தனமாக நடந்து கொள்கிறீர்கள் என்பதை அறிந்து கொள்வீர்கள்.

ரஷ்ய உடலியல் விஞ்ஞானி பாவ்லோவ்வும், அமெரிக்க மன இயல் நிபுணர் ஸ்கின்னரும் மனிதனைப் பற்றி கூறியவை 99.9 சதவீதம் சரியானவை; அவர்கள், மனிதன் என்பவன் ஒரு அழகான இயந்திரம் என்று நம்புகின்றனர். அங்கே அவனிடம் ஆன்மா என்று ஒன்று இல்லை. அவர்கள் கூறுவது 99.9 சதவீதம் சரிதான் என்று கூறுகிறேன்; அவர்கள் ஒரு சிறிய வரம்பில் தான் தவறிவிட்டனர். அந்த சிறிய வரம்பில் தான் புத்தர்களும், விழிப்படைந்தவர்களும் உள்ளனர். ஆனால், அவர்களை மன்னித்துவிடலாம். ஏனெனில், பாவ்லோவ் ஒருபோதும் ஒரு புத்தரைப் பார்த்தது கிடையாது. அவர், உங்களைப் போன்ற லட்சக்கணக்கான மக்களைத்தான் பார்த்து வந்திருக்கிறார்.

ஸ்கின்னர் மனிதனையும், எலிகளையும் பற்றி ஆராய்ச்சி செய்து வந்துள்ளார். அவர் இரண்டிற்கும் இடையில் எந்த ஒரு வித்தியாசத்தையும் காணவில்லை. எலிகள் மிகவும் சிறிய, எளிமையான உயிர்கள், அவ்வளவுதான். மனிதன், கொஞ்சம் அதிகம் சிக்கல் நிறைந்தவன்.

மனிதன் உயர்நுட்பம் நிறைந்த ஒரு இயந்திரம், எலிகள் எளிமையான இயந்திரங்கள். எலிகளை ஆராய்வது சுலபம்; அதனால்

தான் மன இயல் நிபுணர்கள் எலிகளைப் பற்றி ஆராய்கின்றனர். அவர்கள், எலிகளை ஆராய்ச்சி செய்து, அதை மனிதனுக்குரிய முடிவாகக் கொள்கின்றனர். மேலும், அவர்களது முடிவுகள் கிட்டத்தட்ட சரியாகவே உள்ளன. நான் கிட்டத்தட்ட என்று கூறுவதை கவனத்தில் கொள்ளுங்கள். ஏனெனில், அவர்கள் கண்டுபிடிக்காமல் விட்டுவிட்ட அந்த 1 சதவீதத்தில் பத்தில் ஒரு பங்கில் தான், இங்கே நிகழ்கின்ற அதி முக்கியமான விஷயங்கள் உள்ளன. ஒரு புத்தர், ஒரு இயேசு, ஒரு முகம்மது - ஆகிய விழிப்புணர்வு பெற்ற ஒரு சிலர் தான் உண்மையான மனிதர்கள். ஆனால், B.F. ஸ்கின்னரால் ஒரு புத்தரை எங்கே பார்க்க முடியும்? நிச்சயமாக அமெரிக்காவில் முடியாது ... ...

நான் கேள்விப்பட்டது இது :

யூத மதகுரு ஒருவரிடம், ஒருவன், "இருபதாம் நூற்றாண்டு அமெரிக்காவில் பிறப்பதற்கு ஏன் இயேசு தேர்வு செய்யவில்லை?" என்று கேட்டான்.

அதற்கு அந்த யூத மதகுரு தனது தோள்களை குலுக்கிக் கொண்டு, "அமெரிக்காவிலா? அது நிச்சயம் நடக்காது. முதலில், அங்கு கற்புள்ள ஒருவரை எங்கே காண்பது? அடுத்து இரண்டாவதாக, அந்த மூன்று ஞானியர்களை எங்கே காண்பது?" என்றார்.

அதே போன்று, B.F. ஸ்கின்னர் ஒரு புத்தரை எங்கே காண்பார்? அப்படியே அவர் ஒரு புத்தரைப் பார்த்தாலும்கூட, அவர் ஏற்கனவே தீர்மானித்து வைத்திருக்கிற அவரது கருத்துக்கள் அவரை பார்ப்பதற்கு அனுமதிக்காது. அவர், தனது எலிகளைத்தான் பார்ப்பார். எலிகளால் செய்ய முடியாத எதையும் அவரால் புரிந்து கொள்ள முடியாது. இப்போது எடுத்துக் கொண்டால் எலிகள் தியானம் செய்யாது, எலிகள் மெய்ஞானிகள் ஆவது கிடையாது. ஆனால் அவரோ, இந்த மனிதனை பெரிதாகப்பட்ட ஒரு எலியின் உருவமாகத் தான் பார்க்க முடியும். என்றாலும்கூட, இப்போதுள்ள பெரும்பான்மை மக்களை எடுத்துக் கொண்டால், அவர் கூறுவது சரிதான்; அவரது கண்டுபிடிப்புகள் தவறானவை அல்ல. மேலும், இப்படிப்பட்ட சாதாரண மனித இனத்தை குறித்து அவர் கூறுவதை, புத்தர்களும்கூட ஒத்துக் கொள்வார்கள். சாதாரண மனித இனம், முழுமையான தூக்கத்தில் உள்ளது. விலங்குகள்கூட இந்த அளவுக்கு தூக்கத்தில் இல்லை.

காட்டில் உள்ள ஒரு மானை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? எவ்வளவு உஷாராக அது பார்க்கிறது, எவ்வளவு கவனமாக அது நடக்கிறது? மரக்கிளையில் உட்கார்ந்திருக்கும் ஒரு பறவையைக் கவனத்திருக்கிறீர்களா - அது, எந்த அளவுக்கு தன்னைச் சுற்றிலும் நடப்பதை புத்திசாலித்தனமாக கவனிக்கிறது? நீங்கள் அதை நோக்கி நகர்ந்தால், சில அடி தூரம் வரை அது உங்களை அனுமதிக்கின்றது. அதற்கு மேல் நீங்கள் நகர்ந்தால், ஒரு அடி அதிகம் எடுத்து வைத்தால் போதும், அது உடனே பறந்து விடுகிறது. அதனுடைய எல்லை குறித்து, அது ஒரு குறிப்பிட்ட உஷார்த்தனத்துடன் இருக்கிறது. யாராவது அந்த எல்லைக்குள் நுழைந்துவிட்டால், அதன்பிறகு அது ஆபத்தானது என்று அறிகிறது.



நீங்கள் சுற்றுமுற்றும் பார்த்தால், இங்கு, இந்த பூமியில் மனிதன் ஒருவன் மட்டும் தான் அதிக தூக்கத்தில் உள்ள விலங்கினம் போல் தெரிகிறான் என்பதை அறிந்து ஆச்சரியப்படுவீர்கள்.

ஒரு விபச்சார விடுதியின் தட்டுமுட்டு சாமான்களை ஏலம் விட்டபோது, அதில் ஏலம் விடப்பட்ட ஒரு கிளியை, ஒரு பெண் ஏலத்தில் எடுத்தாள். அதை தனது வீட்டிற்குக் கொண்டு வந்து, ஒரு கூட்டினுள் அடைத்து, அந்த கூட்டிற்குத் துணியால் திரையிட்டு இரண்டு வாரங்கள் வைத்திருந்தாள். ஏனெனில், அந்த கிளியானது, விபச்சார விடுதியின் அந்த அசிங்கமான வார்த்தைகளை மறக்க வேண்டும் என்பதற்காக அப்படிச் செய்தாள். இரண்டு வாரம் கழித்து அதன் மீதுள்ள துணியை விலக்கியவுடன், அந்தக் கிளி சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, "ஐயா... புது வீடு, புது எஜமானி," என்றது. அப்போது அந்தப் பெண்ணின் மகள்கள் உள்ளே வந்த போது, அந்தக் கிளி, "ஐயா... புதிய பெண்கள்," என்று கத்தியது.

அன்று இரவு அந்தப் பெண்ணின் கணவர் வீட்டிற்கு வந்த போது, அந்தக் கிளி, "ஐயா, ஐயா... அதே பழைய வாடிக்கையாளர்." என்றது.

மனிதன், ஒருவிதமான வீழ்ந்த நிலையில் இருக்கிறான். உண்மையில், கிறிஸ்தவக் கதையான ஆதாமின் வீழ்ச்சியும், அவனது வெளியேற்றமும் பற்றிய கதையின் உண்மையான அர்த்தம், அதுதான். ஆதாமும் ஏவாளும் ஏன் சொர்க்கத்திலிருந்து வெளியேற்றப் பட்டார்கள்? அவர்கள், அறிவுக் கனியை சாப்பிட்டதால் தான் அவர்கள் வெளியேற்றப்பட்டார்கள். அவர்கள் 'மனம்' என்பதைப் பெற்றவர்களாக ஆகிவிட்டபடியால், அவர்கள் வெளியேற்றப் பட்டார்கள். ஆனால், அவர்கள் தங்களின் தன்னுணர்வு இழந்து விட்டார்கள். நீங்களும் உங்கள் மனமாக ஆகிவிட்டால், நீங்கள் உங்களது தன்னுணர்வு இழந்துவிடுவீர்கள். மனம் என்றால் தூக்கம் என்று அர்த்தம். மனம் என்றால் கூச்சல் என்று அர்த்தம். மனம் என்றால் இயந்திரத்தனம் என்று அர்த்தம். நீங்கள் மனமாக ஆகிவிட்டால், நீங்கள் உங்களது தன்னுணர்வு இழந்துவிடுவீர்கள்.

ஆகையினால் தான், நாம் செய்ய வேண்டிய முழு வேலை என்னவென்றால், நீங்கள் மீண்டும் அந்த தன்னுணர்வு பெற்றுவிட்டு, உங்கள் மனதை இழப்பது தான் ஆகும். நீங்கள் இதுவரை அறிவு என்று சேர்த்து வைத்துள்ள அந்த எல்லா முறைகளையும் தூக்கி எறிய வேண்டும். அந்த அறிவுதான் உங்களை தூங்கச் செய்கிறது; ஒரு மனிதன் எந்த அளவுக்கு அறிவுஜீவியாக இருக்கிறானோ, அந்த அளவுக்கு அவன் அதிக தூக்கத்தில் இருப்பான்.

அது தான் என்னுடைய அனுமானமும்கூட. கிராமங்களில் உள்ள கள்ளம் கபடமற்ற கிராமத்து ஜனங்கள், இந்த பல்கலைக் கழகங்களில் உள்ள பேராசிரியரைவிடவும், ஆலயங்களில் உள்ள பண்டிதர்களை விடவும் அதிக விழிப்புணர்வும், உஷார்த்தனமும் கொண்டவர்களாக இருக்கின்றனர். பண்டிதர்கள் அனைவரும் இந்தக் கிளிகளைப் போன்றவர்களே தவிர, வேறு ஒன்றும் இல்லை. பல்கலைக் கழகங்களில் உள்ள கலை அறிவியலாளர்கள்கூட, முழுவதும் தலையில் மாட்டுச் சாணத்தைத்தான் வைத்திருக்கிறார்கள். அவர்களின் மண்டைக்குள் முழுவதும் அர்த்தமற்ற சப்தங்கள் தான் உள்ளது. அவர்கள், வெறுமனே மனம் என்பதாகத் தான் உள்ளனரேயொழிய, அவர்களிடம் தன்னுணர்வு என்பது இல்லை.

பல்கலைக் கழகங்களில் டீன்களாகவும், துணைவேந்தர்களாகவும், வேந்தர்களாகவும் பணியாற்றுபவர்களைவிடவும், இயற்கையோடு இணைந்து காரியமாற்றுகின்ற விவசாயிகள், தோட்டக்காரர்கள், மரம் வெட்டுபவர்கள், தச்சு வேலை செய்பவர்கள், வண்ணம் அடிப்பவர்கள் ஆகியவர்கள் அதிக உஷாராகவும், அதிக விழிப்புடனும் இருக்கிறார்கள். ஏனெனில், அவர்கள் இயற்கையோடு இணைந்து வேலை செய்யும் போது, இயற்கையானது விழிப்புடன் இருக்கிறது. மரங்களும்கூட உஷார்த்தனத்துடன் இருக்கின்றன; அவைகளின் உஷார்த்தனம் நிச்சயமாக வித்தியாசமானது. ஆனால், அவைகள் விழிப்புடன் இருக்கின்றன.

இப்போது, அவைகளின் விழிப்புநிலை குறித்து விஞ்ஞான பூர்வமான நிரூபணங்கள் உள்ளன. ஒரு மரம்வெட்டி, தனது கையில் கோடாலியுடன், மரத்தை வெட்ட வேண்டும் என்ற வெளிப்படையான உள்ளத்துடன் வரும் போது, அவன் வருவதைப் பார்க்கின்ற எல்லா மரங்களும் நடுங்க ஆரம்பிக்கின்றன. அதற்கான விஞ்ஞானபூர்வமான நிரூபணங்கள் இப்போது உள்ளன. இதைப் பற்றி பேசும் போது, நான் கவிதையாகச் சொல்லவில்லை. நான் அறிவியல்ரீதியாகப் பேசுகிறேன். ஒரு மரமானது சந்தோஷம் அல்லது துக்கத்தில் உள்ளதா அல்லது பயத்துடன் அல்லது பயம் இல்லாமல் உள்ளதா, சோகமாக உள்ளதா,



ஆனந்தமாக உள்ளதா என்பதை அளப்பதற்குரிய கருவிகள் இப்போது உள்ளன. எனவே, மரம் வெட்டுபவன் வரும் போது, அவனைப் பார்த்து எல்லா மரங்களும் நடுங்குகின்றன. அவைகளின் மரணம் நெருங்கி வருவதை அவைகள் அறிந்து கொள்கின்றன. ஆனால், அந்த மரம்வெட்டி இன்னமும் மரங்களை வெட்ட ஆரம்பிக்கவில்லை; அவன் வெறுமனே கோடாலியுடன் வருவதைப் பார்த்தே அவைகள் நடுங்குகின்றன.

இதில், இன்னொரு விஷயமும் உள்ளது. அது, இன்னமும் அதிசயமானது. அந்த மரம்வெட்டி, வெளிப்படையாக மரங்களை வெட்ட வேண்டும் என்கிற எண்ணம் இல்லாமல், வெறுமனே அந்த மரங்களைக் கடந்து சென்றால், அப்போது எந்த ஒரு மரமும் பயப்படுவதில்லை. அதே மரம்வெட்டி தான்; அதே கோடாலி தான். எனவே, மரத்தை வெட்ட வேண்டும் என்கிற அவனது மன எண்ணம் தான் அந்த மரங்களைப் பாதிக்கிறது. எனவே இதற்கு, அந்த மரங்கள் அவனது நோக்கத்தைப் புரிந்து கொள்கின்றன என்று தான் அர்த்தம். இதற்கு, அவனது அந்த மன அதிர்வுகள், அந்த மரங்களால் மாற்றம் செய்யப்பட்டு கண்டு கொள்ளப்படுகின்றன என்று தான் அர்த்தம்.

மேலும், இன்னும் ஒரு சிறப்பான உண்மையும் விஞ்ஞான பூர்வமாக கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அது என்னவென்றால், நீங்கள் ஒரு காட்டிற்குள் போய் ஒரு மிருகத்தைக் கொன்றால், அந்தக் காட்டில் உள்ள விலங்கினம் மட்டுமல்ல, அங்குள்ள மரங்களும்கூட அதிர்ச்சி அடைகின்றன என்பது தான் அது. நீங்கள் ஒரு மானைக் கொன்றால், அதனைச் சுற்றியுள்ள எல்லா மான்களும் அந்தக் கொலையின் அதிர்வை உணர்கின்றன, மிகவும் துக்கமடைகின்றன. அவைகளுக்குள் மிகப்பெரிய நடுக்கம் எழுகிறது. எந்த ஒரு காரணமும் இல்லாமல் திடீரென்று அவைகள் பயப்படுகின்றன. அந்த மான் கொல்லப்பட்டதை அவைகள் பார்க்காமல்கூட இருந்திருக்கலாம். ஆனாலும்கூட, எப்படியோ, கண்ணுக்குப் புலப்படாத வகையில் அவைகள் பாதிக்கப்படுகின்றன. மேலும், அங்கே பாதிக்கப்படுவது மான்கள் மட்டுமல்ல, மரங்களும் தான். அங்குள்ள கிளிகள் பாதிக்கப்படுகின்றன, அங்குள்ள புலிகள் பாதிக்கப்படுகின்றன, கழுகுகள் பாதிக்கப்படுகின்றன. அங்குள்ள புல்லின் இதழ்கள்கூட பாதிக்கப் படுகின்றன. ஏதோ கொலை ஒன்று நடந்துவிட்டது, அழிவு நிகழ்ந்து விட்டது, மரணம் நிகழ்ந்துவிட்டது என்று எண்ணி, அங்கே சுற்றி இருப்பவை எல்லாம் பாதிக்கப்படுகின்றன. ஆனால், மனிதன் மட்டும் தான் தூக்கத்திலிருப்பது போல் தெரிகிறது.

புத்தரின் இந்த சூத்திரங்கள், ஆழ்ந்து தியானிக்க வேண்டியவை, உள்ளீர்த்துக் கொள்ள வேண்டியவை, பின்பற்ற வேண்டியவை. அவர் கூறுவதாவது :

விழிப்புநிலை தான் வாழ்க்கைக்கான பாதை.

நீங்கள் எந்த அளவுக்கு விழிப்புடன் இருக்கிறீர்களோ அந்த அளவுக்கு, அதே விகிதத்தில் மட்டுமே நீங்கள் உயிர் வாழ்வதாக அர்த்தம். வாழ்வுக்கும் சாவுக்கும் உள்ள வித்தியாசம், விழிப்புணர்வு மட்டும் தான். நீங்கள் சுவாசிப்பதால் மட்டுமே நீங்கள் உயிர் வாழ்வதில்லை, உங்களது இதயம் துடிப்பதால் மட்டுமே நீங்கள் உயிர் வாழ்வதில்லை. உடலியல் அளவில் எந்தவிதமான தன்னுணர்வும் இல்லாமல், உங்களை ஒரு மருத்துவமனையில் உயிரோடு வைத்திருக்க முடியும். உங்களது இதயம் துடித்துக் கொண்டே இருக்கும். மேலும், உங்களால் சுவாசிக்கவும் முடியும். இப்படிப்பட்டதொரு இயந்திரத்தனமான ஏற்பாட்டுடன் உங்களை வைத்திருப்பதன் மூலம், நீங்கள் பல ஆண்டுகள் உயிரோடு இருக்கலாம். அதாவது, சுவாசித்தல், இதயத்துடிப்பு மற்றும் இரத்த ஓட்டம் ஆகிய விஷயங்களில் உயிரோடு இருக்கலாம். முன்னேறிய நாடுகளில், உலகம் முழுவதிலும் அநேக மக்கள் இப்படி மருத்துவமனைகளில் தாவரங்களைப் போல் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். ஏனெனில், உங்களது மரணத்தை காலவரையின்றி ஒத்தி வைக்கும் அளவுக்கு நவீன தொழில்நுட்பங்கள் அதை சாத்தியமாக்கிவிட்டன. பல வருடங்கள் உங்களை உயிரோடு வைத்திருக்க முடியும். இதுதான் வாழ்க்கை என்றால், நீங்களும் இப்படி உயிரோடு வைத்திருக்கப்பட முடியும். ஆனால், இதுதான் வாழ்க்கை அல்ல. வெறுமனே தாவரங்களைப் போல் இருப்பது வாழ்க்கை அல்ல.

புத்தர்கள், வாழ்க்கைக்கு வித்தியாசமான விளக்கங்களைக் கொண்டுள்ளனர். அவர்களின் விளக்கத்தில் விழிப்புணர்வு என்பது உள்ளது. நீங்கள் சுவாசிப்பதால் உயிரோடு இருப்பதாக அவர்கள் கூறுவதில்லை, உங்களுக்குள் இரத்த ஓட்டம் இருப்பதால் மட்டுமே நீங்கள் உயிரோடு இருப்பதாக அவர்கள் கூறுவது இல்லை. நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்தால் மட்டும் தான், நீங்கள் உயிரோடு இருப்பதாக அவர்கள் கூறுகின்றனர். எனவே, விழிப்புநிலை அடைந்தவர்களைத் தவிர, யாரும் உண்மையில் உயிரோடு இருப்பதில்லை. நீங்கள் அனைவரும் பிணங்கள் தான் - நடந்து கொண்டும், பேசிக் கொண்டும், காரியங்கள் செய்து கொண்டும் இருக்கின்ற பிணங்கள் தான் - நீங்கள் மனித இயந்திரங்கள்.

விழிப்புநிலை தான் வாழ்க்கைக்கான பாதை என்று புத்தர் கூறுகிறார். அதிக விழிப்புணர்வு உள்ளவர்களாக ஆகிவிடுங்கள். அப்போது நீங்கள் அதிக உயிர்த்துடிப்புள்ளவர்களாக ஆகிவிடுவீர்கள். மேலும், வாழ்க்கை தான் கடவுள் - இங்கே வேறு ஒரு கடவுளும் இல்லை. எனவே தான் புத்தர் வாழ்க்கையையும், விழிப்புணர்வையும் பற்றி பேசுகிறார். வாழ்க்கை தான் லட்சியம். மேலும், விழிப்புணர்வு தான் அதற்கான வழிமுறை, அதை அடைவதற்கான தொழில்நுட்பம்.



முட்டாள் தூங்குகிறான்.

ஆனால், நாம் எல்லோரும் தூங்குகிறோம். எனவே, நாம் எல்லோரும் முட்டாள்கள் தான். இதற்காக உள்ளம் புண்படாதீர்கள். உண்மைகளை, அவை எப்படி உள்ளனவோ, அப்படியே சொல்லியாக வேண்டும். நீங்கள் தூக்கத்தில் தான் காரியமாற்றுகிறீர்கள். அதனால் தான் தடுமாற்றம் அடைகிறீர்கள். நீங்கள் செய்ய விரும்பாத காரியங்களை, நீங்கள் செய்து கொண்டே போகிறீர்கள். நீங்கள் செய்யக்கூடாது என்று முடிவெடுத்த காரியங்களா, நீங்கள் செய்து கொண்டே போகிறீர்கள். செய்கின்ற காரியம் சரியானது அல்ல என்று உங்களுக்குத் தெரிந்தாலும், நீங்கள் அதை செய்து கொண்டே போகிறீர்கள். மேலும், சரியானது என்று நீங்கள் அறிகின்ற காரியத்தை நீங்கள் செய்வதில்லை.

இது எப்படிச் சாத்தியமாகிறது? நீங்கள் ஏன் நேர்வழியில் நடக்க முடியவில்லை? குறுக்கு வழியில் நீங்கள் சிக்கிக் கொண்டு போவது எதனால்? ஏன் நீங்கள் எப்போதும் வழிதவறிச் செல்கிறீர்கள்?

நல்ல குரல்வளம் கொண்ட ஒரு இளைஞனை, ஒரு நாடகத்தில் பங்கேற்கும்படி கேட்டனர். இப்படிப்பட்ட சூழ்நிலைகளில் அவன், தான் மிகவும் தர்மசங்கடத்தை உணர்வதால், அவனை விட்டுவிடும்படி அவன் கெஞ்சியும்கூட, அவர்கள் அவனை வற்புறுத்தினார்கள். அவர்கள் அவனிடம், 'அவன் செய்ய வேண்டியது மிகவும் சுலபமானது தான்' என்றும், அவன், 'நான் ஒரு முத்தத்தைப் பறிக்க வந்திருக்கிறேன். அதன்பின் நான் சண்டைக்கு துள்ளிக் குதித்துச் சென்றுவிடுவேன். ஆ! குண்டுச் சத்தம் எனக்கு கேட்கிறதே,' என்று கூறிவிட்டு மேடையைவிட்டு இறங்கிவிட வேண்டியது தான்' என்று கூறினார்கள்.

நாடகத்தின் போது, அவன் மேடைக்கு வருகிறான். கடைசி நேரத்தில் அவனுக்கு கட்டாயப்படுத்தி அணிவிக்கப்பட்ட போர்வீரனுக்கான முழங்கால் கவசமானது மிகவும் இறுக்கிப் பிடித்ததால், ஏற்கனவே அவன் கடுப்பாகி உள்ளே வந்தவனுக்கு, அங்கே அழகான கதாநாயகி வெள்ளை நிற ஆடையில் தோட்டத்தில் உள்ள இருக்கையில் படுத்திருப்பதைப் பார்த்தவுடன், அவனுக்கு எல்லாமே மறந்து போய்விட்டது. அவன் தொண்டையைக் கனைத்துக் கொண்டு,

"நான் பந்தத்தை முறிக்க வந்திருக்கிறேன் - இல்லையில்லை - முத்தத்தை பறிக்க வந்திருக்கிறேன். அதன் பின்னர் துண்டைக்கு சள்ளிக் குதித்து சென்றுவிடுவேன் - அதாவது, சண்டைக்கு துள்ளிக் குதித்து சென்று விடுவேன். ஆ! சண்டுக் குத்தம் எனக்கு கேட்கிறதே - இல்லை இல்லை - குண்டுக் குத்தம், குண்டு சித்தம், அய்யோ, எலிச் சத்தம், வௌவால் சத்தம், எல்லாம் உங்கள் மேல்! முதலிலேயே நான் இந்த சாபக்கேடான நாடகத்தில் நடிக்க விரும்பவில்லை," என்று கூறினான்.

இதைப் போன்று தான் உங்கள் எல்லோருக்கும் நடக்கிறது. உங்களது வாழ்க்கையைக் கவனியுங்கள் - நீங்கள் செய்கின்றதெல்லாம் அந்த அளவுக்குக் குழப்பமானதாகவும், குழப்புவதாகவும் உள்ளது. உங்களிடம் எந்தவிதமான தெளிவும் இல்லை, உங்களிடம் எந்தவிதமான கண்டுணர்தலும் இல்லை. நீங்கள் உஷாராக இல்லை. உங்களால் பார்க்க முடியவில்லை, உங்களால் கேட்க முடியவில்லை - நிச்சயம் உங்களுக்கு காதுகள் உள்ளன. எனவே, உங்களால் கேட்க முடியும். ஆனால், அதைப் புரிந்து கொள்வதற்கு உங்களுக்குள்ளே அங்கு யாரும் இல்லை. நிச்சயம் உங்களுக்கு கண்கள் உள்ளது. எனவே, உங்களால் பார்க்க முடியும். ஆனால், உங்களுக்குள் யாரும் இருக்கவில்லை. எனவேதான், உங்கள் கண்கள் பார்த்துக் கொண்டே போகின்றன, உங்களது காதுகள் கேட்டுக் கொண்டே போகின்றன. ஆனால், எதுவும் புரிந்து கொள்ளப்படவில்லை. மேலும், ஒவ்வொரு படியிலும் நீங்கள் தடுமாறுகிறீர்கள். ஒவ்வொரு படியிலும் நீங்கள் தவறான ஏதோ ஒன்றைச் செய்கிறீர்கள். இப்படி, எல்லாம் இருந்தும்கூட, நீங்கள் விழிப்புணர்வுடன் இருப்பதாக நம்பிக் கொண்டே போகிறீர்கள்.

அந்த எண்ணத்தை முற்றிலும் விட்டுவிடுங்கள். அதை விட்டுவிடுவது என்பது, நீங்கள் எடுத்து வைக்கும் மிகப்பெரிய காலடி; ஏனெனில், நீங்கள், "நான் விழிப்புணர்வுடன் தான் இருக்கிறேன்," என்கின்ற இந்த எண்ணத்தை விட்டுவிடும் போது, நீங்கள் விழிப்புணர்வுடன் இருப்பதற்கான வழிகளைத் தேடிக் கண்டுபிடிக்க ஆரம்பித்துவிடுவீர்கள். ஆகவே, உங்களுக்குள் ஆழ்ந்து செல்ல வேண்டிய முதல் விஷயம், நீங்கள் தூக்கத்தில் - முழுத்தூக்கத்தில் - இருக்கிறீர்கள் என்பதை உணர்வது தான்.

நவீன மனோதத்துவம், சில சிறப்பான விஷயங்களைக் கண்டுபிடித்துள்ளது; அறிவுப்பூர்வமாகத் தான் அவைகள் கண்டுபிடிக்கப்பட்டிருந்தாலும்கூட, ஆரம்பத்தில் இது நல்லதுதான். அறிவுப்பூர்வமாக அவைகள் கண்டுபிடிக்கப்பட்டு விட்டதால், அதன் பின்னர் விரைவில் அவைகள் அனுபவப்பூர்வமாகவும் அனுபவிக்கப்படும்.



பிராய்டு தான் இதில் மிகப்பெரிய முன்னோடி. ஆனால், அவர் ஒரு புத்தர் அல்ல; என்றாலும்கூட, அவர் ஒரு சிறப்பு வாய்ந்த மனிதர். ஏனெனில், மனிதனுக்குள் மிகப்பெரிய தன்னுணர்வற்ற (Unconscious) பகுதி மறைந்துள்ளது என்பதை, இந்த மனித இனத்தின் மிகப்பெரும் பகுதியினரை ஏற்றுக் கொள்ளும்படி முதலில் செய்தது அவர் தான். தன்னுணர்வுள்ள (Concious) பகுதி, பத்தில் ஒரு பகுதிதான் என்றும், தன்னுணர்வற்ற பகுதி, தன்னுணர்வுள்ள பகுதியைப் போல் ஒன்பது மடங்கு பெரியது என்றும் அவர் கண்டுபிடித்தார்.

அதன் பின்னர், அவரது சீடர் ஜீங் இன்னும் கொஞ்ச தூரம், இன்னும் ஆழ்ந்து சென்று, ஒன்று திரண்ட தன்னுணர்வற்ற (Collective Unconscious) தன்மை என்பதை கண்டுபிடித்தார். ஒவ்வொரு தனிமனித தன்னுணர்வற்ற பகுதிக்குப் பின்னால், ஒன்று திரண்ட ஒரு தன்னுணர்வற்ற பகுதி இருப்பதாக அவர் கண்டுபிடித்தார். இப்போது, இன்னும் ஒரு விஷயத்தைக் கண்டுபிடிக்க யாராவது தேவை, அந்த விஷயம் அங்கே உள்ளது; எனவே, மனோதத்துவ விசாரணைகள் நடந்து கொண்டு இருப்பதால், விரைவில் அது கண்டுபிடிக்கப்படும் என்று நான் நம்புகிறேன். அது தான், பிரபஞ்ச தன்னுணர்வற்ற பகுதி. புத்தர்கள் அதைப் பற்றி பேசி உள்ளனர்.

எனவே, நாம் உங்களது தன்னுணர்வற்ற மனதைப் பற்றி பேசலாம் - அது ஒரு மெலிதான விஷயம், அது உங்களது உயிரின் மிகச் சிறிய பகுதி. அந்த தன்னுணர்வற்ற பகுதிக்குப் பின்னால், உபதன்னுணர்வற்ற Subconscious பகுதி உள்ளது. அது தெளிவற்றது, அது கிசுகிசுப்பதை நீங்கள் கேட்கலாம். ஆனால், அதை இன்னவென்று உங்களால் சொல்ல முடியாது. அது, எப்போது தன்னுணர்வற்ற மனிதன் பின்னால் இருந்து கொண்டு, அதை இழுத்துக் கொண்டே இருக்கும். மூன்றாவது இருப்பது, தன்னுணர்வற்ற மனம். இதை, நீங்கள் கனவு காணும் போது மட்டும் அல்லது நீங்கள் போதை மருந்துகளை உட்கொள்ளும் போது மட்டுமே சந்திக்க முடியும். அதன் பிறகு, இந்த ஒன்று திரண்ட தன்னுணர்வற்ற மனம் உள்ளது. நீங்கள், உங்களது தன்னுணர்வற்ற மனதிற்குள் சென்று, ஆழ்ந்து விசாரணை மேற்கொள்ளும் போது மட்டுமே, நீங்கள் அதை சந்திக்க இயலும். மேலும், இன்னும் நீங்கள் ஆழ்ந்து சென்றால், அதற்கு மேலும் பயணம் செய்தால், நீங்கள் இந்த பிரபஞ்ச தன்னுணர்வற்ற பகுதியைக் காண முடியும். இந்த பிரபஞ்ச தன்னுணர்வற்ற (Cosmic Unconscious) பகுதி என்பது தான், இந்த இயற்கை. ஒன்று திரண்ட தன்னுணர்வற்ற பகுதி என்பது, இதுவரை வாழ்ந்துள்ள இந்த மொத்த மனித இனத்தைச் சார்ந்தது. அது, உங்களில் ஒரு பகுதி. அதன்பின்னர், தன்னுணர்வற்ற பகுதி என்பது உங்களது தனிப்பட்ட தன்னுணர்வற்ற

பகுதியாகும். அது, இந்த சமுதாயம் உங்களுக்குள் அடக்கி வைத்துள்ள பகுதி ஆகும்; அது, உங்களை வெளிப்படுத்தவிடாமல் செய்துவிட்ட பகுதியாகும். அதனால் தான், அது பின்புற வாசல் வழியாக, இரவில் உங்களது கனவுகளில் வருகிறது.

அதன்பின்னர், தன்னுணர்வுள்ள மனம் ... ... நான் அதை தன்னுணர்வுள்ள மனம் என்று அழைக்கப்படுகின்ற அந்த மனம் என்று கூறுகிறேன். ஏனெனில், அது வெறுமனே அழைக்கின்ற மனமாக மட்டுமே இருக்கிறது. அது மிகவும் சிறிய பகுதி, வெறும் கண்சிமிட்டும் நேரம் தான் இருப்பது. ஆனால், அது வெறும் கண்சிமிட்டும் நேரம் மட்டுமே இருப்பதாக இருந்தாலும்கூட, அது மிகவும் முக்கியமானது. ஏனெனில், அதில் தான் விதை உள்ளது; விதைகள் எப்போதுமே சிறியவையாகத் தான் இருக்கும். அதில் அதிக சக்தி உள்ளது. இப்போது, முற்றிலும் புதியதொரு பரிமாணம் திறக்கப்படுகிறது. தன்னுணர்வற்ற நிலைக்கு கீழே பிராய்டு எப்படி பல பரிமாணங்களை வெளியில் கொண்டு வந்தாரோ, அதே போன்று, அரவிந்தர் அவர்கள் தன்னுணர்வுற்கு மேலே உள்ள பரிமாணங்களை வெளிக் கொண்டு வந்தார். இந்த யுகத்தில் பிராய்டும், அரவிந்தரும் மிகவும் முக்கியமான நபர்களில் இருவர் ஆவார்கள். இருவருமே அறிவுஜீவிகள். அவர்களில் ஒருவர்கூட விழிப்புணர்வு பெற்றவர்கள் இல்லை. ஆனாலும்கூட, இருவரும் இந்த மனித இனத்திற்கு மிகப்பெரிய சேவை செய்துள்ளனர். மேலெழுந்தவாரியாக பார்ப்பதற்கு, நாம் சிறியவர் போலத் தோன்றினாலும்கூட, நாம் அந்த அளவுக்கு சிறியவர்கள் அல்ல என்பதை நாம் அறிவுப்பூர்வமாக உணர்வதற்கு அவர்கள் வழிவகுத்தனர். அந்த மேல்பரப்பு, நமக்குள் உள்ள ஆழத்தையும், உயரத்தையும் மறைத்துக் கொண்டு உள்ளது என்றனர்.

அதில் பிராய்டு, அதன் ஆழத்தில் சென்றார். அரவிந்தர், உயரத்தை ஊடுருவிச் செல்ல முயற்சி செய்தார். நாம் தன்னுணர்வுள்ள மனம் என்று அழைக்கின்ற அந்த மனதிற்கு மேல் தான், உண்மையான தன்னுணர்வுள்ள மனம் உள்ளது. அதை நீங்கள் தியானத்தின் மூலம் தான் பெற முடியும். உங்களது சாதாரண தன்னுணர்வுள்ள மனத்துடன் தியானமும் சேரும் போது, அது உண்மையிலேயே தன்னுணர்வுள்ள மனமாக ஆகிறது.

இந்த உண்மையான தன்னுணர்வுள்ள மனதிற்கு மேலே தான், உச்ச தன்னுணர்வுள்ள (Super Conscious Mind) மனம் இருக்கிறது. நீங்கள் தியானம் செய்யும் போது, உங்களுக்கு சில நொடிப் பொழுது அனுபவங்கள் மட்டுமே கிடைக்கும். தியானம் என்பது இருட்டில் துளாவுவது. ஆம், தியானத்தில் உங்களுக்குச் சில ஜன்னல்கள் திறக்கப்படும். ஆனால், நீங்கள் மீண்டும் மீண்டும் கீழே விழுந்துவிடுவீர்கள். உச்ச தன்னுணர்வுள்ள மனம் என்றால், சமாதி நிலை என்று அர்த்தம். அப்போது உங்களுக்கு ஸ்படிகம் போன்ற தெள்ளத் தெளிவான உணர்வுறுதல் கிடைக்கும். நீங்கள் ஒரு ஒருங்கிணைந்த விழிப்புணர்வைப் பெறுவீர்கள். இப்போது நீங்கள், இதற்கும் கீழே வர விழ முடியாது. அது, உங்களுடையதாக இருக்கும். தூக்கத்திலும்கூட, அது உங்களோடு இருக்கும்.



இந்த உச்ச தன்னுணர்வுள்ள மனதிற்கு மேலே தான், ஒன்று திரண்ட உச்ச தன்னுணர்வுள்ள நிலை உள்ளது; இந்த ஒன்று திரண்ட உச்ச தன்னுணர்வு நிலையைத் தான், மதங்களில் 'கடவுள்' என்று அறியப்படுகிறது. மேலும், இந்த ஒன்று திரண்ட உச்ச (Collective Conscious) தன்னுணர்விற்கு மேலோக, பிரபஞ்ச உச்ச தன்னுணர்வு நிலை (Cosmic Super Conscious) உள்ளது. இது, கடவுள்களின் நிலைக்கும் மேலே போகிறது. புத்தர் இதை நிர்வாண நிலையென்று அழைக்கிறார். மகாவீரர் இதை கைவல்யம் என்கிறார். இந்து மறைஞானிகள் இதை மோட்சம் என்று அழைக்கின்றனர். நீங்கள் இதை சத்யம் என்று அழைக்கலாம்.

உங்களது இருப்பு நிலையில் ஒன்பது நிலைகள் உள்ளன. ஆனால், நீங்கள் உங்களது இருப்பு நிலையின் ஒரு சிறிய மூலையில், அதாவது, சிறிய தன்னுணர்வுள்ள மனதுடன் தான் வாழ்கிறீர்கள். இது எப்படி உள்ளது என்றால், மிகப்பெரிய அரண்மனையை உடைய ஒருவர், அந்த அரண்மனையை முற்றிலும் மறந்துவிட்டு, அதன் முற்றத்தில் வாழ ஆரம்பித்துக் கொண்டு, அது தான் எல்லாம் என்று நினைத்துக் கொண்டிப்பது போல் இருக்கிறது.

பிராய்டும், அரவிந்தரும் மிகப்பெரிய அறிவுஜீவிகள், முன்னோடிகள், தத்துவவாதிகள். ஆனால், இருவருமே அதிக யூக வேலைகள் தான் செய்துள்ளனர். தத்துவம் படிக்கின்ற மாணவர்களுக்கு பெட்ரண்ட் ரஸ்ஸல், ஆல்பிரட் நார்த் ஒயிர் ஹெட், மார்ட்டின் ஹெடிக்கல், ஜீன் பால் சாத்ரேபோன்றவர்களைப் பற்றி கற்பிப்பதைவிட, அரவிந்தரைப் பற்றி அதிகம் கற்பிப்பது மிகவும் சிறந்ததாக இருக்கும். ஏனெனில், இந்த யுகத்தின் மிகச் சிறந்த தத்துவவாதி அரவிந்தர். ஆனால், கல்வியியல், உலகில் அவர் முற்றிலுமாக மறுக்கப்பட்டும், அறியப்படாமலும் இருக்கிறார். அதற்கான காரணம் என்னவென்றால், அரவிந்தரின் எழுத்துக்களைப் படித்தாலே போதும், நீங்கள் விழிப்புணர்வு இல்லாமல் இருக்கின்ற உணர்வை தெரிந்து கொள்வீர்கள். ஆனாலும்கூட, அரவிந்தர் ஒரு புத்தர் அல்ல. என்றாலும்கூட, அவர் உங்களுக்குள் ஒருவித மன உளைச்சலை ஏற்படுத்திவிடுவார். அவர்

கூறுவது சரியென்னும் போது, நீங்கள் செய்து கொண்டிருப்பது என்ன? அதன்பின்னர், நீங்கள் ஏன் இன்னும் உங்களது இருப்புநிலையின் உயரங்களைத் தேடிக் கண்டு கொள்ளாமல் இருக்கிறீர்கள்?

பிராய்டும் கூட மிகுந்த எதிர்ப்புடன் ஏற்றுக் கொள்ளப்பட்டார். ஆனால், இறுதியில் அவர் ஏற்றுக் கொள்ளப்பட்டார். ஆனால், அரவிந்தர் இன்னமும்கூட ஏற்றுக் கொள்ளப்படவில்லை. உண்மையில், அவருக்கு எந்தவிதமான எதிர்ப்பும்கூட இல்லை; அவர் வெறுமனே அறியப்படாமல் இருக்கிறார். மேலும், அதற்கான காரணம் மிகவும் தெளிவானது. பிராய்டு, உங்களது இருப்புநிலைக்கு கீழே உள்ள நிலைகளைப் பற்றி பேசுகிறார். அது உங்களுக்கு மன உளைச்சலை ஏற்படுத்தாது. நீங்கள் தன்னுணர்வுடன் இருப்பதாக நினைத்து சந்தோஷப்படலாம். மேலும், உங்களது தன்னுணர்வுள்ள நிலைக்குக் கீழே உபதன்னுணர்வுள்ள நிலையும், தன்னுணர்வற்ற நிலையும், ஒன்று திரண்ட தன்னுணர்வற்ற நிலையும் உள்ளன. ஆனால், அந்த நிலைகள் எல்லாம் உங்களது இப்போதைய இருப்புநிலைக்கு கீழே உள்ளன; நீங்கள் மேலே இருக்கிறீர்கள். எனவே, நீங்கள் மகிழ்ச்சி அடையலாம். ஆனால், நீங்கள் அரவிந்தரைப் படித்தால் மனக்கவலை அடைவீர்கள். ஏனெனில், அவர் உங்களது இப்போதைய இருப்புநிலையைவிட உயர்ந்த நிலைகள் இருப்பதாக அவர் கூறுகிறார். மேலும், மனிதனின் ஆணவம், தனக்கு மேல் எது இருந்தாலும் அதை ஏற்றுக் கொள்ளாது. மனிதன், தான்தான் உச்சநிலை, உச்சகட்டம், கௌரிசங்கர், எவரெஸ்ட் என்று நம்ப விரும்புகிறான். அவனைவிட உயர்ந்தது வேறு எதுவும் இல்லை என்று நம்புகிறான்.

மேலும், இது உங்களுக்கு சந்தோஷத்தைக் கொடுக்கிறது. அதாவது, உங்களது சொந்த சாம்ராஜ்யத்தை மறப்பதால், உங்களது சுய உயரத்தை மறப்பதால் நீங்கள் சந்தோஷம் அடைகிறீர்கள். இதில் உள்ள முட்டாள்தனத்தைப் பாருங்கள்.

புத்தர் கூறுவது சரி தான்.

"தான் ஏற்கனவே இறந்துவிட்டவன் போல் முட்டாள் தூங்குகிறான். ஆனால், ஒரு குரு எப்போதும் விழித்துக் கொண்டே இருக்கிறார்" என்று அவர் கூறுகிறார்.

விழிப்புணர்வு என்பது, என்றும் அழியாதது; அதற்கு மரணம் என்பது தெரியாது. விழிப்புணர்வு இல்லாதது தான் மரணம் அடைகிறது. ஆகவே, நீங்கள் தன்னுணர்வின்றி தூங்கிக் கொண்டு இருந்தால், நீங்கள் மீண்டும் மரணமடைய வேண்டியதிருக்கும். எனவே, இப்படி பிறந்து மீண்டும் மீண்டும் இறந்து போகின்ற இந்த முழு துன்பத்தையும்



விட்டொழிக்க விரும்பினால், இந்த பிறப்பு இறப்பு என்னும் சக்கரத்தை விட்டு வெளியேற நீங்கள் விரும்பினால், நீங்கள் முற்றிலும் விழிப்புணர்வு உள்ளவராக ஆக வேண்டும். நீங்கள் உங்களது தன்னுணர்வில் உயரத்தில், மேலும் மேலும் உயரத்தில் சென்றடைய வேண்டும்.

மேலும், இத்தகைய விஷயங்கள் வெறும் அறிவுபூர்வமான நிலைகளில் ஏற்றுக் கொண்டால் மட்டும் போதாது. இத்தகைய விஷயங்கள் உங்களது அனுபவமாக மாற வேண்டும். இந்த விஷயங்கள் உங்களது இருப்புநிலையாக மாற வேண்டும். தத்துவரீதியாக நீங்கள் ஒப்புக் கொண்டால் போதும் என்று நான் கூறவில்லை. ஏனெனில், தத்துவரீதியில் ஒப்புக் கொள்வதால் எதுவும் ஏற்படாது, எதையும் அறுவடை செய்ய முடியாது. நீங்கள் உங்களைத் தட்டி எழுப்புவதற்காக மிகப்பெரிய முயற்சியை மேற்கொள்வதால் மட்டுமே உண்மையான அறுவடை செய்ய முடியும்.

ஆனால், இது போன்ற அறிவுப்பூர்வமான வரைபடங்கள் உங்களுக்குள் ஒரு ஆசையை, ஒரு ஏக்கத்தை உருவாக்க முடியும்; உங்களிடம் உள்ள சக்தியைப் பற்றி நீங்கள் உணர முடியும்; நீங்கள் இப்போது எப்படி தோன்றுகிறீர்களோ, அது உங்களது உண்மையான தோற்றம் அல்ல என்றும்; நீங்கள் இப்போது உள்ள நிலைக்கு மேல், உயர்ந்த நிலையில் உள்ளவர்கள் என்பதையும் உணர முடியும்.

"தான் ஏற்கனவே இறந்துவிட்டவன் போன்று முட்டாள் தூங்குகிறான். ஆனால், ஒரு குரு எப்போதும் விழித்துக் கொண்டே இருக்கிறார். அவர் கவனிக்கிறார், அவர் தெளிவாக இருக்கிறார்".

இவைகள், எளிய - ஆனால் - அழகான வாக்கியங்கள். உண்மையானது எப்போதும் எளியது மற்றும் அழகானது. இந்த இரண்டு எளிய வாக்கியங்களைப் பாருங்கள். ஆனால், அவற்றில் எவ்வளவு உள்ளது தெரியுமா? இவற்றில் உலகங்களும், உலகங்களின் உள் உலகங்களும், எண்ணற்ற உலகங்களும் உள்ளன.

"அவர் கவனிக்கிறார். அவர் தெளிவாக இருக்கிறார்".

நாம் கற்றுக் கொள்ள வேண்டிய ஒரே ஒரு விஷயம், கவனம் நிறைந்திருத்தல் தான். கவனி! நீங்கள் செய்கின்ற ஒவ்வொரு செயலையும் கவனியுங்கள். உங்களது மனதில் கடந்து செல்லும் ஒவ்வொரு எண்ணத்தையும் கவனியுங்கள். உங்களை ஆட்கொள்கின்ற ஒவ்வொரு ஆசையையும் கவனியுங்கள். மிகச் சிறிய அசைவுகளைக்கூட, அதாவது, நடத்தல், பேசுதல், சாப்பிடுதல், குளித்தல் ஆகிய சிறிய செயல்களைக்கூட கவனியுங்கள். எல்லாவற்றையும்

கவனித்துக் கொண்டே போங்கள். எல்லாமே நாம் கவனிப்பதற்கான ஒரு சந்தர்ப்பமாக இருக்கட்டும்.

இயந்திரத்தனமாக சாப்பிடாதீர்கள்; உங்களது வயிற்றை வெறுமனே நிரப்பாதீர்கள் - மிகவும் கவனித்தலுடன் இருங்கள். நன்றாக மென்று சாப்பிடுங்கள், கவனம் நிறைந்து சாப்பிடுங்கள். இப்படிச் செய்தால், இதுவரை நீங்கள் எவ்வளவு விஷயங்களை தவறவிட்டு விட்டீர்கள் என்பதை உணர்வீர்கள். ஏனெனில், ஒவ்வொரு முறை உணவை நீங்கள் கடிக்கும் போதும், அது உங்களுக்கு அபரிமிதமான திருப்தியைக் கொடுக்கும். நீங்கள் கவனமுடன் சாப்பிட்டால், உணவும்கூட உங்களுக்கு மிகுந்த ருசி மிக்கதாகத் தெரியும். நீங்கள் கவனம் நிறைந்து சாப்பிட்டால், சாதாரண உணவும்கூட உங்களுக்கு நல்ல ருசியாகத் தெரியும். அதே போன்று, நீங்கள் நிறைகவனம் (Watchful) இல்லாமல் சாப்பிடும் போது, நீங்கள் ருசி மிகுந்த உணவைச் சாப்பிட்டாலும்கூட, அதில் ருசி இருக்காது. ஏனெனில், அங்கே ருசியைக் கவனிப்பதற்கு உங்களுக்குள் யாரும் இருக்கவில்லை. நீங்கள் வெறுமனே வயிற்றை நிரப்புகிறீர்கள். மெதுவாகவும், நிறைகவனத்துடனும் சாப்பிடுங்கள்; ஒவ்வொரு கவளத்தையும் நன்றாக மென்று, ருசித்துச் சாப்பிடுங்கள்.

அதே போன்று, நுகர்தல், தொடுதல், தென்றல் காற்றை உணர்தல், சூரியனின் கதிர்களை உணர்தல் ஆகியவற்றையும் செய்து பாருங்கள். நிலவைப் பாருங்கள்; அதை வெறுமனே பார்ப்பதிலேயே நிறைகவனம் உள்ள ஒரு அமைதியான நீர்நிலை போல் ஆகிவிடுங்கள்; அப்போது அந்த நிலவு அபரிமிதமான அழகுடன் உங்களுக்குள் பிரதிபலிக்கப்படும்.

உங்களது வாழ்க்கையில், இடைவிடாமல் நிறைகவனத்துடன் இருந்து கொள்ளுங்கள். மீண்டும் மீண்டும் நீங்கள் மறக்கலாம். அதற்காக துக்கப்படாதீர்கள். அது இயல்பானது. பல லட்சம் பிறவிகளாக நீங்கள் இந்த நிறைகவனத்தை முயன்று பார்க்கவில்லை. எனவே, நீங்கள் மீண்டும் மீண்டும் இதை மறப்பது இயல்பானது, இயற்கையானது. ஆனால், உங்களுக்கு மீண்டும் நினைவு வரும் போது, மீண்டும் கவனிக்கத் தொடங்குங்கள்.

ஒரே ஒரு விஷயத்தை மட்டும் நினைவில் கொள்ளுங்கள் : நீங்கள் கவனிப்பதற்கு மறந்துவிடும் போது, அதற்காக வருத்தப்படாதீர்கள்; அதற்கான மனம் வருந்தாதீர்கள், அப்படிச் செய்தால், மீண்டும் நீங்கள் நேரத்தை வீணாக்கிக் கொண்டிருப்பீர்கள். "நான் தவறவிட்டு விட்டேனே," என்று நீங்கள் சங்கடப்படாதீர்கள். "நான் ஒரு பாவி," என்று உணர ஆரம்பித்துவிடாதீர்கள். உங்களை கண்டனம் செய்யாதீர்கள். ஏனெனில், அது நேரத்தை வீணாக்குவதாகும். ஒருபோதும் கடந்த காலத்தை நினைத்து மனம் வருந்தாதீர்கள்! இப்போதுள்ள இந்த நொடிப் பொழுதில் வாழுங்கள். நீங்கள் மறந்து போகலாம். அதனால் என்ன? இது இயற்கை தான். இது பழக்கம் ஆகிவிட்டது. மேலும், பழக்கத்தை விடுவது மிகவும் கடினம். மேலும், அந்தப் பழக்கம் ஒரு பிறவியில் உள்ளுணர்ந்த பழக்கம் கிடையாது; இவைகள் எல்லாம் லட்சக்கணக்கான பிறவிகளாக உள்ளுணர்ந்த பழக்கங்கள். ஆகவே, உங்களால் ஒரு சில நொடிகள் மட்டுமே நிறைகவனத்துடன் இருக்க முடிந்தால், அதற்காக நன்றியுணர்வு கொள்ளுங்கள். நாம் எதிர்பார்த்ததைவிட, அந்த சில நொடிகளும் அதிகமானவை தான்.



"அவர் கவனிக்கிறார். அவர் தெளிவுடனிருக்கிறார்"

மேலும், நீங்கள் கவனிக்கும் போது ஒரு தெளிவு பிறக்கிறது. நிறைகவனத்தின் மூலம் தெளிவு பிறப்பது ஏன்? ஏனெனில், நீங்கள் எந்த அளவுக்கு அதிகம் கவனிக்க ஆரம்பிக்கிறீர்களோ, அந்த அளவுக்கு உங்களது அவசரத்தனம் குறைகிறது. நீங்கள் மிகவும் நளினமானவராகி விடுகிறீர்கள். நீங்கள் கவனிக்கும் போது, எப்போதும் பேசிக் கொண்டே இருக்கின்ற உங்களது மனம் பேச்சைக் குறைத்துவிடும். ஏனெனில், பேச்சாக மாறிவந்த அந்த சக்தியானது, இப்போது நிறைகவனமாக மாறிவிடும். அதே சக்திதான் அது. இப்போது, மேலும் மேலும் சக்தியானது நிறைகவனமாக மாற்றப்படும். மேலும், இதனால் மனதிற்கு வேண்டிய ஊட்டச்சத்து கிடைக்காது. எண்ணங்கள் சத்தற்று மெலிந்து போகும். எண்ணங்கள், தங்களின் எடையை இழந்துவிடும். மெதுவாக, மெதுவாக அவைகள் இறந்து போக ஆரம்பிக்கும். எனவே, இப்படி எண்ணங்கள் இறந்து போகும் போது, தெளிவு பிறக்கும். இப்போது, உங்களது மனம் ஒரு நிலைக்கண்ணாடி போல் ஆகிவிடும்.

"அவர் எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறார்!"

மேலும், ஒருவர் தெளிவுடன் இருக்கும் போது, அவர் பேரானந்தத்துடன் இருப்பார். துக்கத்திற்கு மூலகாரணம் குழப்பம் தான்; தெளிவுதான் பேரானந்தத்தின் அஸ்திவாரம்.

"அவர் எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறார்! ஏனெனில், நிறைகவனம் தான் வாழ்வு என்பதை அவர் காண்கிறார்".

மேலும், இப்போது அவர் மரணம் என்று ஒன்று இல்லை என்று அறிந்து கொள்கிறார்; ஏனெனில், நிறைகவனமானது ஒருபோதும்

அழிக்க முடியாதது. மரணம் வரும் போதும், நீங்கள் அதையும் கவனிப்பீர்கள். நீங்கள் நிறைகவனத்துடன் மரணமடைவீர்கள் - நிறைகவனம் மரணமடையாது. உங்களது உடல் மறைந்துவிடும். அது, மண்ணோடு மண்ணாகிவிடும். ஆனால், உங்களது நிறைகவனம் அப்படியே இருக்கும். அது, இந்த பிரபஞ்ச முழுமையின் ஒரு பகுதியாக ஆகிவிடும். அது, இந்த பிரபஞ்ச தன்னுணர்வாக ஆகிவிடும்.

இது போன்ற தருணங்களை, உபநிடத ஞானிகள் "அஹம் பிரம்மாஸ்மி" என்று கூறுகின்றனர். அதாவது, நான் இந்த பிரபஞ்ச தன்னுணர்வாக இருக்கிறேன் என்று கூறுவார்கள். இது போன்றதொரு இடத்தில் தான் அல் ஹிலாஜ் மன்சூர், "அனல் ஹக்!" - "நானே சத்யம்" என்றார். இவைகள் தான் உச்சங்கள், இவைகள் உங்களது பிறப்புரிமை. இதை நீங்கள் அடையவில்லையெனில், அதற்கு நீங்கள் தான் பொறுப்பே தவிர, வேறு யாரும் பொறுப்பாளி அல்ல.

"அவர் ஆனந்தமாக இருக்கிறார்! ஏனெனில், நிறைகவனம் தான் வாழ்க்கை என்பதை அவர் காண்கிறார்".

விழிப்படைந்தவர்களின் பாதையை அவர் பின்பற்றி நடப்பதால், அவர் எவ்வளவு ஆனந்தமாக இருக்கிறார்!

"விடுதலையையும், சந்தோஷத்தையும் தேடி மாபெரும் பாதுகாப்புடன் அவர் தியானம் செய்கிறார்".

இந்த வார்த்தைகளை கவனமாகக் கேளுங்கள். நீங்கள், உங்களை விழிப்படையச் செய்வதற்காக, உங்களின் முழு முயற்சியைக் கொண்டு வரவில்லையென்றால், இது உங்களுக்கு நடக்காது. அரைகுறை முயற்சிகள் பயனற்றவை. நீங்கள் ஏனோதானோ என்று வெறுமனே இருக்க முடியாது. நீங்கள் வழவழ கொளகொள என்று இருக்க முடியாது. அது, உங்களுக்கு உதவாது. வழவழ என்றிருக்கும் நீரால், ஆவியாக முடியாது. அதேபோன்று, விழிப்புடன் இருப்பதற்கான வழவழ கொளகொள முயற்சிகளும், நிச்சயம் தோல்வியைத்தான் கொடுக்கும். நீங்கள், உங்களது முழு சக்தியையும் அதில் ஈடுபடுத்தினால் மட்டுமே, மாற்றம் என்பது நடக்கும்.

நீங்கள் 100 டிகிரி சூடாகும் போது தான், ஆவியாக முடியும். அதன் பின்னர் தான், அந்த ரசவாத மாற்றம் நிகழும். அதன் பின்னர், நீங்கள் எழுச்சி பெற ஆரம்பித்துவிடுவீர்கள். இதை நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? நீர் எப்போதும் கீழ்நோக்கி பாய்கிறது. ஆனால், நீராவி மேலே எழுந்து செல்கிறது. இதே போன்று தான் நடக்கிறது. தன்னுணர்வற்ற நிலை, கீழே இழுத்துச் செல்லும். தன்னுணர்வுள்ள நிலை, மேலே எழுந்து செல்லும்.



மேலும், இதில் ஒரு விஷயத்தை நீங்கள் கவனிக்க வேண்டும். இதில், மேலெழுந்து செல்வது என்று குறிப்பதும், உங்களுக்குள் செல்வது என்பதும் ஒன்றானது. அதே போன்று, கீழ்நோக்கி செல்வது என்பது, வெளியில் செல்வது என்பதற்கு ஒன்றானதாகும். தன்னுணர்வு, எப்போதும் உங்களுக்குள் செல்லும். தன்னுணர்வற்ற நிலை, எப்போதும் உங்களுக்கு வெளியே செல்லும். தன்னுணர்வற்ற நிலை, எப்போதும் உங்களை அடுத்ததன் மீது, அதாவது, அடுத்த மக்கள், அடுத்த பொருட்கள் இவற்றின் மீது ஆர்வம்மிக்கவர்களாக ஆக்கிவிடும்; எப்போதும் அது அடுத்தவர்களை நோக்கி தான் இருக்கும். தன்னுணர்வற்ற நிலை, எப்போதும் உங்களை இருளில் வைத்திருக்கும். உங்களது கண்கள் எப்போதும் அடுத்தவர்களின் மீதே குவிந்து இருக்கும். அது, ஒருவிதமான வெளியோட்ட தன்மையை உருவாக்குகிறது. அது, உங்களை வெளிநாட்டம் உள்ளவர்களாக ஆக்கிவிடும். தன்னுணர்வு நிலை, உள்ளோட்டத்தை உருவாக்குகிறது. அது, உங்களை உள்நாட்டம் உள்ளவர்களாக ஆக்கிவிடுகிறது. அது, உங்களை உங்களுக்குள் ஆழத்தில், மிக மிக ஆழத்தில் கொண்டு செல்கிறது.

மேலும் இதில், ஆழம், இன்னும் ஆழம் என்று கூறுவதற்கு, உயரத்தில் மேலும் உயரத்தில் என்று அர்த்தமாகும். அவைகள் இரண்டும் ஒரே நேரத்தில் வளர்கின்றன; ஒரு மரம் வளர்வதைப் போல வளர்கின்றன. ஒரு மரம் மேலே வளர்வதைத்தான் நீங்கள் பார்க்கிறீர்கள். நீங்கள், அதன் வேர்கள் கீழே செல்வதைப் பார்ப்பதில்லை. ஆனால், முதலில் அதன் வேர்கள் தான் கீழே செல்ல வேண்டும்; அதன் பிறகு மட்டுமே, அந்த மரம் மேலே வளர முடியும். ஒரு மரம் வானத்தைத் தொட விரும்பினால், அப்போது அது தனது வேரை அடி ஆழத்திற்குச் செலுத்த வேண்டும். மரம் இரண்டு பக்கமும் ஒரே நேரத்தில் வளர்கிறது. இதே போன்றதொரு வழியில் தன்னுணர்வும் மேலும் வளர்கிறது. கீழும் அது தனது வேர்களை அனுப்புகிறது.

## துன்பத்தின் வேர்கள்

துன்பம் என்பது, தன்னுணர்வற்ற மனதின் ஒரு நிலை. நாம் என்ன செய்கிறோம், நாம் என்ன நினைக்கிறோம், நாம் என்ன உணர்கிறோம் என்கின்ற விழிப்புணர்வு இல்லாததால், நாம் துன்பம் அடைகிறோம். அதனால் தான் ஒவ்வொரு நொடிப்பொழுதும் நாம் நம்முடனேயே முரண்பட்டுக் கொண்டிருக்கிறோம். நமது செயல் ஒரு திசையில் செல்கிறது, சிந்தனை மற்றொரு திசையில் செல்கிறது,

உணர்வுகள் வேறு எங்கோ செல்கிறது. நாம் பிரிந்து பிரிந்து செல்கிறோம், நாம் மேலும் மேலும் பிளவுபட்டுச் செல்கிறோம். அது தான் துன்பம் ஆகும் - நாம், நமக்குள் ஒருங்கிணைந்து இருப்பதில்லை; நாம், நமக்குள் ஒற்றுமையை இழந்துவிட்டோம். நாம் முற்றிலும் மையத்தில் இல்லாமலும், வெறுமனே வெளிவட்டத்திலும் இருக்கிறோம். எனவே, இயல்பாகவே ஒத்திசைவு இல்லாததொரு வாழ்க்கை துன்பம் நிறைந்ததாகவும், துக்கமானதாகவும், ஏதோ ஒருவித சுமை போன்றும், ஒரு கஷ்டமாகவும் இருக்கிறது. அதிகபட்சமாக, ஒருவர் இந்த துன்பதை கொஞ்சம் வேதனை குறைந்ததாக ஆக்கிக் கொள்ளலாம். மேலும், வாழ்க்கையில் ஆயிரக்கணக்கான வலி நிவாரணிகள் கிடைக்கின்றன.



ஒவ்வொரு நொடிப்பொழுதும் நாம் நம்முடனேயே முரண்பட்டுக் கொண்டிருக்கிறோம். நமது செயல் ஒரு திசையில் செல்கிறது, சிந்தனை மற்றொரு திசையில் செல்கிறது, உணர்வுகள் வேறு எங்கோ செல்கிறது. நாம் பிரிந்து பிரிந்து செல்கிறோம், நாம் மேலும் மேலும் பிளவுபட்டுச் செல்கிறோம். அது தான் துன்பம் ஆகும் - நாம், நமக்குள் ஒருங்கிணைந்து இருப்பதில்லை; நாம், நமக்குள் ஒற்றுமையை இழந்துவிட்டோம்.



வெறும் போதைப் பொருளும், மது வகைகளும் மட்டுமல்ல; இந்த மதங்களும்கூட ஒருவிதத்தில் போதை தரக்கூடிய அபின் போன்றது தான். மேலும், இயல்பாகவே எல்லா மதங்களும் போதைப் பொருட்களுக்கு எதிராக உள்ளன. ஏனெனில், அவைகளும் அதே சந்தையில் தான் தங்கள் பொருட்களை விற்கின்றனர். எனவே, அவர்கள் தங்களின் போட்டியாளர்களுக்கு எதிராக உள்ளனர். மக்கள், அபின் போன்ற போதைப் பொருட்களை எடுக்க ஆரம்பித்தால், அவர்கள் சமயவாதிகளாக இருக்க மாட்டார்கள். அவர்கள், சமயவாதிகளாக இருக்க வேண்டிய அவசியமும் கிடையாது. அவர்கள், தங்களின் போதைப் பொருளைக் கண்டு கொண்டுவிட்டனர். மேலும், அபின் போன்ற போதைப் பொருட்கள் விலை மலிவானவை. அதில் நமது ஈடுபாடு கொஞ்சம் இருந்தால் போதுமானது. மக்கள் மரிஜூலானா, எல்.எஸ்.டி போன்ற மிகவும் நேர்த்தி செய்யப்பட்ட போதைப் பொருட்களை உபயோகிக்கும் போது, இயல்பாகவே அவர்கள் சமயவாதிகளாக இருக்கப் போவதில்லை. ஏனெனில், சமயம் என்பது மிகவும் ஆதிகாலத்து



போதை மருந்து. எனவே தான், எல்லா மதங்களும் போதைப் பொருளுக்கு எதிராக உள்ளன.

அதற்குக் காரணம், உண்மையிலேயே அவைகள் போதைப் பொருட்களுக்கு எதிரானதாக இல்லை. அதற்குக் காரணம், போதைப் பொருட்கள், மதங்களின் போட்டியாளர்கள் என்பது தான்; எனவே மக்கள், போதைப் பொருட்களை உபயோகிப்பதற்கு தடை ஏற்படுத்திவிட்டால், அவர்கள் நிச்சயமாக இந்த மதகுருக்களின் வலையில் விழுந்துதான் தீர வேண்டும். ஏனெனில், அப்போது மதங்களைவிட்டால், வேறு வழி இருக்காது. அது, ஒருவித ஏகபோகத்தின் வழி, அதாவது, அவர்களின் மதம் என்னும் போதைப் பொருள் மட்டுமே சந்தையில் இருக்க வேண்டும் என்பதும், மற்றவையெல்லாம் சட்டவிரோதமானவை என்பதுமாகும்.

மக்கள், துன்பத்தில் வாழ்கிறார்கள். அதில் இருந்து விடுபட இரண்டு வழிகள் தான் உள்ளன. அவர்கள் தியானம் செய்பவர்களாக, உஷாரானவர்களாக, விழிப்புணர்வு உள்ளவர்களாக, தன்னுணர்வு பெற்றவர்களாக ஆக முடியும். ஆனால், அது மிகவும் கடினமான வேலை. அதற்கு தைரியம் தேவை. அல்லது, இன்னொரு மலிவான வழி என்னவென்றால், நீங்கள் இப்போது எப்படி இருக்கிறீர்களோ, அதைவிட இன்னும் அதிகமான தன்னுணர்வு இழந்த நிலைக்கு நீங்கள் சென்றுவிட்டு, அந்த நிலையில் நீங்கள் அந்த துன்பத்தை உணராமல் இருக்க முடியும். உங்களை முற்றிலும் புலன் நுகர்ச்சி அற்றவர்களாக ஆக்குகின்ற ஒரே ஒரு பொருளை, ஏதோ ஒரு மயக்க மருந்தை, ஏதோ ஒரு வலி நிவாரணியை எடுத்துக் கொள்வதால், அது உங்களை தன்னுணர்வு இழந்த நிலைக்கு கொண்டு சென்றுவிடுவதால், நீங்கள் அந்த தன்னுணர்வு இழந்த நிலையில் உங்களது கோபம், துன்பம், அர்த்தமற்ற தன்மை இவற்றிலிருந்து தப்பித்துக் கொள்ளலாம்.

இந்த இரண்டாம் வழி, உண்மையான வழி அல்ல. இந்த இரண்டாம் வழி, உங்களது துன்பத்தை கொஞ்சம் சௌகரியமான தாகவும், கொஞ்சம் தாங்கக் கூடியதாகவும், கொஞ்சம் வசதியான தாகவும் மட்டுமே ஆக்கக் கூடியது. ஆனால், இது உங்களுக்கு உதவிகரமாக இருக்காது - இது, உங்களை மாற்றியமைக்காது. உங்களுக்குள் மாற்றம் ஏற்பட வேண்டுமென்றால், அது தியானத்தினால் மட்டுமே முடியும். ஏனெனில், தியானம் ஒன்று தான் உங்களை விழிப்புணர்வு உள்ளவர்களாக ஆக்குகின்ற வழி. என்னைப் பொருத்தவரையில், தியானம் ஒன்று மட்டுமே உண்மையான மதமாகும். மற்றவையெல்லாம் ஏமாற்று வித்தை. மேலும், கிறிஸ்தவம், இந்து, முகமதியர், சமணம், பௌத்தம் என வெவ்வேறு பெயர்களில் அபின்

உள்ளது. ஆனால் அவைகள், வெறும் தொழிற் சின்னங்கள் மட்டுமே. பாத்திரங்கள் தான் வேறு வேறானவை. ஆனால், அவற்றில் உள்ள பொருட்கள் ஒன்று தான். அவைகள் எல்லாம், நீங்கள் உங்கள் துன்பத்தில் எப்படியோ உங்களை சரி செய்து கொண்டு செல்கின்றதொரு வழிக்கு உதவுகின்றன.

இங்கு, என்னுடைய முயற்சி என்னவென்றால், உங்களை இந்த துன்பத்தைக் கடந்து அதற்கு அப்பால் கொண்டு செல்வது தான். நீங்கள், துன்பத்தோடு நீங்கள் விரும்பிய வகையில் மாற்றி அமைத்துக் கொள்ள வேண்டிய அவசியம் கிடையாது. நீங்கள் இந்த துன்பத்திலிருந்து முற்றிலும் விடுதலை பெறுகின்ற ஒரு சாத்தியம் உள்ளது. ஆனால், அந்தப் பாதை கொஞ்சம் கடினமானது; ஆனால், அந்தப் பாதை சவாலானது.

அதில் நீங்கள், உங்களது உடல் குறித்த விழிப்புணர்வுடன் மட்டுமல்ல; அதனால் நீங்கள் செய்கின்ற காரியங்கள் குறித்தும் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும்.

ஒருநாள் புத்தர், தனது காலைச் சொற்பொழிவை நிகழ்த்திக் கொண்டிருந்தார். அந்த நாட்டின் அரசரும் அதைக் கேட்பதற்கு வந்திருந்தார். அவர், புத்தரின் முன்னால் உட்கார்ந்து கொண்டிருந்தார். மேலும் அவர், தனது பெருவிரலை ஆட்டிக் கொண்டே இருந்தார். புத்தர், பேசுவதை நிறுத்திவிட்டு, அரசரின் பெருவிரலைப் பார்த்தார். புத்தர், தனது பெருவிரலைப் பார்ப்பதைக் கண்டவுடன், அரசர் தனது பெருவிரலை அசைப்பதை நிறுத்தவிட்டார். புத்தர் மீண்டும் தனது பேச்சைத் தொடர்ந்தார். ஆனால், அரசரும் மீண்டும் தனது பெருவிரலை அசைக்க ஆரம்பித்தார். உடனே புத்தர், அவரிடம், "நீங்கள் ஏன் அப்படிச் செய்கிறீர்கள்?" என்று கேட்டார்.

அதற்கு அந்த அரசர், "நீங்கள் பேசுவதை நிறுத்திவிட்டு, நான் எனது பெருவிரலை ஆட்டுவதை நீங்கள் பார்க்கும் போதுதான், எனக்கு, நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்கின்ற விழிப்புணர்வு வருகிறது. மற்றபடி, நான் எனது தன்னுணர்வுடன் இருப்பதே இல்லை," என்று பதில் கூறினார்.

அதைக் கேட்ட புத்தர், "அது உங்களது பெருவிரல் தானே. அப்படியிருக்கும் போது, அது அசைவதைக் கூட உங்களால் தன்னுணர்வுடன் கவனிக்க முடியாதா? இப்படியிருந்தால், நீங்கள் ஒருவரைக் கொலை செய்துவிட்டும் கூட, அதைப் பற்றி எந்தவிதமான விழிப்புணர்வும் இல்லாமலும்கூட இருக்கலாமே!" என்றார்.



மேலும், இப்படிப் போன்றதொரு வழியில் தான் மக்கள் கொலை செய்யப்படுகிறார்கள். மேலும், கொலைகாரர்களும், தாங்கள் என்ன செய்கிறோம் என்கின்ற தன்னுணர்வு இல்லாமல் செய்கின்றனர். நீதிமன்றங்களில் அநேக முறை, கொலை செய்தவர்கள் தாங்கள் கொலை செய்ததை முழுமையாக மறுத்துள்ளனர். ஆரம்பத்தில் அவர்கள் நீதிமன்றத்தை ஏமாற்றுவதாகத் தான் எண்ணப்பட்டது. ஆனால், சமீபகால கண்டுபிடிப்புகளின் மூலம், அவர்கள் ஏமாற்றவில்லை என்றும்; அவர்கள் அதை தங்களது சுயநினைவு இழந்த நிலையில் செய்துவிடுகிறார்கள் என்பதும் தெரிய வந்துள்ளது. அந்த நொடிப்பொழுதில், அவர்கள் அந்த அளவுக்கு ஆக்ரோஷத்துடனும், அந்த அளவுக்கு கோபத்துடனும் இருந்துவிட்டதால், அவர்கள் அந்த ஆக்ரோஷத்தின் பிடியில் அகப்பட்டுக் கொள்கின்றனர். மேலும், நீங்கள் ஆக்ரோஷம் அடையும் போது, உங்களது உடலில் சில வெறியூட்டும் விஷங்கள் சுரக்கின்றன. அதனால், உங்களது இரத்தம் வெறியூட்டப்படுகிறது. ஆக்ரோஷத்தில் இருப்பது என்பது, தற்காலிகமாக புத்தி சுவாதீனம் இல்லாமல் இருப்பது போன்றது. இதனால், அந்த மனிதர் அந்த சம்பவத்தைப் பற்றி முழுமையாக மறந்து போய்விடுவார். ஏனெனில், அவருக்கு அது எப்படி நடந்தது என்கின்ற விழிப்புணர்வு இருக்காது. இப்படித்தான் மக்கள் காதல் வசப்படுவதும், ஒருவரை ஒருவர் கொலை செய்வதும், தற்கொலை செய்து கொள்வதும், இது போன்ற காரியங்களைச் செய்வதும் நடக்கிறது.

எனவே, நீங்கள் உங்களது உடல்குறித்து நிறைகவனத்துடன், விழிப்புணர்வுடன் இருக்க வேண்டியது தான் முதல்படி. கொஞ்சம் கொஞ்சமாக ஒருவர் தனது ஒவ்வொரு அசைவையும், ஒவ்வொரு நகர்வையும் குறித்து விழிப்புணர்வு கொள்ள முடியும். மேலும், இப்படி நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்க ஆரம்பித்துவிட்டால், ஒரு அதிசயம் நடக்கும்; இதற்கு முன்புவரை நீங்கள் செய்து வந்த அநேக காரியங்கள் வெறுமனே மறைந்து போகும். உங்களது உடல் ஓய்வுடன் இருக்கும், உங்களது உடல் ஒத்திசைந்துவிடும், உங்களது உடலில் ஒரு ஆழ்ந்த அமைதி நிலவும், உங்களது உடலில் ஒரு மெல்லிய சங்கீதம் துடிக்கும்.

அதன் பின்னர், உங்களது எண்ணங்கள் குறித்து விழிப்புணர்வுடன் இருக்க ஆரம்பியுங்கள். நீங்கள், உங்களது உடல் மீது செலுத்திய விழிப்புணர்வை இப்போது அப்படியே உங்களது எண்ணங்களின் மீது செலுத்த வேண்டும். உங்களது எண்ணங்கள், உங்களது உடலைவிட மிகவும் கண்ணுக்கும் புலப்படாதவை. மேலும், அவை அபாயகரமானதும்கூட. மேலும், நீங்கள் உங்களது எண்ணங்கள் குறித்து விழிப்புணர்வு பெற்றுவிட்டால், அதன்பின்னர் உங்களுக்குள் என்ன

நடந்து கொண்டிருக்கிறது என்பதை அறிந்து, நீங்கள் ஆச்சரியமடைவீர்கள். எந்த நேரத்திலும் உங்கள் மனதினில் ஓடிக் கொண்டிருக்கும் எண்ணங்களை எழுத ஆரம்பித்தால், உங்களுக்கு அது மிகப்பெரிய ஆச்சரியத்தைக் கொடுக்கும். "இது தான் எனக்குள் நடந்து கொண்டிருக்கிறதா?" என்று நீங்கள் அதை நம்ப மாட்டீர்கள். வெறும் பத்து நிமிடங்கள் வரை உங்களுக்குள் என்னென்ன எண்ணங்கள் ஓடுகின்றன என்று வெறுமனே குறித்து வைத்துப் பாருங்கள். அப்போது வேண்டுமானால், யாரும் உள்ளே வராதபடிக்கு கதவை மூடிக் கொண்டு தாழிட்டுக் கொள்ளுங்கள். எனவே, அப்போது நீங்கள் நேர்மையுடன் உங்களுக்குள் ஓடுகின்ற எண்ணங்களை எழுத முடியும். மேலும், எழுதி முடித்து அதை படித்த பின்னர், அதை தீயிட்டுக் கொளுத்துவதற்கு ஒரு நெருப்பையும் அங்கே உருவாக்கி வைத்திருங்கள்! எனவே, உங்களைத் தவிர வேறு யாரும் அதில் உள்ளதை அறிய முடியாது. ஆனால், அப்போது நீங்கள் நேர்மையுடன் இருந்து, உங்களுக்குள் என்னென்ன எண்ணங்கள் வருகின்றனவோ, அதையெல்லாம் எழுதிவிட வேண்டும். அதைத் திரித்துக் கூறாதீர்கள், அதை மாற்றிவிடாதீர்கள், அதை வெட்டிச் சுருக்கிவிடாதீர்கள். அதை அப்படியே நிர்வாணமானதாக காகிதத்தில் எழுதுங்கள். சரியாக அப்படியே எழுதுங்கள்.



> **எனவே, நீங்கள் உங்களது உடல்குறித்து நிறைகவனத்துடன், விழிப்புணர்வுடன் இருக்க வேண்டியது தான் முதல்படி. கொஞ்சம் கொஞ்சமாக ஒருவர் தனது ஒவ்வொரு அசைவையும், ஒவ்வொரு நகர்வையும் குறித்து விழிப்புணர்வு கொள்ள முடியும். மேலும், இப்படி நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்க ஆரம்பித்துவிட்டால், ஒரு அதிசயம் நடக்கும்; இதற்கு முன்புவரை நீங்கள் செய்து வந்த அநேக காரியங்கள் வெறுமனே மறைந்து போகும். உங்களது உடல் ஓய்வுடன் இருக்கும், உங்களது உடல் ஒத்திசைந்துவிடும், உங்களது உடலில் ஒரு ஆழ்ந்த அமைதி நிலவும், உங்களது உடலில் ஒரு மெல்லிய சங்கீதம் துடிக்கும்.**



அதன் பிறகு, பத்து நிமிடங்கள் கழித்து அதைப் படித்துப் பாருங்கள். அப்போது நீங்கள், உங்களுக்குள் ஒரு பைத்தியக்கார மனம் இருப்பதைக் காண்பீர்கள்! இப்படிப்பட்ட முழு பைத்தியக்காரத்தனம் ஒன்று நமக்குள் ஒரு அடி நீரோட்டம் போல் ஓடிக் கொண்டிருப்பதை



நாம் ஒருபோதும் கவனிப்பதில்லை. உங்களது வாழ்க்கையின் முக்கியமான விஷயங்களை அது பாதிக்கும். அது, எல்லாவற்றையும் பாதிக்கும். ஆனால், இது தான் உங்களது ஒட்டுமொத்த வாழ்வாகவும் இருந்து வருகிறது!

ஆகவே, இந்த பைத்தியக்காரத்தனம் மாற்றப்பட வேண்டும். மேலும், விழிப்புணர்வின் அற்புதம் என்னவென்றால், நீங்கள் விழிப்புணர்வுடன் இருப்பதைத் தவிர, வேறு எதுவும் நீங்கள் செய்ய வேண்டியதில்லை என்பது தான். நீங்கள் அதைக் கவனிக்கின்ற அந்த விஷயமே, அதை மாற்றிவிடும். கொஞ்சம் கொஞ்சமாக உங்களது எண்ணங்கள் ஒரு குறிப்பிட்ட வகைக்குள் விழ ஆரம்பித்துவிடும். அதன் பின்னர், அவைகளில் குழப்பம் இருக்காது. அவைகள், குழப்பங்கள் இல்லாத இந்த பிரபஞ்சம் போல் ஆகிவிடும். எனவே, அதன்பிறகு மீண்டும் அங்கே ஒரு ஆழ்ந்த அமைதி நிலவும்.

மேலும், இவ்வாறு உங்களது உடலும், உங்களது மனமும் அமைதியடைந்துவிட்டால், அப்போது அவைகள் இரண்டும் ஒன்றோடு ஒன்று ஒத்திசைந்து செல்வதையும் நீங்கள் காண்பீர்கள். அங்கே ஒரு பாலம் அமைத்துவிடும். இப்போது உங்களது உடலும், மனமும் வெவ்வேறு திசைகளில் ஓடாது. அவைகள் வெவ்வேறு குதிரைகளில் சவாரி செய்யாது. முதல்முறையாக அவைகள் இரண்டும் ஒத்துப் போகும். மேலும், அவைகளின் இந்த ஒத்துப் போகும் செயலானது, நீங்கள் அதற்கடுத்த மூன்றாவது படிக்கு செல்வதற்கு அதிகம் உதவும். அதாவது, மூன்றாவதாக நீங்கள் உங்களது உணர்வுகள், மனக்கிளர்ச்சிகள், மனநிலைகள் ஆகியவைகள் குறித்து விழிப்புணர்வுடன் இருப்பதற்கு ஏதுவாக இருக்கும். இந்த உணர்வுகள் தான் உங்களுக்குள் உள்ள கண்களுக்குப் புலப்படாத, அதேசமயம், மிகவும் கடினமானதொரு அடுக்கு; ஆனால், நீங்கள் உங்களது எண்ணங்கள் குறித்து விழிப்புணர்வுடன் இருக்க முடியுமெனில், அதன்பின்னர், இது இன்னும் ஒரே ஒரு படி தான் அதிகம். உங்களது மனநிலையை, உங்களது மனக்கிளர்ச்சியை, உங்களது உணர்வுகளை பிரதிபலிக்கும் போது, நீங்கள் கொஞ்சம் தீவிரமாக விழிப்புணர்வுடன் இருந்தால் போதும்.

இப்படி நீங்கள் இந்த மூன்று நிலைகளிலும் விழிப்புணர்வுடன் இருந்துவிட்டால், அவைகள் எல்லாம் ஒரே விஷயமாக ஒன்று சேர்ந்துவிடும். மேலும், இவைகள் மூன்றும் இப்படி ஒன்றாக ஆகிவிட்டால், முற்றிலும் ஒன்று சேர்ந்து செயலாற்ற ஆரம்பித்து விட்டால், ஒன்று சேர்ந்து குரல் கொடுக்க ஆரம்பித்துவிட்டால், உங்களால் இந்த மூன்றின் சங்கீதத்தையும் உணர முடியும் - அவைகள்,

ஒரு இசைக்குழு போல் ஆகிவிடும் - அதன் பின்னர் தான் நான்காவது விஷயம் நடக்கும். இந்த நான்காவது விஷயத்தை, நீங்கள் ஏதாவது செய்து, கொண்டுவர முடியாது. அது, தானாகவே நிகழ்வது; அது, பூரணத்தின் வரமாகும். இந்த மூன்றையும் செய்தவர்களுக்கு கிடைக்கின்ற வெகுமதியாகும்.

மேலும் இப்படி, நான்காவதாக எழுகின்ற அந்த விழிப்புணர்வு தான், உங்களை ஞானமடைந்த ஒருவராக ஆக்கும். அப்போது, ஒருவர் தனது விழிப்புணர்வு குறித்தே விழிப்புணர்வுடன் இருப்பார். இதுதான் நான்காவது படி. அது, ஒருவரை புத்தராக ஆக்கிவிடும், ஞானமடைந்தவராக ஆக்கிவிடும். மேலும், இப்படி ஒருவர் விழிப்படைந்தால் மட்டுமே, ஒருவர் பேரானந்தம் என்றால் என்ன என்று அறிந்து கொள்ள முடியும். உடல் அறிவது சுகம், மனம் அறிவது சந்தோஷம், உள்ளம் அறிவது மகிழ்ச்சி, நான்காவதாக அறியப்படுவது பேரானந்தம். எனவே, பேரானந்தம் தான் நமது லட்சியம்; விழிப்புணர்வு தான் அதற்கான பாதையாகும்.

## தனிப்பட்ட உலகங்கள்

ஹொராக் விட்டஸ் கூறுகிறார் :

மனிதர்கள் தூங்கும் போது
எப்படி இருக்கிறார்களோ, அப்படியே
தாங்கள் விழித்திருக்கும் போதும்கூட
தங்களைச் சுற்றிலும் என்ன நடக்கிறது
என்பது குறித்த மறதியுடனும்,
கவனக் குறைவுடனும் இருக்கின்றனர்.
முட்டாள்கள், காதுகளால் அவர்கள்
கேட்டாலும்கூட அவர்கள் செவிடர்கள்
போல் இருக்கிறார்கள்;
எப்போதெல்லாம் அவர்கள் இருப்பது போன்று
உணர்கிறார்களோ அப்போதெல்லாம் அவர்கள்
இல்லாமலும் இருக்கிறார்கள் என்னும் முதுமொழி
இவர்களுக்கு பொருந்தும்.
ஒருவர் தான் ஏதோ ஆழ்ந்த தூக்கத்தில்
இருப்பவர் போன்று காரியமாற்றவோ, பேசவோ
கூடாது.



விழித்திருப்பவர்களுக்கு, பொதுவாக ஒரே ஒரு உலகம் தான் உண்டு. ஆனால், தூக்கத்திலிருப்பவர்களுக்கோ, ஒவ்வொரு வருக்கும் அவர்களுக்குச் சொந்தமானதொரு தனிப்பட்ட உலகம் இருக்கும். விழிப்புநிலையில் நாம் காண்பதெல்லாம் இறப்பு தான். அதே போன்று, தூக்கத்தில் காண்பதெல்லாம் கனவு தான்.

மனிதனானவன், விழித்திருக்கும் போதும்கூட ஆழ்ந்த தூக்கத்திலிருக்கிறான் என்கின்ற அவனது ஆழ்ந்த பிரச்சனையை ஹெராக் விட்டஸ் இதில் கோடிட்டுக் காட்டுகிறார்.

தூங்கும் போதும், நீங்கள் தூங்குகிறீர்கள். ஆனால், நீங்கள் விழித்திருக்கும் போதும்கூட, நீங்கள் தூங்கிக் கொண்டுதான் இருக்கிறீர்கள். இதன் அர்த்தம் என்ன? இதைத்தான் புத்தரும் கூறுகிறார், இதைத்தான் இயேசுவும் கூறுகிறார், இதைத்தான் ஹெராக் விட்டஸும் கூறுகிறார். நீங்கள் கண்களை அகலத் திறந்து கொண்டு விழித்திருப்பது போலத் தென்படுகிறீர்கள். ஆனால், அது வெறும் தோற்றம் மட்டுமே; உங்களுக்குள் அடி ஆழத்தில் இன்னமும் அந்த தூக்கம் தொடர்ந்து இருக்கிறது.

இப்போதும்கூட நீங்கள், உங்களுக்குள் கனவு கண்டு கொண்டு தான் இருக்கிறீர்கள். உங்களுக்குள் ஆயிரம் எண்ணங்கள் தொடர்ந்து இருக்கின்றன. ஆனால், உங்களுக்குள் என்ன நடக்கிறது என்று நீங்கள் அறிவதில்லை; நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்று நீங்கள் விழிப்புணர்வு கொள்வதில்லை; நீங்கள் யார் என்பதே உங்களுக்குத் தெரியாது. தூக்கத்தில் மக்கள் நடப்பதைப் போன்று, நீங்கள் நகர்ந்து செல்கிறீர்கள். தூக்கத்தில் வேறு யாராவது நடப்பதையும், இதையும் அதையும் செய்வதையும், அதன் பிறகு மீண்டும் திரும்ப தூங்கிப் போவதையும் நீங்கள் அறிந்திருப்பீர்கள். சோம்னாம்பூலிஸம் என்றழைக்கப் படுகின்றதொரு நோய் உள்ளது. அந்த நோயுள்ள அநேக மக்கள், தங்களின் படுக்கையிலிருந்து இரவில் எழுந்திருப்பார்கள்; அவர்களின் கண்கள் திறந்தே இருக்கும்; அவர்களால் நடந்து செல்ல முடியும்; அவர்களால் நகர்ந்து செல்ல முடியும்; அவர்களால், வீட்டின் கதவைக் கண்டுபிடிக்க முடியும். அவர்கள் சமையலறைக்குச் செல்வார்கள், அங்கு ஏதாவது ஒன்றை தின்பார்கள். ஆனால், மறுநாள் காலையில் நீங்கள் அவர்களிடம் கேட்டால், அதைப்பற்றி அவர்களுக்கு எதுவும் தெரியாது. அதையும் மீறி அவர்கள் ஞாபகப்படுத்திப் பார்த்தால், அவர்கள் ஏதோ ஒரு கனவு கண்டதாகச் சொல்வார்கள், அதில் அவர்கள் விழித்தெழுந்து சமையலறைக்குச் சென்றதாகக் கூறுவார்கள். ஆனாலும் கூட, அது கனவு என்று தான் கூறுவார்கள். அதையும்கூட அவர்கள் நினைவில் வைத்திருப்பது மிகவும் கடினம்.

இதைப் போன்று, பலர் பல குற்றங்களைச் செய்துள்ளார்கள். நீதிமன்றங்களில் பல கொலைகாரர்கள், தங்களுக்கு எதுவும் தெரியாது என்றும், இது போன்றதொரு செயலை தாங்கள் செய்ததாக தங்களுக்கு ஒருபோதும் நினைவில்லை என்றும் கூறுவார்கள். இதற்கு அவர்கள் நீதிமன்றத்தை ஏமாற்ற நினைக்கிறார்கள் என்பதாகாது. அது அல்ல. மன இயல் ஆய்வாளர்கள், அவர்கள் ஏமாற்றவில்லை, அவர்கள் பொய் சொல்லவில்லை என்பதை கண்டுபிடித்து உள்ளனர். அவர்கள் முற்றிலும் உண்மையானவர்கள். அவர்கள் கொலை செய்திருக்கலாம். ஆனால், அவர்கள் ஆழ்ந்த தூக்கத்தில் இருக்கும் போது அதைச் செய்துள்ளார்கள். ஏதோ ஒரு கனவில் செய்வது போல செய்துள்ளார்கள். இந்த உறக்கம், சாதாரண உறக்கத்தைவிடவும் ஆழமானது. இந்த உறக்கம், நீங்கள் குடிபோதையில் தூங்குவதைப் போன்றது. அப்போது உங்களால் கொஞ்சம் நடக்க முடியும்; அப்போது உங்களால் ஏதாவது கொஞ்சம் காரியம் செய்ய முடியும். அதே சமயம், உங்களுக்கு கொஞ்சம் விழிப்புணர்வும் இருக்கும் - ஆனால், குடிபோதையில் இருப்பீர்கள். உண்மையில், என்ன நடக்கிறது என்று உங்களுக்குத் தெரியாது. உங்களது கடந்த காலங்களில் நீங்கள் செய்துள்ளது என்ன? உங்களால் அதை சரியாக திரும்பவும் நினைவுகூற முடியுமா, நீங்கள் என்ன செய்தீர்கள், அதை ஏன் செய்தீர்கள் என்று கூற முடியுமா? உங்களுக்கு நடந்தது என்ன? அது நடந்த போது நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்தீர்களா? ஏன் என்று தெரியாமலேயே நீங்கள் காதலில் விழுகிறீர்கள், ஏன் என்று அறியாமலேயே நீங்கள் கோபம் கொள்கிறீர்கள். நீங்கள் அதற்கான சாக்கு போக்குகளைக் கண்டுபிடித்து விடுகிறீர்கள். நீங்கள் எதைச் செய்தாலும், அதை நியாயப்படுத்தி விடுகிறீர்கள். ஆனால், இப்படி நியாயப்படுத்துவது விழிப்புணர்வாகாது.

விழிப்புணர்வு என்பதற்கு, அந்த நொடிப்பொழுதில் என்னவெல்லாம் நடக்கிறதோ, அதையெல்லாம் முழுமையான தன்னுணர்வுடன் நடத்துவது என்று அர்த்தம்; நீங்கள் அங்கு ஆஜராகி இருக்க வேண்டும். எனவே, உங்களுக்கு கோபம் ஏற்படும் போது, நீங்கள் இருப்பதை நீங்கள் உணர்ந்திருந்தால், கோபம் நிகழாது. நீங்கள் ஆழ்ந்த தூக்கத்தில் இருக்கும் போதுதான் உங்களுக்கு கோபம் வரும். நீங்கள் அந்த நொடிப் பொழுதில் ஆஜராகிவிட்டால், உங்களது இருப்புநிலையில் உடனடியாக மாற்றம் ஏற்பட்டுவிடும்; ஏனெனில், நீங்கள் ஆஜராகி இருந்தால், விழிப்புணர்வுடன் இருந்தால், அதன்பிறகு அநேக காரியங்களை செய்ய முடியாமல் போய்விடும். நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்தால், நீங்கள் பாவங்கள் என்று



அழைக்கின்றவையெல்லாம் நடக்காது. எனவே, இங்கே இருப்பது ஒரே ஒரு பாவச் செயல் தான். அதுதான் விழிப்புணர்வு இல்லாமல் இருப்பது.

SIN (பாவச்செயல்) என்கிற மூலவார்த்தைக்கு, தவறவிட்டு விடுதல் என்று அர்த்தம். அதற்கு, தவறான ஏதோ ஒரு காரியத்தைச் செய்ததாக அர்த்தமாகாது. அதற்கு, வெறுமனே நீங்கள் தவறவிட்டு விட்டதாக, அதாவது, நீங்கள் ஆஜராகாமல் இருந்துவிட்டீர்கள் என்று தான் அர்த்தம். SIN என்ற வார்த்தையின் ஹீப்ரு மொழி மூல வார்த்தையின் பொருள், தவறவிட்டு விடுதல் என்பது தான். அது, ஒரு சில ஆங்கில வார்த்தைகளில் இருக்கிறது; mis conduct, mis behaviour. எனவே, தவறவிட்டு விட்டீர்கள் என்றால், நீங்கள் அங்கு இல்லை என்று தான் அர்த்தம்; நீங்கள் இருப்பதை உணராமலேயே, ஏதாவது ஒன்றைச் செய்வது என்று அர்த்தம். இது ஒன்று மட்டுமே பாவச் செயல். அப்படியானால், புண்ணியச் செயல் என்பது என்ன? ஏதாவது ஒன்றைச் செய்யும் போது, நீங்கள் முழு விழிப்புடன் இருப்பது. இதைத் தான் குர்ட்ஜியப், தன் நினைவு என்று அழைக்கிறார்; புத்தர் இதை, சரியானபடி கவனித்தல் என்கிறார் கிருஷ்ணமூர்த்தி இதை, விழிப்புணர்வு என்கிறார்; கபீர் இதை, சுரதி என்கிறார். நீங்கள் அந்த இடத்தில் இருக்க வேண்டும்! தேவையானது அது மட்டும் தான், வேறு எதுவும் தேவையில்லை.



**SIN (பாவச்செயல்) என்கிற மூலவார்த்தைக்கு, தவறவிட்டு விடுதல் என்று அர்த்தம். அதற்கு, தவறான ஏதோ ஒரு காரியத்தைச் செய்ததாக அர்த்தமாகாது. அதற்கு, வெறுமனே நீங்கள் தவறவிட்டு விட்டதாக, அதாவது, நீங்கள் ஆஜராகாமல் இருந்துவிட்டீர்கள் என்று தான் அர்த்தம்.**



நீங்கள் எதையும் மாற்றத் தேவையில்லை. மேலும், நீங்கள் மாற்ற வேண்டும் என்று முயற்சித்தாலும்கூட, உங்களால் முடியாது. உங்களிடம் உள்ள அநேக விஷயங்களை மாற்றுவதற்கு நீங்கள் முயன்று வந்திருக்கிறீர்கள். அதில் வெற்றி பெற்றுவிட்டீர்களா? நான் மீண்டும் கோபப்பட மாட்டேன் என்று எத்தனை முறை நீங்கள் தீர்மானித்திருக்கிறீர்கள்? உங்களது தீர்மானம் என்ன ஆனது? அந்த நேரம் வரும்போது, நீங்கள் மீண்டும் அதே பொறியில் சிக்கிக் கொள்கிறீர்கள்; நீங்கள் கோபம் கொள்வீர்கள். ஆனால், அதன் பிறகு அந்த கோபம் போன பின்னர், மீண்டும் நீங்கள் மனம் வருந்துவீர்கள். இது ஒரு வட்டப்பாதை போல் ஆகிவிட்டது. நீங்கள் கோபம்

கொள்கிறீர்கள். அதன்பிறகு, மனம் வருந்துகிறீர்கள். அதன்பிறகு, மீண்டும் கோபம் கொள்ளத் தயாராகி விடுகிறீர்கள்.

ஆனால், நீங்கள் மனம் வருந்தும் போதும்கூட, நீங்கள் அங்கே இருப்பதில்லை என்பதையும் நீங்கள் நினைவில் கொள்ளுங்கள். அந்த மனவருத்தமும்கூட, உங்களது பாவச் செயலில் ஒரு பகுதி தான். அதனால் தான் எதுவும் நடக்காமல் போய்விடுகிறது. நீங்களும் முயற்சி மேல் முயற்சி செய்து கொண்டே போகிறீர்கள். நீங்கள் சில தீர்மானங்களை எடுக்கிறீர்கள். நீங்கள் சில சபதங்களைப் போடுகிறீர்கள். ஆனால், எதுவும் நடப்பதில்லை. நீங்கள் அப்படியே தான் இருக்கிறீர்கள். நீங்கள் பிறக்கும் போது எப்படி இருந்தீர்களோ, அப்படியே தான் இன்னமும் இருக்கிறீர்கள். ஒரு சிறிய மாற்றம்கூட உங்களிடம் ஏற்படவில்லை. நீங்கள் முயற்சி செய்யவில்லை என்பதல்ல, நீங்கள் போதுமான அளவு முயற்சி செய்யவில்லை என்பதல்ல, நீங்கள் முயற்சி மேல் முயற்சி மேற்கொண்டு தான் வருகிறீர்கள். என்றாலும்கூட, நீங்கள் தோல்வி அடைகிறீர்கள். ஆனால் அந்த தோல்வி, உங்களது முயற்சியினால் அல்ல. இன்னும் அதிகம் முயற்சி செய்ய வேண்டும் என்பதும்கூட உதவாது. நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்கிறீர்களா என்பது தான் கேள்வியே தவிர, உங்களது முயற்சியைப் பற்றி கேள்வியே கிடையாது.



**நீங்கள் இருப்பதை உணராமலேயே, ஏதாவது ஒன்றைச் செய்வது என்று அர்த்தம். இது ஒன்று மட்டுமே பாவச் செயல்.**



நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்தால், அநேக விஷயங்கள் உங்களை விட்டுப் போய்விடும்; நீங்கள் அதை, விட வேண்டியதில்லை. விழிப்புணர்வில் சில காரியங்களைச் செய்வது சாத்தியப்படாது. இதுதான் எனது விவரிப்பு. இங்கே, வேறு எந்த அடிப்படைத் தத்துவமும் கிடையாது. நீங்கள் விழிப்புடன் இருந்தால், காதலில் விழ முடியாது; அப்படி நீங்கள் காதலில் வீழ்வது தான் பாவச் செயல். நீங்களும் காதல் கொள்ள முடியும். ஆனால், அது ஒரு வீழ்ச்சியாக இருக்காது. அது ஒரு எழுச்சி போன்று இருக்கும். காதலில் விழுந்துவிட்டான் என்கிற வார்த்தையை நாம் ஏன் பயன்படுத்துகிறோம்? அது ஒரு வீழ்ச்சி, நீங்கள் விழுந்து விடுகிறீர்கள், நீங்கள் எழுச்சி பெறுவதில்லை. நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்தால், வீழ்தல் என்பது சாத்தியப்படாது - காதலில் மட்டுமல்ல; எதிலும், வீழ்தல் சாத்தியப்படாது. அது நடக்காது, வெறுமனே அது சாத்தியப்படாது. விழிப்புணர்வுடன் இருந்தால், அது சாத்தியப்படாது. அப்போது நீங்கள்



காதலில் எழுச்சி பெறுவீர்கள். மேலும், காதலில் எழுச்சி பெறுவது என்பது, காதலில் விழுவதைவிடவும் மிகவும் வித்தியாசமான, வேறுபட்ட விஷயமாகும். காதலில் வீழ்வது, ஒருவித கனவு நிலை. அதனால் தான், காதலிப்பவர்களைப் பார்த்தால், அவர்களின் கண்களில் அதை நீங்கள் காண முடியும். அவர்கள், மற்றவர்களைவிடவும் அதிகம் தூங்குவதைப் போன்றும், கனவு காண்பதைப் போன்றும், வெறியூட்டப்பட்டதைப் போன்றும் தெரியும். நீங்கள், அவர்களின் கண்களைப் பார்த்தே கண்டு கொள்ளலாம். ஏனெனில், அவர்களின் கண்களில் தூக்கம் இருக்கும். ஆனால், காதலில் எழுச்சி பெறுபவர்கள் முற்றிலும் வேறுபட்டு இருப்பார்கள். அவர்கள், கனவு காண்பவர்களைப் போன்று ஒருபோதும் இருக்க மாட்டார்கள். அவர்கள் நிஜத்தை எதிர்கொள்வார்கள். அதன்மூலம் அவர்கள் வளர்ச்சி அடைவார்கள்.

காதலில் விழும்போது, நீங்கள் ஒரு குழந்தை போல் இருக்கிறீர்கள்; காதலில் எழும் போது, நீங்கள் முதிர்ச்சி அடைகிறீர்கள். மேலும், கொஞ்சம் கொஞ்சமாக காதல் என்பது ஒரு உறவாக இல்லாமல், அது, உங்களின் ஒரு இருப்புநிலையாக ஆகிவிடுகிறது. அதன்பிறகு நீங்கள், இதன் மீது தான் நான் அன்பு கொள்வேன், அதன்மீது நான் அன்பு கொள்ள மாட்டேன் என்று கூற மாட்டீர்கள். அப்படிக் கிடையாது. நீங்கள் வெறுமனே அன்புமயமாக இருப்பீர்கள். உங்கள் அருகில் யார் வந்தாலும், அவர்களிடம் உங்களது அன்பைப் பகிர்ந்து கொள்வீர்கள். எது நிகழ்ந்தாலும், அதில் நீங்கள் உங்களது அன்பைக் கொடுப்பீர்கள். அப்போது நீங்கள் ஒரு பாறையைத் தொட்டாலும், அதை உங்களின் நேசமிக்கவரின் உடலைத் தொடுவது போன்று தொடுவீர்கள். நீங்கள், உங்கள் காதலியின் முகத்தைப் பார்ப்பது போல் ஒரு மரத்தைப் பார்ப்பீர்கள். எனவே, காதல் என்பது, உங்களின் ஒரு இருப்புநிலை ஆகிவிடும். அதற்கு, நீங்கள் காதல் வயப்பட்டு இருக்கிறீர்கள் என்பதாகாது. இப்போது நீங்களே காதலாகி இருப்பீர்கள். இது தான் எழுச்சி, இது வீழ்ச்சி கிடையாது.

நீங்கள் அதன்மூலம் எழுச்சி அடையும் போது, காதல் என்பது மிகவும் அழகானது. ஆனால், நீங்கள் காதலில் வீழ்ச்சி அடையும் போது, காதல் என்பது அசிங்கமானதாகவும், அழுக்கானதாகவும் ஆகிவிடும். மேலும், விரைவில் அது விஷம் போன்று ஆகிவிட்டதையும், அது ஒரு அடிமைத்தளை போன்று ஆகிவிட்டதையும் கண்டு கொள்வீர்கள். நீங்கள் அதில் பிடிபட்டுக் கொள்வீர்கள். உங்களது சுதந்திரம் நசுக்கப்பட்டிருக்கும். உங்களது சிறகுகள் வெட்டப்பட்டிருக்கும்; இப்போது நீங்கள் சுதந்திரமாக இருக்க முடிவதில்லை. காதலில் வீழ்வது

என்பதில், நீங்கள் எல்லாவற்றையும் உங்களுடையதாக்கிக் கொள்வீர்கள். நீங்களும் மற்றவர்களை உங்களுக்கே சொந்தமானவர் களாக ஆக்கிக் கொள்வீர்கள். அதே போன்று, உங்களையும் மற்றவர்கள் தங்களுக்கே சொந்தமானவராக ஆக்கிக் கொள்ள அனுமதித்து விடுவீர்கள். நீங்களும் ஒரு பொருள் போன்று ஆகிவிடுவீர்கள். மேலும், நீங்கள் காதலில் விழுந்துள்ள அந்த மனிதரையும் ஒரு பொருள் போன்று மாற்றிவிடுவீர்கள்.

கணவன் மனைவிகளைப் பாருங்கள். அவர்கள் இருவரும், ஏதோ பொருட்கள் போன்று ஆகிவிடுகிறார்கள். அவர்கள், அதன் பிறகு ஒருபோதும் மனிதர்கள் போன்று இருப்பதில்லை. இருவருமே, ஒருவரை ஒருவர் தனக்கே சொந்தமானவராக ஆக்கிக் கொள்ள முயற்சிக்கின்றனர். பொருட்களை மட்டுமே சொந்தமாக்க முடியும், மனிதர்களை ஒருபோதும் முடியாது. உங்களால், ஒரு மனிதரை எப்படி உங்களுடையவராக ஆக்கிக் கொள்ள முடியும்? உங்களால், எப்படி ஒருவர்மீது ஆதிக்கம் செலுத்த முடியும்? ஒரு மனிதரை எப்படி நீங்கள் உங்களுக்கே சொந்தமானவராக மாற்ற முடியும்? அது சாத்தியப்படாது! ஆனால், கணவன்மார்கள், மனைவிமார்களை தங்களுக்கே உரியவராக ஆக்கிக் கொள்ள முயற்சிக்கின்றனர்; அதே போன்று தான், மனைவிமார்களும் முயற்சிக்கின்றனர். அதன் பின்னர், அங்கே ஒரு மோதல் உருவாகிறது. அதன் பிறகு, அடிப்படையில் அவர்கள் பகைவர்கள் ஆகிவிடுகின்றனர். அதன் பின்னர், ஒருவருக்கொருவர் அழிக்கும் சக்தியாக ஆகிவிடுகின்றனர்.

இது நடந்த கதை :

முல்ல நஸ்ருதீன், கல்லறைத் தோட்டத்தில் உள்ள அலுவலகத்திற்குச் சென்று, அங்குள்ள மேலாளரிடம், "உங்களது கல்லறைத் தோட்டத்தில் தான் எனது மனைவி புதைக்கப்பட்டாள் என்பதை நான் அறிவேன். ஆனால், என்னால் அவளது கல்லறையைக் கண்டுபிடிக்க முடியவில்லையே?" என்று கேட்டார்.

அந்த மேலாளர் பதிவேட்டினை சரிபார்த்துக் கொண்டே, "உங்களது மனைவியின் பெயர் என்ன?" என்று கேட்டார்.

உடனே முல்லா, "திருமதி முல்லா நஸ்ருதீன்," என்றார்.

உடனே அந்த மேலாளர், மீண்டும் மீண்டும் பதிவேட்டைப் புரட்டிப் பார்த்துவிட்டு, "இதில், திருமதி முல்லா நஸ்ருதீன் என்று யாரும் இல்லை. ஆனால், முல்லா நஸ்ருதீன் என்று ஒரு பெயர் உள்ளது. இதற்காக நாங்கள் வருந்துகிறோம். இந்தப் பதிவேட்டில் ஏதோ தவறு நேர்ந்துள்ளது," என்றார்.



அதைக் கேட்ட நஸ்ருதீன், "அதில் எந்தத் தவறும் இல்லை. முல்லா நஸ்ருதீனின் கல்லறை எங்கு உள்ளது? ஏனெனில், எல்லாமே எனது பெயரில் தான் இருக்கும்," என்றார்.

அவரது மனைவியின் கல்லறையும் கூட, அவர் பெயரில் தான்!

தனதாக்கிக் கொள்ளுதல்... ... ஒவ்வொருவரும், தங்களது காதலியை, நேசிப்பவரைத் தனக்கே உரியவராக ஆக்கிக் கொள்ள முயற்சிக்கின்றனர். இது ஒருபோதும் காதல் ஆகாது. உண்மையில், ஒருவரை நீங்கள் உங்களுடையவராக்கிக் கொள்ளும் போது, நீங்கள் வெறுக்கிறீர்கள், நீங்கள் அழிக்கிறீர்கள், நீங்கள் கொல்கிறீர்கள்; நீங்கள் ஒரு கொலைகாரர் ஆகிவிடுகிறீர்கள். காதலில் சுதந்திரம் கொடுக்கப்பட வேண்டும்; காதலே சுதந்திரமானது தான். காதல், உங்களது நேசத்துக்குரியவரை மேலும் மேலும் சுதந்திரமானவராக ஆக்கும். காதல், அவர்களுக்குச் சிறகுகளைக் கொடுக்கும். மேலும், காதல் என்பது, இந்தப் பரந்த வானத்தைத் திறந்துவிடும். அது ஒரு சிறைச்சாலை போன்றோ அல்லது அடைபட்டுக் கிடக்கும் இடம் போன்றோ ஆகிவிடாது. ஆனால், அப்படிப்பட்ட அன்பை, காதலை நீங்கள் இன்னமும் அறிந்திருக்கவில்லை. ஏனெனில், நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்கும் போது தான், அது நிகழும். அத்தகைய அன்புத் தன்மை உங்களிடம் விழிப்புணர்வு இருக்கும் போது மட்டுமே வரும். நீங்கள் அறிந்துள்ள நேசமானது பாவச் செயல் போன்ற நேசமாகும். ஏனெனில், அது உங்களது தூக்கத்திலிருந்து வருகிறது.

மேலும், இதுவரை நீங்கள் செய்கின்ற ஒவ்வொரு காரியத்திலும் இதுதான் உள்ளது. நீங்கள், ஏதோ ஒரு நல்ல காரியத்தைச் செய்கின்ற போதும்கூட, நீங்கள் கெடுதல் தான் செய்கிறீர்கள். நல்லது செய்பவர்களைப் பாருங்கள்; அவர்கள் எப்போதுமே கெடுதல் தான் செய்கின்றனர். இந்த உலகிலேயே மிகவும் தீங்கானவர்கள் அவர்கள் தான். சமூக சீர்திருத்தவாதிகள், சமூகப் புரட்சியாளர்கள், இவர்கள் தான் மிகவும் தீங்கானவர்கள். ஆனால், அவர்கள் செய்கின்ற அந்த தீங்கு, எங்கு இருக்கிறது என்பதைக் கண்டுபிடிப்பது மிகவும் கடினம். ஏனெனில், அவர்கள் மிகவும் நல்லவர்கள். அவர்கள், எப்போதும் மற்றவர்களுக்கு நல்லதையே செய்து கொண்டிருப்பார்கள். ஆனால், மற்றவர்களுக்கான சிறைவாசத்தை அவர்கள் உருவாக்குகின்ற வழி, அது தான். நீங்கள், அவர்களை உங்களுக்கு ஏதாவது செய்வதற்கு அனுமதித்தால், அதன் பிறகு நீங்கள் அவர்களின் உடைமை ஆகிவிடுவீர்கள். அவர்கள், முதலில் உங்களது பாதங்களைச் சுகமாக அமுக்கிவிடுவார்கள். ஆனால், கொஞ்சம் கொஞ்சமாக அவர்களின் கைகள் உங்களது கழுத்தை நோக்கி நகர்வதை நீங்கள் காணலாம்.

பாதத்தில் அவர்கள் ஆரம்பித்து, உங்களது கழுத்தில் அவர்கள் முடிப்பார்கள். ஏனெனில், அவர்களும் விழிப்புணர்வு அற்றவர்கள் தான்; அவர்கள் என்ன செய்கிறார்கள் என்பது அவர்களுக்கே தெரியாது. அவர்கள் ஒரு தந்திரத்தை கற்று வைத்திருக்கிறார்கள். அதாவது, நீங்கள், யாரையாவது உங்களுக்குச் சொந்தமானவராக ஆக்க விரும்பினால், அவர்களுக்கு நல்லது செய்யுங்கள் என்பது தான் அது. இப்படிப்பட்ட ஒரு தந்திரத்தை அவர்கள் கற்று வைத்திருப்பதும்கூட அவர்களுக்குத் தெரியாது. ஆனால், அவர்கள் செய்வது எல்லாம் கெடுதலில் தான் முடியும். ஏனெனில், அவர்கள் செய்வது எதுவாக இருந்தாலும், அது, மற்றவர்களை தங்களுடையவராக்கிக் கொள்வதற்கான முயற்சியாகத் தான் இருக்கும். அது என்ன பெயரில், என்ன வழியில் வந்தாலும், அது ஒரு பாவச் செயல், சமயப் பற்றற்றது.

உங்களது தேவாலயங்கள், உங்களது கோவில்கள், உங்களது மசூதிகள், இவைகள் எல்லாம் உங்களுக்கு பாவச் செயல்களை செய்து கொண்டிருக்கிறது. ஏனெனில், அவைகள் எல்லாம் உங்களை தங்களுடையவராக ஆக்கிக் கொள்ளவும், உங்கள் மீதும் ஆதிக்கம் செலுத்தவும் செய்கின்றன. ஒவ்வொரு தேவாலயமும் மதத்திற்கு எதிரானது. ஏனெனில், மதம் என்பது விடுதலையாகும்! அதன் பின்னர் இது ஏன் நடக்கிறது? இயேசு உங்களுக்கு விடுதலையை கொடுப்பதற்கு முயற்சிக்கிறார்; உங்களுக்குச் சிறகுகளை கொடுப்பதற்கு முயற்சிக்கிறார். அதன் பிறகு நிகழ்வது என்ன? இந்த திருச்சபைகள் இடையில் வந்தது எப்படி? இப்படி நடப்பது எதனாலென்றால், இயேசு முற்றிலும் வேறுபட்டதொரு மட்டத்தில் இருக்கிறார். அவர், விழிப்புணர்வு என்னும் மட்டத்தில் இருக்கிறார். ஆனால், அவர் கூறுவதைக் கேட்பவர்களோ, அவரைப் பின்பற்றுபவர்களோ, தூக்கம் என்னும் நிலையில் இருக்கிறார்கள். அவர்கள் எதைக் கேட்டாலும், அதை தவறாக திரித்துக் கூறுகின்றனர். அவர்களின் சொந்தக் கனவுகளால், அது திரித்து எடுத்துக் கொள்ளப்படுகிறது. மேலும், அவர்கள் எதை உருவாக்கினாலும், அது ஒரு பாவச் செயலாகத் தான் இருக்கப் போகிறது. கிறிஸ்து உங்களுக்கு மதத்தைக் கொடுக்கிறார். ஆனால், அதன்பிறகு ஆழ்ந்த தூக்கத்தில் இருக்கின்ற மக்களோ, அதை ஒரு திருச்சபையாக மாற்றிவிடுகிறார்கள்.

ஒருமுறை, சாத்தான் - அதாவது, பிசாசு - ஒரு மரத்தின் அடியில் சோகமாக உட்கார்ந்து கொண்டிருந்தது. அப்போது ஒரு அருளாளர் அந்த வழியாகச் சென்றார். அவர், அந்த சாத்தானைப் பார்த்து, "சாத்தானே, நீ ஒருபோதும் ஓய்வெடுப்பதில்லை என்று நாங்கள் கேள்விப்பட்டிருக்கிறோம். நீ, எங்காவது ஒரு இடத்தில், ஏதாவது தீங்கு



செய்து கொண்டிருப்பாய் என்றும் கேள்விப்பட்டிருக்கிறோம். இப்போது இங்கே இந்த மரத்தின் அடியில் இருந்து கொண்டு நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டார்.

சாத்தான், உண்மையிலேயே மிகவும் மனவேதனையுடன் இருந்தார். அவர், "இப்போது என்னுடைய வேலையை பாதிரியார்கள் எடுத்துக் கொண்டுவிட்டார்கள். என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை. நான் எந்த வேலையும் இல்லாமல் இருக்கிறேன். சில நேரங்களில் நான் தற்கொலை செய்து கொண்டுவிடலாமா என்று கூட எண்ணுகிறேன். ஏனெனில், இந்தப் பாதிரியார்கள் என்னைவிடவும் இன்னும் நன்றாக அந்தக் காரியத்தைச் செய்கிறார்கள்," என்று கூறினார்.

மதகுருக்கள், அந்த அளவுக்கு நன்றாகச் செய்துவிட்டார்கள். ஏனெனில் அவர்கள், விடுதலையை சிறைவாசமாக மாற்றிவிட்டார்கள். அவர்கள், உண்மையை கொள்கைகளாக மாற்றிவிட்டார்கள். அவர்கள், விழிப்புணர்வு என்னும் நிலையில் இருக்க வேண்டியவற்றையெல்லாம் தூக்கம் என்னும் நிலைக்கு மாற்றிவிட்டார்கள்.

எனவே, இந்த தூக்கம் என்பது சரியாக என்ன என்பதை புரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள். ஏனெனில், நீங்கள் அதை உணர்ந்து கொள்ள முடிந்தால், அதன் பின்னர், அந்த நொடிப்பொழுதே நீங்கள் விழிப்புடன் இருக்க ஆரம்பித்துவிட்டீர்கள் என்பதாகிவிடும். ஏற்கனவே, நீங்கள் தூக்கத்திலிருந்து விடுபட்டு, விழிப்புணர்வு பாதையில் நடக்க ஆரம்பித்துவிட்டீர்கள் என்று அர்த்தம். தூக்கம் என்பது என்ன? அது எப்படி நிகழ்கிறது? அதன் இயந்திர நுட்பம் என்ன? அது செயல்படும் விதம் என்ன?

உங்களது மனம் எப்போதும், ஒன்று, கடந்த காலத்தில் இருக்கும்; அல்லது எதிர்காலத்தில் இருக்கும். அதனால் நிகழ்காலத்தில் இருக்க முடியாது. நிகழ்காலத்தில் இருப்பதென்பது, மனதைப் பொருத்தமட்டில், முற்றிலும் சாத்தியமில்லாதது. நீங்கள் நிகழ்காலத்தில் இருக்கும் போது, அங்கே மனம் என்பது ஒருபோதும் இருக்காது. ஏனெனில், மனம் என்றாலே எண்ணுதல் என்று தான் அர்த்தம். நிகழ்காலத்தில் எப்படி உங்களால் எண்ணிப் பார்க்க முடியும்? நீங்கள், உங்களது கடந்த காலத்தைப் பற்றி நினைத்துப் பார்க்கலாம்! அது, உங்களது நினைவுகளின் ஒரு பகுதியாக ஏற்கனவே ஆகிவிட்டது. எனவே, உங்களது மனம் அதனை நினைவுக்கு கொண்டுவர முடியும். அல்லது, நீங்கள் எதிர்காலத்தைப் பற்றி எண்ணிப் பார்க்கலாம். ஆனால், அது இன்னமும் வரவில்லை. எனவே, உங்கள் மனம் அதைப் பற்றி கனவு காணலாம். எனவே, மனம் என்பது இரண்டு காரியங்களை மட்டுமே செய்ய முடியும். ஒன்று, அது கடந்த காலத்திற்குள் நகர்ந்து செல்ல

முடியும். அப்படி அது நகர்ந்து செல்வதற்கு போதுமான இடம் உள்ளது. உங்களது கடந்த காலத்தின் பரந்து விரிந்த இடம் உள்ளது; அதில் நீங்கள் நகர்ந்து போய்க் கொண்டே இருக்கலாம். அல்லது, இரண்டாவதாக, உங்கள் மனம் எதிர்காலத்திற்குள் நகர்ந்து செல்ல முடியும்; இங்கே மீண்டும் பரந்து விரிந்த இடம் உள்ளது. அதற்கு முடிவே கிடையாது. நீங்கள் கற்பனை செய்து, கற்பனை செய்து, கனவு காணலாம். ஆனால், நிகழ்காலத்தில் மனதால் எப்படி வேலை செய்ய முடியும்? அது நகர்ந்து செல்வதற்கு, நிகழ்காலத்தில் எந்த இடமும் கிடையாது.



**நீங்கள், நிகழ்காலத்தில் இருக்க முடியும். ஆனால், உங்களால் நினைக்க முடியாது; நினைப்பதற்கு இடம் தேவை. எண்ணங்களுக்கு இடம் தேவை; அவைகளும் பொருட்கள் போன்றவை தான். இதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். அதாவது, எண்ணங்கள் என்பது கண்ணுக்குத் தெரியாத பொருட்கள். அவைகளும் பருப்பொருட்கள் தான். எண்ணங்கள், ஆன்மீகமாகாது. ஏனெனில், ஆன்மீகம் என்னும் பரிமாணம், எண்ணங்கள் என்பவை இல்லாமல் இருக்கும் போது மட்டுமே ஆரம்பமாகிறது.**



எனவே, நிகழ்காலம் என்பது, வெறுமனே ஒரு பிரிவினைக் கோடு, அவ்வளவு தான். அதற்கு, இடம் என்பது கிடையாது. அது, கடந்த காலத்தையும் எதிர்காலத்தையும் பிரிக்கிறது; அது, வெறுமனே ஒரு பிரிவினைக் கோடு மட்டுமே. நீங்கள், நிகழ்காலத்தில் இருக்க முடியும். ஆனால் உங்களால் நினைக்க முடியாது; நினைப்பதற்கு இடம் தேவை. எண்ணங்களுக்கு இடம் தேவை; அவைகளும் பொருட்கள் போன்றவை தான். இதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். அதாவது, எண்ணங்கள் என்பது கண்ணுக்குத் தெரியாத பொருட்கள். அவைகளும் பருப்பொருட்கள் தான். எண்ணங்கள், ஆன்மீகமாகாது. ஏனெனில், ஆன்மீகம் என்னும் பரிமாணம், எண்ணங்கள் என்பவை இல்லாமல் இருக்கும் போது மட்டுமே ஆரம்பமாகிறது. எண்ணங்களும் பருப் பொருட்கள் தான். மிகவும் சூட்சுமமானவை. மேலும், எந்த ஒரு பருப் பொருளுக்கும், அது இருப்பதற்கு இடம் தேவை.

நிகழ்காலத்திலும் கூட, நீங்கள் எதையாவது நினைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால், அப்படி நினைக்க ஆரம்பித்த அந்த நொடிப்பொழுதே, அது ஏற்கனவே கடந்தகாலம் ஆகிவிட்டது. நீங்கள்



சூரியன் உதிப்பதைப் பார்க்கிறீர்கள்; நீங்கள் அதைப் பார்த்தவுடன், “என்ன அழகானதொரு சூர்யோதயம்!” என்று கூறுகிறீர்கள். அப்போது அது, ஏற்கனவே கடந்தகாலம் ஆகிவிட்டது. சூரியன் உதிக்கும் போது, அங்கே, “என்ன அழகாகா இருக்கிறது!” என்று கூறுவதற்குக்கூட, போதுமான இடம் அங்கு இருக்காது. ஏனெனில், “என்ன அழகு!” என்கின்ற இந்த இரண்டு வார்த்தைகளை உதிர்க்கும் போது, அந்த அனுபவம் ஏற்கனவே கடந்தகால அனுபவமாக ஆகிவிடுகிறது. உங்களது மனம் ஏற்கனவே அதை உங்களது நினைவிலிருந்து அறிந்து கொள்கிறது. ஆனால், சூரியன் உதிக்கின்ற அந்த சரியான நோத்தில், சூரியன் எழுகின்ற அந்த சரியான நேரத்தில், உங்களால் எப்படிச் சிந்திக்க முடியும்? உங்களால் என்ன சிந்திக்க முடியும்? நீங்கள் அந்த உதயசூரியனோடு ஒன்றியிருக்கலாம். ஆனால் அப்போது, உங்களால் எதையும் நினைக்க முடியாது. உங்களுக்குப் போதுமான இடம் இருக்கும். ஆனால், எண்ணங்களுக்குப் போதுமான இடம் இருக்காது.

தோட்டத்தில் ஒரு அழகான பூ இருக்கிறது. நீங்கள் அதைப் பார்த்து, “ஒரு அழகான ரோஜா” என்று கூறுகிறீர்கள். ஆனால், இப்போது நீங்கள் அந்த ரோஜாவோடு இல்லை. இந்த நொடிப்பொழுதில் அதாடு இல்லை; அது ஏற்கனவே உங்களது நினைவாக ஆகிவிட்டது. அங்கே அந்த மலரும், இங்கே நீங்களும் இருக்கும் போது, இருவரும் ஒன்றுக்கொன்று நிகழ்காலத்தில் இருக்கும் போது, உங்களால் எப்படிச் சிந்திக்க முடியும்? நீங்கள் என்ன சிந்திக்க முடியும்? அப்போது, சிந்திப்பது எப்படி சாத்தியப்படும்? அங்கே அதற்குத் தேவையான இடம் இருக்காது. அங்குள்ள இடம் மிகவும் குறுகலானது. இன்னும் உண்மையைச் சொல்லப் போனால், அங்கே இடம் என்பதே இருக்காது. மேலும், நீங்களும் அந்த மலரும்கூட இரண்டு பொருளாக இருக்கக்கூட முடியாது. ஏனெனில், அந்த நொடிப்பொழுதில் அந்த இரண்டிற்கும், போதுமான இடம் இருக்காது. அப்போது, ஒன்று மட்டுமே இருக்க முடியும்.

எனவே தான், நீங்கள் உங்களுக்குள் ஆழ்ந்ததொரு நிலையில் இருக்கும் போது, நீங்களே அந்த மலராகவும், அந்த மலரே நீங்களாகவும் ஆகிவிடுகிறீர்கள். உங்களுக்குள் எந்தவிதமான எண்ணங்களும் இல்லாதபோது, மலர் என்பது யார், அந்த மலரைப் பார்ப்பவர் யார்? பார்ப்பவரே, பார்க்கின்ற பொருளாக ஆகிவிடுகிறார். திடீரென எல்லைகள் தொலைந்து போகின்றன. திடீரென நீங்கள் ஊடுருவிச் சென்றுவிட்டீர்கள். நீங்கள் அந்த மலருக்குள் ஊடுருவிச் சென்றுவிட்டீர்கள். அந்த மலர் உங்களுக்குள் ஊடுருவிச் சென்றுவிட்டது. அப்போது நீங்கள், இருவர் அல்ல - இருப்பது ஒன்று தான்.

ஆனால், நீங்கள் ஏதாவது சிந்திக்க ஆரம்பித்துவிட்டால், அதன் பிறகு நீங்கள் மீண்டும் இரண்டாக ஆகிவிடுகிறீர்கள். நீங்கள் சிந்திக்கும் போது, இருமை என்பது எங்குள்ளது? அந்த மலரோடு நீங்கள் எந்தவிதமான சிந்தனையும் இல்லாமல் இருக்கும் போது, அது ஒரு உரையாடல். அது, இரு உரையாடல் அல்ல; ஒரு உரையாடல். அதே போன்று, நீங்கள் உங்களது காதலியுடன் இருக்கும் போது, அது ஒரு உரையாடல். அது, இரு உரையாடல் அல்ல. ஏனெனில், அங்கே இருவர் என்பது இல்லை. உங்களது காதலியின் அருகில் உட்கார்ந்து கொண்டு, உங்களது காதலியின் கைகளைப் பிடித்துக் கொண்டு இருக்கும் போது, நீங்கள் வெறுமனே இருக்கிறீர்கள். நீங்கள் அப்போது கடந்து போன, கழிந்து போன நாட்களைப் பற்றி எண்ணுவதில்லை. வருகின்ற எதிர்காலத்தைப் பற்றியும் நீங்கள் நினைக்க மாட்டீர்கள். அப்போது, நீங்கள் இங்கேயே, இந்த நொடிப்பொழுதிலேயே இருப்பது என்பது மிகவும் அழகான ஒன்று. மேலும், அது மிகவும் அடர்த்தி நிறைந்தது. எனவே, எந்த ஒரு எண்ணத்தினாலும் அந்த அடர்த்தியை ஊடுருவிச் செல்ல முடியாது.

மேலும், அந்த வாசல் குறுகியது; நிகழ்காலத்தின் வாசல் மிகவும் குறுகியது. அதில் இருவர்கூட நுழைய முடியாது, ஒருவர் மட்டுமே முடியும். நிகழ்காலத்தில், சிந்திப்பது என்பது சாத்தியப்படாது. கனவு காண்பது சாத்தியப்படாது. ஏனெனில், கனவு காண்பது என்பது, படங்களின் உருவில் சிந்திப்பதைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. இரண்டுமே பொருட்கள் தான்.

எனவே, நிகழ்காலத்தில் எந்தவித சிந்தனையும் இல்லாமல் இருக்கும் போது, நீங்கள் முதன்முதலாக ஆன்மீகத்தில் இருக்கிறீர்கள். அப்போது ஒரு புதிய பரிமாணம் திறக்கிறது. அந்தப் பரிமாணம் தான், விழிப்புணர்வு. நீங்கள் அந்தப் பரிமாணத்தை அறிந்து கொண்டில்லாததால், ஹெராக் விட்டஸ், நீங்கள் தூக்கத்தில் இருப்பதாகவும், நீங்கள் விழிப்புணர்வு இல்லாமல் இருப்பதாகவும் கூறுகிறார். விழிப்புணர்வு என்பது, இப்போது இருக்கின்ற இந்த நொடிப்பொழுதில், கடந்த காலத்திற்கும் செல்லாமல், எதிர்காலத்திற்கும் செல்லாமல், அந்த அளவுக்கு முழுமையாக இருப்பதாகும். அப்போது, எல்லா மன அசைவுகளும் நின்று போய்விடும்.

அதற்காக நீங்கள் அசையாமல் அப்படியே இருந்துவிடுவீர்கள் என்று அர்த்தமாகாது. அங்கே ஒரு புதியவிதமான நகர்தல் ஆரம்பமாகும். அது, நீங்கள் ஆழத்தில் நகர்ந்து செல்வதாகும். இங்கே இரண்டுவிதமான நகர்தல்கள் உள்ளன. இயேசு கிறிஸ்துவின் சிலுவையின் அர்த்தம் அதுதான். அது, இரண்டுவிதமான நகர்தல்களைக் காட்டுகிறது, ஒரு சாலை சந்திப்பு. ஒரு நகர்தல், நீங்கள் நீளவாட்டில் நகர்வது. நீங்கள் ஒரு நீள்கோட்டில் நகர்ந்து செல்வீர்கள். ஒரு விஷயத்திலிருந்து மற்றொரு விஷயத்திற்கு, ஒரு எண்ணத்திலிருந்து மற்றொரு எண்ணத்திற்கு, ஒரு கனவிலிருந்து மற்றொரு கனவிற்கு, அதாவது நீங்கள் 'A'இல் இருந்து 'B'க்கும், அதன்பிறகு 'B'இல் இருந்து 'C'க்கும், அதன்பிறகு 'C'இல் இருந்து 'D'க்கும் நகர்ந்து செல்வதாகும். இந்தப் பாதையில் நீங்கள் ஒரு நேர்கோட்டில், படுக்கைவசத்தில் நகர்ந்து செல்வீர்கள். இது தான் காலத்தின் நகர்தல் அல்லது நேரத்தில் நகர்தல் என்பதாகும். இப்படிப்பட்ட நகர்தல், ஆழ்ந்த தூக்கத்தில் இருக்கின்ற ஒருவரின் நகர்தலாகும். இதில், நீங்கள் முன்னும் பின்னும் போய் திரும்பி வர முடியும். அங்கே ஒரு நீள்கோட்டுப் பாதை இருக்கும். நீங்கள் 'B'ல் இருந்து 'A'க்கு வரமுடியும் அல்லது நீங்கள் 'A'இல் இருந்து 'B'க்கு போகவும் முடியும். அங்கே ஒரு நேர்கோட்டுப் பாதை இருக்கும்.



இதைத் தவிர, இன்னொருவிதமான நகர்தல் உள்ளது. அது முற்றிலும் வேறுபட்ட பரிமாணத்துடன் கூடியது. அந்த நகர்தல் படுக்கைகோட்டு வசத்தில் இருக்காது. அது செங்குத்து வசத்தில் இருக்கும். நீங்கள் இதில் 'A'இல் இருந்து 'B'க்கு செல்ல மாட்டீர்கள். 'B'இல் இருந்து 'C'க்கு செல்ல மாட்டீர்கள். அதற்கு மாறாக, நீங்கள் 'A' என்பதிலிருந்து அதன் அடி ஆழத்திற்குச் செல்வீர்கள். நீங்கள் 'A' என்பதன் ஆழத்தில் உள்ள A, $A_2$, $A_3$, $A_4$, என்று, கீழே செங்குத்தாகச் செல்வீர்கள். அல்லது என்பதற்கு மேலே செங்குத்தாக உயரத்தில் செல்வீர்கள்.

உங்களது நினைவுகள் நின்று போகும் போது, ஒரு புதிய நகர்தல் ஆரம்பிக்கிறது. நீங்கள் இப்போது ஆழத்தில் விழுந்துவிடுவீர்கள். ஒரு பாதாளம் போன்ற விஷயத்தில் விழுந்துவிடுவீர்கள். எனவே தான், மிகவும் ஆழமான தியானம் செய்பவர்கள், விரைவில் அடிப்பாகமே இல்லாத ஏதோ ஒரு பாதாளத்தில் விழுவது போன்று உணர்வு கொண்டு பயப்படுவார்கள். அப்போது உங்களுக்கு தலைசுற்றும், நீங்கள் பயப்படுகிறீர்கள். அப்போது நீங்கள், உங்களின் பழைய போக்கிற்குச் சென்றுவிட விரும்புவீர்கள். ஏனெனில், அது உங்களுக்குத் தெரிந்த பாதை; ஆனால், இந்த செங்குத்துப் பாதையோ, மரணமடைவதைப் போல் உணரச் செய்கிறது.

இயேசுவின் சிலுவையின் அர்த்தம் அதுதான். அது ஒருவித மரணம். படுக்கைவசத்தில் இருந்து, செங்குத்து வசத்திற்குப் போவது மரணம் போன்றது தான். · அதுதான் உண்மையான மரணம். ஆனால், ஒரு பக்கத்தில் இருந்து பார்த்தால் தான், அது மரணம் போன்றது. ஆனால், மறுபக்கத்தில் இருந்து பார்த்தால், அது உயிர்தெழுதலாகும்.

அது, பிறப்பதற்காக இறப்பதாகும். இது ஒரு பரிமாணத்தில் மரணமடைந்து, அதன் பிறகு மறு பரிமாணத்தில் பிறப்பதாகும். படுக்கைவசத்தில் நீங்கள், இயேசு; செங்குத்துவசத்தில் நீங்கள், கிறிஸ்து ஆகிவிடுகிறீர்கள்.

நீங்கள் ஒரு எண்ணத்தில் இருந்து மற்றொரு எண்ணத்திற்கு நகர்ந்து செல்லும் போது, நீங்கள், நேரம் என்னும் உலகில் இருக்கிறீர்கள். ஆனால், நீங்கள் அந்த நொடிப்பொழுதில் - அதாவது, எண்ணத்தில் அல்ல - நகர்ந்து செல்லும் போது, நீங்கள் காலங்களற்ற நிலைக்கு நகர்ந்து செல்கிறீர்கள். அப்போது நீங்கள் நகர்ந்து செல்லாமல் அப்படியே இருக்க மாட்டீர்கள்; இந்த உலகில் எதுவும் அசையாமல் அப்படியே இருப்பதில்லை; அசையாமலும் இருக்க முடியாது. ஆனால், அப்போது ஒரு புதிய நகர்தல் எழும். அந்த நகர்தலில் எந்த உள்நோக்கமும் இருக்காது. இந்த வார்த்தைகளை நினைவில் கொள்ளுங்கள். படுக்கைகோட்டு வசத்தில் நீங்கள் நகர்ந்து செல்லும் போது, நீங்கள் ஏதோ ஒரு உள்நோக்கத்துடன், உணர்ச்சி தூண்டுதலில் நகர்ந்து செல்கிறீர்கள். நீங்கள், ஏதோ ஒன்றைச் சாதிக்க வேண்டும்; அதாவது பணம், புகழ், அதிகாரம் அல்லது கடவுள் இவற்றைச் சாதிக்க வேண்டும் என்று செல்கிறீர்கள். ஆனால், எதையாவது நீங்கள் சாதித்தாக வேண்டும். அந்த உள்நோக்கம், உணர்ச்சித் தூண்டுதல் அங்கே உள்ளது.

இப்படி, உள்நோக்கத்துடன் நகர்வது, தூக்கம் என்று அர்த்தமாகும். உள்நோக்கம் எதுவும் இல்லாமல், உணர்ச்சித் தூண்டுதல் இல்லாமல் நகர்வது விழிப்புணர்வு என்று அர்த்தமாகும். அப்போதும் நீங்கள் நகர்ந்து செல்வீர்கள். ஆனால், உங்களது நகர்தல் வெறும் சந்தோஷத்திற்காக இருக்கும். அப்போதும் நீங்கள் நகர்ந்து செல்வீர்கள். ஏனெனில், நகர்ந்து கொண்டே இருப்பது தான் வாழ்க்கை என்பதற்காக; வாழ்க்கை என்பதே சக்தியினால் ஆனது என்பதற்காக நகர்ந்து செல்வீர்கள். மேலும், சக்தி எப்போதும் நகர்ந்து கொண்டு தான் இருக்கும். அந்த சக்தியே ஆனந்தம் என்பதால், நீங்கள் நகர்ந்து செல்வீர்கள். வேறு எதற்காகவும் அல்ல. அதில் எந்த இலக்கும் இருக்காது. நீங்கள் எந்தவிதமான சாதனையையும் நோக்கிச் செல்ல மாட்டீர்கள். உண்மையில், அப்போது நீங்கள் எங்குமே போவதில்லை. நீங்கள் போவதுகூட இல்லை. நீங்கள் அப்போது வெறுமனே உங்களிடம் உள்ள அந்த சக்தியில் வெறுமனே ஆனந்தமாக இருப்பீர்கள். அந்த அசைவிற்கு வெளியே, எந்த இலக்கும் இருக்காது; அந்த நகர்வு அதற்கு உள்ளே உறைந்திருக்கின்ற மதிப்பினை உடையது; அதற்கு வெளியே உறைகின்ற மதிப்பு இருக்காது.



ஒரு புத்தரும் உயிர் வாழ்கிறார், ஒரு ஹெராக் விட்டஸும் உயிர் வாழ்கிறார்; நானும் இங்கே சுவாசித்துக் கொண்டு உயிர் வாழ்கிறேன். ஆனால், இந்த வாழ்க்கை ஒரு வேறுபட்டவிதமான வாழ்க்கை; எந்தவிதமான உணர்ச்சித் தூண்டுதலும் இல்லாத வாழ்க்கை.

சில தினங்களுக்கு முன்பு, யாரோ ஒருவர் என்னிடம், "நீங்கள் ஏன் மக்களுக்கு தியானம் செய்ய உதவுகிறீர்கள்?" என்று கேட்டார்.

அதற்கு நான் அவரிடம், "இது என்னுடைய சந்தோஷம். இதில், ஏன் என்பது கிடையாது. நான் வெறுமனே இதை அனுபவிக்கிறேன்," என்று பதில் கூறினேன். ஒருவன், தோட்டத்தில் விதைகளை விதைத்துவிட்டு, வெறுமனே அவைகள் மலர்வதற்காக காத்திருப்பது போல் இருக்கிறேன். எனவே, நீங்கள் மலரும் போது நான் சந்தோஷமடைகிறேன். இதுவும் ஒரு தோட்ட வேலை தான்; யாராவது மலர்ச்சி அடையும் போது, அது எனக்கு சந்தோஷத்தைக் கொடுக்கிறது. மேலும், அதை நான் பகிர்ந்து கொள்ளவும் செய்கிறேன். அதில் எந்தவிதமான லட்சியமும் கிடையாது. நீங்கள் அதில் தோற்றுப் போனால், அதற்காக நான் விரக்தி அடையப் போவதில்லை. நீங்கள் மலர்ச்சி அடையாவிட்டாலும் பரவாயில்லை. அதுவும் சரிதான். ஏனெனில், மலர்ச்சியை யாரும் கட்டாயப்படுத்தி, கொண்டுவர முடியாது. நீங்கள் கட்டாயப்படுத்தி ஒரு மொட்டை மலரச் செய்ய முடியாது. அப்படி உங்களால் முடிந்தால், அது, நீங்கள் அதை கொலை செய்வது போலாகும். அது மலர்ச்சி போன்று தெரியலாம். ஆனால், அது மலர்ச்சி அல்ல.

இந்த உலகம் எப்போதும் நகர்ந்து கொண்டு தான் இருக்கிறது. இயற்கையும் அசைந்து கொண்டு தான் இருக்கிறது. இவைகள் எல்லாம் ஆதியும், அந்தமும் அற்ற ஒன்றினுள் நகர்ந்து கொண்டே இருக்கின்றன. மனம் தான், காலம் அல்லது நேரம் என்பதில் நகர்ந்து கொண்டிருக்கிறது. இந்த இயற்கை, ஆழத்திலும் உயரத்திலும் நகர்ந்து கொண்டிருக்கிறது. ஆனால், மனமோ முன்னும் பின்னும் நகர்ந்து கொண்டிருக்கிறது. மனம் படுக்கைவசத்தில் நகர்கிறது. அது தான் தூக்கம். நீங்கள் செங்குத்துவசத்தில் நகர்ந்தால், அது தான் விழிப்புணர்வு.

இந்த நொடிப்பொழுதில் இருங்கள். இந்த நொடிப்பொழுதில் உங்களது முழு உயிரையும் கொண்டு வாருங்கள். அதற்குள், கடந்த காலத்தை நுழையவிடாதீர்கள். மேலும், எதிர்காலத்தையும் உள்ளே வரவிடாதீர்கள். கடந்த காலம் என்பது இப்போது இல்லை. அது இறந்து போய்விட்டது. மேலும், இயேசு, "உயிரற்றவர்கள், உயிரற்றவர்களைப் புதைக்கட்டும்," என்று கூறுகிறார். கடந்த காலம் இப்போது இல்லை

நீங்கள் ஏன் அதைப் பற்றி கவலைப்படுகிறீர்கள்? நீங்கள் ஏன் அதை மீண்டும், மீண்டும் அசை போட்டுக் கொண்டே இருக்கிறீர்கள்? உங்களுக்கு என்ன பைத்தியமா? கடந்த காலம் என்பது இப்போது இல்லை; அது உங்களது மனதில் தான் உள்ளது. அது வெறும் ஞாபகம் தான். அதே போன்று, எதிர்காலம் என்பது இன்னமும் வரவில்லை. அந்த எதிர்காலத்தைப் பற்றி நீங்கள் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? அதுவோ இன்னமும் வரவில்லை. அப்படியிருக்கும் போது, நீங்கள் என்ன திட்டம் தீட்ட முடியும்? அதைக் குறித்து நீங்கள் எதைச் செய்தாலும், அது நடக்கப் போவதில்லை. ஆனால், அதன் பிறகு நீங்கள் விரக்தி அடைவீர்கள்; ஏனெனில், முழுமை என்பது அதற்கு என்று சொந்தமான தனிப்பட்ட திட்டத்தை வைத்திருக்கிறது. அதற்கு எதிராக நீங்கள் ஏன் உங்களது திட்டத்தை முயற்சி செய்கிறீர்கள்?

இந்த இயற்கை, அதற்கென்று சொந்தமாக ஒரு திட்டம் வைத்துள்ளது. அது உங்களைவிட புத்திசாலித்தனமாது; பகுதியைவிட, முழுமை புத்திசாலித்தனம் நிறைந்ததாகத் தான் இருக்க வேண்டும். நீங்கள் முழுமையாக இருப்பது போல் ஏன் பாசாங்கு செய்கிறீர்கள்? இந்த முழுமை, அதற்கென்று தனிப்பட்ட விதியை வைத்துள்ளது. அதற்கென்று சொந்தமான நிறைவை வைத்துள்ளது. நீங்கள் ஏன் அதைப் பற்றி கவலைப்படுகிறீர்கள்? மேலும், நீங்கள் எதைச் செய்தாலும் அது பாவச் செயல் ஆகிவிடும். ஏனெனில், நீங்கள் இந்த நொடிப்பொழுதை, இப்போது இருக்கின்ற இந்த நொடிப்பொழுதை தவறவிட்டு விடுவீர்கள். மேலும், இதுவே உங்கள் பழக்கமாக ஆகிவிட்டால், அப்படி ஆகிவிடும் போது, நீங்கள் அதை தவறவிட்டு விட ஆரம்பிப்பதால், அது ஒரு பழக்கமாக ஆகிவிடுகிறது. அதன்பின்னர், எதிர்காலம் என்பது வரும் போதும், அதை நீங்கள் தவறவிட்டு விடுவீர்கள். ஏனெனில், அப்படி அது வரும்போது, அது எதிர்காலமாக வராது. அது நிகழ்காலமாகத் தான் இருக்கும். நேற்று, நீங்கள் இன்றைய தினத்தைப் பற்றி எண்ணிக் கொண்டிருந்தீர்கள். ஏனெனில், அப்போது அது நாளைய தினமாக இருந்தது; ஆனால், இப்போது அது இன்றைய தினமாக உள்ளது. ஆனால் நீங்களோ, நாளைய தினத்தைப் பற்றி எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள். மேலும், நாளைய தினம் வரும் போது, அது இன்றைய தினமாகத் தான் இருக்கும். ஏனெனில், எதுவெல்லாம் இருக்கிறதோ, அதுவெல்லாம் இங்கேயே இப்போதே தான் இருக்க முடியுமே தவிர, வேறு எந்தவிதத்திலும் இருக்க முடியாது. மேலும், நீங்கள் ஒரு நிலையான மனநிலையில் காரியமாற்றி வந்தால், அதாவது, உங்களது மனம் எப்போதும் நாளைய தினத்தையே எதிர்நோக்கி



இருந்தால், அதன்பிறகு நீங்கள் வாழ்வது எப்போது? நாளை என்பது ஒருபோதும் வருவதில்லை. அதன்பிறகு, நீங்கள் தவறவிட்டுக் கொண்டே போவீர்கள். எனவே, இது ஒரு பாவச்செயல். 'To sin' என்பதன் ஹீப்ரு மொழியின் மூல அர்த்தம் இதுதான்.

எதிர்காலம் என்பது நுழைந்துவிடும் போது, நேரம் என்பதும் நுழைந்துவிடுகிறது. அப்போது நீங்கள் பாவச் செயல் செய்து விடுகிறீர்கள். இந்த இயற்கைக்கு எதிராகப் பாவச்செயல் செய்து விடுகிறீர்கள். மேலும், அதை நீங்கள் தவறவும் விட்டு விடுகிறீர்கள். மேலும், இது ஒரு நிலையான அமைப்பாக ஆகிவிட்டது; ஒரு எந்திரன் போல் ஆகிவிட்டதால், நீங்கள் இதை தவறவிட்டு விட்டீர்கள்.

என்னிடம், தொலைதூர நாடுகளில் இருந்து மக்கள் வருகின்றனர். அவர்கள் அங்கு இருக்கும் போது என்னைப் பற்றி நினைக்கிறார்கள், என்னைப் பற்றி பரவசம் அடைகிறார்கள். அங்கே அவர்கள் படிக்கிறார்கள், சிந்திக்கிறார்கள், கனவு காண்கிறார்கள். ஆனால், அவர்கள் இங்கே வந்துவிட்ட பின்னர், அவர்கள் இங்கிருந்து கொண்டு அவர்களது வீட்டைப் பற்றி நினைக்கிறார்கள். இங்கே அவர்கள் வந்து சேர்ந்த அந்த நொடிப்பொழுதிலேயே, அவர்கள் மீண்டும் ஏற்கனவே திரும்பிச் சென்றவர் ஆகிவிடுகிறார்கள்! அதன்பிறகு, அவர்கள் தங்களது குழந்தைகளைப் பற்றி, தங்களது மனைவிகளைப் பற்றி, தங்களது வேலையைப் பற்றி, இதைப் பற்றி, அதைப் பற்றி, இப்படி ஆயிரத்தோரு விஷயங்களைப் பற்றி சிந்திக்கின்றனர். இவர்களின் இந்த முட்டாள்தனத்தை என்னால் காண முடிகிறது. மீண்டும் அவர்கள் தங்களுடைய நாட்டிற்குத் திரும்பிச் செல்வார்கள். அதன் பிறகு அவர்கள் என்னைப் பற்றி அங்கிருந்து கொண்டு நினைத்துக் கொண்டிருப்பார்கள். இப்படி, அவர்கள் எல்லாவற்றையும் தவறவிட்டு விடுகிறார்கள். மேலும், இதுதான் பாவச்செயல்.

நீங்கள் என்னோடு இங்கே இருக்கும் போது, என்னோடு இங்கே இருங்கள் - என்னோடு முழுமையாக இங்கு நீங்கள் இருப்பதன் மூலம், ஒரு புதியவிதமான நகர்தலை நீங்கள் கற்றுக் கொள்ள முடியும். அதனால், நீங்கள் காலம் கடந்த ஒன்றினுள் பிரவேசிக்க முடியும், காலத்தினுள் பிரவேசிக்க முடியாது.

காலம் என்பது இந்த உலகம், காலம் அற்ற நிலை தான் கடவுள். படுக்கைவசம், உலகம். செங்குத்துவசம், கடவுள். இரண்டும் ஒரு இடத்தில் சந்திக்கும். அங்கு தான், இயேசு சிலுவையில் அறையப்பட்டார். இரண்டும் சந்திக்கின்றன. படுக்கைகோடும், செங்குத்துக்கோடும் ஒரு புள்ளியில் சந்திக்கின்றன. அந்தப் புள்ளி தான்,

இங்கேயே இப்போதே இருக்கின்ற இந்த நொடிப்பொழுது. இங்கேயே இப்பொழுதே உள்ள இந்த நொடிப்பொழுதில் இருந்து, நீங்கள் இரண்டு இடங்களுக்குப் பயணம் செய்யலாம். ஒரு பயணம் - இந்த உலகத்தில், எதிர்காலத்தில்; அடுத்த பயணம் - கடவுளினுள், ஆழத்தினுள்.

எனவே, நிகழ்காலத்தில் மேலும் மேலும் உணர்வுமிக்கவர்களாக, மேலும் மேலும் உஷாரானவர்களாக, மேலும் மேலும் விழிப்புணர்வு உள்ளவர்களாக ஆகுங்கள்.

நீங்கள் என்ன செய்வீர்கள்? இது எப்படிச் சாத்தியப்படும்? இப்போது நீங்கள் ஆழ்ந்து தூங்கிக் கொண்டிருப்பதால், இதையும்கூட நீங்கள் ஒரு கனவாக ஆக்கிவிட முடியும். இதையும்கூட நீங்கள் உங்களின் சிந்தனைக்குரிய ஒரு பொருளாக, சிந்தனைக்குரிய ஒரு செயல்முறையாக ஆக்கிவிட முடியும். இதைக் குறித்து நீங்கள் மிகுந்த பரபரப்புடன் இருப்பதனால், உங்களால் நிகழ்காலத்தில் இருக்க முடியாது. நிகழ்காலத்தில் இருப்பது எப்படி என்று நீங்கள் அதிகம் சிந்திப்பதால், இந்தச் சிந்தனை உங்களுக்கு உதவாது. நீங்கள் அதிக குற்ற உணர்வு கொள்ள ஆரம்பித்தால், நீங்கள் சிலநேரம் உங்களது கடந்த காலத்தில் நகர்ந்து சென்றால், நீங்கள் குற்றவுணர்வு கொள்வீர்கள். ஏனெனில், அந்த அளவுக்கு இது உங்களின் நீண்டகால அன்றாடச் செயல் ஆகிவிட்டது. அப்போதும்கூட, உடனடியாக நீங்கள் ஏதோ ஒரு பாவச்செயல் செய்துவிட்டது போன்று குற்ற உணர்வு கொள்வீர்கள்.

குற்ற உணர்வு கொள்ளாதீர்கள். பாவச்செயலைப் புரிந்து கொள்ளுங்கள்; ஆனால், அதற்காக குற்ற உணர்வு கொள்ளாதீர்கள். மேலும், இது மிக மிக மென்மையானதொரு விஷயம். நீங்கள் குற்ற உணர்வு கொண்டால், நீங்கள் முழு விஷயத்தையும் தவறவிட்டு விடுவீர்கள். இப்போது, உங்களது பழைய கதை புதிய வடிவில் ஆரம்பமாகிவிடும். இப்போது, இந்த நிகழ்காலத்தை தவறவிட்டு விட்டதற்காக நீங்கள் குற்றவுணர்வு கொள்வீர்கள். இப்போது, நீங்கள் கடந்த காலத்தைப் பற்றி சிந்திப்பவர் ஆகிவிட்டீர்கள். ஏனெனில், இப்போது நிகழ்காலம் என்பது உங்களைப் பொருத்தமட்டில், ஒருபோதும் நிகழ்காலம் அல்ல; அது கடந்த காலம் ஆகிவிட்டது. எனவே, நீங்கள் அதைக் குறித்து குற்ற உணர்வு கொள்கிறீர்கள். இப்போது, நீங்கள் இன்னமும் தவறவிட்டு விடுகிறீர்கள்.

எனவே, ஒரு விஷயத்தை நினைவில் கொள்ளுங்கள். அதாவது, நீங்கள் கடந்த காலத்தினுள்ளோ அல்லது எதிர்காலத்தினுள்ளோ போய்விட்டதை நீங்கள் உணரும்போது, அதை வைத்துக் கொண்டு ஒரு பிரச்சனையை உருவாக்காதீர்கள். எந்தவிதமான பிரச்சனையும் செய்யாமல், வெறுமனே நிகழ்காலத்திற்கு வாருங்கள். அது போகட்டும்!



வெறுமனே உங்களது விழிப்புணர்வை கொண்டு வாருங்கள். இப்படி நீங்கள், பல லட்சம் தடவைகள் தவறவிடுவீர்கள். இப்போதே, உடனடியாக அது நடந்துவிடப் போவதில்லை. அது நடக்கும். ஆனால், அது உங்களால் நடக்காது. அது, நீண்ட நெடுங்காலமாக நிலைத்துவிட்ட ஒருபழக்கம் ஆகிவிட்டபடியால், அதை நீங்கள் இப்போது உடனடியாக மாற்ற முடியாது. ஆனால், கவலையை விடுங்கள். இயற்கை எந்த அவசரத்திலும் இல்லை. காலம் கடந்த ஒன்று, உங்களுக்காக காலம் கடந்து காத்துக் கொண்டிருக்கும். அதைக் குறித்து ஒருவித பரபரப்பை உருவாக்காதீர்கள்.

நீங்கள் எப்போதெல்லாம் தவறவிட்டுவிட்டதாக உணர்கிறீர்களோ, அப்போதெல்லாம், மீண்டும் திரும்பி நிகழ்காலத்திற்கு வாருங்கள். அது போதும். அதற்காக குற்ற உணர்வு கொள்ளாதீர்கள். அது, உங்களது மனம் செய்யும் தந்திரம். இப்போது, மீண்டும் அது தனது விளையாட்டைக் காட்டுகிறது. "நான் மீண்டும் மறந்துவிட்டேனே," என்று மனம் வருந்தாதீர்கள். நீங்கள் அப்படி நினைக்கும் போது, நீங்கள் அந்த நேரத்தில் என்ன செய்து கொண்டிருக்கிறீர்களோ, அந்த நிகழ்கால காரியத்திற்கு வாருங்கள். குளித்துக் கொண்டிருந்தால், அதற்குத் திரும்பிவிடுங்கள். உங்களது சாப்பாட்டை சாப்பிட்டுக் கொண்டிருந்தால், அதற்குத் திரும்பிவிடுங்கள். நீங்கள் நடந்து கொண்டிருந்தால், அதற்குத் திரும்பிவிடுங்கள். நீங்கள் எப்போதெல்லாம், இங்கேயே இந்த நொடிப் பொழுதிலேயே இல்லை என்பதை உணர்கிறீர்களோ, அப்போதெல்லாம், வெறுமனே கள்ளம்கபடமன்று திரும்பவும் நிகழ்கால காரியத்திற்கு வாருங்கள். குற்ற உணர்வை உருவாக்காதீர்கள். நீங்கள் குற்ற உணர்வு கொண்டால், அதன்பிறகு நீங்கள் அதை தவறவிட்டு விடுவீர்கள்.

அங்கே பாவச்செயல் உள்ளது. ஆனால், அங்கே குற்ற உணர்வு வேண்டாம். ஆனால், இது உங்களுக்கு மிகவும் கடினமாக இருக்கும். நீங்கள் ஏதாவது ஒன்றை தவறு என்று உணர்ந்துவிட்டால், உடனடியாக நீங்கள் குற்ற உணர்வு கொண்டு விடுகிறீர்கள். மனம் என்பது மிகமிக சூழ்ச்சியானது. நீங்கள் குற்ற உணர்வு கொண்டால், அதன்பிறகு பழைய விளையாட்டு ஆரம்பித்துவிடும். இப்போது, புதிய மைதானத்தில் பழைய விளையாட்டு ஆரம்பித்துவிடும். ஆனால், விளையாட்டு பழையது தான். மக்கள் என்னிடம் வந்து, "நாங்கள் நிகழ்காலத்தில் இருப்பதற்கு மறந்து கொண்டே போகிறோம்," என்று கூறுகிறார்கள். 'நாங்கள் மறந்து கொண்டே போகிறோம்' என்று கூறும்போது, அவர்கள் அவ்வளவு வருத்தப்படுகிறார்கள். நாங்கள் முயற்சி செய்கிறோம்; ஆஎ ால், ஒருசில வினாடிகள் மட்டுமே எங்களால் நிகழ்காலத்தில்

இருக்க முடிகிறது. நாங்கள் விழிப்புடன் இருக்கிறோம், சுயநினைவுடன் இருக்கிறோம். அதன்பிறகு அதைத் தவறவிட்டு விடுகிறோம். எனவே, என்ன செய்வது?” என்கின்றனர். ஒன்றும் செய்ய முடியாது! எதையும் செய்து சாதிக்கலாம் என்கிற கேள்விக்கே இடம் இல்லை. உங்களால் என்ன செய்ய முடியும்? உங்களால் செய்ய முடிந்த ஒரே காரியம், அதைப் பற்றி குற்ற உணர்வு கொள்ளாமல் இருப்பது ஒன்று தான். வெறுமனே திரும்பவும் நிகழ்காலத்திற்குள் வாருங்கள்.

நீங்கள் அப்படி திரும்பி வரும்போது, வெறுமனே நினைவில் கொள்ளுங்கள். அதற்காக உங்களது முகம் கடுகடுப்பாக வேண்டாம்; அதற்காக அதிக முயற்சி மேற்கொள்ள வேண்டாம். வெறுமனே, கள்ளம் கபடமற்று, அதனால் எந்தப் பிரச்சனையையும் உருவாக்காமல், திரும்பவும் நிகழ்காலத்திற்கு வாருங்கள். ஏனெனில், காலத்தால் மாற்றம் அடையாத அந்த ஒன்றிற்கு எந்தவிதமான பிரச்சனைகளும் கிடையாது; எல்லாப் பிரச்சனைகளும் படுக்கைவசத்தில் நகர்ந்து செல்வதால் ஏற்படுவது தான். இந்தப் பிரச்சனையும், நீங்கள் படுக்கைக்கோட்டு வசத்தில் நகர்ந்து செல்வதால் எழுவது தான் ஆகும். செங்குத்து நிலைக்கு எந்தப் பிரச்சனையும் கிடையாது. அது வெறும் ஆனந்தம், எந்தவிதக் கவலையும் இல்லாமல், எந்தவித துக்கமும் இல்லாமல், எந்தவித சோகமும் இல்லாமல், எந்தவிதமான குற்ற உணர்வும், எதுவுமே இல்லாமல் இருப்பதாகும். எளிமையாக இருந்து, மீண்டும் திரும்பவும் நிகழ்காலத்திற்கு வாருங்கள்.

நீங்கள் அநேகமுறை தவறவிடுவீர்கள்; அதை ஏற்றுக் கொள்ளுங்கள். அதற்காக கவலைப்படாதீர்கள். அது அப்படித்தான் இருக்கும். நீங்கள் அநேகமுறை தவறவிடுவீர்கள். ஆனால், அதுவல்ல மையக்கருத்து. நீங்கள் அநேக தடவை மறந்துவிட்டோமே என்று, அதற்காக அதிக கவனம் செலுத்தாமல், நாம் அநேக தடவை மீண்டும் நிகழ்காலத்திற்கு வந்துவிட்டோமே என்பதில் உங்களது கவனத்தைச் செலுத்துங்கள். இதை நீங்கள் ஞாபகத்தில் வைத்திருக்க வேண்டும். நீங்கள் அநேகமுறை தவறவிட்டு விட்டதில் நீங்கள் முக்கியத்துவம் கொடுக்காமல், நீங்கள் அநேக முறை திரும்பவும் நிகழ்காலத்திற்கு வந்ததற்கு முக்கியத்துவம் கொடுங்கள். அதற்காக சந்தோஷப்படுங்கள். நீங்கள் தவறவிட்டு விட்டது நடக்கக் கூடியது தான். நீங்களும் மனிதர்தான். இந்த படுக்கைவச நகர்தலில், அநேக அநேகப் பிறவிகளாக வாழ்ந்துவிட்டீர்கள். எனவே, இது இயல்பானது தான். நீங்கள் அநேக முறை திரும்பவும் எதிர்காலத்திற்கு வந்ததே அழகானது தான். சாதிக்க முடியாததை சாதித்துவிட்டீர்கள். அதற்காகச் சந்தோஷப்படுங்கள்.



இருபத்தி நான்கு மணிநேரத்தில், இருபத்தி நான்காயிரம் தடவைகள் நீங்கள் தவறவிட்டு விடலாம். ஆனால், அந்த இருபத்தி நான்காயிரம் தடவையும் நீங்கள் மீண்டும் நிகழ்காலத்திற்கு வந்திருப்பீர்கள். எனவே, ஒரு புதிய செயல்முறை வேலை செய்ய ஆரம்பித்துவிடும். அநேகமுறை நீங்கள் மீண்டும் உங்களது வீட்டிற்கு வந்திருப்பீர்கள். இப்போது, ஒரு புதிய பரிமாணம் கொஞ்சம் கொஞ்சமாக வெளிப்படும். மேலும் மேலும் நீங்கள் விழிப்புணர்வுடன் இருப்பீர்கள். நீங்கள் முன்னும் பின்னும் போய் வருவது, கொஞ்சம் கொஞ்சமாகக் குறையும். நீங்கள் முன்னும் பின்னும் போய் வருகின்ற தூரம், கொஞ்சம் கொஞ்சமாகக் குறையும். நீங்கள் மறப்பது கொஞ்சமாகவும், நினைவில் கொள்வது அதிகமாகவும் ஆகிவிடும். அப்போது, நீங்கள் செங்குத்துவசத்தில் நுழைந்துவிடுவீர்கள். திடீரென்று ஒருநாள், அந்த படுக்கைவசம் நகர்வது மறைந்து போகும். விழிப்புணர்வுக்கு தீவிரம் வரும் போது, அந்த படுக்கைவச நகர்தல் மறைந்து போகும்.

ஆதிசங்கரரின் வேதாந்தத்திற்குப் பின்னால் உள்ள அர்த்தம் இதுதான். மேலும், இந்துக்கள் இந்த உலகத்தை மாயை என்று அழைப்பதன் அர்த்தமும் இதுதான். ஏனெனில், உங்களது விழிப்புணர்வு முழுமை பெற்றுவிடும் போது, இந்த உலகம், அதாவது, உங்களது மனதின் மூலம் நீங்கள் உருவாக்கியுள்ள இந்த உலகம், வெறுமனே மறைந்து போய்விடும்; மற்றொரு உலகம் உங்களுக்கு வெளிப்படுத்தப்படும். மாயை மறைந்து போகும், கற்பனை கலைந்து போகும். உங்களது தூங்கும் நிலையால் தான், தன்னுணர்வற்ற நிலையால் தான், அங்கே ஒரு கற்பனை உலகம் உங்களிடம் உள்ளது.

இது ஒரு கனவு போன்றது. இரவில் நீங்கள் கனவு காண்கிறீர்கள். மேலும், அப்படி கனவு காணும் போது, அது உண்மையானது போன்று தான் தெரிகிறது. நீங்கள் கனவு காணும் போது, எப்போதாவது, “இது சாத்தியமில்லை,” என்று நினைத்ததுண்டா? சாத்தியமில்லாதவை, கனவுகளில் தான் நடக்கின்றன. ஆனால், நீங்கள் அதனை சந்தேகப்பட முடியாது. கனவில், நீங்கள் அந்த அளவுக்குத் திட நம்பிக்கை கொண்டிருக்கிறீர்கள். கனவுகளில் யாரும் சந்தேகம் கொள்வதில்லை; அது, பெர்ட்ரன்ட் ரஸ்ஸலாக இருந்தாலும்கூட, சந்தேகம் கொள்வதில்லை, கிடையாது. கனவில், நாம் ஒவ்வொருவரும், என்னவெல்லாம் நடக்கிறதோ, அதையெல்லாம் ஒரு குழந்தையைப் போல நம்புகிறோம். நீங்கள், உங்களது கனவில் உங்களது மனைவி வருவதைக் காண்கிறீர்கள். திடீரென்று அவள் ஒரு குதிரையாக மாறிவிடுவாள். அப்போது ஒரு சிறுநொடி கூட நீங்கள், “இது எப்படிச் சாத்தியமாகும்?” என்று கேட்பதுண்டா?

கனவு என்பது நம்பிக்கை, அது திடநம்பிக்கை. உங்களால் காண்கின்ற கனவினை சந்தேகப்பட முடியாது. எப்போதாவது நீங்கள் ஒரு கனவில் சந்தேகப்பட ஆரம்பித்தால், அப்போது கனவின் சட்டதிட்டங்கள் உடைக்கப்பட்டுவிடுகின்றன. நீங்கள் சந்தேகம் அடைந்தால், கனவு மறைய ஆரம்பித்துவிடுகிறது. கனவு காணும் போது, நீங்கள், இது ஒரு கனவு தான் என்பதை ஞாபகத்திற்கு கொண்டுவர முடிந்தால், உடனடியாக இது ஒரு அதிர்ச்சியாக ஆகிவிடும். அப்போது, அந்தக் கனவு கலைந்து போய், நீங்கள் முழு விழிப்புடன் இருக்க ஆரம்பித்துவிடுவீர்கள்.

உங்களைச் சுற்றிலும் நீங்கள் காண்கின்ற இந்த உலகம், உண்மையான உலகம் அல்ல. அதற்காக, அது உண்மையில் இங்கு இல்லை என்றாகிவிடாது. அது இருக்கிறது. ஆனால், நீங்கள் தான் அதை தூக்கம் என்னும் திரையின் வழியாகப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். இரண்டிற்கும் இடையே ஒரு தன்னுணர்வற்ற நிலை உள்ளது; நீங்கள் இந்த உலகைப் பார்க்கிறீர்கள். உங்களுக்குச் சொந்தமான வழியில் அதைத் திரித்துக் கூறுகிறீர்கள்; நீங்கள் ஒரு குடிகாரரைப் போன்று இருக்கிறீர்கள்.

நடந்தது இது :

முல்லா நஸ்ருதீன் ஓடி வந்தார். அவர் முழுமையாகக் குடித்திருந்தார். அப்போது அந்த லிப்ட்டை இயக்கிக் கொண்டிருந்தவர், கதவை மூடுவதற்குப் போனார். ஆனால், அதற்குள் முல்லா எப்படியோ உள்ளே நுழைந்துவிட்டார். அதில் கூட்டம் அதிகமாக இருந்தது. அங்கிருந்தவர்கள், முல்லா நன்றாக குடித்திருப்பதைக் கண்டார்கள். அவரிடம் வாசம் வீசியது. ஆனால், அவர் நடித்தார். அவர், கதவைப் பார்ப்பதற்கு முயற்சி செய்தார். ஆனால், அவரால் எதையும் பார்க்க முடியவில்லை. அவரது கண்கள் போதையில் தூங்கி வழிந்தன. எப்படியோ, அவர் நிற்பதற்கு முயற்சி செய்தார். ஆனால், அதுவும்கூட முடியவில்லை. மேலும், அதன்பிறகு அவர் சங்கடப்பட்டார். ஏனெனில், சுற்றி நின்ற எல்லோரும் அவரையே பார்த்தார்கள். ஒவ்வொருவரும், அவர் முழுமையாகக் குடித்திருப்பதாக நினைத்தார்கள். அதை அவரால் உணர முடிந்தது. எனவே, என்ன செய்வது என்று தெரியாமல் தவித்த முல்லா, திடீரென்று அந்த லிப்ட்டில் இருந்த கூட்டத்தினரிடம், "நான் ஏன் இப்படி ஒரு கூட்டத்திற்கு உங்களை அழைத்தேன் என்று நீங்கள் எல்லோரும் ஆச்சரியப்படுகிறீர்கள் அல்லவா!" என்று கேட்டார்.

மறுநாள் காலை முல்லா சரியாகிவிடுவார். அப்போது அவர், நீங்கள் இப்போது சிரிப்பதைப் போன்று சிரிப்பார்.



எல்லா புத்தர்களும், தாங்கள் விழிப்புநிலை அடைந்தவுடன் சிரித்திருக்கிறார்கள். அவர்களின் சிரிப்பு, ஒரு சிங்கத்தின் கர்ஜனை போன்றது. அவர்கள் சிரிப்பது உங்களைப் பார்த்து அல்ல. அவர்கள் சிரிப்பது, இந்த முழு பிரபஞ்சத்தின் நகைச்சுவையைக் கண்டு. அவர்களும் கனவில் தான், தூக்கத்தில் தான், ஆசைகளால் போதையேறித்தான் இந்த உலகைப் பார்த்தார்கள். மேலும், ஆசையின் மூலம் தான் அவர்கள் இந்த இயற்கையைப் பார்த்தார்கள். அப்போது அது உண்மையான இயற்கையாக இல்லை. அவர்கள் அதன்மீது தங்களது தூக்கத்தைத் திரையிட்டுப் பார்த்தார்கள்.

நீங்களும் இந்த முழு இயற்கையையும் ஒரு திரையாகத் தான் எடுத்துக் கொள்கிறீர்கள். அதன்பிறகு, நீங்கள் உங்களது மனதினை அதன்மீது திரையிட்டுப் பார்க்கிறீர்கள். அங்கு இல்லாத பொருட்களை நீங்கள் பார்க்கிறீர்கள். அங்கு உள்ள பொருட்களை நீங்கள் பார்ப்பதில்லை. மேலும், உங்களது மனம், ஒவ்வொன்றுக்கும் அதன் விளக்கங்களைக் கொண்டுள்ளது. நீங்கள் ஏதாவது சந்தேகத்தை எழுப்பினால், மனம் அதற்கு விளக்கமளிக்கிறது. அது கொள்கைகளையும், தத்துவங்களையும், முறைகளையும் உருவாக்கி உள்ளதால், நீங்கள் எதுவுமே தவறல்ல என்று வெறுமனே சௌகரியமாக இருக்கிறீர்கள். உங்களது வாழ்க்கையை சௌகரியமாக்குவதற்காகத் தான் எல்லா தத்துவங்களும் உள்ளன. அதனால் தான் எல்லாம் சரியாக இருப்பது போன்றும், எதுவுமே தவறல்ல என்றும் உணர்கிறீர்கள். ஆனால், நீங்கள் தூங்கிக் கொண்டிருந்தால், எல்லாமே தவறானவைதான்.

ஒருவர் என்னிடம் வந்தார். அவர் மிகவும் கவலையோடு இருந்தார். அவர் ஒரு அழகான மகளுக்குத் தந்தை. அவர் என்னிடம், "ஒவ்வொரு நாள் காலையிலும், அவள் கொஞ்சம் நோயுள்ளவள் போல இருக்கிறாள். நானும் எல்லா மருத்துவர்களிடமும் அழைத்துப் போய்விட்டேன். ஆனால் அவர்களோ, ஒன்றும் இல்லை என்கின்றனர். எனவே, நான் என்ன செய்வது?" என்று கேட்டார்.

நான் அவரிடம், "நீங்கள், முல்லா நஸ்ருதீனிடம் செல்லுங்கள். இங்கு இருப்பதிலேயே அவர்தான் மிகவும் புத்திசாலியானவர். அவருக்கு எல்லாம் தெரியும். 'எனக்குத் தெரியாது' என்று அவர் கூறியதை நான் ஒருபோதும் கேட்டதில்லை. எனவே, அவரிடம் செல்லுங்கள்," என்றேன்.

அவரும் போனார். நானும் நஸ்ருதீன் என்ன கூறுகிறார் என்பதைப் பார்ப்பதற்காக, அவரைப் பின்தொடர்ந்து போனேன். நஸ்ருதீன்

கண்களை மூடினார். பிரச்சனையைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்தார். அதன்பிறகு கண்களைத் திறந்து, அவர், "நீங்கள் அவள் படுக்கைக்குப் போவதற்கு முன்பு அவளுக்கு குடிப்பதற்கு பால் கொடுப்பதுண்டா?" என்று கேட்டார்.

அந்த மனிதர், "ஆம்," என்றார்.

உடனே நஸ்ருதீன், "இப்போது நான் பிரச்சனையைக் கண்டுபிடித்து விட்டேன். நீங்கள் ஒரு குழந்தைக்குப் பால் கொடுத்து, அதன்பின் அந்தக் குழந்தை தூங்கச் செல்லும் போது, இரவு முழுவதும் அது இப்படியும் அப்படியும், இடதுபக்கமும் வலதுபக்கமும் புரண்டு படுக்கிறது. அப்போது, அது குடித்த பால் கடையப்பட்டு, தயிராகிவிடுகிறது. அதன்பிறகு அந்த தயிர், பாலாடைக்கட்டியாக ஆகிறது. அந்த பாலாடைக் கட்டி, வெண்ணெய் ஆகிறது. அதன்பிறகு அந்த வெண்ணெய், கொழுப்பாகிறது. அந்தக் கொழுப்பு, அதன்பிறகு சர்க்கரையாகிறது. அந்த சர்க்கரை, அதன்பிறகு சாராயம் ஆகிறது. எனவே, காலையில் அந்த போதை மயக்கம் தொடர்வது இயல்புதான்," என்றார்.

இப்படித்தான் எல்லாத் தத்துவங்களும் உள்ளன. விஷயங்களுக்கான ஏதோ சில விளக்கம் தான் தத்துவம். விளக்க முடியாத சில விஷயங்களுக்கான விளக்கம் தான் தத்துவம். நாம் அறியாத ஒன்றினைப் பற்றி நாம் அறிந்து கொண்டது போன்று நடிப்பது தான் தத்துவம். ஆனால், தத்துவங்கள் நமது வாழ்க்கையை சௌகரியமாக்குகின்றன. நீங்கள் இன்னும் நன்றாகத் தூங்க முடியும். அவைகள் மனதை அமைதியாக்குபவை.

நினைவில் கொள்ளுங்கள், இதுதான் தத்துவத்திற்கும் சமய நெறிக்கும் இடையே உள்ள வித்தியாசம். தத்துவம் என்பது அமைதி, சமயநெறி என்பது அதிர்ச்சி. தத்துவம், நீங்கள் நன்றாகத் தூங்குவதற்கு உதவும். சமயநெறி, உங்களை தூக்கத்திலிருந்து வெளியே கொண்டு வந்துவிடும். சமயநெறி என்பது ஒரு தத்துவம் அல்ல. உங்களது சுயநினைவற்ற நிலையிலிருந்து உங்களை வெளியே கொண்டு வருவதற்கான ஒரு செயல் நுணுக்கம் தான் சமயநெறியாகும். ஆனால், எல்லா தத்துவங்களும், நீங்கள் நன்றாகத் தூங்குவதற்குத் தான் உதவும். அவைகள், உங்களுக்கு கனவுகளையும் கற்பனை உலகையும்தான் கொடுக்கும்.

ஆனால், சமயநெறி என்பது உங்களது கனவுகளை, உங்களது கற்பனை உலகை விலக்கிவிடுவதாகும். சமயநெறி என்பது உங்களை உண்மையிடம் கொண்டுவந்து சேர்க்கும். மேலும், நீங்கள் கனவு



காணாமல் இருந்தால் தான், உண்மை என்பது உங்களுக்குச் சாத்தியப்படும். கனவு காண்கின்ற ஒரு மனதினால் உண்மையைக் காண முடியாது. கனவு காண்கின்ற ஒரு மனம் உண்மையைக்கூட ஒரு கனவாக மாற்றிவிடும்.

இதை நீங்கள் எப்போதாவது கவனித்ததுண்டா? நீங்கள் அலாரம் வைக்கிறீர்கள்; நீங்கள் ரயிலைப் பிடிப்பதற்காக, நீங்கள் காலையில் நான்கு மணிக்கு எழுந்திருக்க விரும்புகிறீர்கள். அதிகாலையில் அலாரம் அடிக்கிறது. ஆனால், உங்களது மனமோ, அதை ஒரு கனவாக ஆக்கிவிடுகிறது. நீங்கள் ஏதோ ஒரு கோவிலில் உட்கார்ந்திருப்பது போலவும், அங்கு அந்த கோவிலில் உள்ள மணிகள் எல்லாம் அடிப்பது போலவும் ஒரு கனவை உருவாக்கி, உங்களுக்கு மனம் விளக்கமளித்து விடுகிறது. அப்போது அந்த அலாரம், உங்களுக்கு ஒருபோதும் ஒரு பிரச்சனையாக இருக்காது. நீங்கள் உடனடியாக அதற்கு ஒரு விளக்கத்தை, அதாவது, அது கோவில் மணியின் ஓசை என்னும் விளக்கத்தைக் கொடுத்துவிடுவீர்கள்!

மனம் என்பது கண்ணுக்குத் தெரியாது. இப்போது மனஇயல் வல்லுநர்கள் மிகவும் ஆச்சரியப்படுகின்றனர். இது எப்படி நிகழ்கிறது, இந்த மனம் எப்படி உடனடியாக ஒவ்வொன்றிற்கும் விளக்கங்களை உருவாக்குகிறது, அதுவும் உடனடியாக எப்படி என்று அறிய முடியாமல் ஆச்சரியப்படுகின்றனர். இது மிகவும் கடினமானது! மனம் இதை முன்கூட்டியே திரையிட வேண்டும். இல்லையென்றால், நீங்கள் எப்படி ஒரு தேவாலயத்திலோ அல்லது கோவிலிலோ உட்கார்ந்திருப்பது போலவும், அங்கு மணிகள் அடிப்பது போலவும் திடீரென்று உருவாக்குவது எப்படி? அலாரம் நின்று போகிறது. ஆனால், உடனே நீங்கள் உங்கள் கனவில் அதற்கான விளக்கத்தை உடனடியாகக் காண்கிறீர்கள். நீங்கள் அந்த அலாரத்தை தவிர்க்க விரும்புகிறீர்கள். நீங்கள் எழுந்திருக்க விரும்புவதில்லை. மிகவும் குளிரான அந்த காலைப் பொழுதில், நீங்கள் எழுந்திருக்க விரும்புவதில்லை. எனவே, உங்களது மனமானது, "இது அலாரம் அல்ல. நீங்கள் பார்க்கின்ற ஒரு கோவில்," என்று உடனடியாக கூறுகிறது. உங்களுக்கு எல்லாமே விளக்கப்பட்டு விடுவதால், நீங்கள் தூக்கத்தைத் தொடர்கிறீர்கள்.

தத்துவங்கள் இதைத்தான் செய்கின்றன. மேலும், இதனால் தான் அநேகவிதமான தத்துவங்கள் உள்ளன. ஏனெனில், ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவிதமான விளக்கம் தேவைப்படும். யாரோ ஒருவரை தூங்கச் செய்வதற்காக கூறப்படுகின்ற ஒரு விளக்கம், உங்களுக்கு உதவாமல் போகலாம். மேலும், இதைத்தான் ஹெராக் விட்டஸ் இந்தப் பகுதியில் கூறுகிறார்.

இப்போது அவர் கூறுவதைப் புரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள்.

அவர் கூறுவதாவது :

*"மனிதர்கள் தாங்கள் தூங்கும் போது*
*எப்படி இருக்கிறார்களோ, அப்படியே*
*தாங்கள் விழித்திருக்கும் போதும் கூட*
*தங்களைச் சுற்றிலும் என்ன நடக்கிறது*
*என்பது குறித்த மறதியுடனும்,*
*கவனக் குறைவுடனும் இருக்கின்றனர்."*

தூங்கிக் கொண்டிருக்கும் போது, உங்களைச் சுற்றிலும் என்ன நடக்கிறது என்பதை நீங்கள் அறிவதில்லை. ஆனால், நீங்கள் விழித்துக் கொண்டிருக்கும் போது, உங்களைச் சுற்றிலும் என்ன நடக்கிறது என்பதை நீங்கள் அறிவீர்களா?

இதைக் குறித்து நிறைய ஆராய்ச்சிகள் செய்யப்பட்டுள்ளன. உங்கள் மனதிற்கு வருகின்ற செய்திகளில், 98 சதவீதம் செய்திகளை உங்கள் மனம் ஒருபோதும் அதற்குள் நுழைய அனுமதிப்பதில்லை. வெறும் 2 சதவீதம் மட்டுமே உள்ளே அனுமதிக்கப்படுகிறது. ஆனால், அந்த இரண்டு சதவீத செய்திகளையும்கூட, உங்களது மனம் தனக்கு ஏற்றாற்போல் திரித்துக் கொள்கிறது. நான் ஒன்றைக் கூறுவேன். நீங்கள் ஒன்றைக் கேட்பீர்கள். நான் வேறு ஏதாவது ஒன்றைக் கூறுவேன். அதை நீங்கள், உங்கள் தூக்கம் கெட்டுவிடாதபடி, அதற்கு ஏற்றாற்போல் அந்த செய்தியை பொருள் விளக்கம் செய்து கொள்வீர்கள். உங்களது மனம் உடனடியாக அதற்கு ஒரு பொருள் விளக்கம் கொடுத்துவிடும். நீங்கள், உங்களது மனதில் அதற்கென்று ஒரு இடத்தைக் கண்டு கொள்வீர்கள். மேலும், உங்களது மனம் அதை உள்வாங்கிக் கொள்ளும். அது, உங்களது மனதின் ஒரு பகுதியாக ஆகிவிடும். அதனால் தான் நீங்கள் புத்தர்களை, கிறிஸ்துவை, ஹெராக் விட்டாஸை, இன்னும் மற்றவர்களையும் தவறவிட்டு விடுகிறீர்கள். அவர்கள் உங்களிடம் பேசிக் கொண்டே போகிறார்கள்; அவர்கள் ஏதோ ஒன்றினைக் கண்டு கொண்டதாக கூறிக் கொண்டே போகிறார்கள். ஆனால், அதை அவர்கள் உங்களிடம் கூறியவுடன், நீங்கள் உடனடியாக அதற்கு பொருள் விளக்கம் கூறிவிடுகிறீர்கள். நீங்கள் உங்களுக்குச் சொந்தமான தந்திரங்களை வைத்திருக்கிறீர்கள்.

ஹெராக் விட்டஸைப் பார்த்து அரிஸ்டாட்டில் மிகவும் கலக்கமடைந்தார். இந்த மனிதனின் குணநலனில் ஏதோ ஒரு குறை இருப்பதாக அவர் தீர்மானித்தார். அத்தோடு முடிந்தது! நீங்கள் அவரை



தனிப்பிரிவாக ஆக்கிவிட்டீர்கள். ஏனெனில், அவர் உங்களோடு ஒத்துப் போகவில்லை. அவர் உங்களை கலக்கமடையச் செய்கிறார். அரிஸ்டாட்டிலின் மனதில் ஹெராக் விட்டஸ் ஒரு பாரமாக இருந்திருக்க வேண்டும். ஏனெனில், அரிஸ்டாட்டில் படுக்கைக்கோட்டு வசத்தில் நகர்ந்து செல்லக்கூடியவர். அவர் அதில் நிபுணரும்கூட. ஆனால், இந்த ஹெராக் விட்டஸோ, உங்களை ஒரு படுபாதாளத்தில் தள்ளப் பார்க்கிறார். அரிஸ்டாட்டில் தர்க்கசாஸ்திரம் என்னும் சமதளத்தரையில் நடக்கிறார். ஆனால், இந்த ஹெராக் விட்டஸ் என்னும் மனிதரோ, உங்களை ஒரு புதிர் உலகிற்குள் தள்ள முயற்சிக்கிறார். சில விளக்கங்கள் தேவை. "இந்த மனிதரிடம் உடல்ரீதியாக, உயிரியல்ரீதியாக, குணஇயல் ரீதியாக, இவரிடம் ஏதோ ஒரு குறை இருந்தாக வேண்டும்," என்று அரிஸ்டாட்டில் கூறுகிறார். இல்லையெனில், இவர் ஏன் இப்படி முரண்பாடுகளைப் பற்றி வலியுறுத்த வேண்டும்? புதிர்களைப் பற்றி இவர் ஏன் வலியுறுத்த வேண்டும்? எதிர் எதிர் துருவங்களுக்கு இடையே ஒருவித இணக்கம் இருக்கிறது என்று இவர் ஏன் கூற வேண்டும்? எதிர் துருவங்கள், எதிர் துருவங்கள் தான். அவைகளுக்குள் இணக்கம் இல்லை. வாழ்வு, வாழ்வு தான். சாவு, சாவுதான். இதைக் குறித்து தெளிவாக இருங்கள். இதில் இரண்டையும் கலக்காதீர்கள். இந்த ஆள் ஒரு குழப்பவாதி போல் தெரிகிறது," என்று அரிஸ்டாட்டில் கூறுகிறார்.

லா வோத்ஸுவும் இதே போன்று தான். "என்னைத் தவிர, மற்ற எல்லோரும் புத்திசாலிகள் போல் தெரிகிறது. என்னைத் தவிர, எல்லோரும் கெட்டிக்காரர்கள் போல் தெரிகிறது. நான் தான் ஒரு முட்டாள்!" என்று லாவோத் ஸு கூறுகிறார். லாவோத் ஸு, மிகப்பெரிய, இதுவரை பிறந்தவர்களில் மிகவும் புத்திசாலியான ஒருவர். ஆனால், உங்களுக்கு இடையில் அவர் ஒரு முட்டாள் என்பதாக உணர்கிறார். "எல்லோரும் தெளிவாக சிந்திப்பவர் போலத் தெரிகின்றனர். நான் தான் குழப்பம் நிறைந்து இருக்கிறேன்," என்கிறார். ஹெராக் விட்டஸ் பற்றி அரிஸ்டாட்டில் என்ன கூறுகிறாரோ, அதை லாவோத் ஸு, தன்னைப் பற்றியே அவர் அப்படிக் கூறிக் கொள்கிறார்.

"மனம் என்பது இல்லாத நிலையில், ஒருவர், நான் கூறுவதைக் கேட்கும் போது, அவர் மெய்ஞானம் பெற்றவர் ஆகிவிடுகிறார். யாராவது நான் கூறுவதை அவரது மனதின் மூலம் கவனித்தால், அதன்பிறகு அவர், அவரது மனதிற்குரிய சொந்த விளக்கங்களையே கண்டு கொள்கிறார். அதற்கும், நான் கூறுவதற்கும் சம்பந்தமே இல்லை. மேலும், கவனத்தோடு யாரும் கேட்பதில்லை. கவனம் இல்லாமல் கேட்கின்ற மக்களும் இருக்கிறார்கள். மேலும், யாராவது ஒருவர் கவனம் இல்லாமல், ஏதோ கேட்க வேண்டும் என்பதற்காக கேட்கும் போது,

அவர் தனது முட்டாள்தனத்தைப் பற்றி எண்ணி சிரிக்கிறார்," என்று லாவோத் ஸு கூறுகிறார். மேலும், இது போன்ற மனதை உடையவர்கள் தான் அதிகம் உள்ளனர். "மேலும், அதிகம் பேர் நீ கூறுவதைக் கேட்டு சிரிக்கவில்லையென்றால், நீங்கள் தவறான ஒன்றைக் கூறுகிறீர்கள் என்பதை அறிந்து கொள்ளுங்கள். அதிகம் பேர் சிரித்தால், அதன் பிறகு மட்டுமே நீங்கள் கூறுவதில் ஏதோ உண்மை உள்ளது என்று அர்த்தம். பெரும்பான்மையானவர்கள், உங்களை ஒரு முட்டாள் என்று எண்ணினால், அதன்பிறகு நீங்கள் ஒரு புத்திசாலியாக இருப்பதற்கான சாத்தியங்கள் உள்ளன. இல்லையெனில், அதற்கான சாத்தியங்கள் இல்லை" என்றும் லாவோத் ஸு கூறுகிறார்.

அரிஸ்டாட்டிலுக்கு, ஹெராக் விட்டஸ் குழப்பமானவர் போல் தெரிகிறார். உங்களுக்கும்கூட அது போன்று தான் தெரியும். ஏனெனில், அரிஸ்டாட்டில் இந்த உலகில் உள்ள பல்கலைக் கழகங்களை எல்லாம், இந்த கல்லூரிகளையெல்லாம் பிடித்துவிட்டார். இப்போது, எங்கு பார்த்தாலும் உங்களுக்கு தர்க்க சாஸ்திரம் தான் கற்றுக் கொடுக்கப்படுகிறதே தவிர, புதிர்கள் அல்ல. எங்கும் நீங்கள் பகுத்தறிவுடன் இருப்பதற்குத் தான் கற்றுக் கொடுக்கின்றனர். ஞானத்தை யாரும் கற்றுக் கொடுப்பதில்லை. தெள்ளத்தெளிவாக இருப்பதற்குத் தான் எல்லோருக்கும் பயிற்சி அளிக்கப்படுகிறது. நீங்கள் தெளிவானவராக இருக்க விரும்பினால், நீங்கள் படுக்கைக்கோட்டு வசத்தில் நகர்ந்து செல்ல வேண்டும். அங்கே A என்பது A தான், B என்பது B தான். மேலும், A என்பது ஒருபோதும் B ஆகாது. ஆனால், செங்குத்துப் பாதையின் புதிர் நிறைந்த பாதாளத்தில் எல்லைகள் எல்லாம் ஒன்றை ஒன்று சந்தித்து, ஒன்றோடு ஒன்று இணைந்துவிடும். ஆண் பெண்ணாவான், பெண் ஆணாவாள். சரி தவறாகும், தவறு சரியாகும். இருள் ஒளியாகும், ஒளி இருளாகும். வாழ்வு சாவாகும், சாவு வாழ்வாகும். எல்லா எல்லைகளும் சந்தித்து இணைந்து கொள்ளும்.

அதனால் தான், கடவுளே ஒரு புதிராக இருக்கிறார். அவர் ஒரு முக்கூற்று முடிவல்ல. கடவுள் இருப்பதற்கான நிரூபணங்களைக் கொடுப்பவர்கள், சாத்தியம் இல்லாததைச் செய்து கொண்டிருக்கிறார்கள். கடவுளுக்கு எந்த நிரூபணமும் கொடுக்க முடியாது. நிரூபணங்கள் எல்லாம் படுக்கைக்கோட்டு வசத்தில் மட்டுமே இருக்கின்றன.

திட நம்பிக்கையின் அர்த்தம் இதுதான் : நீங்கள் பாதாளத்தில் வீழ்வீர்கள், பாதாளத்தை நீங்கள் அனுபவிப்பீர்கள். நீங்கள் வெறுமனே அதில் மறைந்து போவீர்கள். ஆனாலும், நீங்கள் அதை அறிவீர்கள். மனம் என்பது இல்லாமல் போகும் போது தான், உங்களால் அறிய முடியும்; அதற்கு முன்பு ஒருபோதும் முடியாது.



நீங்கள் எங்கெல்லாம் இருக்கிறீர்களோ, அதுதான் நீங்கள் சரியாக இல்லாமல் இருக்கும் இடமும் ஆகும். நீங்கள் எங்கு இருக்கிறீர்களோ, அங்கு இல்லாமல், வேறு எங்காவது இருப்பீர்கள். நீங்கள் எங்கு இருந்தாலும், நீங்கள் அங்கு இருப்பதில்லை.

பழைய திபெத்திய சாஸ்திரங்களில் கூறப்பட்டிருப்பது என்னவென்றால், கடவுள் அநேக தடவை உங்களிடம் வருகிறார். ஆனால், அவரால் ஒருபோதும் உங்களை அங்கே கண்டு கொள்ள இயலவில்லை என்பதாகும். அவர், உங்களது கதவைத் தட்டுகிறார். ஆனால், விருந்து உபசரிக்கத்தான் நீங்கள் இல்லை. உபசரிக்க வேண்டியவர், எப்போதும் எங்கோ இருக்கிறார். நீங்கள் உங்களது இல்லத்தில், உங்களது வீட்டில் இருக்கிறீர்களா அல்லது வேறு எங்காவது இருக்கிறீர்களா? கடவுளால் எப்படி உங்களைக் கண்டுபிடிக்க முடியும்? நீங்கள் அவரைத் தேடிப் போக வேண்டிய அவசியம் இல்லை. நீங்கள் வெறுமனே உங்கள் வீட்டில் இருங்கள், அவர் வந்து உங்களைக் கண்டு கொள்வார். நீங்கள் அவரைத் தேடுவது போலவே, அவரும் உங்களைத் தேடிக் கொண்டிருக்கிறார். எனவே, வெறுமனே நீங்கள் வீட்டில் இருங்கள். அப்போது, அவரால் உங்களைக் கண்டு கொள்ள முடியும். அவர் வருகிறார், அவர் கதவைத் தட்டுகிறார்; பல லட்சம் தடவைகள் அவர் அவற்றை செய்கிறார், வாசல்படியில் காத்துக் கொண்டிருக்கிறார். ஆனால் நீங்களோ, ஒருபோதும் அங்கே இருப்பதில்லை.

ஹெராக் விட்டஸ் கூறுகிறார் :

*முட்டாள்கள், காதுகளால் அவர்கள்*
*கேட்டாலும் கூட அவர்கள் செவிடர்கள்*
*போல் இருக்கிறார்கள்;*
*எப்போதெல்லாம் அவர்கள் இருப்பது போன்று*
*உணர்கிறார்களோ அப்போதெல்லாம் அவர்கள்*
*இல்லாமல் இருக்கிறார்கள் என்னும் முதுமொழி*
*இவர்களுக்கும் பொருந்தும்.*

இதுதான் தூக்கம் இல்லாமல் இருப்பது, ஆஜர் ஆகாமல் இருப்பது, நிகழ்காலத்தில் இருக்காமல் வேறு எங்கோ இருப்பதாகும்.

இது, நடந்தது :

முல்லா நஸ்ருதீன் காப்பிக் கடையில் உட்கார்ந்து கொண்டு, தனது தாராள குணத்தைப் பற்றி பேசிக் கொண்டிருந்தார். மேலும், நாம் ஒவ்வொருவரும் செய்வது போலவே அவரும், பேசும் போது அதன் எல்லைக்கே சென்றுவிடுவார். ஏனெனில், அவர் என்ன சொல்கிறார் என்று அவருக்கே தெரியாது. அப்போது யாரோ ஒருவர், முல்லாவிடம்,

"நஸ்ருதீன், நீங்கள் மிகவும் தாராள குணம் படைத்தவர் என்றால், ஏன் எங்கள் அனைவரையும் உங்களது வீட்டிற்கு அழைப்பதில்லை? ஒருவேளை சாப்பாட்டிற்குக்கூட நீங்கள் எங்களை அழைத்தது இல்லை. எனவே, இதைப் பற்றி என்ன நினைப்பது?" என்று கேட்டார்.

இதனால் பரவசமடைந்த நஸ்ருதீன், தனது மனைவியைப் பற்றி முற்றிலும் மறந்துவிட்டார். எனவே அவர், அவர்களிடம், "சரி, இப்போதே வாருங்கள்!" என்று சொன்னார். ஆனால், வீட்டை நெருங்க நெருங்க அவர் மிகவும் சோகமானார். அப்போது தான் அவர் தனது மனைவியை நினைத்துப் பயந்தார். ஏனெனில், அவர் தன்னுடன் முப்பது ஆட்களை அழைத்துச் சென்றார். வீட்டிற்கு வெளியே நின்று கொண்டு, முல்லா அவர்களிடம், "நீங்கள் இங்கே காத்திருங்கள்! எனக்கு ஒரு மனைவி இருப்பது உங்கள் எல்லோருக்கும் தெரியும். உங்கள் அனைவருக்கும் மனைவிகள் உள்ளனர். எனவே, நீங்கள் எல்லோரும் அறிந்ததுதான். கொஞ்சம் காத்திருங்கள். முதலில் நான் உள்ளே சென்று அவளிடம் விஷயத்தைக் கூறுகிறேன். அதன்பிறகு உங்களை நான் உள்ளே கூப்பிடுகிறேன்," என்று கூறினார். அவர் இப்படிக் கூறிவிட்டு உள்ளே போய் மறைந்து கொண்டார்.

அவர்கள் காத்திருந்தார்கள், காத்திருந்தார்கள். ஆனால், அவர் வரவே இல்லை. எனவே, அவர்கள் கதவைத் தட்டினார்கள். நஸ்ருதீன், தனது மனைவியிடம் நடந்ததை அப்படியே கூறியிருந்தார். அதாவது, அவர் தனது தாராள குணத்தைப் பற்றி கொஞ்சம் அதிகமாகப் பேசியதால், அவர் மாட்டிக் கொண்டதையும் கூறியிருந்தார். அவரது மனைவியோ, "அது சரி, ஆனால் இப்போது முப்பது பேருக்கு கொடுக்க நம்மிடம் ஒன்றும் இல்லையே. இரவில், இந்த நேரத்தில் எதுவும் கிடைக்கவும் செய்யாதே," என்று கூறினார்.

எனவே, நஸ்ருதீன் அவரது மனைவியிடம், "நீ ஒரு காரியம் செய். அவர்கள் மீண்டும் கதவைத் தட்டும் போது, நீ வெறுமனே போய் அவர்களிடம் நஸ்ருதீன் வீட்டில் இல்லை என்று சொல்லிவிடு," என்றார்.

ஆகவே, அவர்கள் கதவைத் தட்டியவுடன், அவரது மனைவி வெளியே வந்து, "நஸ்ருதீன் வீட்டில் இல்லை," என்றார்.

அதைக் கேட்ட அவர்கள், "இது ஆச்சரியமாக உள்ளதே. ஏனெனில், நாங்கள் அவரோடு தான் வந்தோம்; அவர் உள்ளே தான் வந்தார். மேலும், அவர் வெளியே சென்றதையும் நாங்கள் பார்க்கவில்லை. நாங்கள் படிக்கட்டிலேயே காத்துக் கொண்டிருக் கிறோம். முப்பது பேரும் இருக்கிறோம். எனவே, கண்டிப்பாக அவர் உள்ளே தான் இருக்க வேண்டும். நீங்கள் உள்ளே போய் அவரைத் தேடுங்கள். அவர் எங்காவது மறைந்து கொண்டிருப்பார்," என்றார்கள்.



அவரது மனைவி உள்ளே சென்றாள். அவள் அவரிடம், "இப்போது என்ன செய்வது?" என்று கேட்டாள்.

நஸ்ருதீன் பரபரப்பானார். "பொறுத்திருந்து பார்!" என்று கூறிவிட்டு, அவர் வெளியே வந்து அங்கிருந்தவர்களிடம், "நீங்கள் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். நஸ்ருதீன் பின்பக்க வாசல் வழியாக வெளியே போயிருக்கலாம் அல்லவா?" என்று கூறினார்.

இது சாத்தியமாகும். இது உங்களுக்கு ஒவ்வொரு நாளும் நடந்து கொண்டுதான் இருக்கிறது. நஸ்ருதீன் முற்றிலும் தன்னை மறந்துவிட்டார்; அது தான் நடந்தது. தர்க்கவாதத்தில் அவர் தன்னையே மறந்துவிட்டார். அவர் தர்க்கம் செய்தது சரிதான். அவரது வாதம் சரிதான். ஆனால் ... ... அதற்கு என்ன அர்த்தம்? நீங்கள் இங்கே முன்வாசலில் காத்துக் கொண்டிருக்கிறீர்கள், முல்லா பின்வாசல் வழியாக சென்றிருக்கலாம் என்கின்ற இந்த தர்க்கவாதம் சரியானது தான். ஆனால், தானே தான் அதைச் சொல்கிறோம் என்பதை நஸ்ருதீன் முற்றிலுமாக மறந்துவிட்டார்.

நீங்கள் இருப்பதில்லை. நீங்கள் இந்த உலகைப் பொருத்தவரையிலும், இருப்பதில்லை. மேலும், உங்களைப் பொருத்தவரையிலும் கூட, நீங்கள் இருப்பதில்லை. இது தான் தூக்கம். இப்படி இருந்தால், உங்களால் எப்படி கேட்க முடியும்? இதன் பிறகு உங்களால் எப்படி பார்க்க முடியும்? இதன் பிறகு உங்களால் எப்படி உணர முடியும்? நீங்கள் இங்கேயே, இந்த நொடிப்பொழுதிலேயே இல்லை என்று ஆகிவிட்டால், அதன்பிறகு எல்லாக் கதவுகளும் மூடப்பட்டு விடுகின்றன. நீங்கள் ஒரு உயிரற்ற மனிதர் ஆகிவிடுகிறீர்கள். நீங்கள் உயிரோடு இருப்பதில்லை. இதனால் தான் இயேசு, தான் கூறுவதைக் கேட்பவர்களிடமும், தன்னை கவனிப்பவர்களிடமும் மீண்டும், மீண்டும், "உங்களுக்கு காதுகள் இருப்பின், நான் கூறுவதைக் கேளுங்கள். உங்களுக்கு கண்கள் இருப்பின், என்னைப் பாருங்கள்!" என்று கூறுகிறார்.

பலர் கவனிக்கலாம்; ஆனால், அவர்கள் கேட்பதில்லை. பலர் பார்க்கலாம்; ஆனால், அவர்கள் காண்பதில்லை. ஏனெனில், அவர்களின் வீடுகள் முற்றிலும் காலியாக உள்ளது. ஹெராக் விட்டஸ் இது போன்ற அநேக மக்களைப் பார்த்திருக்க வேண்டும். எஜமான் அவர்கள் வீட்டில் இல்லை. கண்கள் காண்கின்றன, காதுகள் கேட்கின்றன. ஆனால், எஜமான் உங்களுக்குள் ஆஜராக இல்லை. கண்கள் வெறும் ஜன்னல்கள் தான்; நீங்கள் அவைகளின் மூலம் பார்க்காத வரையில், அவைகளால் எதையும் பார்க்க முடியாது. ஒரு ஜன்னலால்

எப்படி பார்க்க முடியும்? நீங்கள் ஜன்னலின் அருகில் நிற்க வேண்டும்; அப்போது மட்டுமே உங்களால் பார்க்க முடியும். எப்படி? அது வெறும் ஜன்னல் தான். அதனால் எதையும் உணர முடியாது. நீங்கள் அங்கு வந்துவிட்டால், அதன்பிறகு அது முற்றிலும் வேறுபட்டு விடுகிறது.

இந்த முழு உடலும் ஒரு வீட்டினைப் போன்றது தான். மேலும், அதில் இந்த மனம் என்பது பயணம் செய்கிறது. ஆனால், இந்த எஜமான் எப்போதும் வெளியிலேயே சுற்றிக் கொண்டிருப்பதால், அந்த வீடு எப்போதும் காலியாக உள்ளது. வாழ்க்கை உங்களது கதவைத் தட்டுகிறது - நீங்கள் அதை கடவுள் என்றும் அழைக்கலாம் அல்லது எப்படி வேண்டுமானாலும் அழைக்கலாம். அதன் பெயரில் எதுவும் இல்லை. அதை இயற்கை என்றும் அழைக்கலாம் - அது உங்களது கதவைத் தட்டுகிறது. அது, ஏற்கனவே தொடர்ந்து தட்டிக் கொண்டே இருக்கிறது. ஆனால், நீங்கள் அங்கே ஒருபோதும் காணப்படவில்லை. இதுதான் தூக்கம்.

*ஒருவர் தான் ஏதோ ஆழ்ந்த தூக்கத்தில்*
*இருப்பவர் போன்று காரியமாற்றவோ,*
*பேசவோ கூடாது.*

முழு விழிப்புணர்வுடன் பேசுங்கள், செயலாற்றுங்கள். அதன்பிறகு, நீங்கள் உங்களிடம் ஒரு அபரிமிதமான மாற்றத்தை உணர்வீர்கள். நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்கிறீர்கள் என்கின்ற அந்த உண்மையே, உங்களது செயல்களை மாற்றிவிடும். அதன் பிறகு, நீங்கள் எந்த ஒரு பாவச்செயலும் செய்ய இயலாது. உங்களை நீங்கள் கட்டுப்படுத்த வேண்டும் என்பது கிடையாது, அது கிடையாது! கட்டுப்படுத்துதல் என்பது விழிப்புணர்வுக்குப் பதிலாக நீங்கள் செய்கின்ற ஒன்றுமற்ற காரியமாகத் தான் இருக்கும். மிகவும் மோசமான, பதில் செயலாகும். அது, அதிகம் உதவாது. நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்தால், அதன்பிறகு நீங்கள் கோபத்தைக் கட்டுப்படுத்த வேண்டிய அவசியம் கிடையாது; விழிப்புணர்வோடு இருக்கும் போது கோபம் ஒருபோதும் எழாது. அவைகள் இரண்டும் ஒரேநேரத்தில் ஒன்றுசேர்ந்து இருக்க முடியாது. அவைகளுக்கு இருப்பு கிடையாது. விழிப்புணர்வோடு இருக்கும் போது, பொறாமை ஒருபோதும் எழாது. விழிப்புணர்வில் அநேக விஷயங்கள் வெறுமனே மறைந்து போய்விடும். எதிர்மறையான எல்லா விஷயங்களும் மறைந்து போய்விடும்.

விழிப்புணர்வு என்பது ஒளியைப் போன்றது. உங்களது வீட்டில் வெளிச்சம் இருந்தால், அங்கே இருட்டு எப்படி இருக்க முடியும்? அது வெறுமனே தப்பித்துவிடும். உங்கள் வீட்டில் ஒளியேற்றப்பட்டிருக்கும்



போது, உங்களால் எப்படி தடுமாற முடியும்? அப்போது எப்படி நீங்கள் சுவரில் தட்ட முடியும்? வீட்டில் வெளிச்சம் இருக்கிறது, உங்களுக்கு கதவு இருக்குமிடம் தெரியும். நீங்கள் கதவை நோக்கிச் சென்று, அதைத் திறந்து கொண்டு வெளியே அல்லது உள்ளே செல்வீர்கள். ஆனால், இருட்டாக இருந்தால், நீங்கள் தடுமாறுவீர்கள்; நீங்கள் துளாவுவீர்கள்; நீங்கள் கீழே விழுவீர்கள். நீங்கள் விழிப்புணர்வு இல்லாமல் இருக்கும் போது, நீங்கள் துளாவுகிறீர்கள், நீங்கள் தடுமாறுகிறீர்கள், நீங்கள் கீழே விழுகிறீர்கள். கோபம் என்பது உங்களது தடுமாற்றம் தான். பொறாமை என்பது நீங்கள் இருட்டில் துளாவுவதைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. தவறான செயல்கள் எல்லாம், அந்தச் செயல்களால் தவறானவை அல்ல. ஆனால், நீங்கள் இருளில் வாழ்ந்து கொண்டிருப்பதால் தான் அவைகள் தவறாகின்றன.

இயேசு கோபப்பட வேண்டும் என்று விரும்பினால், அவரால் முடியும்; அவர் கோபத்தைப் பயன்படுத்த முடியும். ஆனால், உங்களால் அதை பயன்படுத்த முடியாது. அதற்குப் பதிலாக, நீங்கள் கோபத்தினால் பயன்படுத்தப்படுகிறீர்கள். தான் இதனைப் பயன்படுத்துவதால் மற்றவர்களுக்கு நல்லதும் உதவியும் கிடைக்கும் என்று இயேசு உணர்ந்தால், அவரால் எதையும் பயன்படுத்த முடியும். அவர் ஒரு எஜமான். கோப உணர்வு இல்லாமலேயே, இயேசு கோபப்பட முடியும். குர்ப்ஜியஃப் அவர்களிடம் அநேகம் பேர் இருந்தார்கள்; அவர் ஒரு பயங்கர கோபக்காரர். அவர், கோபம் வந்துவிட்டால் பயங்கரமாகக் கோப்படுவார். அப்போது, அவர் ஒரு கொலைகாரர் போல் தென்படுவார்! ஆனால், அது எல்லாம் வெறும் விளையாட்டு தான். யாருக்காவது உதவ வேண்டிய சந்தர்ப்பமாகத் தான் அது இருக்கும். மேலும், உடனடியாக ஒரு சிறு நொடிகூட இடைவெளி இல்லாமல் அவர் மற்றொரு மனிதரைப் புன்முறுவலோடு பார்ப்பார். அதே போன்று, மீண்டும் அவர் முன்பு கோபப்பட்ட அதே மனிதரைத் திரும்பவும் பார்த்து, அவர் மீது கோபம் கொண்டு பயங்கரமாகப் பார்ப்பார்.

இது சாத்தியமானது தான். நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்தால், உங்களால் எதையும் பயன்படுத்த முடியும். நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்தால், விஷமும்கூட அமுதமாகிவிடும். ஆனால், நீங்கள் ஆழ்ந்த தூக்க உணர்வுடன் இருந்தால், அமுதம்கூட விஷமாகிவிடும். ஏனெனில், இந்த முழு விஷயமும், நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்கிறீர்களா அல்லது இல்லையா என்பதைப் பொறுத்தே உள்ளது. செய்கின்ற காரியங்களுக்கு எந்த அர்த்தமும் கிடையாது. காரியங்கள் ஒரு பொருட்டல்ல - நீங்கள், உங்களது விழிப்புணர்வு, நீங்கள் தன்னுணர்வுடன் இருப்பது, நிறை மனதுடன் இருப்பது தான் ஒரு பொருட்டாகும். நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்பது முக்கியமல்ல.

இது, நடந்தது :

மிகப்பெரிய புத்த குரு, நாகார்ஜுனர் என்பவர் இருந்தார். அவரிடம் ஒரு திருடன் வந்தான். அந்தத் திருடனுக்கு, இந்த குருவின் மீது பாசம் வந்துவிட்டது. ஏனெனில், அவர் இதுவரை இப்படிப்பட்டதொரு அழகான, எல்லையற்ற கருணையுடன் கூடிய குருவைப் பார்த்தது இல்லை. அவன், நாகார்ஜுனரிடம், "நான் வளர்ச்சி அடைவதற்கு ஏதேனும் சாத்தியங்கள் உள்ளதா? ஒரு விஷயத்தை நான் உங்களுக்குத் தெரிவிக்க வேண்டும். நான் ஒரு திருடன். மேலும் இன்னும் ஒரு விஷயம், என்னால் இந்த திருட்டை விட முடியாது. எனவே, திருட்டை விட்டுவிட வேண்டும் என்று நீங்கள் நிபந்தனை போடாதீர்கள். நீங்கள் எதைச் சொன்னாலும், நான் அதைக் கேட்கிறேன். ஆனால், என்னால் திருடனாக இருப்பதை நிறுத்த முடியாது. அதை நான் பலமுறை முயன்று பார்த்துவிட்டேன். அது நடக்கவில்லை. எனவே, அந்த முழு விளையாட்டையும் நான் விட்டுவிட்டேன். நான் ஒரு திருடனாக இருக்க வேண்டும் என்பது தான் எனது தலையெழுத்து என்று நான் ஏற்றுக் கொண்டுவிட்டேன். எனவே, அதைப் பற்றி பேசாதீர்கள். ஆரம்பத்திலிருந்தே இது மிகவும் தெளிவாக இருக்கட்டும்," என்று கூறினான்.

**செய்கின்ற காரியங்களுக்கு எந்த அர்த்தமும் கிடையாது. காரியங்கள் ஒரு பொருட்டல்ல - நீங்கள், உங்களது விழிப்புணர்வு, நீங்கள் தன்னுணர்வுடன் இருப்பது, நிறை மனதுடன் இருப்பது தான் ஒரு பொருட்டாகும். நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்பது முக்கியமல்ல.**

அதைக் கேட்ட நாகார்ஜுனர், "நீ ஏன் பயப்படுகிறாய்? நீ திருடன் என்பதைப் பற்றி யார் பேசப் போகிறார்கள்?" என்று கேட்டார்.

அதற்கு அந்தத் திருடன், "ஆனால், நான் எந்த துறவியிடம் சென்றாலும், மதகுருவிடம் சென்றாலும் அவர்கள் எப்போதும், 'நீ முதலில் திருடுவதை நிறுத்து,' என்று தான் கூறுகின்றனர்," என்றான்.

அதைக் கேட்டு சிரித்த நாகார்ஜுனர், "அப்படியானால், நீ திருடர்களிடம் தான் போயிருக்க வேண்டும். இல்லையெனில், ஏன் இப்படி கூறுகிறார்கள்? அவர்கள் இதைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? எனக்கு அதைப் பற்றி கவலை இல்லை!" என்று பதிலளித்தார்.



அந்தத் திருடன் மிகவும் சந்தோஷமடைந்தான். அவன் அவரிடம், "அப்படியானால் சரி. இப்போது நான் ஒரு சீடனாக ஆக முடியும் போல் தெரிகிறது. நீங்கள் தான் சரியான குரு," என்றான்.

நாகார்ஜுனர், அவனை சீடனாக ஏற்றுக் கொண்டு, அவனிடம், "இப்போது நீ போய் நீ என்னவெல்லாம் விரும்புகிறாயோ, அதையெல்லாம் செய்யலாம். ஒரே ஒரு நிபந்தனையை மட்டும் பின்பற்றினால் போதும். அது விழிப்புணர்வுடன் இரு என்பதுதான். போ, வீடுகளை உடைத்து உள்ளே போ, பொருட்களை களவாடி எடுத்துக் கொள், நீ விரும்புகின்றவற்றையெல்லாம் செய், அதைப் பற்றி எனக்கு கவலை இல்லை. நான் ஒரு திருடன் அல்ல. ஆனால், எதைச் செய்தாலும் அதை முழு விழிப்புணர்வுடன் செய்," என்றார்.

ஆனால், அந்தத் திருடனால், தான் ஒரு பொறியில் சிக்கப் போகிறோம் என்பதை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவன், அவரிடம், "அப்படியானால், எல்லாம் சரி. நான் முயற்சி செய்கிறேன்," என்று கூறிவிட்டுச் சென்றான்.

மூன்று வாரங்கள் கழித்து அவன் திரும்பி வந்தான். அவன், குருவிடம், "நீங்கள் தந்திரக்காரர். இப்போது நான் விழிப்புணர்வுடன் இருக்க ஆரம்பித்தால், என்னால் திருட முடியவில்லை. நான் திருடினால், விழிப்புணர்வு போய்விடுகிறது. நான் தடுமாற்றத்தில் இருக்கிறேன்," என்றான்.

அதைக் கேட்ட நாகார்ஜுனர், "நீ ஒரு திருடன், அல்லது திருட்டுத் தொழில் இதைப் பற்றி என்னிடம் எதுவும் பேச வேண்டாம். எனக்கு அதைப் பற்றி அக்கறையில்லை. நான் ஒரு திருடன் அல்ல. எனவே, இப்போது நீயே முடிவெடு! உனக்கு விழிப்புணர்வு தான் தேவை என்றால், நீயே முடிவெடு! அது உனக்குத் தேவையில்லையென்றாலும், அதையும் நீயே தீர்மானித்துக் கொள்," என்றார்.

அதற்கு அந்த மனிதன், "ஆனால், இப்போது எனக்கு மிகவும் கடினமாக உள்ளது. நான் விழிப்புணர்வைக் கொஞ்சம் ருசி பார்த்துவிட்டேன். அது மிகவும் அழகாக உள்ளது. நீங்கள் என்ன கூறினாலும், அதை நான் விட்டுவிடுகிறேன். நேற்று இரவு, முதல் முதலாக நான் அரசரின் அரண்மனைக்குள் நுழைந்தேன். நான் கஜானாவைத் திறந்தேன். இந்த உலகிலேயே பணக்காரனாக நான் இருந்திருக்க முடியும். ஆனால், நீங்கள் என்னைப் பின்தொடர்ந்து வந்தீர்கள். எனவே, நான் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டியதாயிற்று. நான் விழிப்புணர்வுடன் இருக்க ஆரம்பித்த போது, திடீரென்று எனக்கு எந்தவிதமான ஆசையும், உணர்ச்சித் தூண்டுதலும் இல்லை. நான்

விழிப்புணர்வு பெற்ற பின்னர், வைரங்கள் வெறும் கற்கள் போல தோன்றின. நான் விழிப்புணர்வை இழந்த போது, பொக்கிஷம் தெரிந்தது. நானும் பொறுமையாக காத்திருந்து, இதை பலமுறை செய்தேன். நான் விழிப்புணர்வு பெற்றவுடன், நான் ஒரு புத்தனைப் போல் ஆகிவிட்டேன். அப்போது, என்னால் அதைத் தொடக்கூட முடியவில்லை. ஏனெனில், நான் செய்கின்ற செயல் முட்டாள்தனமானதாகவும், புத்தி கெட்டதாகவும்; அவைகள் வெறும் கற்கள் போன்றும் தெரிந்தது. நான் செய்வது என்ன? இந்த கற்களுக்காக நான் என்னை இழப்பதா? ஆனால், அதன் பிறகு நான் எனது விழிப்புணர்வை இழந்துவிடுவேன். அந்தக் கற்கள் மீண்டும் அழகானவையாக ஆகிவிடும். மீண்டும் அதே பழைய மாயை வந்துவிடும். ஆனால், இறுதியில் அவைகள் மதிப்பற்றவை என்று நான் தீர்மானித்துவிட்டேன்," என்றான்.

எனவே, ஒருமுறை நீங்கள் விழிப்புணர்வை அறிந்து கொண்டால், அதற்கு இணையான மதிப்புடையது எதுவும் கிடையாது. நீங்கள் இந்த வாழ்க்கையின் பேரானந்தத்தை அறிந்திருப்பீர்கள். அதன் பிறகு, திடீரென அநேக விஷயங்கள் உங்களை விட்டுப் போய்விடும். அந்த விஷயங்கள் முட்டாள்தனமானதாக, புத்தியற்றதாக ஆகிவிடும். உணர்ச்சித் தூண்டுதல் அங்கு இருக்காது; ஆசை அங்கே இருக்காது; கனவுகள் எல்லாம் கலைந்து போய்விடும்.

*ஒருவர் தான் ஏதோ ஆழ்ந்த தூக்கத்தில்*
*இருப்பவர் போன்று காரியமாற்றவோ,*
*பேசவோ கூடாது.*

இது ஒன்று மட்டுமே திறவுகோல்.

*விழித்திருப்பவர்களுக்கு பொதுவாக ஒரே ஒரு*
*உலகம் தான் உண்டு. ஆனால்*
*தூங்குபவர்களுக்கோ, ஒவ்வொருவருக்கும்*
*அவர்களுக்கே சொந்தமானதொரு தனிப்பட்ட*
*உலகம் இருக்கும்.*

கனவுகள் தனிப்பட்டவை, முற்றிலும் தனிப்பட்டவை! வேறு யாரும் உங்களது கனவினுள் நுழைய முடியாது. நீங்கள் உங்களது காதலியோடு, உங்களது கனவினை பகிர்ந்து கொள்ள முடியாது. கணவனும் மனைவியும் ஒரே படுக்கையில் தான் படுத்திருப்பார்கள். ஆனால், தனித்தனியாகத் தான் கனவு காண்பார்கள். ஒரு கனவினை பகிர்ந்து கொள்வது சாத்தியப்படாது. ஏனெனில், கனவு என்பதே ஒன்றும் இல்லாதது. ஒன்றும் இல்லாத ஒன்றினை, நீங்கள் எப்படி பகிர்ந்து கொள்ள முடியும்? அது வெறும் நீர்க்குமிழி போன்றது, அது முற்றிலும் இல்லாத ஒன்று, உங்களால் அதைப் பகிர்ந்து கொள்ள முடியாது. நீங்கள் தனியாகத் தான் கனவு காண வேண்டும்.



அதனால் தான் - தூங்குபவர்களால் தான், அநேகம் பேர் தூங்கிக் கொண்டிருப்பதால் தான் - இங்கே அநேக உலகங்கள் உள்ளன. நீங்கள் உங்களுக்குச் சொந்தமான உலகை வைத்துக் கொள்கிறீர்கள். நீங்கள் ஆழ்ந்து தூங்கினால், நீங்கள் உங்களுக்குச் சொந்தமான எண்ணங்கள், கொள்கைகள், கனவுகள், ஆசைகள் இவற்றினால் சூழப்பட்டு இருக்கிறீர்கள். எனவே, நீங்கள் மற்றொருவரை சந்திக்கும் போது, இரண்டு உலகங்களும் மோதிக் கொள்கின்றன. உலகங்கள் மோதிக் கொண்டிருக்கின்றன - இதுதான் இப்போதுள்ள சூழ்நிலை. கவனியுங்கள்!

ஒரு கணவனும் மனைவியும் பேசிக் கொள்வதைப் பாருங்கள்; அவர்கள் பேசுவதே இல்லை. கணவன் தனது அலுவலகத்தைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பான். ஆனால், அவனது மனைவியோ, கிறிஸ்துமஸ்ஸிற்கான தனது ஆடைகளைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பாள். அவர்களுக்குள், அவர்களுக்குச் சொந்தமான தனிப்பட்ட உலகினை வைத்திருக்கிறார்கள். ஆனால், அவர்களின் தனிப்பட்ட இந்த உலகங்கள் எங்காவது சந்திக்கும் போது - மோதல். ஏனெனில், மனைவியின் ஆடைகளுக்கு கணவனின் சம்பளம் தேவை. அதே போன்று, கணவனின் சம்பளத்தில் மனைவியின் ஆடைகளுக்கு ஒதுக்க வேண்டும். எனவே, மனைவி, "டார்லிங்," என்கிறாள். ஆனால், அந்த "டார்லிங்" என்கின்ற வார்த்தைக்குப் பின்னால், அவளது ஆடைகள் உள்ளன. அவள் அதை நினைத்துக் கொண்டு தான் அப்படி அழைக்கிறாள். டார்லிங் என்பதற்கு, அகராதியில் உள்ள அர்த்தம், அர்த்தமாகாது. ஏனெனில், ஒவ்வொரு முறையும் மனைவி "டார்லிங்" என்று கூறும்போது, அது வெறும் பொய்த்தோற்றம். எனவே, அந்த கணவன் உடனே பயந்துவிடுகிறான். ஆனால், அவன் அதை வெளிக்காட்டுவதில்லை. ஏனெனில், யாராவது டார்லிங் என்று சொல்லும் போது, உங்களால், உங்கள் மனதில் உள்ளதை வெளிக்காட்ட முடியாது. உடனே அவனும், "அன்பே, என்ன இது? எப்படி இருக்கிறாய்?" என்று கேட்பான். ஆனால், அவன் உள்ளுக்குள் பயந்து கொண்டிருப்பான். ஏனெனில், அவன் தனக்குள் தனது சம்பளத்தைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பான். மேலும், கிறிஸ்துமஸ் வருகிறது. எனவே, அங்கே ஆபத்து இருக்கிறது என்பதை அவனும் அறிவான்.

முல்லா நஸ்ருதீனின் மனைவி அவரிடம், "உங்களுக்கு என்ன ஆயிற்று? இப்போதெல்லாம் நான் கதறி அழுது, எனது கண்களில்

கண்ணீர் வழிந்தாலும்கூட, நீங்கள், 'நீ ஏன் அழுகிறாய்?' என்று கேட்பதில்லையே, ஏன்?" என்று கேட்டாள்.

அதற்கு நஸ்ருதீன் அவளிடம், "பட்டதெல்லாம் போதும்! அப்படிக் கேட்டுவிட்டு, அதற்கு அதிக விலை கொடுக்க வேண்டியுள்ளது. மேலும், கடந்த காலங்களில் இந்தத் தவறை அநேக தடவை செய்துவிட்டேன். ஏனெனில், இந்தக் கண்ணீர், வெறும் கண்ணீர் அல்ல. இந்தக் கண்ணீரின் அர்த்தம் - ஆடைகள், ஒரு புதிய வீடு, புதிய தட்டுமுட்டு சாமான், புதிய கார், இது போன்ற அநேக விஷயங்கள் இந்தக் கண்ணீருக்குப் பின்னால் ஒளிந்திருக்கின்றன. இந்தக் கண்ணீர் வெறும் ஆரம்பம் தான்," என்றார்.

எனவே, இருவர் சந்திக்கும் போது, அவர்களுக்கிடையே உரையாடல் என்பது சாத்தியமில்லை. ஏனெனில், அவர்களுக்குள் இரண்டு தனிப்பட்ட உலகங்கள் உள்ளன. எனவே, சச்சரவு தான் சாத்தியப்படும்.

கனவுகள் தனிப்பட்டவை; உண்மை தனிப்பட்டதல்ல. உண்மை என்பது தனிப்பட்டதாக இருக்க முடியாது. உண்மை என்பது என்னுடையதாகவோ அல்லது உங்களுடையதாகவோ இருக்க முடியாது; உண்மை என்பது கிறிஸ்தவமாகவோ அல்லது இந்துவாகவோ இருக்க முடியாது, சத்யம் என்பது இந்தியனாகவோ அல்லது கிரேக்கமாகவோ இருக்க முடியாது. சத்யம் என்பது தனிப்பட்டதாக இருக்க முடியாது. கனவுகள் தனிப்பட்டவை. என்னவெல்லாம் தனிப்பட்டதாக இருக்கிறதோ, அதெல்லாம் கனவுகளின் உலகிற்குச் சொந்தமானது என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஆனால், உண்மை என்பது திறந்த வானம் போன்றது. அது எல்லோருக்குமானது, அது ஒன்றானது.

அதனால் தான், லாவோத் ஸு பேசும் போது, அவரது மொழி வேண்டுமானால் வித்தியாசமானதாக இருக்கலாம்; புத்தர் பேசுகிறார், அவரது மொழி வேறுபட்டது. ஹெராக் விட்டஸ் பேசுகிறார், அவரது மொழி வேறுபட்டது. ஆனால், அவைகள் எல்லாம் ஒரே அர்த்தத்தைத் தான் கொடுக்கின்றன. அவைகள் எல்லாம் நோக்கித் தான் சுட்டிக்காட்டுகின்றன. அவர்கள் தனிப்பட்ட உலகில் வாழ்வதில்லை. அவர்களின் தனிப்பட்ட உலகம், அவர்களின் கனவுகள், ஆசைகள் - அவர்களின் மனத்தோடு மறைந்து போயிற்று. மனம் என்பதற்கு தனிப்பட்ட உலகம் உண்டு. ஆனால், தன்னுணர்விற்கு தனிப்பட்ட உலகம் கிடையாது. விழித்துக் கொண்டிருப்பவர்களுக்கு பொதுவாக ஒரே ஒரு உலகம்தான் இருக்கும் ... ... விழித்துக் கொண்டிருக்கிறவர்கள் யாராக இருந்தாலும், அவர்களுக்குப் பொதுவில் ஒரே ஒரு உலகம்தான்



இருக்கும் - அது தான் இந்த இயற்கை. மேலும், யாரெல்லாம் ஆழ்ந்து தூங்கிக் கொண்டும், கனவு கண்டு கொண்டும் இருக்கிறார்களோ, அவர்களுக்கெல்லாம், அவர்களுக்கென்று சொந்தமான உலகம் உண்டு.

உங்களது உலகத்தை விட்டுவிட வேண்டும். அந்த ஒரு துறவறத்தை மட்டுமே நான் உங்களிடம் கேட்கிறேன். உங்களது மனைவியை விட்டுவிட்டு வாருங்கள் என்று சொல்ல மாட்டேன்; உங்களது வேலையை விட்டுவிட்டு வாருங்கள் என்று நான் சொல்ல மாட்டேன்; உங்களது பணத்தை விட்டுவிட்டு வாருங்கள் என்று நான் சொல்ல மாட்டேன்; உங்களுடையது எதையும் விட்டுவிட்டு வாருங்கள் என்று சொல்ல மாட்டேன். வேண்டாம்! நான் வெறுமனே உங்களது தனிப்பட்ட உலகத்தை விட்டுவிடுங்கள் என்று மட்டுமே கூறுகிறேன். அது தான் என்னைப் பொருத்தவரை, சந்நியாசம். பழைய சந்நியாசம் என்பது கண்ணுக்குத் தெரிகின்ற இந்த உலகை விட்டுவிட்டு வருவதாகும். மனைவியையும், குழந்தைகளையும் விட்டுவிட்டு ஒருவர் இமயலைக்கு போகிறார். அதுவல்ல முக்கியக் கருத்து. நீங்கள் விட்டுவிட வேண்டிய உலகம் அதுவல்ல. அதை நீங்கள் எப்படி விட்டுவிட முடியும்? இமயமலையும் கூட இந்த உலகிற்குச் சொந்தமானது தான். நீங்கள் விட்டு விலக வேண்டிய உண்மையான உலகம், உங்களது மனம்தான். தனிப்பட்ட கனவுகள் காணும் உலகம் தான். நீங்கள் அதைத் துறந்துவிட்டால் போதும். நீங்கள் சந்தைக் கடையில் உட்கார்ந்து கொண்டிருந்தாலும், நீங்கள் இமய மலையில் உட்கார்ந்து கொண்டிருப்பதாக அர்த்தம். நீங்கள் உங்களது மனம் என்னும் கனவு உலகை துறக்கவில்லையென்றால், இமயமலையிலும்கூட உங்களைச் சுற்றிலும் நீங்கள் ஒரு தனிப்பட்ட உலகினை உருவாக்கிவிடுவீர்கள்.

உங்களிடமிருந்து நீங்கள் எப்படித் தப்பிக்க முடியும்? எங்கெல்லாம் சென்றாலும், நீங்கள் நீங்களாகத் தான் இருப்பீர்கள். எங்கு தான் சென்றாலும், நீங்கள் இதே வழியில் தான் நடந்து கொள்வீர்கள். சூழ்நிலைகள் வேண்டுமானால் வித்தியாசப்படலாம். ஆனால், நீங்கள் எப்படி வித்தியாசமானவர் ஆக முடியும்? நீங்கள் இமயமலையிலும் ஆழ்ந்த தூக்கத்தில் இருப்பீர்கள். நீங்கள் பூனாவில் தூங்கினால் என்ன அல்லது பாஸ்டனில் தூங்கினால் என்ன அல்லது நீங்கள் லண்டனில் தூங்கினால் என்ன அல்லது இமயமலையில் தூங்கினால் என்ன? நீங்கள் எங்கெல்லாம் இருக்கிறீர்களோ, அங்கெல்லாம் கனவு கண்டு கொண்டு தான் இருப்பீர்கள். கனவு காண்பதை விட்டு விடுங்கள்! இன்னும் அதிக விழிப்புடன் இருங்கள். திடீரென்று கனவுகள் மறைந்து போகும். மேலும், கனவுகளோடு எல்லாக் கவலைகளும் மறைந்து போகும்.

*விழித்திருக்கும் போது நாம் காண்பதெல்லாம் இறப்பு தான்.*
*ஆழ்ந்து தூங்கும்போது காண்பதெல்லாம் கனவுகள் தான்.*

இது உண்மையிலேயே மிகவும் அழகானது. நீங்கள் தூங்கும் போதெல்லாம், நீங்கள் கனவுகள், மாயைகள், கானல்நீர்கள் ஆகியவற்றைக் காண்கிறீர்கள். இவையெல்லாம், உங்களது சொந்த படைப்புகள், உங்களது சொந்த தனிப்பட்ட உலகம். நீங்கள் விழித்தெழும் போது, நீங்கள் காண்பது என்ன? "நீங்கள் விழித்திருக்கும் போது காண்பதெல்லாம் மரணம் தான்" என்று ஹெராக் விட்டாஸ் கூறுகிறார்.

ஒருவேளை, அதனால் தான் நீங்கள் இந்த உலகைப் பார்க்க விரும்புவதில்லை போலும். ஒருவேளை, அதனால் தான் நீங்கள் கனவு கண்டு கொண்டு, உங்களைச் சுற்றிலும் கனவுகள் என்னும் மேகங்களை உருவாக்கிக் கொள்கிறீர்கள் போலும். அதனால், நீங்கள் மரணத்தை நேருக்கு நேர் சந்திக்க வேண்டியதிருக்காது அல்லவா. ஆனால், ஒரு மனிதன் மரணத்திற்குள் நுழையும் போது தான், சமயநெறிமிக்கவனாக ஆகிறான் என்பதை நினைவில் கொள்ளுங்கள். அதற்கு முன்பு ஒருபோதும் கிடையாது.

நீங்கள் மரணத்தை எதிர்கொள்ளும் போது, நீங்கள் நேருக்கு நேர் அதை பார்க்கும் போது, நீங்கள் அதைத் தவிர்த்துவிடாத போது, நீங்கள் அதற்கு போக்கு காட்டாத போது, நீங்கள் அதிலிருந்து தப்பி ஓடாத போது, நீங்கள் உங்களைச் சுற்றிலும் ஒரு மேகமூட்டத்தை உருவாக்காத போது - நீங்கள் அதை நேர் கொள்ளும் போது, அதை எதிர்கொள்ளும் போது, இறப்பின் உண்மையை எதிர்கொள்ளும் போது - திடீரென்று நீங்கள் சாவு தான் வாழ்வு என்னும் விழிப்புணர்வைப் பெறுவீர்கள். நீங்கள் எந்த அளவுக்கு மரணத்தில் ஆழமாக நகர்ந்து செல்கிறீர்களோ, அந்த அளவுக்கு வாழ்விலும் ஆழ்ந்து செல்வீர்கள். ஏனெனில், எதிர் எதிர் துருவங்கள் எல்லாம் சந்தித்து, ஒன்றாகின்றன என்று ஹெராக் விட்டாஸ் கூறுகிறார். அவைகள் ஒன்று தான்.

நீங்கள் மரணத்திலிருந்து தப்பிச் செல்ல முயற்சி செய்தால், நீங்கள் வாழ்க்கையிலிருந்தும்கூட தப்பிச் செல்ல முயற்சிக்கிறீர்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள். அதனால் தான், நீங்கள் இந்த அளவுக்கு உயிரற்று இருக்கிறீர்கள். இதுதான் முரண்பாடு. அதாவது, மரணத்திலிருந்து நீங்கள் தப்பிக்க நினைத்தால், நீங்கள் உயிரற்று இருப்பீர்கள். ஆனால், மரணத்தை நேருக்கு நேர் எதிர்கொண்டால், நீங்கள் உயிரோட்டமுள்ளவராக ஆகிவிடுவீர்கள். நீங்கள் மரணத்தை அதிக ஆழத்துடன் எதிர்கொள்ளும் தருணத்தில், நீங்கள் செத்துக்



கொண்டிருக்கிறீர்கள் என்கின்ற உணர்வு தீவிரம் ஆகும் போது, இந்த நெருக்கடி நிலை வருகிறது. அதுதான் இயேசுவின் சிலுவை, மரணத்தின் நெருக்கடி நிலை. அந்தத் தருணத்தில், ஒரு உலகில் இருந்து - அதாவது, படுக்கைவச உலகில், மனம் என்னும் உலகில் இருந்து - நீங்கள் இறக்கிறீர்கள். ஆனால், நீங்கள் அடுத்த உலகில் மீண்டும் உயிர்த்தெழுகிறீர்கள்.

இயேசு உயிர்த்தெழுந்தது என்பது ஒரு உடலியல் கருத்து அல்ல. கிறிஸ்தவர்கள் அதைப் பற்றி தேவையில்லாமல் அநேக கருத்துக்களை உருவாக்கிவிட்டார்கள். இந்த உடலில் மீண்டும் உயிர்த்தெழுதல் என்பதாகாது; அது, இன்னொரு உயிர் உயிர்த்தெழுவதாகும். எப்போதுமே மரணமடையாத வேறு ஒரு உடலில், வேறு ஒரு பரிமாணத்தில் உயிர்த்தெழுவதாகும். இந்த உடல் அழியக் கூடியது, அந்த உடல் அழிவற்றது. இயேசு இன்னொரு உலகில், சத்யம் என்னும் உலகில் உயிர்த்தெழுகிறார். அவரது தனிப்பட்ட உலகம் மறைந்து போகிறது.

இயேசு தனது கடைசி நேரத்தில் அவர் மிகவும் கவலைப்பட்டதாகவும், கலக்கமடைந்ததாகவும் கூறுகிறார். இயேசுவைப் போன்ற மனிதர்களுக்குக் கூட, இறப்பு என்பது கவலை அளிப்பதாக இருக்கிறது; அது அப்படித்தான் இருக்கும். அவர் கடவுளிடம், "நீங்கள் எனக்கு என்ன செய்கிறீர்கள்?" என்று அழுகிறார். அவர் இந்த சாதாரணம் படுக்கைவச வாழ்வைப் பற்றிக் கொள்ள விரும்புகிறார். அவர் இந்த வாழ்க்கையைப் பற்றிக் கொள்ள விரும்புகிறார். இயேசு போன்ற மனிதரேகூட இப்படி இருந்திருக்கிறார்கள்.

எனவே, உங்களைப் பற்றி நீங்கள் குற்ற உணர்வு கொள்ளாதீர்கள். நீங்களும்கூட பற்றுக் கொள்ள விரும்புவீர்கள். இது தான் இயேசுவிற்குள் உள்ள மனிதம். மேலும், அவர் புத்தரைவிட, மகாவீரரரைவிடவும் அதிக மனிதம் நிறைந்தவர். இது தான் மனிதத் தன்மை. மனிதன் மரணத்தை எதிர்கொள்ளும் போது, அவன் கலக்கமடைகிறான்; அவன் கதறி அழுகிறான். ஆனால், அவன் மீண்டும் திரும்பப் போவதில்லை, அவன் கீழ்நிலைக்கு விழுவதில்லை. ஆனால், இயேசு உடனடியாக, தான் என்ன கேட்கிறோம் என்பதை அறிந்து கொள்கிறார். அதன் பிறகு தான் அவர், "கடவுளே, உங்களது சித்தம் போல் ஆகட்டும்!" என்று கூறி சரணடைந்து ஒய்வாகிறார். உடனடியாக அந்த சக்கரம் திரும்பி விடுகிறது. அவர் இப்போது படுக்கைவச நகர்தலில் இல்லை, அவர் செங்குத்துவசத்தில் நுழைந்துவிட்டார்; ஆழத்தில் சென்றுவிட்டார். அங்கே அவர் ஆதியும் அந்தமும் அற்ற நிலையில் உயிர்த்தெழுந்தார்.

காலம், நேரம் என்பதில் நீங்கள் இறந்து போய்விடுங்கள். அப்போது தான் நீங்கள் காலத்தை வென்றவராக உயிர்த்தெழு முடியும். உங்களது மனம் என்பதில் மரணமடையுங்கள். அப்போது தான் நீங்கள் உங்களது தன்னுணர்வில் உயிர்துடிப்புடன் இருக்க முடியும். எண்ணங்களில் இறந்துபோய் விடுங்கள். அப்போது தான் நீங்கள் விழிப்புணர்வில் பிறப்பீர்கள்.

"நாம் விழித்திருக்கும் போது காண்பதெல்லாம் இறப்பு தான்," என்று ஹெராக் லிட்டஸ் கூறுகிறார். அதனால் தான் நாம் கனவுகளிலும், தூக்கத்திலும், வெறியூட்டுகின்றவற்றிலும், மயக்க மருந்துகளிலும், போதைப் பொருட்களிலும் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். அப்படியிருப்பதால், நாம் உண்மையை எதிர்கொள்ள வேண்டியதில்லை என்பதால், அப்படி இருக்கிறோம். ஆனால், உண்மையை எதிர் கொண்டாக வேண்டும். நீங்கள் அதை எதிர்கொண்டால், அந்த உண்மை சத்தியமாகிவிடுகிறது. நீங்கள் தப்பி ஓட நினைத்தால், நீங்கள் பொய்களில் வாழ்கிறீர்கள். நீங்கள் உண்மை நிலையை எதிர்கொண்டால், அந்த உண்மை உங்களுக்கு சத்யத்தின் வாசலாக ஆகிவிடுகிறது. அந்த உண்மை தான் மரணம். அதை எதிர்கொள்ள வேண்டும். மேலும், உண்மை என்பது வாழ்வாக, முடிவில்லாத வாழ்வாக, அபரிமிதமான வாழ்வாக, ஒருபோதும் முடிவே இல்லாத வாழ்வாக இருக்கும்.

## விழிப்புணர்வும், மையமும்

முதலில், விழிப்புணர்வு என்றால் என்ன என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். நீங்கள் நடந்து போய்க் கொண்டிருக்கிறீர்கள். அப்போது, நீங்கள் அநேக விஷயங்களை அறிகிறீர்கள் - அதாவது, கடைகள், உங்களைக் கடந்து செல்லும் மக்கள், அங்குள்ள போக்குவரத்து, இப்படி எல்லாவற்றையும் உணர்கிறீர்கள். நீங்கள் அநேக விஷயங்களை உணர்கிறீர்கள்; ஒரே ஒரு விஷயத்தை மட்டும் உணர்வதில்லை - அதுதான், உங்களைப் பற்றி. நீங்கள் தெருவில் நடந்து செல்லும் போது, அநேக விஷயங்களை உணர்கிறீர்கள். ஆனால், நீங்கள் உங்களை உணர்வதில்லை! தன்னைப் பற்றிய இந்த விழிப்புணர்வினை ஜார்ஜ் குர்ட்ஜியஃப் அவர்கள், தன்நினைவு (Self Remembering) என்று அழைக்கிறார். "இடைவிடாமல், நீங்கள் எங்கிருந்தாலும், உங்களை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்" என்று குர்ட்ஜியஃப் கூறுகிறார்.

நீங்கள் என்ன செய்தாலும், ஒரு விஷயத்தை மட்டும் இடைவிடாமல் உங்களுக்குள் செய்து கொண்டு வாருங்கள்; நீங்கள் தான்



அதைச் செய்கிறீர்கள் என்கின்ற விழிப்புணர்வுடன் இருங்கள். நீங்கள் சாப்பிடுகிறீர்கள் - உங்களைப் பற்றி விழிப்புணர்வுடன் இருங்கள். நீங்கள் நடந்து செல்கிறீர்கள் - அப்போது உங்களைப் பற்றி விழிப்புணர்வுடன் இருங்கள். நீங்கள் மற்றவர்கள் சொல்வதைக் கவனிக்கலாம், நீங்கள் பேசலாம் - எதுவாக இருந்தாலும், உங்களைப் பற்றி விழிப்புணர்வுடன் இருங்கள். நீங்கள் கோபப்படும் போது, நீங்கள் தான் கோபப்படுகிறீர்கள் என்று விழிப்புணர்வு கொள்ளுங்கள். இப்படி நீங்கள் இடைவிடாமல் உங்களைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பது, ஒரு கண்ணுக்குத் தெரியாத சக்தியை உங்களுக்குள் உருவாக்குகிறது. நீங்கள் கெட்டிப்படுத்தப்பட்ட ஒரு உயிராக இருக்க ஆரம்பித்து விடுகிறீர்கள்.

சாதாரணமாக, நீங்கள் ஒரு தொளதொள என்று இருக்கும் பை போல் இருக்கிறீர்கள். உங்களிடம் கெட்டித்தன்மை இல்லை, உங்களிடம் மையம் இல்லை - உண்மையில், வெறுமனே ஒரு திரவத்தன்மை, எந்தவிதமான மையமும் இல்லாமல், அநேகப் பொருட்கள் தனித்தனியாக இருப்பது போன்று இருக்கிறீர்கள். ஒரு கூட்டம், இடைவிடாமல் மாறிக் கொண்டும், இடம் பெயர்ந்து கொண்டும் உங்களுக்குள் உள்ளது. உங்களுக்குள் எஜமான் என்பவர் இல்லை. விழிப்புணர்வு தான் உங்களது எஜமான். நான் இதையெல்லாம் ஆக்கும் கட்டுப்படுத்துபவர் என்கிற அர்த்தத்தில் கூறவில்லை. நான் எஜமான் என்று கூறுவதற்கு, நீங்கள் வெறுமனே உங்களுக்குள் இருங்கள், தொடர்ந்து இடைவிடாது இருங்கள் என்கிற அர்த்தத்தில் தான் கூறுகிறேன். நீங்கள் எதைச் செய்தாலும் அல்லது செய்யாமல் சும்மா இருந்தாலும், உங்களது தன்னுணர்வில் நீங்கள் இருக்கிறீர்கள் என்கிற ஒரு விஷயம் மட்டும் இடைவிடாமல் இருக்க வேண்டும்.

ஒருவர் உள்ளே இருக்கிறார் என்கிற அந்த எளிய உணர்வு, ஒரு மையத்தை உருவாக்குகிறது. அது அசைவற்ற மையம், அமைதியின் மையம், அகத்தை வென்ற மையமாக இருக்கும். அது, உள்ளுக்குள் உள்ள சக்தி. நான் "உள்ளிருக்கும் சக்தி" என்று கூறும் போது, அதன் பொருளை அப்படியே எடுத்துக் கொள்ளுங்கள். அதனால் தான் புத்தர், "விழிப்புணர்வு என்னும் நெருப்பு" என்று பேசுகிறார். அது ஒரு நெருப்பு. நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்க ஆரம்பித்தால், நீங்கள் ஒரு புதிய சக்தியை உங்களுக்குள் உணர்வீர்கள். ஒரு புதிய நெருப்பை, ஒரு புதிய உயிரை உங்களுக்குள் உணர்வீர்கள். மேலும், இந்த புதிய உயிரினால், புதிய சக்தியினால், புதிய அதிகாரத்தினால், உங்கள் மீது ஆதிக்கம் செலுத்தி வந்த அநேக விஷயங்கள் வெறுமனே கரைந்து போய்விடும். நீங்கள் அவைகளோடு போராட வேண்டியதில்லை.

ஆனால், இப்போது நீங்கள் உங்களது கோபத்தோடு, உங்களது பேராசையோடு, உங்களது பாலுணர்வோடு போராட வேண்டியதுள்ளது. ஏனெனில், நீங்கள் பலவீனர்களாக இருக்கிறீர்கள். எனவே, உண்மையில் கோபம், பேராசை, பாலுணர்வு இவைகள் எல்லாம் பிரச்சனைகள் அல்ல; உங்களின் பலவீனம் தான் பிரச்சனை. நீங்கள் உங்களுக்குள் இருப்பதை - நான் இருக்கிறேன் - என்று உணர ஆரம்பித்துவிட்டால், உங்களது சக்திகள் எல்லாம் ஒரே புள்ளியை நோக்கி ஒருமுகப்படுகின்றன, கெட்டிப்படுகின்றன. மேலும், அப்போது உங்களுக்குள் ஒரு 'ஆன்மா' பிறக்கிறது. இது, நான் என்னும் தன்முனைப்பு அல்ல என்றும், ஆனால் இது ஆன்மா என்றும் நினைவில் கொள்ளுங்கள். நான் என்னும் தன் முனைப்பு என்பது ஆன்மாவின் பொய்யான உணர்வாகும். ஆன்மாவைப் பெறாமலேயே, நீங்கள் ஆன்மாவைப் பெற்றிருப்பதாக நம்பிக் கொண்டிருக் கிறீர்கள். அதுதான் ஆணவம், நான் என்னும் தன்முனைப்பு. ஆணவம் என்பது பொய்யான ஆன்மா - நீங்கள் ஆன்மாவாக ஆகவில்லை, என்றாலும்கூட, நீங்கள் ஒரு ஆன்மா என்று நம்பிக் கொண்டிருக்கிறீர்கள்.



**நான் என்னும் தன்முனைப்பு என்பது ஆன்மாவின் பொய்யான உணர்வாகும். ஆன்மாவைப் பெறாமலேயே, நீங்கள் ஆன்மாவைப் பெற்றிருப்பதாக நம்பிக் கொண்டிருக்கிறீர்கள். அதுதான் ஆணவம்**



சத்யத்தைத் தேடுபவரான மௌலிங்கப்புத்திரர் என்பவர் புத்தரிடம் வந்தார். புத்தர் அவரிடம், "நீங்கள் என்ன தேடிக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார்.

அதற்கு மௌலிங்கப்புத்திரர், "நான் எனது ஆன்மாவைத் தேடுகிறேன். எனக்கு உதவி செய்யுங்கள்!" என்றார்.

தான் சொல்வதையெல்லாம் செய்வேன் என்று ஒரு வாக்குறுதி அளிக்கும்படி மௌலிங்கபுத்திரரிடம் புத்தர் கேட்டார். அதைக் கேட்ட மௌலிங்கபுத்திரர் அழுதார். அவர் புத்தரிடம், "என்னால் எப்படி வாக்கு கொடுக்க முடியும்? நான் என்பவன் இன்னமும் இல்லையே, எப்படி என்னால் வாக்குறுதி அளிக்க முடியும்? நாளை நான் என்னவாக இருப்பேன் என்று எனக்கே தெரியாது; வாக்குறுதி அளிக்கக்கூடிய அந்த ஆன்மாவை நான் பெற்றிருக்கவில்லை. எனவே, நீங்கள் முடியாத ஒன்றை என்னிடம் கேட்காதீர்கள். நான் முயற்சி செய்கிறேன். அதிகபட்சம் நான் இதைத்தான் கூற முடியும். நீங்கள் எதைச் சொன்னாலும், அதை நான் செய்கிறேன் என்று என்னால் கூற முடியாது; ஏனெனில், அதைச் செய்வது யார்? வாக்குறுதி கொடுக்கின்றதையும், வாக்குறுதியை நிறைவேற்றுகின்றதுமாகிய அந்த ஒன்றினைத்தான் நான் தேடிக் கொண்டிருக்கிறேன். நான் இன்னும் அதைப் பெறவில்லை," என்றார்.



அதைக் கேட்ட புத்தர், "மௌலிங்கப்புத்ரா, உன்னிடம் இந்த பதிலைக் கேட்பதற்காகத் தான் நான் அந்தக் கேள்வியைக் கேட்டேன். நீ என்னிடம் வாக்குறுதி அளித்திருந்தால், நான் உன்னை திருப்பி அனுப்பி இருப்பேன். நீ என்னிடம், 'நான், நீங்கள் கூறுவதைச் செய்கிறேன் என்று வாக்குறுதி அளிக்கிறேன்,' என்று நீ கூறியிருந்தால், உண்மையிலேயே நீ ஆன்மாவைத் தேடுபவன் அல்ல என்பதை நான் அறிந்திருப்பேன். ஏனெனில், சாதகன் ஒருவன், எப்போதும் தான் இன்னும் அதை அடையவில்லை என்று அறிய வேண்டும். இல்லையெனில், தேடுதலின் நோக்கம் என்ன? நீ ஏற்கனவே அதுவாக இருந்தால், அதற்கு அவசியமே இல்லையே. நீ அதுவாக இல்லை! மேலும், ஒருவர் இதை உணர்ந்து கொண்டால், அதன்பிறகு அவரது ஆணவம் ஆவியாகிப் போய்விடும்," என்று பதில் கூறினார்.

நான் என்னும் ஆணவமானது, அங்கே இல்லாத ஏதோ ஒன்றினைப் பற்றிய தப்பான அபிப்பிராயம். 'ஆன்மா' என்றால், வாக்குறுதி அளிக்க முடிந்த ஒரு மையம் என்று அர்த்தம். இந்த மையமானது, நீங்கள் இடைவிடாது, தொடர்ந்து விழிப்புணர்வுடன் இருப்பதன் மூலமாகத் தான் உருவாக்கப்படுகிறது. ஏதோ ஒன்றினைச் செய்யும் போது, நீங்கள் விழிப்புணர்வுடன் இருங்கள். நீங்கள் உட்கார்ந்து கொண்டிருக்கலாம், இப்போது தூங்கப் போகலாம், அப்போது உங்களுக்கு தூக்கம் வரும், நீங்கள் தூங்கத்தில் விழலாம். இப்படி, ஒவ்வொரு நொடிப்பொழுதும் விழிப்புணர்வுடன் இருங்கள். அதன் பிறகு, உங்களுக்குள் ஒருமையம் பிறந்துவிட்டதை நீங்கள் உணர ஆரம்பிப்பீர்கள்; அப்போது விஷயங்கள் கெட்டியாக ஆகிவிடும். அங்கே ஒரு மையத்திலிருத்தல் ஏற்பட்டுவிடும். இப்போது, எல்லாமே அந்த மையத்தோடு தொடர்புடையதாக இருக்கும்.

ஆனால் இப்போதோ, நாம் மையங்கள் இல்லாமல் இருக்கிறோம். சில நேரங்களில் நாம் மையத்தில் இருப்பது போன்று உணர்கிறோம். ஆனால், அந்தத் தருணங்கள், ஏதாவது ஒரு சூழ்நிலை உங்களை விழிப்புணர்வு அடையச் செய்வதனால் உருவானதாக ஆகும். திடீரென்று ஏதாவது சூழ்நிலை, ஒரு ஆபத்தான சூழ்நிலை ஏற்பட்டால், நீங்கள் உங்களுக்குள் ஒரு மையத்தை உணர்வீர்கள். ஏனெனில், ஆபத்தில் நீங்கள் விழிப்புணர்வு பெறுவீர்கள். யாராவது ஒருவர்

உங்களைக் கொலை செய்ய வரும் போது, உங்களால் அந்த நொடிப்பொழுதில் எதையும் சிந்திக்க முடியாது. உங்களால் சுயநினைவு இல்லாமல் அந்தத் தருணத்தில் இருக்க முடியாது. உங்களது சக்தி முழுவதும் மையம் கொண்டுவிடும். மேலும், அந்தத் தருணம் திடமானதாக ஆகிவிடும். உங்களால் கடந்த காலத்திற்கும் நகர முடியாது, எதிர்காலத்திற்கும் செல்ல முடியாது. அந்த நொடிப்பொழுது தான் எல்லாமுமாக ஆகிவிடும். அதன்பிறகு, நீங்கள் உங்களை கொலை செய்ய வருபவனைப் பற்றி மட்டுமல்ல, உங்களைப் பற்றியும், அதாவது, கொலை செய்யப்படப் போகின்ற உங்களைப் பற்றியும் விழிப்புணர்வு கொள்வீர்கள்.

அதனால் தான், ஆபத்தான விளையாட்டுகளுக்கு மக்களிடம் அதிக ஆதரவு இருக்கிறது. எவரெஸ்ட் சிகரத்தில் உள்ள கௌரிசங்கரின் உச்சிக்குச் சென்று வந்த யாரையாவது கேட்டுப் பாருங்கள். முதல்முறையாக ஹிலாரி அதை அடைந்த போது, அவர் திடீரென்று அந்த மையத்தை உணர்ந்திருக்க வேண்டும். மேலும், முதன்முதலாக யாராவது நிலவில் காலடி எடுத்து வைத்தவுடன், திடீரென்று அந்த மையத்தைப் பற்றிய உணர்வு வந்திருக்க வேண்டும். அதனால் தான், ஆபத்தானவைகளுக்கு கவர்ச்சி உள்ளது. நீங்கள் காரை ஓட்டிக் கொண்டு போகிறீர்கள். அப்போது நீங்கள் வேகத்தை மேலும் மேலும் கூட்டிக் கொண்டே போகும் போது, அந்த வேகம் ஆபத்தானதாகிறது. அப்போது உங்களால் சிந்திக்க முடியாது. எண்ணங்கள் மறைந்து போகும். அப்போது நீங்கள் கனவு காண முடியாது. அப்போது நீங்கள் கற்பனையில் மிதக்க முடியாது. அப்போது நிகழ்காலம் என்பது திடமானதாக ஆகிவிடும். எந்த நேரத்திலும் மரணம் சாத்தியம் என்கிற அந்த ஆபத்தான நேரத்தில், திடீரென்று நீங்கள் உங்களுக்குள் உள்ள அந்த மையத்தை உணர்வீர்கள். இப்படி, ஆபத்தான சில வேளைகளில், நீங்கள் உங்களது மையத்தை உணர்வதால் தான், ஆபத்தானவை உங்களுக்கு கவர்ச்சியானதாகத் தெரிகிறது.

போர்கள் தொடர வேண்டும் என்று நீட்சே எங்கோ கூறியுள்ளார். ஏனெனில், போரில் மட்டுமே சில சமயம் உங்களது ஆன்மா உணரப்படுகிறது - ஒரு மையம் உணரப்படுகிறது - ஏனெனில், போர் என்பது ஆபத்தானது. மேலும், மரணம் என்பது உண்மையாக ஆகிவிட்டால், வாழ்க்கை தீவிரமானதாக ஆகிவிடுகிறது. மரணம் மிகவும் நெருங்கி வரும் போது, வாழ்க்கை தீவிரமாக ஆகிவிடுவதால், நீங்கள் மையத்தில் இருப்பீர்கள். நீங்கள் உங்களைப் பற்றிய விழிப்புணர்வுடன் இருக்கின்ற எந்தத் தருணமும், அங்கே மையத்திலிருத்தல் ஏற்படுகிறது. ஆனால், அது ஏதாவது ஒரு



சூழ்நிலையால் உருவானதாக இருக்குமென்றால், அதன்பின்னர் அந்தச் சூழ்நிலை முடிந்தவுடன், அது மறைந்து போய்விடும்.

அது, வெறுமனே ஏதோ ஒரு சூழ்நிலையால் உருவானதாக மட்டுமே இருக்கக் கூடாது. அது உங்களுக்குள் உள்ளதாக இருக்க வேண்டும். ஆகவே, ஒவ்வொரு சாதாரண காரியத்திலும் விழிப்புணர்வுடன் இருப்பதற்கு முயற்சி செய்யுங்கள். உங்களது நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருக்கும் போதுகூட, இதை முயற்சி செய்து பாருங்கள் - அப்போது அந்த உட்கார்ந்திருப்பவரைப் பற்றி விழிப்புடன் இருங்கள். நீங்கள் உட்கார்ந்திருக்கும் நாற்காலியைப் பற்றி மட்டுமல்ல, உட்கார்ந்திருக்கும் அறையைப் பற்றி மட்டுமல்ல, சுற்றிலும் உள்ள வெளியைப் பற்றி மட்டுமல்ல, உட்கார்ந்து கொண்டிருக்கும் உங்களைப் பற்றியும் விழிப்புணர்வுடன் இருங்கள். உங்களது கண்களை மூடிக் கொண்டு உங்களை உணருங்கள்; உங்களுக்குள் ஆழமாகத் தோண்டி உங்களை உணர்ந்து பாருங்கள்.

ஈகன் ஹெரிக்கல் என்பவர், ஒரு ஜென் குருவிடம் கற்று வந்தார். மூன்று வருடங்களாக அவர் வில் வித்தை கற்று வந்தார். ஆனால், அந்த குருவோ எப்போது பார்த்தாலும், "நீ செய்வது நன்றாகத் தான் உள்ளது. ஆனால், இது போதாது," என்பார். ஹெரிக்கல் இப்போது ஒரு வில் வித்தைக்காரராக ஆகிவிட்டார். அவரது குறி, நூறு சதவீதம் சரியாக இருந்தது; என்றாலும்கூட, அந்த குரு, "நீ நன்றாகத் தான் செய்கிறாய். ஆனால், இது போதாது," என்று கூறுவார்.

அதைக் கேட்ட ஹெரிக்கல், "இப்படி நூறு சதவீதம் குறி தவறாமல் அம்பு எய்தாலும் போதாதா? அப்படியானால், உங்களது எதிர்பார்ப்பு தான் என்ன? நான் எப்படி இன்னும் முன்னேற முடியும்? நூறு சதவீத துல்லியத்தைவிடவும், நீங்கள் இதற்கு மேல் என்ன எதிர்பார்க்கிறீர்கள்?" என்று கேட்டார்.

அதற்கு அந்த ஜென் குரு, "எனக்கு உனது வில் வித்தையைப் பற்றியும், உனது குறி பார்க்கும் திறனைப் பற்றியும் கவலை இல்லை. எனது கவலை, உன்னைப் பற்றி தான். நீ முழு தொழில்நுட்ப கலைஞர் ஆகிவிட்டாய். ஆனால், உனது வில்லை விட்டு உனது அம்பு வெளியே செல்லும் போது, நீ உன்னைப் பற்றிய விழிப்புணர்வுடன் இல்லை. இது உபயோகமற்றது! அம்பானது குறியைச் சென்றடைவதைப் பற்றி எனக்கு கவலை இல்லை. எனக்கு உன்மீது தான் அக்கறை! உனது வில்லில் இருந்து அம்பு புறப்படும் போது, உனக்குள்ளும் உனது தன்னுணர்வானது அம்பாக வேண்டும். வெளியில் நீ உனது குறியை தவறவிட்டாலும் கூட பரவாயில்லை. ஆனால், நீ உனக்குள் உள்ள அந்த இலக்கினை தவறவிடக் கூடாது. ஆனால், இப்போது நீ அதை

தவறவிட்டு விடுகிறாய். நீ ஒரு தேர்ச்சி பெற்ற தொழில்நுட்ப கலைஞன் ஆகிவிட்டாய். ஆனால், நீ செய்வதெல்லாம் மற்றவர்களைப் பார்த்து அதே போல் செய்வதாகும்," என்று கூறினார். ஆனால், மேலைநாட்டு மனதை அல்லது உண்மையில் நவீனகால மனதை உடையவருக்கு இதைப் புரிந்து கொள்வது மிகவும் கடினமாக இருந்தது. இது முட்டாள்தனம் போலத் தெரிந்தது. குறி பார்த்து அம்புவிடுவது தான் வில் வித்தையின் திறமையாகும்.

கொஞ்சம் கொஞ்சமாக ஹெரிக்கல் ஏமாற்றம் அடைந்தார். எனவே, ஒருநாள் அவர் வந்து, "நான் சென்று வருகிறேன். இது என்னால் முடியாது! இது சாத்தியப்படாது! நீங்கள் ஏதாவது ஒன்றை குறி பார்க்கும் போது, உங்களது விழிப்புணர்வு உங்களது குறியை நோக்கித் தான் செல்லும். அந்தப் பொருளை நோக்கித் தான் செல்லும். மேலும், நீங்கள் ஒரு வெற்றிகரமான வில் வித்தைக்காரர் ஆக இருந்தால், நீங்கள் உங்களை மறந்துவிட வேண்டும். நீங்கள் இலக்கை மட்டுமே நினைக்க வேண்டும், மற்றவற்றை மறந்துவிட வேண்டும். இலக்கு மட்டுமே அங்கு இருக்க வேண்டும்," என்றார். ஆனால், அந்த ஜென் குருவோ, ஹெரிக்கலிடம் மீண்டும் அவர் தனக்குள் மற்றொரு இலக்கினை உருவாக்கும்படி தொடர்ந்து நிர்பந்தித்தார். அந்த அம்பானது இருமுனை கொண்டதாக இருக்க வேண்டும். ஒருமுனை, வெளியில் உள்ள இலக்கினை குறி பார்த்துக் கொண்டும்; மறுமுனை, இடைவிடாமல் உங்களுக்கு உள்ளே உள்ள இலக்கினை, அதாவது, ஆன்மாவை குறி பார்த்து இருக்க வேண்டும்.

"இப்போது நான் போகிறேன். எனக்கு இது சாத்தியப்படாது போல் தெரிகிறது. உங்களது நிபந்தனைகளை என்னால் நிறைவேற்ற முடியாது," என்று கூறினார். எனவே, புறப்படுகின்ற அந்த நாளில், அவர் வெறுமனே உட்கார்ந்து கொண்டிருந்தார். அவர், குருநாதரிடம் விடைபெற்று செல்ல வந்திருந்தார். அப்போது அந்த குரு, வேறு ஒரு இலக்கினை குறி பார்த்துக் கொண்டிருந்தார். வேறு யாரோ ஒருவர் கற்றுக் கொண்டிருந்தார். முதல்முறையாக ஹெரிக்கல் அதில் ஈடுபாடு இல்லாமல் இருந்தார். அவர் விடைபெறுவதற்காகவே வந்திருந்தார். அவர் அங்கே உட்கார்ந்து கொண்டிருந்தார். குரு, தான் கற்றுக் கொடுப்பதை நிறுத்தியவுடன், ஹெரிக்கல் அவரிடம் கூறிவிட்டு விடை பெறலாம் என்று இருந்தார்.

ஆனால், அப்போது திடீரென்று அவர் அந்த குருவையும், அவரது இருமுனை கொண்ட தன்னுணர்வையும் கண்டு கொண்டார். அப்போது, குரு குறிபார்த்துக் கொண்டிருந்தார். மூன்று ஆண்டுகளாக ஹெரிக்கல் இதே குருவுடன் கூட இருந்தார். ஆனால், அப்போதெல்லாம் அவர்



தனது சொந்த முயற்சி பற்றித் தான் அக்கறை கொண்டிருந்தார். அவர் ஒருபோதும் இந்த குருவைப் பார்த்தது இல்லை; இந்த குரு என்ன செய்கிறார் என்று பார்த்தது இல்லை. முதல்முறையாக அவர் அப்போது பார்த்து அதை உணர்ந்தார். அப்போது தானாகவே, திடீரென்று அவரிடமிருந்து வில்லை வாங்கினார், இலக்கினை குறி பார்த்தார், அதன்பின்னர் அம்பை விட்டார். அப்போது அந்த குரு, "சரி, முதல் முறையாக நீ அதைச் செய்துவிட்டாய், நான் மிகவும் சந்தோஷ மடைகிறேன்," என்றார்.

ஹெரிக்கல் செய்தது என்ன? முதல்முறையாக, அவர் தனக்குள் மையம் கொண்டிருந்தார். அவரது இலக்கும் இருந்தது, ஆனால் கூடவே அவரும் இருந்தார் - அவரும் ஆஜராகி இருந்தார்.

எனவே, நீங்கள் எதைச் செய்தாலும் - என்னவாக இருந்தாலும், அது வில்வித்தையாகத் தான் இருக்க வேண்டும் என்கிற அவசியம் இல்லை - நீங்கள் எதைச் செய்தாலும், வெறுமனே உட்கார்ந்து கொண்டிருந்தாலும்கூட, அப்போது இருமுனை அம்பாக இருங்கள். வெளியில் என்ன நடக்கிறது என்பதையும் நினைவில் கொள்ளுங்கள். மேலும் அதோடுகூட, உங்களுக்குள் இருப்பவர் யார் என்பதையும் நினைவில் கொள்ளுங்கள்.

லின்-சீ, ஒருநாள் காலையில் சொற்பொழிவாற்றிக் கொண்டிருக்கும் போது, திடீரென்று யாரோ ஒருவர், "எனக்கு ஒரே ஒரு கேள்விக்கு மட்டும் பதில் அளியுங்கள் : நான் யார்?" என்று கேட்டார். லின்-சீ கீழே இறங்கி வந்து அந்த மனிதரை நோக்கிச் சென்றார். அந்த முழு அறையும் மிகவும் அமைதியானது. அவர் என்ன செய்யப் போகிறாரோ? இது ஒரு எளிய கேள்வி தான். இதற்கு, அவர் தனது இருக்கையில்இருந்தே பதில் அளித்திருக்கலாம். அவர் அந்த ஆளிடம் வந்தார். அந்த அறையே அமைதியாக இருந்தது. லின்-சீ, கேள்வி கேட்டவரின் முன்பு, அவரின் கண்களை பார்த்துக் கொண்டு நின்றார். அது ஒரு ஊடுருவிச் செல்கின்ற தருணமாக இருந்தது. எல்லாமே நின்றுவிட்டது. கேள்வி கேட்டவருக்கு வியர்த்துக் கொட்ட ஆரம்பித்தது. லின்-சீ அவரது கண்களை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். அப்போது லின்-சீ அவரிடம், "என்னிடம் கேட்காதே. உனக்குள் சென்று இந்த கேள்வியைக் கேட்பவன் யார் என்று கண்டுபிடி. உனது கண்களை மூடிக் கொள். 'நான் யார்?' என்று கேட்காதே. உனக்குள் சென்று, இந்தக் கேள்வியை கேட்பது யார் என்று கண்டுபிடி. உள்ளே உள்ள கேள்வி கேட்பவர் யார்? என்னை மறந்துவிடு. கேள்வியின் மூலத்தைக் கண்டுபிடி. உனக்குள் ஆழ்ந்து செல்!" என்றார்.

அப்போது அந்த மனிதன் கண்களை மூடிக் கொண்டு, அமைதியாகிவிட்டதாகவும், மேலும் திடீரென்று அவன் மெய்ஞானம் பெற்றவன் ஆகிவிட்டதாகவும் கூறப்படுகிறது. அவன் கண்களைத் திறந்தான், சிரித்தான், லின்-சீயின் காலைத் தொட்டு வணங்கினான். மேலும் அவரிடம், “நீங்கள் எனக்கு பதிலளித்துவிட்டீர்கள். நான் ஒவ்வொருவரிடமும் இந்தக் கேள்வியைக் கேட்டு வந்தேன். அப்போது எனக்கு அநேக பதில்கள் கொடுக்கப்பட்டன. ஆனால், எதுவும் அதற்கான பதிலாக நிரூபணம் ஆகவில்லை. ஆனால், இப்போது நீங்கள் எனக்கு பதிலளித்துவிட்டீர்கள்,” என்றான்.

“நான் யார்?” இதற்கு, யாரால் பதில் அளிக்க முடியும்? ஆனால், அந்தக் குறிப்பிட்ட சூழ்நிலையில் - கிட்டத்தட்ட ஆயிரம் பேர் அமைதியாக இருக்கும் போது, குண்டூசி விழும் சப்தம்கூட கேட்கும் அந்த அமைதியில் - லின்-சீ கீழே இறங்கி வந்து, தனது ஊடுருவும் கண்களால் அவனைப்பார்த்து, அதன்பிறகு அவனிடம், “உனது கண்களை மூடிக் கொள். உனக்குள் போ, போய், கேள்வி கேட்கும் அந்த நபர் யார் என்று கண்டுபிடி. நான் பதில் சொல்ல வேண்டும் என்று காத்திருக்காதே. கேள்வி கேட்டவர் யார் என்று கண்டுபிடி,” என்றார். அப்போது, அந்த மனிதனும் கண்களை மூடிக் கொண்டான். அந்தச் சூழ்நிலையில் நடந்தது என்ன? திடீரென்று அவன், அவனது மையத்திற்குச் சென்றுவிட்டான். திடீரென்று அவன் தனக்குள் உள்ள அந்த நடுப்பகுதி குறித்து விழிப்புணர்வு பெற்றுவிட்டான்.

இது, நீங்கள் கண்டுபிடிக்க வேண்டியது. மேலும், விழிப்புணர்வு என்பதற்கு இப்படி உங்களுக்குள் உள்ள அந்த நடுப்பகுதியை கண்டுபிடிப்பதற்கான வழிமுறை என்று அர்த்தம். நீங்கள் எந்த அளவுக்கு தன்னுணர்வு இல்லாமல் இருக்கிறீர்களோ, அந்த அளவுக்கு நீங்கள் உங்களிடமிருந்து மிகவும் அதிக தூரம் விலகி இருக்கிறீர்கள். அதே போன்று, நீங்கள் எந்த அளவுக்கு அதிக தன்னுணர்வுடன் இருக்கிறீர்களோ, அந்த அளவுக்கு நீங்கள் உங்களுக்கு மிகவும் நெருக்கமாக வருவீர்கள். உங்களது தன்னுணர்வு முழுமையாக ஆகிவிடும் போது, நீங்கள் உங்களது மையத்தில் இருப்பீர்கள். உங்களது தன்னுணர்வு குறைவாக இருந்தால், நீங்கள் வெளிவட்டப் பரப்பில் இருப்பீர்கள். நீங்கள் தன்னுணர்வு இல்லாமல் இருந்தால், நீங்கள் வெளிவட்டப் பரப்பில் இருப்பதால், அங்கே உங்களது மையம் முற்றிலுமாக மறக்கப்பட்டுவிடுகிறது. எனவே, இந்த இரண்டு வழிகளில் தான் நீங்கள் நகர்ந்து செல்வது சாத்தியமாகும்.

நீங்கள், வட்டத்துக்குள் வெளிப்பரப்பிற்கு நகர்ந்து செல்லலாம் - அதன்பிறகு, நீங்கள் தன்னுணர்வற்ற நிலைக்கு நகர்ந்து



செல்வதாகிவிடும். உட்கார்ந்து கொண்டு ஒரு திரைப்படத்தைப் பார்க்கும் போதும், எங்கோ உட்கார்ந்து கொண்டு இசையை கேட்டுக் கொண்டிருக்கும் போதும், நீங்கள் உங்களை மறந்து போக முடியும் - அப்போது நீங்கள், வட்டத்தின் வெளிப்பரப்பில் இருக்கிறீர்கள். அதே போன்று, பகவத்கீதை படிக்கும் போதும் அல்லது பைபிள் அல்லது குர்ஆன் படிக்கும் போதும், நீங்கள் உங்களை மறந்து போக முடியும் - அப்போது, நீங்கள் வட்டத்தில் வெளிப்பரப்பில் இருக்கிறீர்கள்.

நீங்கள் என்ன செய்தாலும், உங்களால் உங்களை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள முடியமெனில், அதன்பிறகு நீங்கள் மையத்தை நெருங்கி வருவீர்கள். அதன்பின்னர், ஒருநாள் திடீரென்று நீங்கள் அந்த மையத்தில் இருப்பீர்கள். அதன்பிறகு, உங்களுக்கு சக்தி வந்துவிடும். அந்த சக்தி தான் நெருப்பு. இந்த பிரபஞ்சம் முழுவதிலும், இந்த உயிர்கள் அனைத்திலும் அந்த சக்தியுடன், அந்த நெருப்புடன் தான் உள்ளது. நெருப்பு என்பது பழைய பெயர். இப்போது அவர்கள் அதை மின்சாரம் என்று அழைக்கின்றனர். மனிதன் அதை அநேக அநேக பெயர்களால் அடையாளம் இட்டு வந்திருக்கிறான். ஆனால், நெருப்பு என்பது சிறந்தது. மின்சாரம் என்றால் கொஞ்சம் உயிரற்றது போல் தெரிகிறது. ஆனால், நெருப்பு என்னும் போது, அது உயிர்த்துடிப்புள்ளதாகத் தெரிகிறது.

எனவே, நிறை மனதுடன் செயலாற்றுங்கள். இது ஒரு நீண்ட, கடினமான பயணம். மேலும், ஒரு சிறு நொடிப்பொழுது கூட விழிப்புணர்வுடன் இருப்பது கடினம். இந்த மனம் இடைவிடாது கண் சிமிட்டிக் கொண்டே இருக்கும். ஆனால், இது சாத்தியமில்லாத ஒன்று அல்ல. இது கடினமானது, இது சிரமமானது. ஆனால், இது சாத்தியமில்லாதது கிடையாது. இது சாத்தியமானது. நாம் ஒவ்வொருக்கும் இது சாத்தியப்படும். முயற்சி மட்டுமே தேவை; உள்ளம் நிறைந்த முயற்சி மட்டுமே தேவை. எதையும் விட்டு வைக்கக் கூடாது; உங்களுக்குள் எதுவும் தொடப்படாமல் விட்டு வைக்கக் கூடாது. விழிப்புணர்வுக்காக எல்லாவற்றையும் தியாகம் செய்ய வேண்டும். அதன்பிறகு மட்டுமே, அந்த உள் ஒளிச் சுடர் கண்டுபிடிக்கப்படும். அது அங்கே தான் உள்ளது.

இப்போது இருக்கின்ற மதங்களிலோ அல்லது இனிமேல் இருக்கப் போகின்ற மதங்களிலோ உள்ள முக்கியமான ஒற்றுமையை ஒருவன் தேடிச் சென்றால், அங்கே இந்த விழிப்புணர்வு என்கிற ஒரு சிறு வார்த்தை தான் கண்டு கொள்ளப்படும்.

இயேசு ஒரு கதை சொல்கிறார். ஒரு பெரிய வீட்டின் எஜமான் வெளியில் சென்றார். அப்போது அவர் தனது வேலைக்காரர்களிடம்,

தான் எந்த நேரத்திலும் திரும்பி வருவதால், அவர்கள் இடைவிடாது எப்போதும் உஷாராக விழித்திருக்கும்படி கூறிவிட்டுச் சென்றார். ஆகவே, ஒருநாளில் இருபத்தி நான்கு மணிநேரமும் அவர்கள் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டியதாயிற்று. எஜமான் எந்த வேளையிலும் வரலாம்! ஒரு குறிப்பிட்ட நேரமோ, குறிப்பிட்ட நாளோ, குறிப்பிட்ட தேதியோ கிடையாது. ஒரு குறிப்பிட்ட தேதி இருந்தால், அதன்பிறகு நீங்கள் அதுவரை தூங்கலாம்; அதன்பிறகு நீங்கள் என்னவெல்லாம் செய்ய விரும்புகிறீர்களோ, அதையெல்லாம் செய்துவிட்டு, எஜமான் வருகின்ற அந்த குறிப்பிட்ட நாளில் மட்டும் உஷாராக இருந்தால் போதும். ஆனால், இந்த எஜமானோ, "நான் எந்த நேரத்திலும் வருவேன். இரவும் பகலும் நீங்கள் என்னை வரவேற்பதற்கு விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும்," என்று கூறிவிட்டுப் போய்விட்டார்.



**விழிப்புணர்வு தான், ஒருவர் தனக்குள் மையத்தில்இருப்பதற்கான செயல் நுணுக்கம்; உள் நெருப்பை அடைவதற்கான செயல் நுணுக்கம். அது, உள்ளே தான் மறைந்து உள்ளது. அது, கண்டு கொள்ள முடியும்.**

வாழ்க்கையின் கதையும் இதுதான். நீங்கள் எதையும் ஒத்திப் போட முடியாது; எந்த நேரத்திலும் எஜமான் வரலாம். ஒருவர், இடைவிடாது விழிப்புடன் இருக்க வேண்டும். எந்த குறிப்பிட்ட தேதியும் இல்லை; அந்த திடீர் நிகழ்வு எப்போது நடக்கும் என்றும் ஒன்றுமே தெரியாது. எனவே, ஒருவர் ஒரே ஒரு காரியம் மட்டுமே செய்ய முடியும். அதுதான் விழித்துக் கொண்டு காத்திருப்பது.



விழிப்புணர்வு தான், ஒருவர் தனக்குள் மையத்தில்இருப்பதற்கான செயல் நுணுக்கம்; உள் நெருப்பை அடைவதற்கான செயல் நுணுக்கம். அது, உள்ளே தான் மறைந்து உள்ளது. அது, கண்டு கொள்ள முடியும். மேலும், அந்த மையத்தை, அந்த நெருப்பை நாம் கண்டு கொண்டால் மட்டுமே, நாம் கோவிலுக்குள் நுழைகின்ற தகுதி பெற்றவராக ஆகிவிடுவோம் - அது முன்பும் கிடையாது, ஒருபோதும் கிடையாது.

ஆனால், நாம் அடையாளக் குறியீடுகளின் மூலம் நம்மை ஏமாற்றிக் கொள்ள முடியும். அடையாளக் குறியீடுகள் நமக்கு ஆழ்ந்த உண்மைகளை காட்டுவதற்காக உள்ளன. ஆனால், நாம் அதை ஏமாற்று வித்தைகளாகப் பயன்படுத்த முடியும். நாம் ஊதுபத்தி கொளுத்தி வைக்கலாம், நாம் வெளியில் உள்ள பொருட்களை வணங்கலாம், அதன்பிறகு, நாம் ஏதோ செய்துவிட்டோம் என்று நீங்கள் உங்களை



சமாதானம் செய்து கொள்ளலாம். நாம் சமயநெறி இல்லாதவர்களாக இருந்து கொண்டே, சமயநெறி உள்ளவர்களாக உணர்ந்து கொண்டு போகலாம். இது தான் இப்போது நிகழ்ந்து கொண்டிருக்கிறது; இந்த பூமி இப்படித்தான் ஆகிவிட்டது. தங்களுக்குள் உள்ள அந்த அக நெருப்பை கண்டு கொள்ளாமலேயே, மக்கள் தாங்கள் வெறுமனே வெளி அடையாளக் குறியீடுகளை பின்பற்றுவதன் மூலம், தாங்கள் மிகவும் சமயநெறி மிக்கவர்களாக இருப்பதாக எண்ணிக் கொண்டிருக்கின்றார்கள்.

நீங்கள் தோல்வி அடைந்தாலும்கூட, முயற்சி செய்யுங்கள். நீங்கள் ஆரம்பத்தில் இருப்பீர்கள். நீங்கள் மீண்டும் மீண்டும் தோல்வி அடைவீர்கள்; ஆனால், உங்களது தோல்வியும்கூட உங்களுக்கு உதவ முடியும். நீங்கள் ஒரு சிறு நொடி கூட விழிப்புணர்வு இல்லாமல் தோற்றுப் போகும் போதும்கூட, நீங்கள் எந்த அளவிற்குத் தன்னுணர்வற்று இருக்கிறீர்கள் என்பதை அந்த நொடிப்பொழுதில் உணர முடியும்.

நீங்கள் தெருவில் நடந்து செல்லுங்கள். அப்போது, தன்னுணர்வு இல்லாமல் உங்களால் ஒருசில அடிகள் கூட நடந்து செல்ல முடியாது. மீண்டும் மீண்டும் நீங்கள் உங்களை மறந்துவிடுவீர்கள். ஒரு விளம்பரப் பலகையை படிக்கும் போது, நீங்கள் உங்களை மறந்துவிடுவீர்கள். யாராவது ஒருவர் உங்களைக் கடந்து செல்வார், நீங்கள் அவரைப் பார்ப்பீர்கள், அதன்பிறகு நீங்கள் உங்களை மறந்து விடுவீர்கள்.

உங்களது தோல்விகள், உங்களுக்கு உதவுபவை. நீங்கள் எந்த அளவுக்கு தன்னுணர்வற்று இருக்கிறீர்கள் என்பதை உங்களுக்கு அவைகள் காட்ட முடியும். மேலும், நீங்கள் தன்னுணர்வற்று இருக்கிறீர்கள் என்கின்ற அந்த ஒரு சிறு விழிப்புணர்வு பெற்றாலே போதும். அப்போது நீங்கள் கொஞ்சம் விழிப்புணர்வை சம்பாதித்ததாகிவிடும். ஒரு பைத்தியக்காரன், தான் ஒரு பைத்தியம் என்கிற விழிப்புணர்விற்கு வந்துவிட்டால், அவன் புத்தி சுவாதீனத்தின் பாதையில் செல்வதாகிவிடும்.



# நோய்கள் பல, மருந்து ஒன்று



நீங்கள், கடந்த காலத்தை இல்லாமல் செய்ய விரும்புகிறீர்கள். அதை எப்படி இல்லாமல் செய்வீர்கள்? கடந்த காலம் என்பது கட்டுக்கடங்காதது. கடந்த காலம் என்பதற்கு, ஒரு விஷயத்தின் எல்லா சக்தியும் தீர்ந்துவிட்டது என்று அர்த்தம்; அது உண்மையாக நடைபெற்றுவிட்டது. இப்போது, அதை சீரமைப்பதற்கு அதில் எந்த சக்தியும் இருக்காது. அதை இல்லாமல் செய்வதற்கோ அல்லது திரும்பவும் சரி செய்வதற்கோ எந்த சக்தியும் அங்கு இருக்காது.



கோபப்படாமல் இருப்பதற்கு நீங்கள் முயற்சி செய்து இருக்கிறீர்கள். நீங்கள் கோபப்படக் கூடாது என்று அநேக தடவை தீர்மானித்து இருக்கிறீர்கள். ஆனாலும்கூட, இன்னமும் அது நடந்து கொண்டு தான் இருக்கிறது. நீங்கள் பேராசைப்படாமல் இருக்க முயற்சி செய்கிறீர்கள். ஆனால், மீண்டும் மீண்டும் அந்தப் பொறியில் சிக்கிக் கொள்கிறீர்கள். நீங்கள் உங்களை மாற்றுவதற்கு எல்லாவிதமான காரியங்களையும் முயற்சித்துப் பார்த்து விட்டீர்கள். ஆனால், ஒருபோதும் எதுவும் நடக்கவில்லை. நீங்கள் அப்படியே தான் இருக்கிறீர்கள்.

ஆனால், இங்கே நான் அதற்கான எளிய திறவுகோலைப் பற்றி கூறுகிறேன் - அதுதான், விழிப்புணர்வு. உங்களால் இதை நம்ப முடியாது. வேறு ஒன்றும் நமக்கு உதவாத போது, இந்த விழிப்புணர்வு - அதுவும், வெறும் விழிப்புணர்வு மட்டும் - எப்படி நமக்கு உதவ முடியும்? சாவிகள் எப்போதும் மிகவும் சிறியதாகத் தான் இருக்கும். சாவிகள் பெரிய பொருட்கள் அல்ல. ஒரு பெரிய பூட்டினை ஒரு சிறிய சாவி திறந்தவிடும்.

மக்கள் புத்தரிடம், 'நாங்கள் கோபப்படாமல் இருப்பதற்கு என்ன செய்ய வேண்டும் என்றோ அல்லது நாங்கள் பேராசைப்படாமல் இருப்பதற்கு என்ன செய்ய வேண்டும் என்றோ அல்லது நாங்கள்



சாப்பாடு மற்றும் பாலுணர்வு ஆகியவற்றில் அதீத ஆசையுடன் இல்லாமல் இருப்பதற்கு என்ன செய்ய வேண்டும் என்றோ கேட்பதுண்டு. அதற்கு அவரது பதில், எப்போதும் ஒரே பதிலாகத் தான் இருந்தது : விழிப்புடன் இருங்கள். உங்களது வாழ்க்கையில் விழிப்புணர்வைக் கொண்டு வாருங்கள் என்பது தான் அது.

அவரது சீடரான ஆனந்தா, ஒவ்வொரு மக்களும் புத்தரிடம் கேட்பதைக் கேட்டுக் கொண்டிருந்தார். மக்கள், பலவிதமான பிரச்சனைகளைச் சொல்வார்கள். ஆனால், மருத்துவரின் மருந்துச்சீட்டு மட்டும் ஒன்று தான். இதைப் பார்த்து அவர் ஆச்சரியமடைந்தார். அவர் புத்தரிடம், "நீங்கள் என்ன காரியம் செய்கிறீர்கள்? அவர்கள் எல்லோரும் விதம்விதமான நோய்களோடு - சிலர் பேராசையைக் கொண்டு வருகிறார்கள், வேறு சிலர் சாப்பாட்டு பிரச்சனையைக் கொண்டு வருகிறார்கள், மேலும் சிலர் வேறு ஏதாவது பிரச்சனையைக் கொண்டு வருகிறார்கள் - ஆனால், இதற்கெல்லாம் நீங்கள் கொடுக்கும் மருந்துச்சீட்டு ஒன்றாகத் தான் இருக்கிறதே!" என்று கேட்டார்.

அதற்கு புத்தர், அவரிடம், "அவர்களது நோய்கள் வேறுபட்டவை - மக்கள் எப்படி வேறு வேறு கனவுகளைக் காண்கிறார்களோ, அதைப் போல நோய்களும் வேறுபட்டவை," என்றார்.

இங்கே, இரண்டாயிரம் மக்கள் தூங்கினால், அவர்கள் இரண்டாயிரம் கனவுகளைக் காண்பார்கள். ஆனால், நீங்கள் என்னிடம் வந்து, இந்தக் கனவுகளில் இருந்து விடுபடுவது எப்படி என்று கேட்டால், நான் கொடுக்கும் மருந்து ஒன்றாகத் தான் இருக்கும் : விழித்தெழுங்கள்! இது, ஆளுக்கு ஆள் வித்தியாசப்படாது. இந்த மருந்துச்சீட்டு ஒன்றாகத் தான் இருக்கும். நீங்கள் இதை விழிப்புணர்வு என்று அழைக்கலாம்; நீங்கள் இதை சாட்சிபாவனை என்று அழைக்கலாம்; நீங்கள் இதை நினைவில் வைத்தல் என்றும் அழைக்கலாம்; நீங்கள் இதை தியானம் என்றும் அழைக்கலாம். இவையெல்லாம், ஒரே மருந்திற்கான வேறு வேறு பெயர்கள்.

## ஆய்வாளனும், சாட்சியாளனும்

ஒரு பிரச்சனை குறித்த மேலைநாட்டு அணுகுமுறை என்னவென்றால், அந்தப் பிரச்சனையைப் பற்றி சிந்திப்பது; அந்தப் பிரச்சனைக்கான காரணங்களை கண்டுபிடிப்பது; அந்தப் பிரச்சனையின் சரித்திரத்தை தேடிப் போவது; பிரச்சனையின் கடந்த காலத்தைப் பற்றி சிந்திப்பது; ஆரம்பத்திலிருந்து அந்த பிரச்சனையை வேரோடு எடுத்துப் பார்ப்பது ஆகியவை ஆகும். மனதை சரி செய்வதற்கோ அல்லது மனதை பழையபடி கொண்டு வருவதற்கோ அல்லது உடலை பழைய

நிலைக்கு கொண்டு வருவதற்கோ, மூளையில் அது சம்பந்தமாகப் பதிவாகியுள்ள பதிவுகளை எல்லாம் வெளியே கொண்டு வருவது தான் மேலைநாட்டின் அணுகுமுறை. மனஇயல் ஆய்வு என்பது, உங்களது நினைவாற்றலுக்குள் சென்று அங்கே வேலை செய்கிறது. அது, உங்களது குழந்தைப் பருவத்திற்கு, உங்களது கடந்த காலத்திற்குள் அது பின்னோக்கிப் போகிறது. அந்தப் பிரச்சனை எங்கிருந்து எழுகிறது என்று அது பார்க்கிறது. அது, ஐம்பது வருடங்களுக்கு முன்பிருந்துகூட அது இருக்கலாம். நீங்கள் ஒரு குழந்தையாக இருந்த போது, உங்களது தாயாருடன் ஏற்பட்ட உறவில் ஏதாவது பிரச்சனை எழுந்திருக்கலாம். அப்படி என்றால், மன இயல் ஆய்வாளர்கள் மீண்டும் உங்களது குழந்தைப் பருவத்திற்கு திரும்பவும் செல்வார்கள்.

ஐம்பது ஆண்டு கால சரித்திரம்! இது, நீண்ட காலம் இருக்கக் கூடியதொரு காரியம். அதன்பிறகும் கூட, இதனால் உதவி கிடைக்காது. ஏனெனில், அங்கே பல லட்சம் பிரச்சனைகள் உள்ளன. ஒரே ஒரு பிரச்சனை தான் என்கிற கேள்விக்கே அங்கு இடமில்லை. நீங்கள் அந்த பிரச்சனையின் சரித்திரத்தைப் புரட்டலாம்; நீங்கள், உங்களது சுயசரிதைக்குள் புகுந்து அதற்கான காரணங்களை கண்டுபிடிக்கலாம். அப்போது, நீங்கள் ஒரே ஒரு பிரச்சனையை மட்டும் தீர்க்கலாம். ஆனால், உள்ளுக்குள் பல லட்சம் பிரச்சனைகள் உள்ளன. இந்த ஒரு பிறவியில் உள்ள ஒவ்வொரு பிரச்சனையையும் தீர்ப்பதற்கு நீங்கள் ஆரம்பித்தால், உங்களுக்கு இதைப் போன்று பல லட்சம் பிறவிகள் தேவைப்படும்! நான் மீண்டும் கூறுகிறேன் : இந்த ஒரு பிறவியின் பிரச்சனைகளைத் தீர்ப்பதற்கு, நீங்கள் மீண்டும் மீண்டும் பல லட்சம் தடவை பிறந்தாக வேண்டும். இது நடைமுறைக்கு சரிப்பட்டு வராது. இதைச் செய்ய முடியாது. மேலும், அந்த பல லட்சம் பிறவிகளிலும் நீங்கள் உங்களின் இந்தப் பிறவியின் பிரச்சனைகளை மட்டுமே தீர்க்க முடியும். நீங்கள் மறுபடியும் எடுத்த பல லட்சம் பிறவிகள், அதற்குள், அவைகளுக்கே சொந்தமான பிரச்சனைகளை உருவாக்கியிருக்கும். இப்படி இது போய்க் கொண்டே இருக்கும். நீங்கள் மீண்டும் மீண்டும் அதிக பிரச்சனைகளால் இழுத்துச் செல்லப்படுவீர்கள். இது முட்டாள்தனமானது!

இப்போது, இந்த மன இயல் ஆய்வு என்பது உங்களது உடல் மீதும் வந்துவிட்டது. ரோல்பிஸ், பயோ எனர்ஜிடிக், மேலும் பல முறைகள் உங்களது உடலில் பதிந்துள்ள பதிவுகளை நீங்குவதற்கு முயற்சிக்கின்றன. மீண்டும் நீங்கள் இந்த உடலின் சரித்திரத்திற்குள் போக வேண்டும். ஆனால், இந்த இரண்டு அணுகுமுறைகளிலும் ஒரே ஒரு விஷயம் மட்டும் தர்க்கரீதியாக, ஒரே மாதிரியாக வேலை செய்வது



மட்டும் தெளிவாகிறது. அதாவது, இந்தப் பிரச்சனைகள் கடந்த காலத்தில் இருந்து வருகின்றன என்பது தான் அது. எனவே, நாம் இதை கடந்த காலத்தில் இருந்து தான் சீர்செய்ய வேண்டும்.

மனிதனின் மனமானது, எப்போதும், சாத்தியப்படாத இரண்டு விஷயங்களை முயற்சி செய்து கொண்டு வந்திருக்கிறது. அதில் ஒன்று, கடந்த காலத்தைச் சீர்செய்வது - அதைச் செய்ய முடியாது. கடந்த காலம், நடந்து முடிந்துவிட்டது. உங்களால் உண்மையில் கடந்த காலத்திற்குள் போக முடியாது. நீங்கள் கடந்த காலத்திற்குள் செல்ல வேண்டுமென்றால், அதிகபட்சம், நீங்கள் உங்களது கடந்த கால நினைவாற்றலுக்குள் மட்டுமே செல்ல முடியும். அது, உண்மையான கடந்த காலம் ஆகாது. அது, வெறும் நினைவாற்றல் தான். கடந்த காலம் இப்போது இல்லை. எனவே, நீங்கள் அதை சீரமைக்க முடியாது. மனித இனத்தால் முடியாத லட்சியங்களில் இதுவும் ஒன்று. ஆனால், மனிதன் இதனால் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறான். நீங்கள், கடந்த காலத்தை இல்லாமல் செய்ய விரும்புகிறீர்கள். அதை எப்படி இல்லாமல் செய்வீர்கள்? கடந்த காலம் என்பது கட்டுக்கடங்காதது. கடந்த காலம் என்பதற்கு, ஒரு விஷயத்தின் எல்லா சக்தியும் தீர்ந்துவிட்டது என்று அர்த்தம்; அது உண்மையாக நடைபெற்றுவிட்டது. இப்போது, அதை சீரமைப்பதற்கு அதில் எந்த சக்தியும் இருக்காது. அதை இல்லாமல் செய்வதற்கோ அல்லது திரும்பவும் சரி செய்வதற்கோ எந்த சக்தியும் அங்கு இருக்காது. நீங்கள், கடந்த காலத்தோடு எதுவும் செய்ய இயலாது.

அடுத்ததாக, இந்த மனித மனத்தை எப்போதும் ஆதிக்கம் செலுத்துகின்ற, இரண்டாவது சாத்தியப்படாத கருத்து என்னவென்றால், ஒரு எதிர்காலத்தை ஏற்படுத்துவது தான் - மீண்டும், இதையும் செய்ய முடியாது. எதிர்காலம் என்பதே இன்னமும் வராதது என்று அர்த்தம்; நீங்கள் அதை ஏற்படுத்த முடியாது. இந்த இரண்டிற்கும் இடையில், மனிதன், சாத்தியப்படாத இந்த இரண்டையும் நினைத்துக் கொண்டு, இடையில் நிகழ்காலத்தில் நின்று கொண்டிருக்கிறான். எதிர்காலத்தைப் பற்றி, நாளையைப் பற்றி, எல்லாமே நிச்சயித்தபடி இருக்க வேண்டும் என்று விரும்புகிறான் - அதைச் செய்ய முடியாது. அதைச் செய்ய முடியாது என்பது, உங்களது உள்ளத்தில் எந்த அளவுக்கு ஆழத்தில் செல்ல முடியுமோ, அந்த அளவுக்கு ஆழ்ந்து செல்லட்டும். எதிர்காலத்தை நிச்சயம் ஆக்குவதற்காக, உங்களது நிகழ்காலத்தை வீணாக்காதீர்கள். எதிர்காலம் என்பது நிச்சயமில்லாதது; அதுதான் எதிர்காலத்தின் தன்மை. மேலும், பின்னால் திரும்பிப் பார்த்தும் உங்களது நேரத்தை வீணாக்காதீர்கள். கடந்த காலம், நடந்து முடிந்துவிட்டது. அது, இறந்து போன விஷயம். அதைக் குறித்து எதுவும்

செய்ய இயலாது. அதிகபட்சம் உங்களால் செய்யக்கூடியதெல்லாம், உங்களது கடந்த காலத்தை மீண்டும் நீங்கள் புதிதாக பொருள் விளக்கம் செய்து கொள்ளலாம். அவ்வளவு தான். அதைத்தான் மன இயல் ஆய்வுகள் செய்து வருகின்றன. அவைகள் புதிய பொருள் விளக்கங்களைக் கொடுத்து வருகின்றன. புதிதாக பொருள் விளக்கங்கள் கொடுக்க முடியும். ஆனால், கடந்த காலம் அப்படியே தான் இருக்கும்.

மன இயல் ஆய்வு மற்றும் ஜோதிடம், இதில் ஜோதிடம் என்பது எப்படியோ எதிர்காலத்தை நிச்சயமானதாக ஆக்குவதற்கு முயற்சிக்கிறது. அதே போன்று, மன இயல் ஆய்வு கடந்த காலத்தை மீண்டும் செயல்படுத்துவதற்கு முயற்சிக்கிறது. இதில், எதுவும் விஞ்ஞானம் கிடையாது. இரண்டு விஷயங்களும் சாத்தியமில்லாதவை; ஆனால், இரண்டையும் பின்பற்றுவதற்கு பல லட்சம் மக்கள் உள்ளனர்; ஏனெனில், மனிதன் அந்த வழியைத் தான் விரும்புகிறான். அவன், எதிர்காலத்தைப் பற்றி நிச்சயப்படுத்திக் கொள்வதற்கு ஜோதிடரிடம் செல்கிறான். அவன் ஐ-சிங் (I-Ching) என்பதில் ஆலோசனை செய்கிறான். அவன், டரோட் (Tarot) அட்டைகளை நாடிப்போகிறான். இப்படி, ஒருவன் தன்னை முட்டாள் ஆக்கிக் கொள்வதற்கு ஆயிரத்தோரு வழிகள் உள்ளன. மேலும், உங்களது கடந்த காலத்தை மாற்றிக் காட்டுகிறோம் என்று கூறுபவர்களும் இருக்கிறார்கள் - அவன், அவர்களிடமும் ஆலோசனை செய்கிறான்.

இந்த இரண்டு விஷயங்களும் விட்டொழித்து விடப்படும் போது, நீங்கள் எல்லாவிதமான முட்டாள்தனங்களில் இருந்தும் விடுதலை பெற்றுவிடுகிறீர்கள். அதன்பிறகு, நீங்கள் மன இயல் ஆய்வாளரிடம் செல்ல மாட்டீர்கள், ஜோதிடரிடமும் போக மாட்டீர்கள். அதன்பிறகு நீங்கள், உங்களது கடந்த காலம் முடிந்து போன விஷயம் என்று அறிந்து கொண்டு, நீங்களும் அதை அப்படியே விட்டுவிடுவீர்கள். மேலும், எதிர்காலம் என்பது இன்னமும் நடக்கவில்லை. அது நிகழும் போது நாம் பார்த்துக் கொள்ளலாம் - இப்போது அதைக் குறித்து எதுவும் செய்ய இயலாது என்று இருந்துவிடுவீர்கள். உண்மையில், இப்போது இந்த நொடிப்பொழுதில் மட்டுமே உள்ள இந்த நிகழ்காலத்தை உங்களால் அழிக்க மட்டுமே முடியும்.

மேலைநாடுகள், பிரச்சனைகளை ஆராய்ந்து கொண்டு, அதை தீர்ப்பது எப்படி என்று தான் தொடர்ந்து பார்த்து வந்துள்ளது. மேலைநாடுகள், பிரச்சனைகளை மிகவும் தீவிரமானதாக எடுத்துக் கொள்கின்றன. மேலும், நீங்கள் ஒரு குறிப்பிட்ட தர்க்கவாதத்திற்குள் கொடுக்கப்பட்ட எல்லைக்குள் சிந்திக்கும் போது, அந்த தர்க்கவாதம் முழுமையானதாகத் தான் தெரியும்.



நான் ஒரு சிறுகதை படித்தேன் :

ஒரு மிகப்பெரிய தத்துவவாதியும், உலகப் புகழ் பெற்ற கணித மேதையும் விமானத்தில் பயணம் செய்தனர். கணித மேதை, தனது இருக்கையில் அமர்ந்து கொண்டு, தனது மாபெரும் கணித சூத்திரங்களைப் பற்றி சிந்தித்துக் கொண்டிருந்தார். அப்போது, திடீரென்று விமானத்தின் தலைமை விமானியிடம் இருந்து ஒரு அறிவிப்பு வெளியானது : "மன்னிக்கவும், நீங்கள் போய் சேர்வதற்கு கொஞ்சம் தாமதமாகும். எஞ்சின் எண் ஒன்று வேலை செய்யவில்லை. எனவே, நாம் இப்போது மூன்று என்ஜின்களோடு பறந்து கொண்டிருக்கிறோம்," என்றார்.

அதன்பிறகு, பத்து நிமிடங்கள் கழித்து மற்றொரு அறிவிப்பு வந்தது : "இன்னும் அதிக நேரம் தாமதமாகும் என நான் அஞ்சுகிறேன். ஏனெனில், இப்போது எஞ்ஜின் எண் 2 மற்றும் இஞ்ஜின் எண் 3 ஆகியவையும் வேலை செய்யவில்லை. எனவே, எஞ்ஜின் எண் 4 மட்டுமே பாக்கியுள்ளது," என்றார்.

அதைக் கேட்ட தத்துவமேதை, தனக்கு அருகில் உட்கார்ந்திருந்த ஆளைப் பார்த்து, "நன்று நண்பரே, அந்த மீதியுள்ள எஞ்ஜினும் செயலற்றுப் போய்விட்டால், நாம் இரவு முழுவதும் மேலே தான் இருக்க வேண்டுமா?" என்று கேட்டார்.

நீங்கள், ஏதாவது ஒரு குறிப்பிட்ட போக்கில் சிந்தித்துக் கொண்டிருந்தால், அந்த சிந்தனை போகும் திசையே சில விஷயங்களைச் சாத்தியமாக்கிவிடும்; முட்டாள்தனமான விஷயங்களும் சாத்தியப்படும். நீங்கள், இந்த மனித இனத்தின் பிரச்சனையை தீவிரமாக எடுத்துக் கொண்டால், இந்த மனிதனே ஒரு பிரச்சனை தான் என்று நீங்கள் நினைக்க ஆரம்பித்தால், நீங்கள் சில வாக்குறுதிகளை ஏற்றுக் கொண்டு, உங்களது முதல் காலடியை தவறாக எடுத்து வைத்துவிடுவீர்கள். இப்போது நீங்கள் அந்தத் திசையிலேயே செல்வீர்கள். ஆனால், அதில் போய்க் கொண்டே தான் இருப்பீர்கள். இப்போது, மனம் சம்பந்தப்பட்ட விஷயங்களிலும், மன இயல் ஆய்வுகளிலும் லட்சக்கணக்கான கட்டுரைகளும், புத்தகங்களும் எழுதப்பட்டு, இந்த மனம் சம்பந்தப்பட்ட இலக்கியங்கள் அதிக அளவில் வந்துவிட்டன. பிராய்டு, ஒரு குறிப்பிட்ட தர்க்க சாஸ்திரத்தின் கதவுகளைத் திறந்துவிட்ட பிறகு, அது இந்த மனித இனத்தின் மீதே ஆதிக்கம் செலுத்த ஆரம்பித்துவிட்டது.

ஆனால் கீழை நாடுகள், முற்றிலும் வித்தியாசமானதொரு பார்வையைக் கொண்டுள்ளன. முதலில், அது எந்தப் பிரச்சனையையும் திவிரமானது அல்ல என்று கூறுகிறது. எந்தப் பிரச்சனையும் கவலை

தரக்கூடியது அல்ல என்று நீங்கள் சொல்கின்ற அந்த நொடிப்பொழுதே, அந்தப் பிரச்சனை கிட்டத்தட்ட 94 சதவீதம் உயிரற்றுப் போகிறது. அதைப் பற்றிய உங்களது முழு பார்வையும் மாறிவிடுகிறது. கீழைநாடுகள் கூறுகின்ற இரண்டாவது விஷயம் என்னவென்றால், நீங்கள் உங்களை அந்தப் பிரச்சனையோடு சம்பந்தப்படுத்துவதால், ஐக்கியப்படுத்துவதால் தான் அந்தப் பிரச்சனை அங்கே இருக்கிறது என்பது தான். அதற்கும், கடந்த காலத்திற்கும் சம்பந்தமில்லை. கடந்த கால சரித்திரத்திற்கும் அதற்கும் சம்பந்தம் கிடையாது. நீங்கள், உங்களை அதோடு ஐக்கியப்படுத்திவிட்டீர்கள் - அதுதான் உண்மையான விஷயம். மேலும், இதுதான் எல்லாப் பிரச்சனைகளையும் தீர்க்கின்ற திறவுகோல்.

உதாரணமாக, நீங்கள் ஒரு கோபக்கார மனிதர். நீங்கள் ஒரு மன இயல் ஆய்வாளரிடம் போனால், அவர், "உங்களது கடந்த காலத்திற்குச் செல்லுங்கள் ... .... இந்த கோபம் எழுந்தது எப்படி? எந்தவிதமான சூழ்நிலையில் அது மேலும் மேலும் கண்டிக்கப்பட்டு, உங்களது மனதில் பதிந்தது? நாங்கள் அந்தப் பதிவுகளை எல்லாம் கழுவிக் களைய வேண்டும்; அவைகளையெல்லாம் துடைத்தெறிய வேண்டும். நாங்கள் உங்களது கடந்த காலத்தை முற்றிலும் சுத்தம் செய்ய வேண்டும்," என்று கூறுவார்.

நீங்கள், ஒரு கீழைநாட்டு ஞானியிடம் சென்றால், அவர் உங்களிடம், "நீங்கள் தான் கோபத்திலிருப்பதாக நினைக்கிறீர்கள். நீங்கள் உங்களை கோபத்தோடு ஐக்கியப்படுத்தி உணர்கிறீர்கள் - அங்கு தான் விஷயங்கள் தவறாகச் செல்கின்றன. அடுத்த முறை கோபம் வரும் போது, நீங்கள் வெறுமனே ஒரு கவனிப்பாளனாக இருங்கள், நீங்கள் ஒரு சாட்சியாளனாக இருங்கள். அந்த கோபத்தோடு உங்களை ஐக்கியப்படுத்திக் கொள்ளாதீர்கள். 'நான் கோபத்தில் இருக்கிறேன்,' என்று கூறாதீர்கள். 'நான் கோபப்படுகிறேன்,' என்று கூறாதீர்கள். வெறுமனே அது ஒரு தொலைக்காட்சிப் பெட்டியின் திரையில் நடப்பது போல் நினைத்துக் கொண்டு, அதை வெறுமனே பாருங்கள். நீங்கள் வேறு யாரையாவது பார்ப்பது போல் உங்களையே பாருங்கள்," என்று கூறுவார்.

நீங்கள் என்பது சுத்தமான தன்னுணர்வு. உங்களைச் சுற்றிலும் கோபம் என்னும் மேகங்கள் சூழ்ந்து வரும் போது, அந்த மேகங்களை வெறுமனே கவனியுங்கள். நீங்கள் அதோடு ஐக்கியமாகிவிடாமல் இருப்பதற்கு மிகவும் உஷாராக இருங்கள். முழு விஷயமுமே, நீங்கள் எப்படி அந்த பிரச்சனையோடு ஒன்றிப் போகாமல் இருக்கிறீர்கள் என்பதில் தான் உள்ளது. ஒருமுறை நீங்கள் அதை கற்றுக்



கொண்டுவிட்டால் ... ... அதன்பிறகு, 'அநேகப் பிரச்சனைகள்' உள்ளன என்ற கேள்விக்கே இடமிருக்காது. ஏனெனில், இந்த திறவுகோல், இதே சாவி, எல்லாப் பூட்டுகளையும் திறக்கும். கோபத்தோடும் இப்படித்தான் இருக்க வேண்டும், பேராசை கொள்ளும் போதும் இப்படித் தான், பாலுணர்வு ஆசை கொள்ளும் போதும் இப்படித்தான் இருக்க வேண்டும். உங்களது மனதினால் என்னென்ன நடக்குமோ, அவற்றில் எல்லாம் இப்படி இருந்தால் போதும்.

வெறுமனே பிரச்சனையோடு உங்களை ஐக்கியப்படுத்திக் கொள்ளாமல் இருங்கள் என்று கீழை நாடுகள் கூறுகின்றன. குர்ட்ஜியஃப் அவர்கள் 'தன்னைத் தானே நினைவில் கொள்ளுதல்' என்று கூறும் போது இந்த அர்த்தத்தில் தான் கூறுகிறார். நீங்கள் ஒரு சாட்சியாளன் என்பதை நினைவில் கொள்ளுங்கள், கவனமுடன் இருங்கள் என்று புத்தர் கூறுகிறார். மேகம் ஒன்று உங்களைக் கடந்து செல்கிறது. எனவே, உஷாராக இருங்கள் - ஒருவேளை, அந்த மேகம் கடந்த காலத்தில் இருந்து வரலாம். ஆனால், அது அர்த்தமற்றது. அதற்கு என்று நிச்சயமாக ஒரு கடந்த காலம் இருக்கும். வெறுமனே வெட்டவெளியில் இருந்து அந்த கோபம் வர முடியாது. ஏதோ ஒரு சில குறிப்பிட்ட நிகழ்ச்சிகளின் தொடராக அது வரலாம் - ஆனால், அது சம்பந்தமில்லாதது. அதைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? இப்போது, இந்த நொடிப்பொழுதில் நீங்கள் அதிலிருந்து உங்களைப் பிரித்துக் கொண்டு தனியாக இருக்க முடியும். நீங்கள் அதிலிருந்து உங்களை துண்டித்துக் கொள்ள முடியும். இப்போது உங்களுக்கும், அந்த கோபத்திற்கும் இடையே உள்ள பாலத்தை உடைத்துவிட முடியும். மேலும், அந்தப் பாலத்தை இந்த நிகழ்காலத்தில், இப்போதைய பொழுதில் இருப்பதன் மூலம் மட்டுமே உடைக்க முடியும்.

கடந்த காலத்திற்குள் செல்வதால் எந்த உதவியும் கிடைக்காது. முப்பது வருடங்களுக்கு முன்பு, இந்தக் கோபம் உங்களுக்குள் எழுந்து, நீங்கள் அந்த நாளில் அதோடு உங்களை ஐக்கியப்படுத்தி இருக்கலாம். இப்போது உங்களால் அந்த கடந்த காலத்தோடு உங்களை ஐக்கியப்படுத்த முடியாது. அது இப்போது இங்கு இல்லை! ஆனால், இதற்கு மாறாக நீங்கள் இந்த நொடிப்பொழுதில், இருக்கின்ற இந்த நொடிப்பொழுதில் உங்களை அந்த கோபத்தோடு ஐக்கியப்படுத்திக் கொள்ளாமல் இருக்க முடியும். அதன் பிறகு, உங்களது கடந்த காலத்தில் உள்ள கோபங்களின் தொடர், இப்போது உங்களின் ஒரு பகுதியாக இருக்க முடியாது. நீங்கள் மீண்டும் பின்னோக்கி போய், உங்களது பெற்றோரும், உங்களது சமூகமும், மதகுருக்களும், திருச்சபைகளும் உங்களுக்கு என்னவெல்லாம் செய்துள்ளார்களோ, அதையெல்லாம்

நீங்கள் களைய வேண்டியதிருக்காது. அது, உங்களது விலை மதிப்பற்ற நிகழ்கால நேரத்தை வீணாக்குவதாகும். முதலில், அது அநேக வருடங்களை அழித்தது. மீண்டும், மறுபடியும் இப்போது அது உங்களது நிகழ்கால தருணங்களையும் அழிக்கும். நீங்கள் அதிலிருந்து வெறுமனே விட்டு விலக முடியும்; ஒரு பாம்பு, தனது பழைய தோலில் இருந்து சுலபமாக தன்னை விடுவித்துக் கொள்வது போல் விடுவித்துக் கொள்ள முடியும்.



**கடந்த காலங்களும், அதில் ஏற்பட்ட கட்டுப்பாடுகளும் இருக்கின்றன. ஆனால் அவைகள், ஒன்று, இந்த உடலில் இருக்க வேண்டும். அல்லது, மூளையில் இருக்க வேண்டும். அவைகள், உங்களது தன்னுணர்வில் இருப்பதில்லை. ஏனெனில், உங்களது தன்னுணர்வை நிபந்தனைக்குட்படுத்த முடியாது. உங்களது தன்னுணர்வு சுதந்திரமானது. சுதந்திரம் என்பது தான் அதன் உள்ளுறையும் தன்மை; சுதந்திரம் என்பது தான் அதன் இயல்பு.**



கடந்த காலங்களும், அதில் ஏற்பட்ட கட்டுப்பாடுகளும் இருக்கின்றன. ஆனால் அவைகள், ஒன்று, இந்த உடலில் இருக்க வேண்டும். அல்லது, மூளையில் இருக்க வேண்டும். அவைகள், உங்களது தன்னுணர்வில் இருப்பதில்லை. ஏனெனில், உங்களது தன்னுணர்வை நிபந்தனைக்குட்படுத்த முடியாது. உங்களது தன்னுணர்வு சுதந்திரமானது. சுதந்திரம் என்பது தான் அதன் உள்ளுறையும் தன்மை; சுதந்திரம் என்பது தான் அதன் இயல்பு. நீங்களே பார்க்க முடியும் - அநேக வருடங்களாக நீங்கள் அடக்கி வைத்தவை, அநேக வருடங்களாக உங்களுக்கு அளிக்கப்பட்ட ஒரு குறிப்பிட்ட விதமான கல்வி ஆகியவை உள்ளன. இந்த நொடிப்பொழுதில் நீங்கள் அவற்றைப் பார்க்கும் போது, இந்த தன்னுணர்வானது அதோடு ஒருபோதும் ஐக்கியமாகாது. அப்படி இல்லையென்றால், இதையெல்லாம் கவனத்தில் வைத்திருப்பது யார்? உண்மையிலேயே நீங்கள் அடக்கி வைத்திருந்தால், அதன் பிறகு அதைப் பற்றி விழிப்புணர்வு கொள்வது யார்? அப்படியிருந்திருந்தால், நீங்கள் அதைப் பற்றிய விழிப்புணர்வுடன் இப்போது இருப்பது சாத்தியமாகாது.

இப்போது நீங்கள், "முட்டாள்தனமான கல்வி முறையில் நான் இருபத்தியோரு வருடங்களைக் கழித்துவிட்டேன்," என்று கூறும்போது, ஒரே ஒரு விஷயம் மட்டும் நிச்சயமாகிறது. அதாவது, நீங்கள்



இன்னமும் முட்டாள் ஆகவில்லை என்பது தான் அது. அந்த செயல்முறை தோற்றுப் போய்விட்டது; அது வேலை செய்யவில்லை. நீங்கள் முட்டாள் அல்ல. எனவே தான், அந்த கல்வி முறை முழுவதையும் முட்டாள்தனமானதாக இப்போது உங்களால் பார்க்க முடிகிறது. ஒரு பைத்தியக்காரன், தன்னை ஒரு பைத்தியக்காரனாகப் பார்க்க முடியாது. புத்திசுவாதீனமான மனிதன் தான் இந்த பைத்தியக்காரத்தனத்தைப் பார்க்க முடியும். பைத்தியக்காரத்தனத்தை பைத்தியக்காரத்தனமாகப் பார்ப்பதற்கு புத்தி சுவாதீனமே தேவை. இருபத்தியோரு ஆண்டுகள் நடந்த அந்த முட்டாள்தனமான கல்விமுறை, இப்போது தோற்றுப் போய்விட்டது. அப்போது நடந்த எல்லா அடக்குமுறை கண்டிப்புகளும் தோற்றுப் போய்விட்டன. அதனால் வெற்றி பெற முடியாது. நீங்கள் எந்த அளவுக்கு அதோடு உங்களை ஐக்கியப்படுத்திக் கொள்கிறீர்களோ, அதே அளவுக்கு வேண்டுமானால் அது வெற்றி பெறலாம். எந்த நேரத்திலும் நீங்கள் அதை விட்டுவிட்டு தனியாக நிற்க முடியும். ஆனால், அது அங்கேயே தான் இருக்கும். அது அங்கு இருக்காது என்று நான் கூறவில்லை. ஆனால், அது ஒருபோதும் உங்களது தன்னுணர்வின் ஒரு பகுதியாக இருக்காது.

இது தான் தன்னுணர்வின் அழகு. தன்னுணர்வு என்பது எதிலிருந்து நழுவிச் செல்ல முடியும். அதற்கு தடைகள் ஏதும் இல்லை; அதற்கு எல்லைகள் ஏதும் இல்லை. கொஞ்ச நேரத்திற்கு முன்புவரை நீங்கள் ஒரு இங்கிலீஸ்காரராக இருந்திருக்கலாம் - ஆனால், தேசீயம் என்கிற அந்த முட்டாள்தனத்தை நீங்கள் புரிந்து கொண்ட அந்த நொடிக்கு இரண்டாவது நொடியிலேயே நீங்கள் ஒரு இங்கிலீஸ்காரர் அல்ல. அதற்காக, உங்களது வெள்ளைத்தோல் மாறிவிடும் என்று நான் கூறவில்லை. அது அப்படியே வெள்ளையாகத் தான் இருக்கும். ஆனால் நீங்கள், அதன்பிறகு ஒருபோதும் உங்களது வெள்ளைத்தோலோடு உங்களை ஐக்கியப்படுத்திக் கொள்வதில்லை. நீங்கள் அதன்பிறகு ஒருபோதும் கறுப்பர்களுக்கு எதிராக இருக்க மாட்டீர்கள். நீங்கள், அதிலுள்ள முட்டாள்தனத்தை கண்டு கொண்டுவிட்டீர்கள். நீங்கள் அதைக் கண்டு கொண்டதால், அதன்பிறகு நீங்கள் ஒரு இங்கிலீஸ்காரராக இருக்க மாட்டீர்கள் என்று நான் கூறவில்லை. நீங்கள் ஆங்கிலத்தை மறந்துவிடுவீர்கள் என்று நான் கூறவில்லை. அப்படி கிடையாது. அது இன்னமும் உங்களது நினைவில் அங்கு தான் இருக்கும். ஆனால், உங்களது தன்னுணர்வு அதிலிருந்து நழுவி வெளியே வந்துவிட்டது. இப்போது, உங்களது தன்னுணர்வு ஒரு மலையின் உச்சியில் நின்று கொண்டு பார்க்கிறது. அந்த இங்கிலீஸ்காரன் பள்ளத்தாக்கில் இறந்து போய்விட்டான். அவனை உங்களது

தன்னுணர்வானது மலையின் உச்சியில் இருந்து கொண்டு, தொலைதூரத்தில் இருந்து கொண்டு, அதோடு நட்புக் கொள்ளாமல், அதனால் தொடப்படாமல் பார்க்கிறது.

எனவே, இந்த கீழைநாடுகளின் செயல்முறைகளை எல்லாம், ஒரே ஒரு வார்த்தையில் அடக்கிவிடலாம் : அதுதான் சாட்சியாய் இருத்தல். மேலும், உங்களது மேலைநாட்டின் செயல்முறைகளையெல்லாம் கூட ஒரே வார்த்தையில் அடக்கிவிடலாம் : அதுதான், பிரித்து ஆராய்தல். பிரித்து ஆராயும் போது, நீங்கள் சுற்றிச் சுற்றி வருகிறீர்கள். சாட்சியாக இருப்பதில், நீங்கள் வெறுமனே அந்த வட்டத்தை விட்டு வெளியேறி விடுகிறீர்கள்.

பிரித்து ஆராய்வது என்பது, சுற்றிச் சுற்றி வருகின்ற வட்டப்பாதை. நீங்கள் எதையும் உண்மையில் பிரித்து ஆராய்ந்தால், நீங்கள் ஆச்சரியமடைவீர்கள் - இது எப்படி நிகழ்ந்தது? என்று ஆச்சரியமடைவீர்கள். உதாரணமாக, நீங்கள் உங்களது கடந்த காலத்திற்குள் செல்ல முயற்சிக்கிறீர்கள் என்று வைத்துக் கொள்வோம். நீங்கள் எதில் முடிப்பீர்கள்? சரியாக எதில் முடிப்பீர்கள்? நீங்கள் கடந்த காலத்திற்குள் சென்று பார்த்தால், உங்களது பாலியல் உணர்வு எங்கு ஆரம்பிக்கிறது? நீங்கள் பதினான்கு வயதாக இருக்கும் போதா? அப்படியானால், அது ஏதோ ஆகாயத்திலிருந்து திடீரென்று வந்ததா? அது உங்களது உடலுக்குள் தான் தயாராகி இருக்க வேண்டும். அப்படியானால், அது எப்போது? நீங்கள் பிறந்த போதா? அப்படியானால், நீங்கள் உங்களது தாயின் கர்ப்பத்தில் இருக்கும் போது, அது தன்னை தயார்படுத்திக் கொள்ளவில்லையா? அதன் பிறகு எப்போது, உங்களது தாயார் கருவுற்ற போதா? ஆனால், அதற்கு முன்பு உங்களது பாலியல் உணர்வில் பாதி, உங்களது தாயாரின் கருமுட்டையில் முதிர்ச்சி பெற்றது; மீதிப் பாதி உங்களது தந்தையின் விந்தணுவில் முதிர்ச்சி பெற்றது. இப்போது, இப்படியே ஆராய்ந்து கொண்டே செல்லுங்கள். நீங்கள் எங்கு நிறுத்துவீர்கள்? கடைசியாக, நீங்கள் ஆதாம், ஏவாளில் தான் நிறுத்த வேண்டும்! மேலும், அதுவும்கூட முடிவாகிவிடாது. நீங்கள் உங்களது தந்தையாக கடவுளிடம் போக வேண்டும். அவர் ஏன் முதலில் ஆதாமைப் படைத்தார்?

பிரித்து ஆராய்வது என்பது, எப்போதும் அரைகுறையாகத் தான் இருக்கும். ஆகவே உண்மையில், பகுத்தாராய்வது யாருக்கும் ஒருபோதும் உதவாது. ஆதனால், உதவ முடியாது. அது வேண்டுமானால் உங்களை உண்மைக்கு கொஞ்சம் அருகில் சமாளித்து கொண்டு செல்லலாம், அவ்வளவு தான். அது ஒருவிதமான சமாளிப்பு தான். அது உங்களது பிரச்சனைகளைப் பற்றி நீங்கள் கொஞ்ச அளவு



புரிந்து கொள்வதற்கு உங்களுக்கு உதவும். அவைகளின் தொடக்கம், அவைகள் எப்படி எழுகின்றன என்பது போன்றவற்றைத் தான் புரிந்து கொள்ள முடியும். மேலும், அப்படி நீங்கள் புரிந்து கொண்ட கொஞ்சநஞ்ச அறிவானது, இந்த சமுதாயத்தோடு நீங்கள் சமாளித்துக் கொண்டு போவதற்கு வேண்டுமானால் உதவலாம். ஆனால், நீங்கள் அதே மனிதராகத் தான் இருப்பீர்கள். அதனால், உங்களிடம் எந்த மாற்றமும் ஏற்படாது; அதனால் எந்தவிதமான ஒட்டுமொத்த மாற்றமும் ஏற்படாது.

சாட்சியாய் இருப்பது என்பது ஒரு எழுச்சி. அது, வேர்களில் இருந்து வரும் ஒட்டுமொத்த மாற்றமாகும். அது ஒரு முற்றிலும் புதிய மனிதனை இருப்பிற்கு கொண்டுவரும். ஏனெனில், உங்களது கண்டிப்புகளை எல்லாம் விட்டுவிட்டு, உங்களது தன்னுணர்வை அது வெளியே எடுத்துவிடும். கண்டிப்புகள், உங்களது உடலிலும் உங்களது மனதிலும் தான் இருக்கின்றன. ஆனால், உங்களது தன்னுணர்வு எந்தவித கண்டிப்புகளும் இல்லாமல் இருக்கிறது. அது பரிசுத்தமானது, எப்போதும் பரிசுத்தமானது. அது தூய்மையானது. அதன் தூய்மையை யாரும் கெடுக்க முடியாது.

இந்த புனிதமான தன்னுணர்வைப் பற்றி நீங்கள் கவனமுடன் இருப்பவராக ஆக்குவது தான் கீழைநாட்டின் அணுகுமுறை. கீழைநாட்டின் முக்கியத்துவம் வானத்தின் மீது உள்ளது. ஆனால், மேலைநாட்டின் முக்கியத்துவம் மேகங்களின் மீது உள்ளது. மேகங்களுக்கு என்று பிறப்பிடம் உண்டு. அதை நீங்கள் கண்டுபிடிக்க வேண்டுமானால், நீங்கள் மகாசமுத்திரத்திற்குச் செல்ல வேண்டும். அதன்பிறகு, சூரியனின் கதிர்கள், அதனால் நீர் என்பது ஆவியாதல், அதன்பிறகு மேகங்கள் உருவாதல் ... ... இப்படி, நீங்கள் போய்க் கொண்டே இருப்பீர்கள். ஆனால் இது, நீங்கள் ஒரு வட்டத்தில் சுற்றுவது போலாகும். மேகங்கள் உருவாகின்றன, அதன்பிறகு அவைகள் வருகின்றன, மரங்களின் மீது காதல் கொள்கின்றன, பூமியில் மழையாகப் பொழிகின்றன, ஆறுகளாக ஆகின்றன, கடலுக்குச் செல்கின்றன, அங்கிருந்து ஆவியாகின்றன. சூரியனின் கதிர்களால் மீண்டும் மேகமாக எழுகின்றன. மீண்டும் பூமியில் விழுகின்றன. இப்படி, சுற்றிச்சுற்றி போய்க் கொண்டே இருக்கும். இது ஒரு சக்கரம் போன்றது. நீங்கள் எங்கிருந்து வெளியே வருவீர்கள்? ஒரு விஷயம் மற்றொன்றிற்கு அழைத்துச் செல்லும். இப்படியே நீங்கள் ஒரு சக்கரம் போன்று சுற்றிக் கொண்டே இருப்பீர்கள்.

ஆனால், வானத்திற்கோ பிறப்பிடம் கிடையாது. வானம் என்பது படைக்கப்படாதது. அது, எதனாலும் உருவாக்கப்படவில்லை.

உண்மையில், எதாவது ஒன்று இருக்க வேண்டுமெனில், அதற்கு இந்த ஆகாயம் முக்கியமாகத் தேவை. மற்றது எது இருப்பதற்கு முன்பாகவும் இந்த வானம் இருந்தாக வேண்டும். நீங்கள் கிறிஸ்தவ மறை இயலாளரிடம் கேட்டால், அவர், "கடவுள் இந்த உலகை படைத்தார்," என்று கூறுவார். கடவுள் இந்த உலகைப் படைப்பதற்கு முன்பு, இங்கு இந்த ஆகாயம் என்பது இருந்ததா அல்லது இல்லையா என்று அவரிடம் கேளுங்கள். ஆகாயம் என்பது இல்லை என்றால், அதன்பிறகு கடவுள் எங்கு இருந்தார்? அவருக்கு இடம் தேவை அல்லவா. இடம் என்பது இல்லை என்றால், அவர் எங்கு இந்த உலகைப் படைத்தார்? இந்த உலகை எங்கு வைத்தார்? பரந்தவெளி என்பது கண்டிப்பாக வேண்டும்; கடவுள் இருப்பதற்கும்கூட அது கண்டிப்பாக வேண்டும். "கடவுள் இந்தப் பரந்தவெளியைப் படைத்தார்," என்று நீங்கள் கூற முடியாது. அது முட்டாள்தனமாக இருக்கும். ஏனெனில், அதன்பிறகு, கடவுள் இருப்பதற்கு இடம் என்பது இருந்திருக்காது. பரந்தவெளி என்பது கடவுளுக்கு முன்பு இருந்திருக்க வேண்டும்.

ஆகாயம் என்பது எப்போதும் இங்கே இருந்து வந்துள்ளது. கீழைநாட்டினரின் அணுகுமுறையானது, நீங்கள் இந்த ஆகாயத்தை கவனத்தில் வைத்திருக்க வேண்டும் என்பது தான். ஆனால், மேலைநாட்டினரின் அணுகுமுறையானது, இந்த மேகங்கள் குறித்து நீங்கள் மேலும், மேலும் விழிப்புடன் இருக்க வேண்டும் என்று கூறுவது உங்களுக்குக் கொஞ்சம் உதவலாம். ஆனால், அது உங்களுக்குள் உள்ள அந்த ஒரு மையத்தைப் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்தாது. வட்டத்தின் வெளிப்பரப்பை பற்றி கொஞ்சம் உங்களுக்கு விழிப்புணர்வு வரும். ஆனால், அதன் மையத்தைப் பற்றி விழிப்புணர்வு வராது. மேலும், வட்டத்தின் மேற்பரப்பு ஒரு சூறாவளி போன்றது.

நீங்கள் அந்த சூறாவளியின் மையத்தைக் கண்டுபிடிக்க வேண்டும். அது, நீங்கள் சாட்சியாக இருப்பதன் மூலமாக மட்டுமே முடியும்.

சாட்சியாக இருப்பது என்பது, உங்களது கண்டிப்புகளை மாற்றாது. சாட்சியாய் இருப்பது என்பது, உங்களது உடலின் தசைநார்களை மாற்றாது. ஆனால், நீங்கள் இந்த தசைநார்களை எல்லாம் கடந்து இருப்பவர் என்கிற ஒரு அனுபவத்தை அது உங்களுக்குக் கொடுக்கும். அப்படி கடந்து இருக்கின்ற அந்த தருணத்தில், அப்படி அப்பால் நிற்கின்ற அந்த நேரத்தில், எந்தப் பிரச்சனையும் அங்கு இருக்காது - உங்களுக்கு இருக்காது.

எனவே, இப்போது இது உங்களைப் பொருத்தது. இந்த உடல் தனது தசைநார்களை இன்னமும் சுமந்து கொண்டுதானிருக்கும். மேலும், மனம் இன்னமும் அதன் கண்டிப்புகளை சுமந்து கொண்டு தான்



இருக்கும். எனவே, இப்போது விஷயம் உங்களைப் பொருத்து உள்ளது. எப்போதாவது சில நேரங்களில் நீங்கள் அந்தப் பிரச்சனையை பிடித்துத் தொங்கிக் கொண்டு, நீங்கள் இந்த உடல் மனம் என்பதற்குள் புகுந்து கொண்டு அந்தப் பிரச்சனையை அனுபவிக்கலாம். நீங்கள் அந்தப் பிரச்சனையை வேண்டாம் என்று நினைத்தால், நீங்கள் அதற்கு வெளியே இருக்கவும் செய்யலாம். அந்தப் பிரச்சனை உங்களது உடல் மனம் என்னும் விஷயத்தில், ஒரு பதிவாக இன்னும் அங்கே இருக்கும். ஆனால், நீங்கள் தனியாக அதிலிருந்து விலகி இருப்பீர்கள்.

அப்படித்தான் ஒரு புத்தர் செயலாற்றுகிறார். நீங்களும் உங்களது நினைவாற்றலை உபயோகிக்கிறீர்கள், புத்தரும் தனது நினைவாற்றலை பயன்படுத்துகிறார் - ஆனால், புத்தர் தன்னை அதோடு ஐக்கியப்படுத்திக் கொள்வதில்லை. அவர், நினைவாற்றலை ஒரு இயந்திர நுட்பம் போன்று பயன்படுத்துகிறார். உதாரணமாக, நான் மொழியைப் பயன்படுத்துகிறேன். நான் மொழியை பயன்படுத்தும் போது, நான் எனது மனதையும், அதில் உள்ள எல்லா பதிவுகளையும் பயன்படுத்துகிறேன். ஆனால், எனக்குள் தொடராக, நான் இந்த மனம் அல்ல, என்கிற அந்த விழிப்புணர்வு தொடர்ந்து இருந்து கொண்டே இருக்கிறது. ஆகவே, நான் ஒரு எஜமானாகவும், எனது மனம் ஒரு வேலைக்காரன் போன்றும் இருக்கிறது. நான் அழைக்கும் போது மனம் என்பது வருகிறது. அதன் உபயோகம் அங்கு இருக்கிறது - ஆனால், அதனால் என்மீது ஆதிக்கம் செலுத்த முடியாது.



**சாட்சியாக இருப்பது என்பது, உங்களது கண்டிப்புகளை மாற்றாது. சாட்சியாய் இருப்பது என்பது, உங்களது உடலின் தசைநார்களை மாற்றாது. ஆனால், நீங்கள் இந்த தசைநார்களை எல்லாம் கடந்து இருப்பவர் என்கிற ஒரு அனுபவத்தை அது உங்களுக்குக் கொடுக்கும். அப்படி கடந்து இருக்கின்ற அந்த தருணத்தில், அப்படி அப்பால் நிற்கின்ற அந்த நேரத்தில், எந்தப் பிரச்சனையும் அங்கு இருக்காது - உங்களுக்கு இருக்காது.**



ஆகவே, பிரச்சனைகள் இருக்கும். ஆனால், அவைகள் உடல் மற்றும் மன அளவில் விதை வடிவில் மட்டுமே இருக்கும். உங்களது கடந்த காலத்தை நீங்கள் எப்படி மாற்ற முடியும்? நீங்கள், கடந்த காலத்தில் ஒரு கத்தோலிக்கராக இருந்திருப்பீர்கள்; அப்படி நாற்பது ஆண்டுகள் நீங்கள் ஒரு கத்தோலிக்கராக இருந்திருக்கும் போது, அந்த

நாற்பது ஆண்டுகளை மாற்றிவிட்டு நீங்கள் எப்படி ஒரு கத்தோலிக்கர் அல்லாதவராக இருக்க முடியும்? முடியாது; அந்த நாற்பது ஆண்டுகள், நீங்கள் ஒரு கத்தோலிக்கராக இருந்த காலமாகவே இருக்கும். ஆனால், நீங்கள் அதிலிருந்து நழுவி வெளியே வரலாம். இப்போது அவைகள் நீங்கள் ஐக்கியப்படுத்திக் கொண்ட விஷயங்கள் என்று அறிந்து கொள்ள முடியும். அந்த நாற்பது வருடங்களை அழித்துவிட முடியாது. மேலும், அதை அழிக்க வேண்டிய அவசியமும் கிடையாது. நீங்கள் அந்த நாற்பது வருட காலத்தை ஒரு குறிப்பிட்ட வழியில், படைப்பாற்றல் மிக்கதொரு வழியில் பயன்படுத்த முடியும். அப்போது, நீங்கள் கற்ற அந்த பைத்தியக்காரத்தனமான கல்வியையும் கூட, நீங்கள் இப்போது படைப்பாற்றல் மிக்கதொரு வழியில் உபயோகிக்க முடியும்.

ஆகவே, மூளையில் இருக்கின்ற பதிவுகள் எல்லாம், உடம்பின் தசைநார்களில் உள்ள பதிவுகள் எல்லாம் அங்கு தான் இருக்கும். ஆனால், அங்கு ஒரு விதையாக, சக்தி உறைந்ததாக இருக்கும். நீங்கள் தனிமையாக இருப்பதாக உணர்ந்தால், அப்போது உங்களுக்கு ஏதாவது பிரச்சனை வேண்டும் என்று விரும்பினால், உங்களால் அதை எடுத்துக் கொள்ள முடியும். துன்பம் என்பது இல்லையே என்று நீங்கள் மிகவும் துன்பப்பட்டால், நீங்கள் அதை எடுத்துக் கொள்ள முடியும். அவைகள், எப்போதும் உங்களுக்குக் கிடைக்கக் கூடியதாக இருக்கும். ஆனால், அவைகளை எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லை; அவற்றை எடுத்துக் கொள்ள வேண்டிய தேவை இல்லை. அது உங்களது விருப்பம்.

எனவே, சாட்சியாக இருப்பது தான் நீங்கள் மையத்தில் இருப்பதற்கான தியான நுணுக்கம். மனிதன் இரண்டு வழிகளில்வாழலாம் ஒன்று, நாம் மையத்திலிருப்பது பற்றி ஏற்கனவே பேசினோம். அதாவது, அவன் வட்டத்தின் மேல்பரப்பில் வாழலாம் அல்லது அதன் மையத்தில் வாழலாம் என்று பார்த்தோம். மேற்பரப்பானது, உங்களது நான் என்னும் தன்முனைப்பிற்குச் சொந்தமானது. ஆனால் மையமானது, உங்களது ஆன்மாவிற்குச் சொந்தமானது. மேற்பரப்பு என்பது மற்றவர்களோடு தொடர்புடையது.

நீங்கள் இப்போது செய்வதெல்லாம் செயல் கிடையாது. அது எப்போதுமே எதிர்செயலாகத் (Reaction) தான் இருக்கிறது - உங்களுக்குச் செய்யப்பட்ட ஏதோ ஒன்றிற்காக, நீங்கள் இப்போது இந்தச் செயலை செய்கிறீர்கள். மேற்பரப்பில் இருக்கும் போது செயல் என்பதே கிடையாது, எல்லாமே எதிர்ச்செயல்கள் தான். உங்களது மையத்திலிருந்து எதுவும் வருவதில்லை. ஒருவகையில் பார்த்தால், நீங்கள் சூழ்நிலைகளின் அடிமைகள் போன்று இருக்கிறீர்கள். நீங்கள்



எதையும் செய்வதில்லை. அதற்கு மாறாக, நீங்கள் அதைச் செய்வதற்கு நிர்ப்பந்திக்கப்படுகிறீர்கள்.

ஆனால், மையத்திலிருந்து காரியமாற்றும் போது, அந்தச் சூழ்நிலை தலைகீழாக மாறிவிடுகிறது. மையத்திலிருந்து தான், நீங்கள் செயல் என்பதை செய்ய ஆரம்பிக்கிறீர்கள்; முதல் முறையாக நீங்கள் ஒரு தொடர்பாளனாக இல்லாமல், உங்களது சுய உரிமையுடன் இருக்கிறீர்கள்.

புத்தர் ஒரு கிராமத்தின் வழியாகப் போய்க் கொண்டிருக்கிறார். சிலர், அவர்மீது கோபத்தில் உள்ளனர். அவரது போதனைகளுக்கு எதிராக உள்ளனர். அவர்கள், அவரைத் திட்டுகிறார்கள், அவமானப்படுத்துகிறார்கள். புத்தர் அமைதியாக அவற்றைக் கேட்டுக் கொண்டு, அவர்களிடம், "நீங்கள் முடித்துவிட்டால், அதன்பிறகு நான் சொல்வதற்கு அனுமதியுங்கள். நான் அடுத்த கிராமத்திற்குப் போக வேண்டும். அவர்கள் எனக்காகக் காத்திருப்பார்கள். அப்படி ஏதாவது உங்கள் மனதில் இன்னமும் மீதம் இருந்தால், நான் மீண்டும் இந்தப் பாதையில் தான் செல்வேன், நீங்கள் அப்போது அதை முடித்துக் கொள்ளலாம்," என்றார்.

அதற்கு அந்த மக்கள், "நாங்கள் உங்களை திட்டினோம், அவமானப்படுத்தினோம். அதற்கெல்லாம் நீங்கள் பதிலளிக்கப் போவதில்லையா?" என்று கேட்டார்கள்.

புத்தர் அவர்களிடம், "இப்போது உங்களது செயலுக்கு நான் எதிர்ச்செயல் ஆற்றப் போவதில்லை. நீங்கள் செய்வதெல்லாம் உங்களைப் பொருத்தது. நீங்கள் என்னை திட்டியிருக்கலாம், அது உங்களோடு சம்பந்தம் உள்ளது. நான் ஒரு அடிமை அல்ல. நான் விடுதலை பெற்ற ஒரு மனிதனாக ஆகிவிட்டேன். நான் எனது மையத்திலிருந்து கொண்டு செயலாற்றுகிறேன்; மேற்பரப்பில் இருந்து அல்ல. மேலும், உங்களது வசவுகள் எனது மேற்பரப்பை மட்டுமே தொட முடியும். எனது மையத்தைத் தொட முடியாது. எனது மையம் எதனாலும் தொடப்படாமல் இருக்கும்," என்றார்.

நீங்கள் இப்போது செயலாற்றுவது, அது உங்களது மையத்தை தொட்டுவிட்டது என்பதற்காக அல்ல. ஆனால், உங்களுக்கு ஒரு மையம் என்பதே இல்லை என்பதனால் தான் ஆகும். நீங்கள் வெறும் மேற்பரப்பு மட்டுமே. உங்களை இந்த மேற்பரப்போடு மட்டுமே ஐக்கியப்படுத்திக் கொண்டு இருக்கிறீர்கள். இந்த மேற்பரப்பானது, எல்லாவற்றாலும் தொடப்பட முடியும் - நிகழ்கின்ற எல்லாவற்றாலும் தொடப்பட முடியும். அது, உங்களின் மேற்பரப்பு ஆனபடியால், என்ன நடந்தாலும்

கண்டிப்பாக அது, அதைத் தொட்டு தான் ஆகவேண்டும். மேலும் உங்களுக்கு ஒரு மையமும் கிடையாது. உங்களுக்கென்று ஒரு மையத்தை நீங்கள் பெற்றிருக்கின்ற அந்த நொடிப் பொழுதே, நீங்கள் உங்களிடம் இருந்து கொஞ்ச தூரம் விலகி இருப்பீர்கள் - உங்களது மேற்பரப்பில் இருந்து உங்களுக்கு கொஞ்ச தூரம் ஏற்பட்டுவிடும். அப்போது, யாரோ சிலர் உங்களது மேற்பரப்பை திட்ட முடியும். ஆனால், உங்களை முடியாது. நீங்கள் பிரிந்து தனியாக உங்களது மையத்தில் இருப்பீர்கள். அங்கே, உங்களுக்கும் உங்களது ஆன்மாவிற்கும் இடையில் தூரம் இருக்கும். வெளிப்பரப்பாக இருக்கிற உங்களுக்கும், மையத்தில் இருக்கிற உங்களுக்கும் இடையே அங்கே இடைவெளி இருக்கும். மேலும், அந்த தூரத்தை யாராலும் உடைத்துவிட முடியாது. ஏனெனில், அந்த மையத்திற்குள் யாரும் ஊடுருவிச் செல்ல இயலாது. இந்த வெளி உலகம் உங்களை உங்களது மேற்பரப்பில் மட்டும் தொட முடிமயும்.

ஆகவே தான், 'நான் இப்போது எனது மையத்தில் இருக்கிறேன்.' பத்து ஆண்டுகளுக்கு முன்பு இது நடந்திருந்தால், அது வேறுவிதமாக இருந்திருக்கும். அப்போது நீங்கள் என்னை திட்டியிருந்தால், நான் அதற்கு எதிர்ச்செயல் ஆற்றியிருப்பேன். ஆனால், நான் இப்போது வெறுமனே செயல் மட்டுமே ஆற்றுகிறேன்," என்று புத்தர் கூறுகிறார்.

எனவே, செயல், எதிர்செயல் இவற்றிற்கு இடையே உள்ள வேறுபாட்டினை தெளிவாகப் புரிந்து கொள்ளுங்கள். யாரோ ஒருவர் உங்களை நேசிப்பதால் தான், நீங்கள் அவரை நேசிக்கிறீர்கள். ஆனால், புத்தரும் உங்களை நேசிக்கிறார், நீங்கள் அவரை நேசிக்கிறீர்கள் என்பதற்காக அல்ல, அது சம்பந்தம் இல்லாதது. நீங்கள் அவரை நேசிக்கிறீர்களா அல்லது வெறுக்கிறீர்களா என்பது முக்கியமல்ல; அவர் உங்களை நேசிக்கிறார். ஏனெனில், அது அவரது செயல், எதிர்ச்செயல் அல்ல. செயல் என்பது உங்களுக்குள் இருந்து வருகிறது. ஆனால், எதிர்ச்செயல் என்பது உங்கள் மீது திணிக்கப்படுவது. மையத்தில் இருப்பது என்றால், இப்போது நீங்கள் செயல் என்பதை ஆற்றுவதற்கு ஆரம்பித்துவிட்டீர்கள் என்று அர்த்தமாகும்.

நீங்கள் நினைவில் கொள்ள வேண்டிய அடுத்த விஷயம் : நீங்கள் செயல் என்பதை ஆற்றும் போது, அந்தச் செயல் எப்போதும் முழுமையானதாக இருக்கும். ஆனால், நீங்கள் எதிர்ச்செயலாற்றும் போது, அது ஒருபோதும் முழுமையானதாக இருக்காது. அது எப்போதும் அரைகுறையாகத் தான், துண்டானதாகத் தான் இருக்கும். ஏனெனில், நான் எனது மேற்பரப்பில் இருந்து செயல் ஆற்றும் போது - அதாவது, நான் எதிர் செயலாற்றும் போது - அது முழுமையானதாக



இருக்க முடியாது. ஏனெனில், உண்மையில் நான் அதில் என்னை ஈடுபடுத்திக் கொள்ளவில்லை. எனது மேற்பரப்பு மட்டுமே அதில் ஈடுபட்டுள்ளது. ஆகவே, அது முழுமையானதாக இருக்க முடியாது - அது எப்போதுமே அரைகுறையானது தான். மேலும், இதற்கு இன்னும் அதிக அர்த்தம் உள்ளது. ஏனெனில், உங்களது அன்பானது அரைகுறையாக இருக்கும்பட்சத்தில், அதன்பின்னர் அதில் மீதி இருக்கின்ற இடம் வெறுப்பினால் நிரப்பப்பட்டுவிடும். உங்களது கருணை அரைகுறையாக இருந்தால், அதில் மீதியிருக்கும் இடம் கொடுமையால் நிரப்பப்பட்டுவிடும். உங்களது நற்செயல்கள் அரைகுறையாக இருந்தால், அதில் மீதி இருக்கும் இடத்தை நிரப்புவது யார்? உங்களது கடவுளும் அரைகுறையாக இருந்தால், அதன்பின்னர் அந்த மீதி இடத்தை நிரப்புவதற்கு உங்களுக்கு ஒரு சாத்தான் தேவைப்படும்.

அரைகுறைச் செயல்கள், நிச்சயமாக முரண்பட்டவைகளாகத் தான், ஒன்றோடு ஒன்று மோதிக் கொள்வதாகத் தான் இருக்கும் என்று அதற்கு அர்த்தமாகும். நவீனகால மனோதத்துவம், நீங்கள் ஒரே நேரத்தில் அன்புடனும், வெறுப்புடனும் இருக்கிறீர்கள் என்று கூறுகிறது. உங்களது மனம், இரண்டிலும் வாழ்கிறது, முரண்பட்டு இருக்கிறது. அதே பொருளோடு நீங்கள் அன்போடும் உறவு கொள்கிறீர்கள். அதே சமயம், வெறுப்போடும் உறவு கொள்கிறீர்கள். மேலும் இப்படி, அன்பு, வெறுப்பு ஆகிய இரண்டும் இருந்தால், அதன்பிறகு அங்கே குழப்பம் தான் இருக்கப் போகிறது. மேலும், அது மிகவும் விஷம் நிறைந்த குழப்பமாக ஆகிவிடும். உங்களது கருணை, கொடூரத்தோடு கலந்திருக்கிறது. உங்களது தானம், உங்களது கனவோடு கலந்திருக்கிறது. மேலும், உங்களது பிரார்த்தனைகள் வன்முறையின் ஒருவகையாக இருக்கின்றன. நீங்கள் மேற்பரப்பில் ஒரு புனிதர் போன்று இருப்பதற்கு முயற்சி செய்தாலும்கூட, உங்களது அந்த புனிதத் தன்மையானது, கண்டிப்பாக, பாவச் செயல்களின் கறை படிந்ததாக இருக்கும். மேற்பரப்பில், எல்லாமே தனக்குத் தானே முரண்பட்டதாகத் தான் இருக்கும்.

நீங்கள் உங்களது மையத்தில் இருந்து கொண்டு செயலாற்றும் போது மட்டுமே உங்களது செயல் முழுமையானதாக இருக்கும். மேலும், அந்தச் செயல் முழுமையானதாக இருக்கும் போது, அதற்கே உரித்தான அழகுடன் இருக்கும். செயல் முழுமையானதாக இருக்கும் போது, அது நொடிக்கு நொடி செயலாற்றுவதாக இருக்கும். செயல் முழுமையானதாக இருக்கும் போது, நீங்கள் அதை நினைவில் சுமந்து செல்ல மாட்டீர்கள்; செல்ல வேண்டிய அவசியமும் இருக்காது.

உங்களது செயல் அரைகுறையாக இருக்கும் போது, அது வெறும் தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டதாக இருக்கும்.

நீங்கள் ஏதாவது ஒன்றைச் சாப்பிடுகிறீர்கள் - அப்போது, நீங்கள் சாப்பிடுவது அரைகுறையாக இருந்தால், அதன் பின்னர் அந்த சாப்பிடுதல் முடிந்தவுடன், நீங்கள் உங்கள் மனதில் மீண்டும் சாப்பிடுதலைத் தொடர்வீர்கள். அது தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டதாகத் தான் இருக்கும். முழுமையான ஒரு செயலுக்கு மட்டுமே முடிவு என்பது இருக்க முடியும். அதன்பிறகு, அதற்கு ஒரு ஆரம்பமும் இருக்கும். அரைகுறை விஷயம் என்பது ஆரம்பமும் இல்லாமல், முடிவும் இல்லாமல், ஒரு இடைவிடாத தொடர் போல இருக்கும். நீங்கள் உங்களது வீட்டில் இருக்கலாம். ஆனால், அப்போது நீங்கள் உங்களது கடை மற்றும் வியாபார ஸ்தலத்தினை உங்களது மனதில் சுமந்து கொண்டு இருப்பீர்கள். அதே போன்று, நீங்கள் உங்களது கடையில் இருக்கும் போது, உங்களது வீடு மற்றும் வீட்டு விவகாரங்களை மனதில் சுமந்து கொண்டு இருப்பீர்கள். ஒரு சிறு நொடிப்பொழுது கூட நீங்கள் அதில் முழுமையாக ஒருபோதும் இருந்தது இல்லை - ஒருபோதும் இருக்கவும் முடியாது. உங்களுக்குள் அந்த அளவுக்கு விஷயங்கள் இடைவிடாமல் தொடர்ந்து சுமந்து கொண்டு செல்லப்படுகிறது. இது தான் சுமை; உங்களது மனதிலும், உங்கள் உள்ளத்திலும் உள்ள படபடப்பான மனச்சுமை.

ஒரு முழுமையான செயலுக்கு ஆரம்பமும் உண்டு; அதற்கு ஒரு முடிவும் உண்டு. அது ஒரு தொடர் அல்ல. அது அங்கு இருக்கும். அதன்பின்னர், அது அங்கு இருக்காது. நீங்கள் அதன்பிறகு, அறியாத ஒன்றினுள் நகர்ந்து செல்வதற்கு, நீங்கள் முற்றிலும் சுதந்திரம் பெற்றவர்களாக ஆகிவிடுவீர்கள். இல்லையென்றால், நீங்கள் ஏற்கனவே அறிந்த பாதையில் தான் ஒருவர் போக முடியும், உங்களது மனம் வெறுமனே பழைய பாதையில் ஒட்டிக் கொள்ளும். நீங்கள் அதே வட்டப் பாதையில் போய்க் கொண்டே இருப்பீர்கள். ஏனெனில், உங்களது கடந்த காலத்தில் எதையும் ஒருபோதும் முழுமையாக முடிக்கவில்லை. எனவே, அது நிகழ்காலத்திற்குள் வரும். இப்படிப் போய் அது உங்களது எதிர்காலத்திற்குள்ளும் ஊடுருவிச் சென்றுவிடும்.

எனவே, உண்மையில், ஒரு அரைகுறை மனது, ஒரு மேற்பரப்பு மனம் அதன் கடந்த காலங்களைச் சுமந்து கொண்டே செல்கிறது. மேலும், உங்களது கடந்த காலமோ ஒரு மிகப்பெரிய விஷயம்! உங்களது கடந்த கால பிறவிகளை கணக்கில் எடுத்துக் கொள்ளாவிட்டாலும் கூட, அதன்பிறகும் கூட உங்களது கடந்த காலம் என்பது மிகப்பெரிய விஷயம். ஐம்பது ஆண்டுகால அனுபவமாக இருந்தால், அது அழகானதோ அல்லது அசிங்கமானதோ - ஆனால், அது முழுமையாக



முடிக்கப்படாதது - எல்லாமே முழுமையாக முடிக்கப்படாதது. ஆகவே, நீங்கள் உயிரற்ற அந்த மிக நீண்ட ஐம்பது ஆண்டு கடந்த காலத்தை சுமந்து கொண்டு செல்கிறீர்கள். இந்த உயிரற்ற கடந்த காலச் சுமையானது, ஒரு சிறிய நிகழ்கால நொடிப்பொழுதில் விழும் போது, அது, அந்த நிகழ்கால நொடிப்பொழுதை நிச்சயமாக கொன்றுவிடும்!

ஆகவே, உங்களால் வாழவே முடியாது; அது சாத்தியப்படாது. இப்படிப்பட்ட நிகழ்காலத்தோடு நீங்கள் வாழ முடியாது. உங்களுக்குக் கிடைக்கின்ற ஒவ்வொரு நிகழ்கால நொடிப்பொழுதும் மிகவும் புத்துணர்வும், மென்மையும் நிறைந்தது. ஆனால், உங்களது இந்த கடந்த காலத்தின் உயிரற்ற சுமை அதைக் கொன்றுவிடும். அது கொலை தான்! உங்களது கடந்த காலம், உங்களது நிகழ்காலத்தை கொன்று கொண்டே போகிறது. மேலும், உங்களது நிகழ்காலம் உயிரற்று போனவுடன், அது மீண்டும் உங்களது பழைய சுமையோடு சேர்ந்துவிடுகிறது. அது உயிர்த்துடிப்புடன் இருக்கும் போது, அது உங்களின் ஒரு பகுதியாக ஆகாது. ஆனால், அது உயிரற்றுப் போகும் போது, உங்களது உயிரற்ற கடந்த காலத்தினால் அது கொல்லப்பட்டுவிடும் போது, அது, அதன்பிறகு உங்களுடையதாக ஆகிவிடுகிறது; அதன்பிறகு, அது உங்களின் ஒரு பகுதியாக ஆகிவிடுகிறது. இதுதான் சூழ்நிலை.

நீங்கள் உங்களது மையத்திலிருந்து செயலாற்ற ஆரம்பிக்கின்ற அந்த நொடிப்பொழுதில், ஒவ்வொரு செயலும் முழுமையானதாக, அணுசக்தி நிறைந்ததாக இருக்கும். அது அங்கு இருக்கும்; அதன்பிறகு, அது அங்கு இருக்காது. நீங்கள் அதிலிருந்து முற்றிலும் விடுதலை பெற்றுவிடுவீர்கள். அதன்பின்னர், நீங்கள் எந்த ஒரு சுமையும் இல்லாமல் செல்ல முடியும். அதன்பிறகு மட்டுமே உங்களால், எப்போதும் அங்கேயே இருக்கின்ற அந்த நொடிப்பொழுதில், நீங்கள் புத்துணர்ச்சியுடன் வருவதன் மூலம் வாழ முடியும். ஆனால், நீங்கள் உங்களது கடந்த காலத்தை சுமந்து கொள்ளாமல் வரும் போது தான், புத்துணர்ச்சியுடன் வர முடியும்.

ஆனால், உங்களது கடந்த காலச் செயல்களை நீங்கள் முழுமையாக முடிக்கவில்லையென்றால், நீங்கள் அதைச் சுமந்து கொண்டு தான் வரவேண்டும். ஏனெனில், உங்களது மனமானது, எல்லாவற்றையும் எப்படியாவது முடித்துவிட வேண்டும் என்னும் குணம் கொண்டது. அது முழுமை பெறவில்லையென்றால், அதன்பின்னர், அது சுமக்கப்பட வேண்டும். நீங்கள் பகல் நேரத்தில் ஏதாவது ஒன்றினை முழுமையாகச் செய்து முடிக்கவில்லையெனில், அதன்பின்னர் இரவில் நீங்கள் அதைப் பற்றி கனவு காண்பீர்கள். ஏனெனில், உங்களது மனம் எல்லாவற்றையும் முடித்து வைக்க முயற்சி

செய்யும். அந்தக் காரியம் முடித்து வைக்கப்பட்ட அந்த நொடிப்பொழுதிலேயே மனம் அந்தச் சுமையில் இருந்து விடுபட்டுவிடும். அது முடியும்வரை, மனமானது நிச்சயமாக மீண்டும், மீண்டும் அதை நோக்கி வரும்.

நீங்கள் செய்பவையெல்லாம் - உங்களது நேசம், உங்களது பாலியல் உணர்வு, உங்களது நட்பு - இவையெல்லாமே முழுமை பெறாதவை தான். நீங்கள் உங்களது மேற்பரப்பில் இருந்தால், இதை உங்களால் முழுமையாக்க முடியாது. எனவே, உங்களுக்குள் மையத்தில் இருப்பது எப்படி? நீங்கள் மேற்பரப்பில் இல்லாமல் மையத்தில் இருப்பதை இருப்பதை அடைவது எப்படி? சாட்சியாக இருப்பது தான் அதற்கான செயல் நுணுக்கம்.

சாட்சிபாவனை (Witnessing) என்னும் வார்த்தை மிகவும் சிறப்பான வார்த்தையாகும். உங்களது மையத்தை அடைவதற்கு நூற்றுக்கணக்கான தியான நுணுக்கங்கள் உள்ளன. ஆனால், இந்த சாட்சிபாவனை என்பது, ஒவ்வொரு தியான நுணுக்கத்திலும் அதன் ஒரு பகுதியாக, அடிப்படைப் பகுதியாக நிச்சயம் இருந்தே தீரும். தியான நுணுக்கம் எதுவாக இருந்தாலும் சரி, சாட்சிபாவனை தான் அதன் முக்கியமான பகுதியாக இருக்கும். எனவே, இதனை தியான நுணுக்கங்களுக்கெல்லாம் பெரிய தியான நுணுக்கம் என்றுகூட அழைக்கலாம். இது வெறுமனே ஒரு தியான நுணுக்கம் அல்ல. சாட்சிபாவனை என்னும் செயல்முறையானது, எல்லா தியான நுணுக்கங்களுக்கும் முக்கியமான ஒரு பகுதி ஆகும்.

ஒருவர் சாட்சிபாவனையை மட்டுமே ஒரு தனிப்பட்ட தியான நுணுக்கமாகக் கூட கூறலாம். உதாரணமாக, J. கிருஷ்ணமூர்த்தி - அவர் சாட்சிபாவனையை ஒரு தூய்மையான தியான நுணுக்கமாக கூறுகிறார். ஆனால், அவரது பேச்சு, உடலை விட்டுவிட்டு வெறும் ஆவியைப் பற்றி மட்டும் பேசுவது போன்றதாகும். உங்களால் அதை உணர முடியாது; உங்களால் அதைப் பார்க்க முடியாது. ஆன்மா என்பது எங்கும் நிறைந்திருக்கிறது. நீங்கள் இந்த உடலின் மூலம் தான் ஆன்மாவை உணர முடியும். ஆனால், இந்த ஆன்மா என்பது உடல் அல்ல தான்; ஆனால், அதை நீங்கள் இந்த உடலின் மூலமாகத் தான் உணர முடியும். ஒவ்வொரு தியான நுணுக்கமும் உடலைப் போன்றது. மேலும், சாட்சிபாவனை தான் ஆன்மா போன்றது. எந்தவித உடலும் இல்லாமல், தனியாக சாட்சிபாவனை பற்றி நீங்கள் கூறலாம். ஆனால், அது வெறும் உணர முடியாத ஒரு பண்புக் கூறாக, முற்றிலும் உணர முடியாத ஒரு பண்பாகத் தான் இருக்கும். ஆகவே, J. கிருஷ்ணமூர்த்தி தொடர்ந்து அரை நூற்றாண்டு காலமாக இதைப் பற்றி பேசி வந்தார். ஆனால், அவர்



பேசியதெல்லாம் தூய்மையான, உடலற்ற ஒரு விஷயமாக இருந்ததால், அதைக் கேட்கின்ற ஒருவருக்கு, தான் புரிந்து கொண்டோம் என்கிற நினைப்பு இருக்குமே தவிர, அந்த புரிதல் வெறும் கருத்தாக மட்டுமே இருக்கும்.

தூய ஆவி என்று இந்த உலகில் எதுவும் இல்லை. எல்லாமே, எதாவது ஒன்றினால் மூடப்பட்டு தான் உள்ளது. சாட்சிபாவனை என்பது எல்லா ஆன்மீக தியான நுணுக்கங்களுக்கும் ஆன்மா போன்றது.மேலும், எல்லா தியான நுணுக்கங்களும் உடல்கள், வெவ்வேறு உடல்கள் போன்றவை.

ஆகவே, முதலில் நாம் சாட்சிபாவனை என்றால் என்ன என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்; அதன்பிறகு, அந்த சாட்சிபாவனையை சில உடல்கள், அதாவது, சில தியான நுணுக்கங்கள் மூலம் புரிந்து கொள்ளலாம்.

சிந்தித்தல் என்பதை நாம் அறிவோம். மேலும், சாட்சிபாவனை என்றால் என்ன என்பதை அறிந்து கொள்வதற்கு, ஒருவர் நினைத்தல் என்பதில் இருந்து ஆரம்பிக்க வேண்டும். ஏனெனில், ஒருவர் தனக்கு என்ன தெரியுமோ, அதிலிருந்து தான் முதலில் ஆரம்பிக்க வேண்டும். சிந்தித்தல் அல்லது நினைத்தல் என்பதை நாம் அறிவோம் - சிந்தித்தல் என்றால் தீர்மானித்தல்; அதாவது, நீங்கள் ஏதாவது ஒன்றைப் பார்த்தவுடன் அதைப் பற்றி ஏதாவது தீர்மானத்திற்கு வருகிறீர்கள்; ஒரு தீர்ப்பிற்கு வருகிறீர்கள். ஒரு மலரைப் பற்றி, நீங்கள் அது அழகாக இருக்கிறது அல்லது அழகாக இல்லை என்று தீர்ப்பளிக்கிறீர்கள். நீங்கள் ஒரு பாடலைக் கேட்கிறீர்கள். அப்போது, அதை நீங்கள் பாராட்டுகிறீர்கள் அல்லது பாராட்டாமல் போகிறீர்கள். நீங்கள் சிலவற்றை பாராட்டுகிறீர்கள், சிலவற்றை கண்டனம் செய்கிறீர்கள். சிந்தனை என்பது தீர்ப்பளித்தல். நீங்கள் சிந்திக்க ஆரம்பித்த அந்த நொடிப்பொழுதிலேயே நீங்கள் அதைப் பற்றி தீர்ப்பளிக்க ஆரம்பித்துவிடுகிறீர்கள்.

சிந்திப்பது என்பது மதிப்பிடுதல். மதிப்பீடு செய்யாமல் உங்களால் சிந்திக்க முடியாது. ஒரு மலரை மதிப்பீடு செய்யாமல், அதைப் பற்றி உங்களால் எப்படி சிந்திக்க முடியும்? நீங்கள் சிந்திக்க ஆரம்பித்த அதே நேரத்திலேயே, அது அழகாக இருக்கிறதா அல்லது அழகாக இல்லையா என்று கூறிவிடுவீர்கள். நீங்கள் அப்போது ஏதாவது ஒரு இனப் பிரிவினை நீங்கள் பயன்படுத்தியாக வேண்டும். ஏனெனில், சிந்தித்தல் என்பது இனம் பிரித்தலாகும். நீங்கள் ஒரு பொருளை இனம் பிரித்த அந்த நொடியில் அதற்கு ஒரு பெயர், அதற்கு ஒரு அடையாளம் கொடுத்துவிட்டு - நீங்கள் அதைப் பற்றி சிந்திக்கிறீர்கள்.

நீங்கள் அந்தப் பொருளைப் பற்றி எந்தவிதமான தீர்ப்பையும் அளிக்கப் போவதில்லை என்னும் போது, சிந்தனை என்பது சாத்தியப்படாது. நீங்கள் எந்தவிதமான தீர்ப்பினையும் கூறப் போவதில்லை என்றால், அதன்பின்னர் நீங்கள் வெறுமனே விழிப்புணர்வுடன் மட்டுமே இருக்க முடியும் - ஆனால், அப்போது உங்களால் சிந்திக்க முடியாது.

இங்கே ஒரு மலர் இருக்கிறது, நான் உங்களிடம், "இதைப் பாருங்கள், ஆனால் இதைப் பற்றி சிந்திக்காதீர்கள். மலரைப் பாருங்கள், ஆனால் அதைப் பற்றி எதுவும் சிந்திக்காதீர்கள்," என்று கூறுகிறேன். இப்போது உங்களால் என்ன செய்ய முடியும்? சிந்தனை என்பது அனுமதிக்கப்படவில்லையெனில், நீங்கள் என்ன செய்ய முடியும்? நீங்கள் வெறும் சாட்சிபாவனையில், நீங்கள் வெறும் விழிப்புணர்வுடன் மட்டுமே இருக்க முடியும். நீங்கள் அந்த மலரைப் பற்றிய தன்னுணர்வுடன் மட்டுமே இருக்க முடியும் - இந்த மலர் இங்கே இருக்கிறது என்கிற அந்த ஒரு உண்மையை மட்டுமே உங்களால் எதிர்கொள்ள முடியும். இப்போது, உங்களால் அதை எதிர்கொள்ள முடியும். சிந்திப்பது என்பது அனுமதிக்கப்படவில்லையெனில், உங்களால், "இது அழகாக இருக்கிறது, இது அழகாக இல்லை, இந்த மலரைப் பற்றி எனக்கு தெரியும்" அல்லது "இது வித்தியாசமாக உள்ளது. இதை நான் ஒருபோதும் பார்த்ததில்லை," என்று எதுவும் கூற முடியாது. உங்களால் எதுவும் கூற முடியாது. வார்த்தைகளை உபயோகிக்க முடியாது. ஏனெனில், ஒவ்வொரு வார்த்தையும் அதனுள் ஒரு மதிப்பீட்டை வைத்திருக்கிறது. ஒவ்வொரு வார்த்தையும் ஒரு தீர்ப்பு. மொழி என்பது தீர்ப்புகளால் சுமையேற்றப்பட்டுள்ளது. மொழியினால் ஒருபோதும் பாரபட்சமின்றி இருக்க முடியாது. ஒரு வார்த்தையை நீங்கள் உபயோகித்த அந்த நொடிப் பொழுதிலேயே, நீங்கள் தீர்ப்பளித்துவிட்டீர்கள்.

ஆகவே, நீங்கள் மொழிகளை பயன்படுத்த முடியாது. நீங்கள் வார்த்தைகளால் கூற முடியாது. நான் உங்களிடம், "இது ஒரு பூ, இதைப் பாருங்கள். ஆனால், எதுவும் நினைக்காதீர்கள்," என்று கூறினால், அதன்பிறகு வார்த்தைகளால் விவரிப்பது அங்கே அனுமதிக்கப்படாது. எனவே, நீங்கள் என்ன செய்ய முடியும். உங்களால் வெறுமனே சாட்சியாக மட்டுமே இருக்க முடியும். நீங்கள் எந்த சிந்தனையும் இல்லாமல் அங்கு இருந்தால், ஏதாவது ஒன்றை வெறுமனே பார்த்துக் கொண்டிருந்தால், அதுதான் சாட்சிபாவனை. அப்படியானால், சாட்சிபாவனை என்றால் அமைதியான விழிப்புணர்வு என்று அர்த்தமாகிறது. அமைதியான என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஆனால், இப்போது நீங்கள் எதைப் பார்த்தாலும், அதோடு நீங்கள் ஏதாவது செய்கிறீர்கள். நீங்கள் அப்போது அமைதியாக இருப்பதில்லை. நீங்கள் ஏதாவது ஒன்றை செய்கிறீர்கள். மேலும், அப்படி ஏதாவது நீங்கள் செய்கின்ற அந்த நொடிப்பொழுதே, நீங்கள் அந்தப் பொருளை மாற்றி விடுகிறீர்கள்.



நான் ஒரு மலரைப் பார்க்கிறேன். உடனே, "இது அழகாக இருக்கிறது" என்று கூறுகிறேன். இப்போது நான் அதை மாற்றிவிட்டேன். இப்போது அந்த மலரின் மீது ஏதோ ஒன்றினை நான் திணித்துவிட்டேன். இப்போது, அந்த மலர் என்னவாக இருந்தாலும்கூட, என்னைப் பொருத்தவரையில், அந்த பூவோடு - அது அழகாக இருக்கிறது என்கிற எனது உணர்வும் சேர்ந்துவிடுகிறது. இப்போது அந்த மலர் என்னைவிட்டு வெகுதொலையில் உள்ளது போல் ஆகிவிடுகிறது. அந்த மலருக்கும் எனக்கும் இடையில் எனது தீர்ப்பளிப்பு; அது அழகாக இருக்கிறது என்னும் எனது மதிப்பீடு வந்துவிடுகிறது. இப்போது அந்த மலர் எனக்கு, முன்பு இருந்த மலராக இருப்பதில்லை. அதன் தன்மை மாறிவிட்டது. நான் அதற்குள் வந்துவிட்டேன். அந்த மலர் என்னும் உண்மைக்குள் எனது தீர்ப்பு ஊடுருவிச் சென்றுவிட்டது. இப்போது, அந்த மலர் கற்பனை அதிகமாகவும், உண்மை கொஞ்சமாகவும் உள்ளதாக ஆகிவிடுகிறது.

அந்த மலர் அழகாக இருக்கிறது என்கிற உணர்வு அந்த மலருக்குச் சொந்தமானது அல்ல; அது எனக்குச் சொந்தமானது. நான் அந்த உண்மைக்குள் நுழைந்துவிட்டேன். இப்போது அந்த உண்மை பரிசுத்தமானதல்ல; நான் அதை களங்கப்படுத்திவிட்டேன். இப்போது எனது மனமானது அதன் ஒரு பகுதியாக ஆகிவிட்டது. உண்மையைச் சொல்லப் போனால், எனது மனம் அதன் ஒரு பகுதியாக ஆகிவிட்டது என்பதற்கு எனது கடந்த கால அனுபவம் அதன் ஒரு பகுதியாக ஆகிவிட்டது என்று தான் அர்த்தமாகும். ஏனெனில், நான், "இந்த மலர் அழகாக இருக்கிறது," என்று கூறும்போது, நான் எனது கடந்த கால அறிவைக் கொண்டு அதை தீர்மானித்துவிட்டேன் என்று தான் பொருள். இந்த மலர் அழகாக இருக்கிறது என்று எப்படி உங்களால் கூற முடியும்? உங்களது கடந்தகால அனுபவங்கள், உங்களது கடந்த கால கருத்துக்கள், இதைப் போன்ற ஒன்று அழகாக இருந்தது என்கிற கருத்து - ஆகிய இந்த கடந்த காலத்தின்படி நீங்கள் தீர்மானித்துவிட்டீர்கள்.

மனம் என்றாலே, உங்களது கடந்த காலம், உங்களது நினைவுகள் என்று தான் அர்த்தம். கடந்த காலம் இப்போது நிகழ்காலத்தின் மீது வந்துவிட்டது. நீங்கள் ஒரு பரிசுத்தமான உண்மையை அழித்துவிட்டீர்கள். இப்போது அது களங்கப்பட்டுவிட்டது. இப்போது அங்கே மலர் இல்லை - மலர் என்பது அதனளவில்உண்மை என்பது

இப்போது அங்கே இல்லை. அது உங்களால் களங்கப்படுத்தப்பட்டு விட்டது; அழிக்கப்பட்டு விட்டது; உங்களது கடந்த காலம் இடையில் வந்துவிட்டது. நீங்கள் அதற்கு பொருள் விளக்கம் கொடுத்துவிட்டீர்கள் - இது தான் சிந்தனை. சிந்தனை என்றால் கடந்த காலத்தை, நிகழ்கால உண்மையின் மீது கொண்டு வந்து வைப்பது என்று அர்த்தமாகும்.

அதனால் தான், சிந்தனை என்பது ஒருபோதும் எந்த ஒரு உண்மைக்கு உங்களை வழி நடத்திச் செல்லாது. ஏனெனில், உண்மை என்பது பரிசுத்தமானது. மேலும் அது, அதன் முழு பரிசுத்தத் தன்மையோடு பார்க்கப்பட வேண்டும். நீங்கள் உங்களது கடந்த காலத்தை அதனுள் கொண்டுவந்து விட்ட அந்த நொடிப்பொழுதிலேயே, நீங்கள் அதை அழித்துவிட்டீர்கள். அதன்பிறகு, அது பொருள் விளக்கமாகத் தான் இருக்குமே தவிர, உண்மையை உணர்ந்ததாக இருக்க முடியாது. நீங்கள் அதை கலைத்துவிட்டீர்கள், அதன் பரிசுத்தம் இழக்கப்பட்டு விட்டது.

> **சிந்தித்தல் என்றால், உங்களது கடந்த காலத்தை உங்களது நிகழ் காலத்திற்குள் கொண்டு வருதல் என்று அர்த்தம். சாட்சிபாவனை என்றால், கடந்த காலம் என்பது கிடையாது; வெறுமனே நிகழ்காலம் மட்டுமே - கடந்த காலத்தை கொண்டு வருவதில்லை என்று அர்த்தமாகும்.**

சிந்தித்தல் என்றால், உங்களது கடந்த காலத்தை உங்களது நிகழ் காலத்திற்குள் கொண்டு வருதல் என்று அர்த்தம். சாட்சிபாவனை என்றால், கடந்த காலம் என்பது கிடையாது; வெறுமனே நிகழ்காலம் மட்டுமே - கடந்த காலத்தை கொண்டு வருவதில்லை என்று அர்த்தமாகும்.

சாட்சிபாவனை என்பது அமைதியான நடவடிக்கை. நீங்கள் அதில் எதையும் செய்வதில்லை - நீங்கள் இருப்பீர்கள்! வெறுமனே நீங்கள் அங்கு இருப்பீர்கள். நீங்கள் அங்கு ஆஜராகி மட்டுமே இருப்பீர்கள். அந்த மலர் அங்கே இருக்கும், நீங்களும் அங்கு இருப்பீர்கள். அதன்பின்னர், அங்கே சாட்சிபாவனை என்னும் உணவும் இருக்கும். ஆனால், அந்த மலர் அங்கே இருந்து, அங்கே நீங்கள் இல்லாமல், உங்களது முழு கடந்த காலமும் இருக்குமேயானால், அதன்பிறகு அங்கே சிந்தித்தல் என்ற உறவு மட்டுமே இருக்கும்.

எனவே, சிந்தித்தலிலிருந்து ஆரம்பியுங்கள். சிந்தனை என்றால் என்ன? அது உங்களது மனதை, அப்போது இருக்கின்ற அந்த



நிகழ்காலத்தில் கொண்டு வருவதாகும். அப்போது நீங்கள் அந்த நிகழ்காலத்தை முழுமையாக தவறவிட்டு விடுவீர்கள். கடந்த காலம், நிகழ்காலத்திற்குள் ஊடுருவிச் சென்றுவிடுகின்ற அந்த நொடிப்பொழுதிலேயே, நீங்கள் அதை தவறவிட்டு விடுகிறீர்கள். நாம், "இந்த மலர் அழகாக இருக்கிறது," என்று கூறும்போது, உண்மையில் அது கடந்த காலமாகிவிடுகிறது. நீங்கள், "இந்த பூ அழகாக இருக்கிறது," என்று கூறும்போது, அது ஒரு கடந்த கால அனுபவமாக ஆகிவிடுகிறது. உங்களுக்கு தெரிந்துவிட்டது, அதை நீங்கள் தீர்ப்பளித்துவிட்டீர்கள்.

அந்த மலரும் அங்கு இருந்து, நீங்களும் அங்கு இருந்தால், இந்த மலர் மிகவும் அழகாக இருக்கிறது என்று சொல்வதற்கும் கூட முடியாது. நீங்கள் நிகழ்காலத்தில் இருக்கும் போது, எந்தவிதமான தீர்ப்பையும் அளிக்க முடியாது. எந்த தீர்மானமும், எந்த தீர்ப்பும் கடந்த காலத்திற்குச் சொந்தமானது தான். நான், "உன்னை நேசிக்கிறேன்," என்று கூறும்போது, அது ஒரு கடந்த கால விஷயமாக ஆகிவிடும். "இந்த மலர் அழகாக இருக்கிறது," என்கிற போது, நான் அதை உணர்ந்துவிட்டேன், நான் தீர்மானித்துவிட்டேன் - அது கடந்த காலம் ஆகிவிட்டது.

சாட்சிபாவனை என்பது எப்போதும் நிகழ்காலத்தில் இருப்பது. ஒருபோதும் கடந்த காலம் ஆகாது. சிந்தனை என்பது எப்போதும் கடந்த காலம் தான். சிந்தனை என்பது உயிரற்றது, சாட்சிபாவனை என்பது உயிர்த்துடிப்புள்ளது. அடுத்தபடியாக, அடுத்த வேறுபாடு ... ... முதலில், சிந்தனை என்பது செயலாற்றுவது, ஏதாவது ஒன்றைச் செய்வது. சாட்சிபாவனை என்பது அமைதியானது, எதையும் செய்யாதது, வெறுமனே இருப்பது. சிந்தனை என்பது எப்போதும் கடந்த காலத்தில் உள்ளது, உயிரற்றது, முடிந்து போன ஒன்று, இப்போது இல்லாத ஒன்று. சாட்சிபாவனை என்பது எப்போதும் நிகழ்காலத்தில் இருப்பது - இருப்பது எதுவோ அது.

ஆகவே, நீங்கள் சிந்தித்துக் கொண்டே இருந்தால், உங்களால் சாட்சிபாவனை என்றால் என்ன என்று ஒருபோதும் அறிந்து கொள்ள முடியாது. நிறுத்துவது, சிந்தனையை நிறுத்துவது, சாட்சிபாவனைக்கு ஒரு ஆரம்பமாக ஆகிறது. நினைத்தல் இல்லாமல் இருப்பது சாட்சியாய் இருத்தல்.

ஆகவே, என்ன செய்ய வேண்டும்? சிந்தித்தல் என்பது நமக்குள் மிகவும் நெடிய பழக்கமாக ஆகிவிட்டது. அது வெறும் எந்திரன் போன்று, இயந்திரம் போன்ற விஷயமாக ஆகிவிட்டது. இப்போது நீங்கள் சிந்திப்பதில்லை, அது உங்களது தீர்மானமாக இப்போது இல்லை, அது ஒரு இயந்திரத்தனமான பழக்கமாக ஆகிவிட்டது. அதைத்

தவிர வேறு எதுவும் உங்களால் செய்ய முடியாது. ஒரு மலர் அங்கே இருந்துவிட்டால் போதும், உடனே சிந்தனை ஆரம்பமாகிவிடும். வார்த்தைகள் இல்லாத அனுபவங்களை நாம் பெறுவதில்லை. சிறு குழந்தைகள் மட்டுமே அதைப் பெறுகின்றன. வார்த்தைகள் இல்லாத அனுபவம் தான் உண்மையான அனுபவம். வாய் வார்த்தைகளாக்குவது அனுபவிப்பதிலிருந்து தப்பிப்பதாகும்.

நான், "இந்த மலர் அழகாக இருக்கிறது," என்று கூறும் போது, இந்த மலர் என்னிடம் இருந்து மறைந்துவிட்டது. இப்போது அங்கு இருப்பது எனது மனம் தான் எனது அக்கறையே தவிர, அந்த மலர் அல்ல. இப்போது இருப்பது, எனது மனதில் உள்ள அந்த மலரின் உருவம் தானே தவிர, அந்த மலர் அல்ல. இப்போது அந்த மலர் எனது மனதில் ஒரு படமாகத் தான் இருக்கிறது. எனது மனதில் ஒரு எண்ணமாகத் தான் இருக்கிறது. மேலும், இப்போது இந்த அனுபவத்தை எனது கடந்த கால அனுபவங்களோடு ஒப்பிட்டுப் பார்த்து என்னால் தீர்ப்பளிக்க முடியும். ஆனால், இப்போது அந்த மலர் அதற்குமேல் அங்கு இருப்பதில்லை.

நீங்கள் வாய் வார்த்தைகளில் கூறும் போது, நீங்கள் அனுபவிப்பதற்குத் தடை வந்துவிடுகிறது. நீங்கள் வார்த்தைகள் இல்லாமல் விழிப்புணர்வுடன் இருந்தால், நீங்கள் திறந்த மனதுடன், எதையும் ஏற்றுக் கொள்கின்ற பக்குவத்துடன் இருக்கிறீர்கள். சாட்சிபாவனை என்பதற்கு அனுபவத்திற்கு உங்களை மூடிக் கொள்ளாமல், தொடர்ந்து உங்களை திறந்து வைத்திருத்தல் என்று அர்த்தம்.

இப்போது என்ன செய்வது? இயந்திரத்தனமான இந்தப் பழக்கமாகிய சிந்தனை, எங்கோ ஒரு இடத்தில் உடைத்தெறியப்பட வேண்டும். எனவே, நீங்கள் எதைச் செய்தாலும், அதை வாய் வார்த்தைகளின்றி செய்வதற்கு முயற்சி செய்யுங்கள். இது கடினம் தான், சிரமம் தான். மேலும், ஆரம்பத்தில் இது முற்றிலும் முடியாத ஒன்று என்று தோன்றும். ஆனால், அது அப்படி அல்ல. இது முடியாத ஒன்று அல்ல - இது கடினமானது தான். நீங்கள் தெருவில் நடந்து செல்கிறீர்கள் - வார்த்தைகளின்றி நடந்து செல்லுங்கள். வெறுமனே நடந்து செல்லுங்கள். அப்படிச் செல்வது ஒரு சிறு நொடிப் பொழுதாக இருந்தாலும் கூட, நீங்கள் ஒரு வேறுபட்ட உலகினை - ஒரு வார்த்தைகள் இல்லாத உலகினை, மனிதன் தனக்குள் உருவாக்கி வைத்துள்ள அந்த மனம் என்னும் உலகு இல்லாமல், வேறு ஒரு உலகினை காண்பீர்கள்.

நீங்கள் சாப்பிடுகிறீர்கள் - உங்களுக்குள் வார்த்தைகளின் ஓட்டம் இன்றி சாப்பிடுங்கள். பொகுஜூ என்பவர் மிகச் சிறந்த ஜென் குரு.



யாரோ ஒருவர் அவரிடம், "உங்களது வழி என்ன, உங்களது பாதை என்ன?" என்று கேட்டார்.

அதற்கு பொகுஜூ, "எனது பாதை மிகவும் எளிமையானது. பசி எடுக்கும் போது நான் சாப்பிடுகிறேன்; தூக்கம் வரும் போது நான் தூங்குகிறேன். இவ்வளவு தான்," என்றார்.

அந்த மனிதன் ஆச்சரியமடைந்தான். அவன் அவரிடம், "நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? நானும் கூடத்தான் சாப்பிடுகிறேன், நானும் கூடத் தூங்குகிறேன். மேலும், எல்லோரும் இதைத் தான் செய்கின்றனர். எனவே, இதை ஒரு பாதை என்று அழைப்பதற்கு அதில் என்ன உள்ளது?" என்றார்.

அதற்கு பொகுஜூ, "நீங்கள் சாப்பிடும் போது, நீங்கள் அநேக விஷயங்களைச் செய்கிறீர்கள். சாப்பிடுவது மட்டுமல்ல, அநேக விஷயங்களைச் செய்கிறீர்கள். மேலும், நீங்கள் தூங்கும் போதும்கூட, தூங்குவதைத் தவிர வேறு எல்லாவற்றையும் செய்கிறீர்கள். ஆனால், நான் சாப்பிடும் போது, நான் வெறுமனே சாப்பிட மட்டுமே செய்கிறேன். நான் தூங்கும் போது, நான் தூங்குவதை மட்டுமே செய்கிறேன். ஒவ்வொரு செயலும் முழுமையாக இருக்கிறது," என்றார்.

நீங்கள் வார்த்தைகள் இன்றி இருக்கும் போது, ஒவ்வொரு செயலும் முழுமையாக இருக்கிறது. ஆகவே, மனதில் எந்த வார்த்தைகளும் இன்றி சாப்பிடுவதற்கு முயற்சி செய்யுங்கள். மனதில் எந்த சிந்தனையும் இல்லாமல் சாப்பிடுங்கள். வெறுமனே சாப்பிடுங்கள். அப்போது, சாப்பிடுவதே தியானம் ஆகிவிடும் - ஏனெனில், நீங்கள் உங்களுக்குள் வார்த்தைகள் இல்லாமல் இருக்கும் போது, நீங்கள் ஒரு சாட்சியாளனாக ஆகி விடுவீர்கள்.

நீங்கள் வார்த்தை சார்ந்து இருந்தால், நீங்கள் ஒரு சிந்திப்பவர் ஆகிவிடுவீர்கள். நீங்கள் வார்த்தை சார்ந்து இல்லாத போது, உங்களால் எதுவும் செய்ய முடியாது. அதற்கு உங்களால் உதவவும் முடியாது - நீங்கள் தானாகவே ஒரு சாட்சியாக இருப்பீர்கள். ஆகவே, எதையும் வார்த்தைகளின்றி செய்வதற்கு முயற்சி செய்யுங்கள். நடந்து செல்லுங்கள், சாப்பிடுங்கள், குளியல் போடுங்கள் அல்லது அமைதியாக உட்காருங்கள். அதன் பிறகு, வெறுமனே உட்கார்ந்திருங்கள். அதன்பிறகு, "உட்கார்ந்திருப்பது" ஆகிவிடுங்கள். எதையும் நினைக்காதீர்கள். அதன் பின்னர், வெறுமனே உட்கார்ந்து இருப்பதுவும் கூட ஒரு தியானம் ஆகிவிடும்; வெறுமனே நடந்து போவதும் கூட தியானம் ஆகிவிடும்.

பொகுஜூவிடம் வேறு யாரோ, "எனக்கு ஏதாவது தியான நுணுக்கத்தைக் கற்றுக் கொடுங்கள்," என்று கேட்டார்.

உடனே பொகுஜூ, "நான் உனக்கு ஒரு தியான நுணுக்கத்தைக் கொடுக்க முடியும். ஆனால், உன்னால் தியானம் செய்ய முடியாது. ஏனெனில், நீங்கள் ஒரு தியான நுணுக்கத்தையும் கூட மனதில் வார்த்தைகளோடு பயிற்சி செய்ய முடியும்," என்றார். உங்களது விரல்கள் ஜெப மாலையை உருட்டிக் கொண்டிருக்கும். ஆனால், நீங்கள் உங்களுக்குள் சிந்தித்துக் கொண்டிருப்பீர்கள். எந்தவிதமான சிந்தனையும் இல்லாமல் உங்களது விரல்கள் ஜெபமாலையை உருட்டினால், அது தியானம் ஆகிவிடும். அதன் பிறகு, உண்மையில், எந்தத் தியான நுணுக்கமும் தேவையில்லை. உங்களது வாழ்க்கை முழுவதுமே தியான நுணுக்கம் ஆகிவிடும். எனவே, பொகுஜூ அவரிடம், "நீங்கள் என்னுடன் இருந்து நான் சொல்வதைக் கவனித்தால் நன்றாக இருக்கும். என்னிடம் எந்த ஒரு தியான வழிமுறையையும் கேட்காதீர்கள். வெறுமனே என்னை கவனியுங்கள். அதன்பிறகு நீங்கள் அறிந்து கொள்வீர்கள்," என்றார்.

அந்த அப்பாவி மனிதன் ஏழு நாட்கள் கவனித்தான். அவன் மேலும் குழப்பமடைய ஆரம்பித்தான். ஏழு நாட்களுக்குப் பிறகு, அவன் அவரிடம் வந்து, "நான் இங்கு வரும்பொழுது கொஞ்சம் தான் குழப்பத்தில் இருந்தேன். இப்போது நான் அதிகம் குழம்பிவிட்டேன். நான் தொடர்ந்து உங்களை ஏழு நாட்கள் கவனித்து வந்துவிட்டேன் - இதில் கவனிப்பதற்கு என்ன இருக்கிறது?" என்று கேட்டான்.

அதற்கு பொகுஜூ, "அப்படியானால், நீ கவனிக்கவில்லை. நான் நடக்கும் போது என்னைப் பார்த்தாயா? நான் வெறுமனே நடக்கிறேன். எனக்கு காலையில் தேநீர் கொண்டு வரும் போது நீ கவனித்தாயா? நான் வெறுமனே தேநீரை எடுத்து குடிக்கிறேன். வெறுமனே குடிப்பது மட்டுமே அங்கு உள்ளது. அங்கே பொகுஜூ இல்லை - வெறுமனே குடிப்பது மட்டுமே உள்ளது. பொகுஜூ இல்லை - வெறுமனே தேநீர் குடிப்பது மட்டும் உள்ளது. நீ அதை கவனித்தாயா? அப்படி நீ கவனித்திருந்தால், அங்கே பொகுஜூ இல்லை என்பதை நீ உணர்ந்திருப்பாய்," என்றார்.

இது கண்ணுக்குத் தெரியாததொரு கருத்து. ஏனெனில், சிந்திப்பவன் அங்கு இருந்தால், அதன்பிறகு அங்கு ஆணவம் இருக்கும்; அதன் பின்னர் நீங்கள் பொகுஜூவாகவோ அல்லது வேறு யாராகவோ இருப்பீர்கள். ஆனால், அங்கே எந்த வார்த்தைகளும் இல்லாமல், எந்த சிந்தனையும் இல்லாமல், வெறும் செயல் மட்டுமே இருந்தால்,



அதன்பிறகு அங்கு ஆணவம் இருக்காது. எனவேதான், பொகுஜூ அவரிடம், "நீ உண்மையிலேயே கவனித்தாயா?" என்று கேட்கிறார். அப்போது அங்கே பொகுஜூ என்பவர் இல்லை - வெறுமனே தேநீர் குடித்தல், தோட்டத்தில் நடத்தல், தரையில் குழி தோண்டுதல் ஆகிய செயல்கள் மட்டுமே இருந்தன.

இதனால் தான் புத்தர், ஆத்மா என்பது இல்லை என்றார். ஏனெனில், நீங்கள் இன்னமும் கவனிக்கவில்லை. உங்களுக்கொரு ஆன்மா இருக்கிறது என்று நீங்கள் தொடர்ந்து நினைத்துக் கொண்டு இருக்கிறீர்கள். நீங்கள் இல்லை! நீங்கள் சாட்சியாளனாக இருந்தால், அதன்பிறகு நீங்கள் இருப்பதில்லை. இந்த 'நான்' என்பது எண்ணங்களினால் தான் உருவெடுக்கிறது.

எனவே, இன்னும் ஒரு விஷயம் : சேர்த்து வைக்கப்பட்ட எண்ணங்கள், குவித்து வைக்கப்பட்ட நினைவுகள், இவைகள் தான் 'நான்' என்னும் உணர்வை, நீங்கள் இருக்கிறீர்கள் என்னும் உணர்வை உருவாக்குகிறது.

இந்தப் பரிசோதனையை முயன்று பாருங்கள் : உங்களது முழு கடந்த காலத்தையும் உங்களிடமிருந்து வெட்டி எறிந்துவிடுங்கள். எந்த நினைவும் இல்லை. உங்களது பெற்றோர்கள் யார் என்று உங்களுக்குத் தெரியாது, நீங்கள் யாருக்குச் சொந்தம் என்று தெரியாது; நீங்கள் எந்த நாட்டை, எந்த மதத்தை, எந்த இனத்தைச் சேர்ந்தவர் என்று உங்களுக்குத் தெரியாது. நீங்கள் எங்கு கல்வி கற்றீர்கள் என்பது தெரியாது; நீங்கள் கற்றவரா அல்லது இல்லையா என்று தெரியாது. உங்களது முழு கடந்த காலத்தையும் வெட்டி எறிந்துவிட்டுப் பாருங்கள் - அதன்பிறகு, நீங்கள் யார் என்று நினைத்துப் பாருங்கள்.

உங்களால் நீங்கள் யார் என்று நினைத்துப் பார்க்க முடியாது. நீங்கள் இருப்பீர்கள், நிச்சயமாக நீங்கள் இருப்பீர்கள். ஆனால், நீங்கள் யார்? இந்த நேரத்தில் நீங்கள் இந்த 'நான்' என்பதை உணர முடியாது.

உங்களது 'நான்' என்னும் ஆணவம் வெறுமனே உங்களது கடந்த கால நினைவுகளின் சேர்க்கை தான். உங்களது ஆணவமானது, கெட்டிப்படுத்தப்பட்ட, சுருக்கப்பட்ட உங்களது எண்ணங்கள் தான்.

எனவே தான், பொகுஜூ, "நீ என்னைக் கவனித்தால் நான் அங்கு இருந்திருக்க மாட்டேன். அங்கு தேநீர் அருந்துகின்ற செயல் மட்டுமே இருக்கும்; தேநீர் குடிப்பவர் அங்கு இருந்திருக்க மாட்டார். தோட்டத்தில் நடப்பது இருந்திருக்கும்; ஆனால், நடப்பவர் இருந்திருக்க மாட்டார். செயல் இருந்திருக்கும்; ஆனால், செய்பவர் இருந்திருக்க மாட்டார்," என்று கூறுகிறார்.

எனவே, சாட்சிபாவனையில் 'நான்' என்னும் உணர்விற்கு இடமில்லை. ஆனால், சிந்தனையில் உள்ளது. எனவே தான், உங்களது சிந்தனாவாதிகள் எல்லாம், அவர்களின் ஆணவத்தில் வேர் ஊன்றி இருக்கிறார்கள். அது வெறும் ஒற்றுமை அல்ல. கலைஞர்கள், சிந்தனையாளர்கள், தத்துவமேதைகள், இலக்கியவாதிகள், இவர்கள் எல்லாம் வெறும் ஆணவக்காரர்களாக இருப்பது, வெறும் ஏதேச்சையானது அல்ல. உங்களிடம் அதிக சிந்தனைகள் இருந்தால், உங்களிடம் மிகப்பெரிய ஆணவம் இருக்கும்.

சாட்சிபாவனையில் ஆணவம் என்பது கிடையாது. ஆனால், இந்த சாட்சிபாவனை, நீங்கள் மொழிகளை எல்லாம் கடந்து செல்லும் போது மட்டுமே வரும். மொழி ஒரு தடை. பிறரோடு தொடர்பு கொள்ள மொழி தேவை; ஒருவர் தன்னோடு தொடர்பு கொள்ள மொழி தேவையில்லை. மொழி என்பது ஒரு பயனுள்ள கருவி. மாறாக, அது ஒரு அதிக பயனுள்ள கருவி. இந்த மொழி என்பது இருப்பதால் தான் மனிதனால் ஒரு சமுதாயத்தை, ஒரு உலகை உருவாக்க முடிந்தது. ஆனால், மொழியினால் மனிதன் தன்னை மறந்துவிட்டான்.

மொழி தான் நமது உலகம். ஒரு சிறு நொடிப்பொழுது மனிதன் அவனது மொழியை மறந்துவிட்டால், அதன்பிறகு இருப்பது என்ன? இந்த கலாச்சாரம், சமூகம், இந்து மதம், கிறிஸ்தவ மதம், கம்யூனிஸம் - என்ன இருக்கும்? ஒன்றும் இருக்காது. இந்த மொழியை மட்டும் இந்த உலகில் இருந்து எடுத்துவிட்டால், அதன்பிறகு இந்த முழு மனித இனத்தின் கலாச்சாரம், நாகரீகம், விஞ்ஞானம், மதம், தத்துவம் இவையெல்லாம் மறைந்து போகும்.

மற்றவர்களோடு தொடர்பு கொள்வது மொழி. அது, வெறும் தொடர்பு கொள்ள மட்டும் தான். அது பயனுள்ளது. ஆனால், அது ஆபத்தானது. மேலும், எந்த ஒரு கருவியும் எந்த அளவுக்கு பயனுள்ளதாக இருக்கிறதோ, அந்த அளவுக்கு அது ஆபத்தானதும் கூட. அந்த அபாயம் இதுதான். நீங்கள் மொழியில் அதிகமாக நகர்ந்து செல்லும் போது, அது உங்களது மையத்தை விட்டுவிட்டு அதிக தூரம் சென்றுவிடும். ஆகவே, ஒருவர் இப்படி மொழிக்குள் நகர்ந்து செல்வதற்கும், அந்த மொழியில் இருந்து வெளியே வருவதற்கும்ஒரு மெல்லிய சமநிலை தேவை.

சாட்சிபாவனை என்றால், இந்த மொழியில் இருந்து, வார்த்தைகளில் இருந்து, மனதிலிருந்து, வெளியே நகர்ந்து வருதல் ன்று அர்த்தம்.



சாட்சிபாவனை என்றால், மனம் என்பது இல்லாத, சிந்தனை என்பது இல்லாத நிலை.

ஆகவே, இதை முயற்சி செய்து பாருங்கள்! இது ஒரு நீண்ட முயற்சி. மேலும், இதில் எதையும் முன்கூட்டியே தீர்மானிக்க முடியாது. ஆனால், முயற்சி செய்யுங்கள். மேலும், உங்களது முயற்சியினால் திடீரென்று சில நேரங்களில் இந்த மொழிகள் மறைந்து போவதைக் காணலாம். அப்போது ஒரு புதிய பரிமாணம் திறக்கும். நீங்கள் ஒரு வேறுபட்ட உலகினை அறிந்து கொள்வீர்கள். உண்மையான உலகை, மனம் என்பது இல்லாத உலகினை, இங்கேயே இப்போதே வாழ்கின்ற உலகினை, ஒரே நேரத்தில் உள்ள உலகினை அறிந்து கொள்வீர்கள்.

மொழிகள் ஆவியாகப் போக வேண்டும். எனவே, சாதாரண செயல்களை, உடல் அசைவுகளுடன், மொழி இல்லாத செயல்களைச் செய்வதற்கு முயற்சி செய்யுங்கள். புத்தர், சுவாசத்தை கவனிப்பதற்கு இந்த தியான நுணுக்கத்தைப் பயன்படுத்தினார். அவர் தனது சீடர்களிடம், "உங்களது சுவாசத்தை கவனித்துக் கொண்டே இருங்கள். வேறு எதுவும் செய்ய வேண்டாம். வெறுமனே உங்களது சுவாசம் உள்ளே வருவதையும், உங்களது சுவாசம் வெளியே செல்வதையும் கவனியுங்கள்," என்று கூறினார். நீங்கள் இதைப் போன்று வாயால் சொல்லக் கூடாது. இதை நீங்கள் உணர வேண்டும். எந்தவிதமான வார்த்தைகளும் இல்லாமல், உங்களது சுவாசம் உள்ளே செல்வதைக் கவனியுங்கள். உள்ளே வரும் சுவாசத்தை உணருங்கள். அந்த சுவாசத்தோடு நகர்ந்து செல்லுங்கள். உங்களது தன்னுணர்வு அந்த சுவாசத்தோடு ஆழ்ந்து செல்லட்டும். அதன்பிறகு அது வெளியே வரட்டும். உங்களது சுவாசத்தோடு, கூடவே நீங்களும் நகர்ந்து செல்லுங்கள். விழிப்புடன் இருங்கள்!

"ஒரு சிறு சுவாசத்தைக் கூட கவனிக்காமல் தவறவிட்டு விடாதீர்கள்" என்று புத்தர் கூறியதாக கூறுப்படுகிறது. உடல் அளவில் ஒருமுறை சுவாசம் நின்றுவிட்டாலே, நீங்கள் இறந்துவிடுவீர்கள். அதே போன்று, விழிப்புணர்வில் நீங்கள் ஒரே ஒரு சுவாசத்தைத் தவற விட்டுவிட்டால், நீங்கள் உங்களது மையத்தை இழந்துவிடுவீர்கள். நீங்கள் உங்களுக்குள் இறந்தவர் ஆகிவிடுவீர்கள். எனவே தான், புத்தர், "இந்த உடலில் உயிர் இருப்பதற்கு சுவாசம் அவசியமாகும். அதே போன்று, உங்களது உள்ளுக்குள் உள்ள மையம் உயிரோடு இருப்பதற்கு இந்த சுவாசம் குறித்த விழிப்புணர்வு அவசியம் தேவை," என்றார்.

சுவாசிக்கும் போது விழிப்புணர்வுடன் இருங்கள். மேலும், நீங்கள் உங்களது சுவாசம் குறித்து விழிப்புணர்வுடன் இருக்க முயற்சி செய்தால்,

உங்களால் சிந்திக்க முடியாது. ஏனெனில், உங்களது மனதினால் ஒரே நேரத்தில் இரண்டு காரியங்களைச் செய்ய முடியாது. அதாவது, சிந்திப்பதையும், சாட்சியாக இருப்பதையும் செய்ய முடியாது. சாட்சிபாவனை என்னும் விஷயமே சிந்தனை என்பதற்கு நேர் எதிரானது. எனவே, நீங்கள் இரண்டையும் செய்ய முடியாது. நீங்கள் ஒரே நேரத்தில் உயிரோடும், இறந்தும் இருக்க முடியாததைப் போல, நீங்கள் தூங்கிக் கொண்டும், விழித்துக் கொண்டும் இருக்க முடியாததைப் போல, உங்களால் சிந்தித்துக் கொண்டும், சாட்சிபாவனையோடும் இருக்க முடியாது. எதை நீங்கள் சாட்சிபாவனையில் பார்த்தாலும், சிந்தனை நின்றுவிடும். சிந்தனை வந்துவிட்டால், சாட்சிபாவனை மறைந்துவிடும்.

சாட்சிபாவனை என்பது அமைதியான விழிப்புணர்வு, உள்ளுக்குள் எந்தவிதமான செயலும் இல்லாத விழிப்புணர்வு. விழிப்புணர்வு என்பதும்கூட, அதனளவில் ஒரு செயல் கிடையாது.

ஒருநாள், முல்லா நஸ்ருதீன் மிகவும் கவலையோடு இருந்தார். ஆழ்ந்த சிந்தனையில் இருந்தார். அவருக்குள் ஏதோ சிந்தனை ஓடிக் கொண்டு, மிகவும் படபடப்புடன், மிகவும் கவலையில் இருப்பதை அவரது முகத்தைப் பார்த்தே யாரும் தெரிந்து கொள்ள முடியும். அவரது மனைவி உஷாரானவள். அவள் அவரிடம், "நஸ்ருதீன், நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? உங்களது பிரச்சனை என்ன? நீங்கள் ஏன் இப்படி கவலையோடு இருக்கிறீர்கள்," என்று கேட்டாள்.

முல்லா தனது கண்களைத் திறந்து அவளிடம், "இதுதான் இறுதியான பிரச்சனை. ஒருவன் இறந்துவிட்டான் என்பதை அவன் எப்படி அறிவது என்று சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். ஒருவன், தான் இறந்துவிட்டான் என்பதை அவன் அறிவது எப்படி? நான் இறந்து போனால், நான் இறந்து போய்விட்டேன் என்று நான் அறிந்து கொள்வது எப்படி? ஏனெனில், எனக்கு மரணம் என்றால் என்ன என்று தெரியாது. அறிதல் என்றால், ஏதோ ஒன்றினை நீங்கள் முன்பே அறிந்து கொள்ளுதல் என்று தானே அர்த்தம்.

நான் உங்களை எல்லாம் அறிந்து கொண்டுள்ளதால் தான், உங்களை நீங்கள் A அல்லது B அல்லது C என்று என்னால் அறிந்து கொள்ள முடிகிறது. ஆனால், மரணத்தை நான் அறியவில்லையே!" என்று முல்லா கூறினார். "மேலும், அது வரும் போது நான் எப்படி அதை அடையாளம் கண்டு கொள்ள முடியும்? இதுதான் பிரச்சனை. மேலும், இதனால் நான் மிகவும் கவலையில் ஆழ்ந்துள்ளேன். மேலும், நான் இறந்துவிடும் போது நான் யாரிடமும் கேட்கவும் முடியாது. எனவே, எல்லா கதவும் மூடப்பட்டு விட்டது. என்னால் எந்த புனித நூல்களையும்



புரட்டிப் பார்க்க முடியாது, எந்த குருவும் இதற்கு உதவ மாட்டார்கள்," என்றார்.

அவரது மனைவி சிரித்துக் கொண்டு அவரிடம், "நீங்கள் ஏன் தேவையில்லாமல் கவலைப்படுகிறீர்கள். மரணம் வந்துவிட்டால், அதை ஒருவர் உடனடியாக அறிந்து கொள்ள முடியும். உங்களுக்கு மரணம் வரும் போது, அதை நீங்கள் அறிந்து கொள்ள முடியும். ஏனெனில், நீங்கள் குளிர்ச்சி அடைந்துவிடுவீர்கள். வெறும் பனிக்கட்டி போல் குளிர்ச்சி அடைந்து விடுவீர்கள்," என்றாள். முல்லா கொஞ்சம் நிம்மதியானார். ஏதோ ஒரு அறிகுறி, ஒரு சாவி, அவரது கையில் இருப்பதாக நினைத்து நிம்மதியானார்.

அதன்பின்னர், மூன்று அல்லது நான்கு மாதங்கள் கழித்து, அவர் காட்டில் மரம் வெட்டிக் கொண்டிருந்தார். அது ஒரு குளிர்காலக் காலைப்பொழுதாக இருந்ததால், எல்லாமே குளிர்ந்து போய் இருந்தது. திடீரென்று அவருக்கு ஞாபகம் வந்துவிட்டது. உடனே அவர், தனது கைகளைத் தொட்டுப் பார்த்தார். அவைகள் குளிர்ந்து போய் இருந்தன. உடனே அவர், "சரி! இப்போது மரணம் வருகிறது. ஆனால், இப்போது நான் வீட்டிலிருந்து வெகுதூரத்தில் இருக்கிறேன். என்னால் யாருக்கும் சொல்ல முடியாது. இப்போது நான் என்ன செய்வேன்? நான் என் மனைவியிடம் கேட்பதற்கு மறந்துவிட்டேன். அவள், மரணம் வரும்போது ஒருவர் எப்படி உணர்வார் என்று கூறினாள். ஆனால், மரணம் வரும் போது ஒருவர் என்ன செய்ய வேண்டும் என்று அவள் கூறவில்லையே? இப்போது, இங்கே யாரும் இல்லையே. மேலும், எல்லாமே குளிர்ந்து போய்க் கொண்டிருக்கிறதே," என்று முல்லா புலம்பினார்.

அதன்பிறகு, அவருக்கு ஞாபகம் வந்தது. அநேகம் பேர் இறந்ததை அவர் பார்த்திருக்கிறார். எனவே அவர், "இப்போது நாம் படுத்துவிடுவது நல்லது," என்று எண்ணினார். இறந்தவர்கள் படுத்துக் கிடப்பதைத் தான் அவர் பார்த்துள்ளார். எனவே, அவரும் கீழே படுத்தார். இப்போது, அவர் இன்னும் அதிக குளிரை உணர்ந்தார். எனவே, மரணம் அவர்மீது இருப்பதாக உணர்ந்தார். அவரது கழுதை அவருக்கு அருகில் மரத்தின் அடியில் நின்று கொண்டிருந்தது. இரண்டு நரிகள், முல்லா இறந்துவிட்டார் என்று நினைத்துக் கொண்டு, அவரது கழுதையைத் தாக்கின. முல்லா கண்களைத் திறந்து பார்த்துக் கொண்டு, "இறந்து போன மனிதர்கள் எதுவும் செய்ய முடியாது. நான் உயிரோடு இருந்திருந்தால், ஏய் நரிகளே, நீங்கள் இந்த அளவுக்கு எனது கழுதையோடு சுதந்திரமாகத் தாக்குதல் நடத்த மாட்டீர்கள். ஆனால்,

இப்போது என்னால் எதுவும் செய்ய இயலாது. இறந்தவர்கள் எதையும் செய்ததாக ஒருபோதும் சொல்லப்படவில்லை. எனவே, நான் வெறும் சாட்சியாக மட்டுமே இருக்க முடியும்," என்றார்.

நீங்களும் உங்களது கடந்த காலத்தோடு, இறந்து போனவர்களாக, முற்றிலும் இறந்து போனவர்களாக ஆகிவிட்டால், அதன்பின்னர் உங்களால் வெறுமனே சாட்சியாளனாக மட்டுமே இருக்க முடியும். சாட்சிபாவனை என்றால், உங்களது கடந்த காலத்திற்கு உங்களது நினைவுகள், எண்ணங்கள் எல்லாவற்றிலும் இறந்தவர் ஆகிவிடுவது என்று அர்த்தம். அதன்பிறகு, இருக்கின்ற அந்த நிகழ்காலத்தில் நீங்கள் என்ன செய்ய முடியும்? உங்களால் வெறும் சாட்சியாகத் தான் இருக்க முடியும். எந்தவிதமான தீர்மானமும் எடுக்க முடியாது. கடந்தகால அனுபவங்கள் இருந்தால் தான் எந்த ஒரு தீர்மானமும் எடுக்க முடியும். எந்தவிதமான மதிப்பீடும் செய்ய முடியாது. ஏனெனில், மதிப்பீடு என்பது உங்களது கடந்த கால மதிப்பீட்டு அனுபவங்கள் இருந்தால் மட்டுமே சாத்தியமாகும். சிந்தனை என்பது முடியாது. ஏனெனில், உங்களது கடந்த காலம் என்பது இருந்தால்தான் உங்களால் சிந்திக்க முடியும். கடந்த காலம் இருந்தால் தான், அதை இப்போதுள்ள நிகழ்காலத்திற்கு கொண்டுவர முடியும். எனவே, உங்களால் என்ன செய்ய முடியும்? உங்களால் சாட்சியாகத் தான் இருக்க முடியும்.

சமஸ்கிருத இலக்கியத்தில், ஆசிரியர் என்பவர் 'மரணம்' என்று விவரிக்கப்படுகிறார். ஆச்சார்ய மிருத்யூ என்பது அது. கட உபநிடத்தில், மரணத்தின் கடவுளாகிய யமனிடம் நசிகேதன் என்பவர் கல்வி கற்பதற்கு அனுப்பப்படுகிறார். அப்போது, மரணத்தின் கடவுளாகிய யமன், நசிகேதனிடம் அநேகவிதமான வசீகரப் பொருட்களை காட்டி, "இதை எடுத்துக் கொள். இந்த ராஜ்ஜியத்தை எடுத்துக் கொள். வேண்டிய அளவு செல்வத்தை எடுத்துக் கொள். அநேக குதிரைகளை எடுத்துக் கொள். அநேக யானைகளை எடுத்துக் கொள், இதை எடுத்துக் கொள், அதை எடுத்துக் கொள்," என்று ஒரு பெரிய பட்டியலையே கூறுகிறார். ஆனால் அதற்கு நசிகேதன், "நான் மரணம் என்றால் என்ன என்று கற்றுக் கொள்ள வந்திருக்கிறேன். ஏனெனில், நான் மரணம் என்றால் என்ன என்று அறியாதவரையில், என்னால் வாழ்க்கை என்றால் என்ன என்று அறிந்து கொள்ள முடியாது," என்கிறான்.

எனவே, பழைய காலங்களிலே, ஆசிரியர் என்பவர் ஒரு சீடருக்கு மரணம் போல ஆகிவிடுகிறார் என்று அறிந்து கொள்ளப்பட்டது. அந்த ஆச்சாரியார் தான் உங்களுக்கு மரணத்தை கற்பிக்க முடியும். ஏனெனில், அப்போது தான் நீங்கள் மீண்டும் மறுபிறவு எடுக்க முடியும். நிகோடாமஸ், இயேசுவிடம், "நான் கடவுளின் ராஜ்ஜியத்தை அடைவது



எப்படி?" என்று கேட்கிறார். அதற்கு இயேசு, "முதலில் நீ மரிக்க வேண்டும். அதற்கு முன்பு எதையும் அடைய முடியாது. நீ மீண்டும் பிறக்காத வரையில் எதுவும் அடைய முடியாது," என்று கூறுகிறார்.

ஆனால், இப்படி நீங்கள் மறுபிறவி எடுப்பது என்பது ஒரு நிகழ்ச்சி அல்ல. இது ஒரு தொடர் செயல்முறை. ஒருவன் ஒவ்வொரு நொடிப்பொழுதும் மறுபடியும் பிறக்க வேண்டும். நீங்கள் ஒருதடவை மறுபிறவி எடுத்துவிட்டால் போதும். அத்தோடு எல்லாம் சரியாக முடிந்துவிடும் என்பதல்ல அது. வாழ்வு என்பது தொடர்ச்சியானது. மேலும், சாவும் தொடர்ச்சியானது தான். நீங்கள் ஒருமுறை சாக வேண்டும். ஏனெனில், நீங்கள் வாழவே இல்லை. நீங்கள் வாழ்ந்தால், அதன்பிறகு ஒவ்வொரு நொடிப்பொழுதும் நீங்கள் சாக வேண்டும். ஒவ்வொரு நொடிப் பொழுதிலும் கடந்த காலத்தை விட்டு மரணமடையுங்கள். அது எப்படிப்பட்டதாக இருந்தாலும், அது ஒரு சொர்க்கமோ அல்லது அது ஒரு நரகமோ, அது எதுவாக இருந்தாலும் அதற்கு மரணம் அடையுங்கள். மீண்டும் புத்துணர்வுடன், இளமையுடன், அந்த நொடிப்பொழுதில் மீண்டும் பிறவி எடுங்கள். இப்போதைய பொழுதை சாட்சியாக இருந்து பாருங்கள். நீங்கள் புத்துணர்ச்சியுடன் இருந்தால், உங்களால் இப்போதைய பொழுதில் சாட்சியாக மட்டுமே இருக்க முடியும்.

## மன இறுக்கமும் ஓய்வும்

இப்போது ஒரே ஒரு விஷயத்தைப் புரிந்து கொள்ள வேண்டும். மனோவசியம் செய்பவர்கள், ஒரு அடிப்படை விதியைக் கண்டுபிடித்துள்ளார்கள். அவர்கள் அந்த விதியை, எதிரிடை விதி என்று அழைக்கிறார்கள். ஒன்றின் அடிப்படைகளைப் புரிந்து கொள்ளாமல் நீங்கள் ஏதாவது செய்வதற்கு, நீங்கள் கடின முயற்சி மேற்கொண்டால், வெறுமனே அதற்கு எதிரான முடிவு தான் ஏற்படும்.

இது, நீங்கள் ஒரு சைக்கிளை முதன்முதலாக ஓட்டுவதற்கு கற்றுக் கொள்வதைப் போன்றது. அப்படிக் கற்றுக் கொடுக்கும் போது, நீங்கள் ஒரு அமைதியான, போக்குவரத்து இல்லாத சாலையில், அதிகாலையில் ஓட்டக் கற்றுக் கொண்டிருக்கிறீர்கள். அப்போது நீங்கள் சாலையின் ஓரத்தில் சிவப்பு நிறத்தில் நிறுத்தப்பட்டுள்ள மைல்கல்லைப் பார்க்கிறீர்கள். சாலையோ அறுபது அடி நீளம் இருக்கும். ஆனால், அந்த மைல்கல் மிகவும் சிறியதாக சாலை ஓரத்தில் நிற்கும். ஆனால், நீங்கள் அதைப் பார்த்து பயப்படுவீர்கள். நீங்கள் சைக்கிளில் அந்த மைல்கல்லில்

மோதி விடுவோமோ என்று பயப்படுவீர்கள். இப்போது நீங்கள் அந்த அறுபது அடி சாலையை மறந்துவிடுங்கள். உண்மையில், கண்ணைக் கட்டிக் கொண்டு சென்றாலும்கூட அந்த மைல்கல்லில் மோதுவதற்கு அதிக சந்தர்ப்பம் கிடையாது. ஆனால், இப்போதோ கண்களைத் திறந்து கொண்டு இருக்கும் போதே அந்த அறுபது அடி சாலை மறக்கப்பட்டு, உங்களது மனம் அந்த மைல்கல்லின் மீது குவிக்கப்பட்டுவிட்டது. முதலில், அதன் சிவப்பு நிறம் மனதில் குவிகிறது. எனவே, நீங்கள் அதைப் பார்த்துப் பயப்படுகிறீர்கள். எனவே, அதன்மீது மோதுவதைத் தவிர்ப்பதற்கு நீங்கள் விரும்புகிறீர்கள். நீங்கள் ஒரு சைக்கிளின் மீது இருப்பதையும் மறந்துவிடுவீர்கள். நீங்கள் எல்லாவற்றையும் மறந்துவிடுவீர்கள். இப்போது, உங்களுக்கு உள்ள ஒரே ஒரு பிரச்சனை, அந்த மைல்கல்லில் மோதாமல் இருப்பது எப்படி என்பது தான். இல்லையெனில், அதன் மீது மோதி உங்களது கை காலை உடைத்துக் கொள்ள முடியும்.

இப்போது, நீங்கள் அந்த மைல்கல்லின் மீது மோதுவது தவிர்க்க முடியாமல் போய்விடும். நீங்கள் நிச்சயம் அந்த கல்லின் மீது மோதிவிடுவீர்கள். அதன்பிறகு நீங்களே, "நான் இந்தக் கல்லின் மீது இடிக்காமல் இருப்பதற்கு கவனமாக முயற்சி செய்தேன். என்றாலும், தோற்றுவிட்டேன்," என்று நினைத்து ஆச்சரியப்படுவீர்கள். உண்மையில், நீங்கள் கடினமாக முயற்சி செய்ததால் தான் நீங்கள் அந்தக் கல்லின் மீது மோதினீர்கள். நீங்கள் அதை நெருங்கி வர வர, அதன் மீது மோதாமல் இருப்பதற்கு நீங்கள் கடினமாக முயற்சி செய்தீர்கள். ஆனால், எந்த அளவுக்கு நீங்கள் அந்தக் கல்லை தவிர்த்துவிட முயற்சி செய்தீர்களோ, அந்த அளவுக்கு உங்களது மனமும் அதன் மீது குவிந்துவிட்டது. அது ஒரு மனோவசிய சக்தியாக ஆகிவிட்டது. அது உங்களை மனோவசியம் செய்துவிட்டது. அது ஒரு காந்தம் போல் ஆகிவிட்டது.

இது வாழ்க்கையின் ஒரு அடிப்படை விதி. அநேக மக்கள், அநேக விஷயங்களை தவிர்ப்பதற்கு விரும்புகின்றனர். ஆனால், அவர்கள் அதே விஷயங்களில் விழுந்து விடுகிறார்கள். அதிக முயற்சி செய்து, ஏதாவது ஒன்றைத் தவிர்த்துவிடப் பாருங்கள், நிச்சயமாக நீங்கள் அதே குழியில் விழுந்துவிடுவீர்கள். அதை நீங்கள் தவிர்க்க முடியாது. அதை தவிர்ப்பதற்கான வழி அது அல்ல.

ஓய்வாக இருங்கள். கடின முயற்சி செய்யாதீர்கள். ஏனெனில், ஓய்வாக இருப்பதன் மூலமே நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்க முடியும். கடினமாக முயற்சி செய்வதால் இருக்க முடியாது. எனவே, அமைதியாக, ஓய்வாக, அடக்கமாக இருங்கள்.



பதற்றம் என்பது என்ன? பதற்றம் என்பது நீங்கள், உங்களது எண்ணங்கள், பயங்கள் இவற்றோடு உங்களை ஐக்கியப்படுத்திக் கொள்வதாகும். மரணம், திவால், டாலர் மதிப்பு வீழ்ச்சி, இப்படி எல்லாவிதமான பயமும் இருக்கிறது. இவைகள் தான் உங்களது பதற்றம். மேலும், இவை உங்களது உடலையும் பாதிக்கின்றன. உங்களது உடலும் பதற்றம் அடைகிறது. ஏனெனில், உடல் மற்றும் மனம் என்பது, இரண்டும் தனித்தனியாக இருப்பவை அல்ல. உடல் மனம் என்பது ஒரே அமைப்பு தான். ஆகவே, மனம் பதற்றம் அடையும் போது, உங்களது உடலும் பதற்றம் அடைகிறது.

நீங்கள் முதலில் விழிப்புணர்வுடன் ஆரம்பிக்கலாம்; அதன்பின்னர், இந்த விழிப்புணர்வு உங்களை உங்களது மனத்திலிருந்தும், மனதோடு உங்களை ஐக்கியப்படுத்திக் கொள்வதில் இருந்தும் வெளியே எடுத்துவிடுகிறது. உடனே, இயல்பாக உங்களது உடல் ஒய்வுடன் இருக்க ஆரம்பித்துவிடும். அப்போது நீங்கள் எதோடும் பற்றிக் கொண்டு இருக்க மாட்டீர்கள். மேலும், விழிப்புணர்வு என்னும் வெளிச்சத்தில் பதற்றம் என்பது இருக்க முடியாது.

அதே போன்று, நீங்கள் அடுத்த பக்கத்தில் இருந்தும் ஆரம்பிக்கலாம். வெறுமனே தளர்வுடன் இருங்கள், அப்போது ஒய்வுடன் இருங்கள். தானாகவே எல்லாப் பதற்றமும் விட்டு விலகிவிடும். மேலும், நீங்கள் ஒய்வாக இருக்க ஆரம்பித்து விட்டால், உங்களுக்குள் ஒரு குறிப்பிட்ட விழிப்புணர்வு எழுவதைக் கண்டு நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். அவைகள் பிரிக்க முடியாதவை. ஆனால், விழிப்புணர்வில் இருந்து ஆரம்பிப்பது சுலபம், ஒய்வாக இருப்பதில் இருந்து ஆரம்பிப்பது கொஞ்சம் கடினம். ஏனெனில், நீங்கள் ஒய்வாக இருக்க வேண்டும் என்பதற்காக நீங்கள் எடுக்கின்ற முயற்சியே, ஒரு குறிப்பிட்ட பதற்றத்தைக் கொடுத்துவிடும்.



**நீங்கள் ஒய்வாக இருக்க ஆரம்பித்துவிட்டால், உங்களுக்குள் ஒரு குறிப்பிட்ட விழிப்புணர்வு எழுவதைக் கண்டு நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். அவைகள் பிரிக்க முடியாதவை. ஆனால், விழிப்புணர்வில் இருந்து ஆரம்பிப்பது சுலபம், ஒய்வாக இருப்பதில் இருந்து ஆரம்பிப்பது கொஞ்சம் கடினம். ஏனெனில், நீங்கள் ஒய்வாக இருக்க வேண்டும் என்பதற்காக நீங்கள் எடுக்கின்ற முயற்சியே, ஒரு குறிப்பிட்ட பதற்றத்தைக் கொடுத்துவிடும்.**



அமெரிக்காவில் ஒரு புத்தகம் உள்ளது - நீங்கள் முட்டாள்தனமான புத்தகங்களை கண்டு கொள்ள விரும்பினால், அதற்கான இடம் அமெரிக்கா தான். அந்தப் புத்தகத்தின் தலைப்பைப் பார்த்த மாத்திரத்திலேயே, என்னால் அதை நம்ப முடியவில்லை. அந்தப் புத்தகத்தின் தலைப்பு You must Relax (நீங்கள் கண்டிப்பாக ஒய்வுடன் இருக்க வேண்டும்) இப்போது, அங்கே must (கண்டிப்பாக) என்பது இருந்தால், உங்களால் எப்படி ஒய்வுடன் இருக்க முடியும்? அந்த (கண்டிப்பாக) என்பதே உங்களைப் பதற்றமாக்கிவிடும். அந்த வார்த்தையே உடனடியாக உங்களிடம் பதற்றத்தை ஏற்படுத்திவிடும். அந்த கண்டிப்பாக என்னும் வார்த்தை, ஏதோ கடவுளிம் இருந்து வந்த வார்த்தை போல் பதற்றம் அடைந்துவிடுவீர்கள். ஒருவேளை, அந்தப் புத்தகத்தை எழுதியவர், ஒய்வாக இருப்பது என்பதைப் பற்றியும், ஒய்வாக இருப்பதில் உள்ள சிக்கல்கள் பற்றியும் ஒன்றுமே அறியாதவர் போல் தெரிகிறது.

கீழைநாடுகளில் நாங்கள் ஒய்வாக இருப்பதில் இருந்து ஒருபோதும் தியானத்தை ஆரம்பித்ததில்லை. நாங்கள் விழிப்புணர்வில் இருந்து தான் தியானத்தை ஆரம்பிக்கிறோம். அதன்பிறகு, ஒய்வு என்பது அதுவாகவே, தானாக வந்து விடுகிறது; நீங்கள் ஒய்வை கொண்டு வர வேண்டியதில்லை. நீங்கள் அதைக் கொண்டுவர வேண்டுமெனில், அங்கே ஒருவித பதற்றம் இருக்கும். அது தானாகவே வரவேண்டும். அப்போது தான் அது சுத்தமான ஒய்வு நிலையாக இருக்கும். மேலும், அது வரும்.

நீங்கள் விரும்பினால், நீங்கள் முதலில் ஒய்வாக இருப்பதில் இருந்தே கூட ஆரம்பிக்கலாம். ஆனால், அந்த அமெரிக்க அறிவுரையாளர்களைப் போல இருக்காதீர்கள். நமது உள் உலக அனுபவத்தைப் பொருத்தமட்டில், இந்த பூமியில் அமெரிக்கா மிகவும் குழந்தைத்தனமான இடத்தில் உள்ளது. ஐரோப்பா கொஞ்சம் வயதானதாக உள்ளது. ஆனால், கீழை நாடுகள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இந்த அக ஆன்மாவின் தேடுதலில் வாழ்ந்து வருகிறது.

அமெரிக்காவானது, நாடு என்று பார்த்துக் கொண்டால், அதற்கு 300 வருடங்கள் மட்டுமே ஆகிறது. எனவே, அந்த 300 வருடங்கள் என்பது பெரிய விஷயம் அல்ல. எனவே, அமெரிக்கா தான் இந்த உலகிற்கு மிகப்பெரிய அபாயம். குழந்தைகளின் கையில் அணு ஆயுதங்கள் ... ... ரஷ்யா கொஞ்சம் அதிக பகுத்தறிவுடன் நடந்து கொள்ளும்; அது ஒரு வயதான பழைமை வாய்ந்த நாடு. மேலும், அதற்கு ஒரு நீண்ட வரலாற்றின் அனுபவமும் உள்ளது. அமெரிக்காவிற்கு என்று எந்த சரித்திரமும் கிடையாது. அங்குள்ள



ஒவ்வொருவருக்கும் அவர்களின் தந்தையின் பெயர், தந்தையின் முன்னோர்கள் பெயர் ஆகியவை தான் தெரியும். அவ்வளவு தான். அங்கே அவர்களின் குடும்ப மரத்தின் கிளைகள் நின்றுவிடும்.

அமெரிக்கா வெறும் கைக்குழந்தை தான் சரியாக சொன்னால் கைக்குழந்தை கூட அல்ல; அது இன்னும் கருவறையில் தான் உள்ளது. இந்தியா மற்றும் சீனாவில் உள்ள சமுதாயங்களோடு ஒப்பிடும் போது, அமெரிக்கா இப்போது தான் கருவுற்றிருப்பது போன்றது. எனவே, இந்த மக்களிடம் அணு ஆயுதங்களைக் கொடுப்பது மிகவும் ஆபத்தானது.

இங்கே அரசியல், மத, சமூக மற்றும் பொருளாதார பிரச்சனைகள் உள்ளன. அவைகள் எல்லாம் உங்களை துன்புறுத்திக் கொண்டிருக்கின்றன. ஆகவே, முதலில் ஒய்வுடன் இருப்பதில் இருந்து ஆரம்பிப்பது கடினமானது; அதனால் தான் கீழைநாடுகளில் நாங்கள் முதலில் ஒய்வுடன் இருப்பதில் இருந்து ஆரம்பிப்பதில்லை. ஆனால், நீங்கள் அப்படி ஆரம்பிக்க விரும்பினால், நீங்கள் எப்படி ஆரம்பிக்க வேண்டும் என்று என்னிடம் சில கருத்துக்கள் உள்ளன. நான், மேலைநாட்டு மக்களிடம் பழகி வந்துள்ளேன். மேலும், அவர்கள் இந்த கீழைநாட்டிற்குச் சொந்தமானவர்கள் அல்ல என்பதையும், அவர்களுக்கு நமது கீழைநாட்டின் தன்னுணர்வு என்னும் சக்தியினைப் பற்றி தெரியாது என்பதையும் நான் அறிவேன். விழிப்புணர்வு என்று எதையும் ஒருபோதும் அறிந்திராத, ஒரு வித்தியாசமான பாரம்பரியத்தில் இருந்து அவர்கள் வந்திருக்கிறார்கள்.

இப்படிப்பட்ட மேலைநாட்டினருக்காக, நான் Dynamic Meditation (டைனமிக் தியானம்) போன்ற தியானங்களை உருவாக்கி இருக்கிறேன். மேலும், தியான முகாம்களை நான் நடத்தி வந்த போது, நான் ஜிப்ரிஷ் தியானம் மற்றும் குண்டலினிதியானம் ஆகியவற்றையும் பயன்படுத்தியுள்ளேன். எனவே, நீங்கள் ஆரம்பத்தில் ஒய்வாக தியானம் செய்வதை ஆரம்பிக்க வேண்டும் என்றால், அதன்பிறகு முதலில் மேற்கூறிய தியானங்களை நீங்கள் செய்ய வேண்டும். அவைகள் உங்களது மனதிலும், உடலிலும் உள்ள பதற்றத்தை எடுத்துவிடுவதால், அதன்பிறகு நீங்கள் ஒய்வுடன் இருப்பது சுலபம். நீங்கள் உங்களுக்குள் எவ்வளவு விஷயங்களை உள்ளடக்கி வைத்திருக்கிறீர்கள் என்பது உங்களுக்குத் தெரியாது. எனவே, அந்த விஷயங்கள் தான் உங்களின் பதற்றத்திற்கு காரணங்கள்.

நான் மலைப்பிரதேசங்களில் ஜிப்ரிஷ் தியானத்தை நடத்தும் போது ... ... இந்த தியானத்தை நகரங்களில் அனுமதிப்பது கடினம். ஏனெனில், உங்களுக்குப் பக்கத்தில் வசிப்பவர்களுக்கு பைத்தியம் பிடித்துவிடும். அவர்கள் உடனே காவல்துறைக்கு தொலைபேசியில், "எங்களது முழு

வாழ்க்கையும் நாசமாகிக் கொண்டிருக்கிறது," என்று புகார் கொடுத்துவிடுவார்கள். அவர்களும், அவர்களுடைய வீடுகளில் இந்த தியானத்தைச் செய்தால், இப்போது அவர்கள் வாழ்ந்த கொண்டிருக்கும் அந்த பைத்தியக்காரத்தனத்திலிருந்து வெளிவந்து விடலாம் என்பதை அந்தப் பக்கத்து வீட்டு மக்கள் அறிய மாட்டார்கள். அவர்களது பைத்தியக்காரத்தனமே முதலில் அவர்களுக்குத் தெரியாது.

ஜிப்ரிஷ் தியானம் என்பது ஒவ்வொருவரும் தங்களது மனதிற்குள் என்னவெல்லாம் வருகிறதோ, அதையெல்லாம் சத்தமாக வெளியே சொல்வதற்கு அனுமதிப்பதாகும். மேலும், இப்படி மக்கள் சம்பந்தம் இல்லாமல், முட்டாள்தனமாக உளருவதைக் கேட்பதற்கு மிகவும் சந்தோஷமாக இருக்கும். ஏனெனில், அப்போது நான் மட்டுமே சாட்சியாக இருப்பேன். மக்கள் எல்லாவிதமான விஷயங்களையும் செய்து கொண்டிருப்பார்கள். மேலும், இதில் உள்ள ஒரே ஒரு நிபந்தனை என்னவென்றால், நீங்கள் வேறு யாரையும் தொடக்கூடாது என்பது தான். நீங்கள் என்னவெல்லாம் செய்ய விரும்புகிறீர்களோ, அதையெல்லாம் நீங்கள் செய்யலாம் - சிலர் தலைகீழாக நின்று கொண்டிருப்பார்கள், சிலர் தங்களது ஆடைகளை கழற்றி எறிந்துவிட்டு நிர்வாணமாக இருப்பார்கள், சுற்றிலும் ஓடிக் கொண்டும் இருப்பார்கள். அந்த ஒருமணி நேரமும் இப்படி இருப்பார்கள்.

அப்போது, ஒருவர் எனது முன்னால் உட்கார்ந்திருப்பது வழக்கம். அவர் ஒரு பங்குச் சந்தை தரகரோ அல்லது வேறு எதுவோ தெரியாது. ஆனால், தியானம் ஆரம்பித்த உடன், முதலில், அவர் சிரிப்பார். அவர் என்ன செய்யப் போகிறார் என்பதை நினைத்து அவரே சிரிப்பார். அதன்பின்னர், தனது தொலைபேசியை எடுத்து 'ஹலோ, ஹலோ...' என்று பேசுவார். அவரது ஓரக்கண்ணால் என்னையும் பார்த்துக் கொண்டே இருப்பார். நானும், அவரது தியானத்தை தொந்தரவு செய்யக் கூடாது என்பதற்காக, அவரைப் பார்ப்பதைத் தவிர்த்துவிடுவேன். அவர், தொலைபேசியில் அவரது பங்குச் சந்தை பங்குகளை விற்பார், வாங்குவார் ... ... அந்த ஒருமணி நேரமும் அவர் தொலைபேசியில் பேசிக் கொண்டே இருப்பார்.

ஒவ்வொருவரும் இதுவரை தாங்கள் உள்ளடக்கி வைத்திருந்த விநோதமான செயல்களைச் செய்வார்கள். அந்த தியானம் முடியும் போது, அதில் பத்து நிமிட ஓய்வு இருக்கும். மேலும், அப்போது அந்த பத்து நிமிடத்தில் அந்த மக்கள் முற்றிலும் களைப்பாக இருப்பதால், எந்தவிதமான முயற்சியும் இல்லாமல் கீழே படுத்துக் கிடப்பதைக் காண முடியும். எல்லாக் குப்பைகளும் வெளியேற்றப்பட்டு விட்டதால், அவர்களுக்குள் ஒரு சுத்தமான தன்மை உருவாகிவிடுவதால், அவர்கள்



ஓய்வுடன் இருப்பார்கள். ஆயிரக்கணக்கான மக்கள் இருப்பார்கள். ஆனால், உங்களால் அங்கு ஆயிரக்கணக்கானவர்கள் இருக்கிறார்கள் என்பதை நினைத்துக்கூட பார்க்க முடியாது.

மக்கள் என்னிடம் வந்து, "அந்த பத்து நிமிடத்தை இன்னும் கொஞ்சம் நீட்டியுங்களேன். ஏனெனில், எங்களது வாழ்நாளில் இது போன்ற ஒரு ஓய்வு நிலையை நாங்கள் ஒருபோதும் பார்த்ததில்லை. அந்த அளவுக்கு சந்தோஷமாக இருந்தது. விழிப்புணர்வு என்றால் என்னவென்று நாம் எப்போதாவது புரிந்து கொள்வோம் என்று நாங்கள் ஒருபோதும் நினைத்ததில்லை. ஆனால், அந்த விழிப்புணர்வு வருவதை எங்களால் உணர முடிந்தது," என்று கூறுவார்கள்.

ஜிப்பிரிஷ் என்கிற இந்த வார்த்தை எங்கிருந்து வந்தது என்று நீங்கள் அறியாமல் இருக்கலாம். இது, ஜாப்பர் என்னும் சூபி ஞானியின் பெயரில் இருந்து வந்தது. மேலும், அதுதான் அந்த ஞானியின் தியானமாகவும் இருந்தது. யார் அவரிடம் வந்தாலும், அவர்களிடம் அவர், "கீழே உட்காருங்கள். இப்போது ஆரம்பியுங்கள்," என்று கூறுவார். மேலும், மக்களுக்கும் அவர் என்ன அர்த்தத்தில் கூறுகிறார் என்று புரியும். அவர் ஒருபோதும் பேசியதில்லை, ஒருபோதும் சொற்பொழிவாற்றியதில்லை; அவர் வெறுமனே மக்களிடம் ஜிப்ரிஷ் தியானத்தை கற்பித்து வந்தார்.

உதாரணத்திற்காக, எப்போதாவது அவர் அந்த தியானத்தை எப்படிச் செய்ய வேண்டும் என்று செய்து காட்டுவார். அரைமணி நேரம் அவர் எல்லாவிதமான அர்த்தமற்ற வார்த்தைகளையும், யாருக்கும் என்ன பாஷை என்று புரியாத ஒரு பாஷையில் பேசுவார். அது ஒரு பாஷை கிடையாது; அவர் மனதில் என்னவெல்லாம் வருகின்றதோ, அதையெல்லாம் அவர் பேசிக் கொண்டே போவார். அது தான் அவரது ஒரே போதனையாக இருந்தது. மேலும், அதைப் பற்றி புரிந்தவர்களிடம் அவர், "கீழே உட்கார்ந்து ஆரம்பியுங்கள்," என்று கூறுவார்.

ஆனால் ஜாப்பர், அநேக மக்கள் முழுமையான அமைதியுடன் இருப்பதற்கு உதவினார். உங்கள் மனதால் எவ்வளவு நேரம் தான் போக முடியும்? எனவே, அது காலியாகிவிடும். கொஞ்சம் கொஞ்சமாக ஒரு ஆழ்ந்த வெறுமை; மேலும், அந்த ஆழ்ந்த வெறுமையும் விழிப்புணர்வு என்னும் ஒரு ஒளிச்சுடர். அது எப்போதும் இந்த ஜிப்ரிஷ்ஷால் சூழப்பட்டு தான் இருந்தது. இந்த ஜிப்ரிஷ்ஷை நீங்கள் வெளியே எடுத்துவிட வேண்டும், அதுதான் உங்களின் விஷம்.

இதே உண்மை, உங்களது உடலுக்கும் பொருந்தும். உங்களது உடலிலும் பதற்றங்கள் உள்ளன. உங்களது உடல் எந்தவிதமான

அசைவுகளைச் செய்ய வேண்டும் என்று விரும்புகிறதோ, அந்தவிதமான அசைவுகளை வெறுமனே செய்ய ஆரம்பியுங்கள். நீங்கள் அதை செய்யும்படி தூண்டக்கூடாது. அது நடனமாட விரும்பலாம், அது குதிக்க விரும்பலாம், அது ஓடுவதற்கு விரும்பலாம், அது தரையில் உருள விரும்பலாம், எதுவாக இருந்தாலும் நீங்களாக அதைச் செய்யக் கூடாது. நீங்கள் வெறுமனே அதைச் செய்வதற்கு அனுமதியுங்கள். உங்களது உடலிடம், "நீ சுதந்திரமடைந்துவிட்டால், என்னவெல்லாம் விரும்புகிறாயோ அதையெல்லாம் செய்," என்று மட்டும் கூறிவிடுங்கள். அப்போது நீங்களே ஆச்சரியப்படுவீர்கள்: "அட கடவுளே, இப்படிப்பட்ட விஷயங்களை எல்லாம் எனது உடல் செய்வதற்கு ஆசைப்பட்டுள்ளது. ஆனால், நான் அதை எனக்குள் அடக்கி வைத்திருக்கிறேன். மேலும், அதுதான் எனது உடல் முறுக்கேறி இருப்பதற்கான காரணம்," என்று அறிந்த ஆச்சரியப்படுவீர்கள்.

ஆகவே, இரண்டு வகையான பதற்றங்கள் இருக்கின்றன. உடல் பதற்றம்; மேலும், மனப்பதற்றம். நீங்கள் ஓய்வுடன் தியானம் செய்வதற்கு முன்பு, இந்த இரண்டும் வெளியேற்றப்பட வேண்டும். அப்போது தான், விழிப்புணர்வு கொண்டு வரப்படும். ஆனால், விழிப்புணர்வில் இருந்து ஆரம்பிப்பது ரொம்பவும் சுலபமானது. அதிலும் குறிப்பாக, மிகவும் எளிமையான விழிப்புணர்வு என்னும் செயல்முறையைப் புரிந்து கொள்ளக் கூடியவர்கள் அதிலிருந்து ஆரம்பிப்பது நல்லது. நாள் முழுவதும் நீங்கள் சில விஷயங்களில் அதை பயன்படுத்திக் கொண்டு தான் இருக்கிறீர்கள். போக்குவரத்து நெரிசலில் காரில் செல்லும் போது, இந்த நகரத்து போக்குவரத்து நெரிசலிலும் கூட நீங்கள் உயிர் வாழ்ந்து கொண்டு தான் இருக்கிறீர்கள்! போக்குவரத்து நெரிசல் முற்றிலும் பைத்தியக்காரத்தனமாக உள்ளது.

சில தினங்களுக்கு முன்பு, நான் ஏதென்ஸ் நகரத்தைப் பற்றி படித்துக் கொண்டிருந்தேன். அங்கே டாக்ஸி ஓட்டுபவர்களுக்காக அரசு ஏழு நாட்கள் கொண்ட ஒரு சிறப்பு போட்டியை நடத்தியது. அதில் போக்குவரத்து விதிகளை பின்பற்றுவதில் மிகச் சிறந்த மூன்று ஓட்டுநர்களுக்கு, அவர்கள் தங்கக் கோப்பைகளை கொடுப்பதாக அறிவித்தனர். ஆனால், அவர்கள் ஏதென்ஸ் நகர் முழுதிலும் ஒருவரைக் கூட கண்டுபிடிக்க முடியவில்லை! எனவே, காவல்துறையினர் மிகுந்த கவலை அடைந்தனர். அந்த ஏழு நாட்களும், கிட்டத்தட்ட முடியும் நிலைக்கு வந்துவிட்டது. எனவே, கடைசி நாளில், எப்படியாவது மூன்று ஓட்டுநர்களை, அவர்கள் முற்றிலும் பின்பற்றாவிட்டாலும் கூட, அவர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்களுக்கு அந்தப் பரிசை கொடுப்பதற்கு நினைத்தனர்.



ஒரு ஆள் மிகவும் சரியாக போக்குவரத்து விதிகளை பின்பற்றி ஓட்டினார். அவரைக் கண்டவுடன் காவல்துறையினர் சந்தோஷம் அடைந்தனர். அப்போது அவருக்கு அந்த கோப்பையைக் கொடுப்பதற்காக காவல்துறையினர் ஓடினார்கள். ஆனால், காவல்துறையினர் அவரை நோக்கி ஓடி வருவதைப் பார்த்த அந்த மனிதர், சிவப்பு விளக்கு எரிந்தாலும்கூட, டாக்ஸியை ஓட்டிக் கொண்டு ஓடியே போய்விட்டார். யார் தான் தேவையில்லாமல் சங்கடத்தில் மாட்டிக் கொள்ள விரும்புவார்கள்? காவல்துறையினர், "பொறு, பொறு," என்று கத்தினார்கள். ஆனால், அவர் அதை கவனிக்கவில்லை. அவர் உடனடியாக சிவப்பு விளக்கிற்கு எதிராக ஓட்டிக் கொண்டு போய்விட்டார். மேலும், இரண்டு மனிதர்களிடமும் அந்த காவல்துறையினர் முயற்சி செய்தார்கள். ஆனால், அந்த காவல்துறையினரைப் பார்த்தவுடன், யாரும் நிறுத்தவில்லை. எனவே, ஏழு நாட்கள் முயற்சிக்கும் பிறகு, அந்த மூன்று பரிசுகளும் இன்னமும் காவல்துறையினரின் அலுவலகத்தில் உட்கார்ந்து கொண்டு இருக்கிறது. மேலும், ஏதென்ஸ் நகரமோ எப்போதும் போல மகிழ்ச்சியாக போய்க் கொண்டிருக்கிறது ...

உங்களுக்குத் தெரியாமலேயே நீங்கள் விழிப்புணர்வை பயன்படுத்திக் கொண்டு தான் இருக்கிறீர்கள். ஆனால், அதை வெளியில் உள்ள விஷயங்களில் மட்டுமே பயன்படுத்துகிறீர்கள்.



**பொதுமக்கள் பயணம் செய்கின்ற ஒரு பஸ்ஸில் உட்கார்ந்திருக்கும் போதோ அல்லது ரயில் வண்டியிலோ, நீங்கள் செய்வதற்கு ஒன்றும் இல்லாத போது வெறுமனே உங்களது கண்களை மூடிக் கொள்ளுங்கள். அப்படி மூடிக் கொள்வதால், வெளியில் பார்த்துக் கொண்டே செல்வதன் மூலம் உங்களது கண்கள் களைப்படைவதில் இருந்து அது பாதுகாக்கும். மேலும், அது உங்களுக்குள் நீங்கள் கவனிப்பதற்கு, போதுமான நேரத்தையும் கொடுக்கும்.**



அதே விழிப்புணர்வைத் தான் நீங்கள் உங்களது மனதிற்குள் நடக்கின்ற போக்குவரத்து நெரிசலுக்கும் பயன்படுத்த வேண்டும். நீங்கள் கண்களை மூடியவுடன், அங்கே எண்ணங்கள், உணர்ச்சிகள், கனவுகள், கற்பனைகள் இப்படி ஏகப்பட்ட போக்குவரத்து உள்ளே நடக்கிறது. எல்லா வகையான விஷயங்களும் வெளிச்சம் போட ஆரம்பிக்கின்றன.

நீங்கள் வெளி உலகில் உள்ள போக்குவரத்திற்கு என்ன செய்தீர்களோ, அதே செயலை சரியாக உங்களது உள் உலகத்திலும் செய்யுங்கள். அப்போது நீங்கள் ஒரு சாட்சியாக ஆகிவிடுவீர்கள். மேலும், இதை நீங்கள் ஒருமுறை ருசித்துவிட்டால் போதும், சாட்சியாய் இருப்பதில் கிடைக்கின்ற இந்த மகிழ்ச்சி மிகவும் பெரியதாகவும், அடுத்த உலகத்தைச் சேர்ந்ததாகவும் இருப்பதால், நீங்கள் இன்னும் அதிகமான உள்ளுக்குள் போவதற்கு விரும்புவீர்கள். உங்களுக்கு நேரம் கிடைக்கும் போதெல்லாம், நீங்கள் மேலும் மேலும் உங்களுக்குள் செல்ல விரும்புவீர்கள்.

இதற்கு எந்தவிதமான ஆசனத்தில் உட்கார வேண்டும் என்ற கேள்விக்கே இடமில்லை. எந்த கோவிலுக்குப் போக வேண்டும் என்ற கேள்விக்கே இடமில்லை. அல்லது, தேவாலயத்திற்கோ, யூத மதக் கோயிலுக்கோ போக வேண்டியதில்லை. பொதுமக்கள் பயணம் செய்கின்ற ஒரு பஸ்ஸில் உட்கார்ந்திருக்கும் போதோ அல்லது ரயில் வண்டியிலோ, நீங்கள் செய்வதற்கு ஒன்றும் இல்லாத போது வெறுமனே உங்களது கண்களை மூடிக் கொள்ளுங்கள். அப்படி மூடிக் கொள்வதால், வெளியில் பார்த்துக் கொண்டே செல்வதன் மூலம் உங்களது கண்கள் களைப்படைவதில் இருந்து அது பாதுகாக்கும். மேலும், அது உங்களுக்குள் நீங்கள் கவனிப்பதற்கு, போதுமான நேரத்தையும் கொடுக்கும். அத்தகைய தருணங்கள், மிகவும் அழகான அனுபவங்கள் ஏற்படுகின்ற தருணங்களாக ஆகிவிடும்.

மேலும், இப்படி கொஞ்சம் கொஞ்சமாக உங்களது விழிப்புணர்வு வளர்ச்சி அடையும் போது, உங்களது தனிமனிதப் பண்பு மாற்றம் காண ஆரம்பிக்கும். விழிப்புணர்வு அற்ற நிலையில் இருந்து, விழிப்புணர்வு உள்ள நிலைக்குச் செல்வது தான் மிகப்பெரிய தாவுதல் ஆகும்.

## மனமும் தியானமும்

உங்களது மனதில் எண்ணங்கள் இல்லாத போது, அது தியானமாகிறது.

மனமானது, இரண்டு நிலைகளில் எண்ணங்கள் இல்லாமல் இருக்கும். ஒன்று, ஆழ்ந்த தூக்கத்தில் அல்லது தியானத்தில். நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்கும் போது, எண்ணங்கள் மறைந்துவிட்டால், அதுதான் தியானம். எண்ணங்கள் மறைந்து, அந்த நேரத்தில் நீங்கள் விழிப்புணர்வுடன் இல்லாமல் இருப்பது தான், ஆழ்ந்த தூக்கம்.

ஆழ்ந்த தூக்கமும், தியானமும் சில விஷயங்களில் ஒற்றுமையும், சில விஷயங்களில் வேறுபட்டும் இருக்கின்றன. இரண்டிலும் ஒன்றுபட்டு இருக்கின்ற ஒரு விஷயம், இரண்டிலும் எண்ணங்கள் மறைந்து போவது தான். அவை இரண்டிற்கும் இடையே உள்ள வேற்றுமையான ஒரு விஷயம் என்னவென்றால், ஆழ்ந்த தூக்கத்தில் விழிப்புணர்வும்கூட மறைந்து போகிறது; ஆனால், தியானத்தில் விழிப்புணர்வு இருக்கிறது. ஆகவே, ஆழ்ந்த தூக்கத்தோடு விழிப்புணர்வைச் சேர்ப்பது, தியானத்திற்குச் சமமாகிறது. அப்போதும் நீங்கள் ஆழ்ந்த தூக்கத்தில் இருப்பது போன்று, முழு ஓய்வுடன் இருப்பீர்கள்; என்றாலும்கூட, விழிப்புணர்வுடன் முழுவதும் விழித்துக் கொண்டு இருப்பீர்கள். மேலும், அது உங்களை பெரும் ரகசியங்களின் வாசலுக்கு கொண்டு போய்விடும்.

ஆழ்ந்த தூக்கத்திலும்கூட, நீங்கள் மனம் என்பது செயல்புரியாத நிலைக்கு நகர்ந்து செல்கிறீர்கள். ஆனால், உங்களுக்குத் தெரியாமலேயே செல்கிறீர்கள். நீங்கள் அப்போது எங்கே எடுத்துச் செல்லப்பட்டீர்கள் என்பது உங்களுக்குத் தெரியாது, என்றாலும்கூட, காலையில் எழுந்திருக்கும் போது அதன் விளைவையும், தாக்கத்தையும் உங்களால் உணர முடிகிறது. உண்மையிலேயே, அந்தத் தூக்கம் அழகான ஆழ்ந்த தூக்கமாக, எந்தவிதமா கனவுகளும் உங்களைத் தொந்தரவு செய்யாமல் இருந்தால், காலையில் நீங்கள் புத்துணர்ச்சியுடனும், புத்துயிருடனும், உயிர்த்துடிப்புடனும், மீண்டும் இளமையாகவும், மீண்டும் பேரார்வத்துடனும், மகிழ்ச்சி என்னும் சாறுடனும் இருப்பீர்கள். ஆனால், இது எப்படி நிகழ்ந்தது என்று உங்களுக்குத் தெரியாது. நீங்கள் எங்கு சென்றீர்கள் என்பதும் தெரியாது. அப்போது, நீங்கள் ஒருவிதமான கோமா நிலைக்கு எடுத்துச் செல்லப்படுகிறீர்கள்; உங்களுக்கு ஏதோ மயக்க மருந்து கொடுத்து, வேறு ஏதோ ஒரு உலகிற்கு எடுத்துச் சென்றதைப் போன்று உணர்கிறீர்கள். அங்கிருந்து நீங்கள் புத்துணர்ச்சியுடனும், இளமையுடனும், புத்துயிருடனும் வருகிறீர்கள்.

ஆனால், தியானத்தில் மயக்க மருந்து கொடுக்காமலேயே இது நிகழ்கிறது.

எனவே, தியானம் என்றால், நீங்கள் ஆழ்ந்த தூக்கத்தில் எப்படி ஓய்வுடன் இருக்கிறீர்களோ, அப்படி இருந்து கொண்டு, அதேநேரத்தில் விழிப்புணர்வுடன் இருப்பது என்பது தான் அர்த்தமாகும். இந்த விழிப்புணர்வை உங்களுக்குள் அப்போது வைத்திருங்கள். இந்த எண்ணங்கள் எல்லாம் மறைந்து போகட்டும்; ஆனால், இந்த விழிப்புணர்வை மட்டும் தக்க வைத்துக் கொள்ள வேண்டும். மேலும்,

இது கடினமானது கிடையாது. இதை நாம் வெறுமனே முயற்சி செய்தே பார்க்காமல் விட்டுவிட்டோம். அவ்வளவு தான். இது, நீச்சலைப் போன்றது. நீங்கள் அதை முயற்சி செய்து பார்க்கவில்லை என்றால், அது கடினமான ஒன்று தான். அது ஆபத்தானதாகவும் கூட தோன்றும். மேலும், நாம் வெறுமனே நீரில் மூழ்கிவிடும் போது, மற்றவர்கள் மட்டும் இதில் எப்படி நீந்துகிறார்கள் என்று உங்களால் அதை நம்பவும்கூட முடியாது! ஆனால், நீங்கள் அதைக் கொஞ்சம் முயற்சித்து செய்து பார்த்தால், அது சுலபமாக வரும்; அது மிகவும் இயல்பானது.



**எனவே, தியானம் என்றால், நீங்கள் ஆழ்ந்த தூக்கத்தில் எப்படி ஓய்வுடன் இருக்கிறீர்களோ, அப்படி இருந்து கொண்டு, அதேநேரத்தில் விழிப்புணர்வுடன் இருப்பது என்பது தான் அர்த்தமாகும். விழிப்புணர்வை உங்களுக்குள் அப்போது வைத்திருங்கள். இந்த எண்ணங்கள் எல்லாம் மறைந்து போகட்டும்; ஆனால், இந்த விழிப்புணர்வை மட்டும் தக்க வைத்துக் கொள்ள வேண்டும். மேலும், இது கடினமானது கிடையாது. இதை நாம் வெறுமனே முயற்சி செய்தே பார்க்காமல் விட்டுவிட்டோம். அவ்வளவு தான்.**



இப்போது, ஜப்பானில் உள்ள ஒரு விஞ்ஞானி, ஆறு மாதமே ஆன குழந்தையால்கூட நீந்த முடியும் என்று, செயல்முறையின் மூலம் நிரூபித்துள்ளார். அதற்கான சந்தர்ப்பம் அதற்குக் கொடுக்கப்பட வேண்டும். அவ்வளவு தான். ஆறு மாதமே ஆன பல குழந்தைகளுக்கு அவர் நீச்சல் கற்றுக் கொடுத்திருக்கிறார்; அவர் ஒரு அதிசயத்தைச் செய்திருக்கிறார்! இன்னும் சிறு குழந்தைகளிடமும் கூட அவர் முயற்சி செய்து கொண்டிருப்பதாகக் கூறுகிறார். இதைப் பார்க்கும் போது, நீச்சல் என்பது ஏதோ நமக்குள் ஏற்கனவே கட்டமைக்கப்பட்டுள்ள ஒரு விஷயம் போல் தெரிகிறது. நாம் அதற்கு ஒரு சந்தர்ப்பத்தைக் கொடுக்கும் போது, அது வேலை செய்ய ஆரம்பிக்கிறது. அதனால் தான் ஒருமுறை நீங்கள் நீச்சல் கற்றுவிட்டால், நீங்கள் ஒருபோதும் அதை மறக்க மாட்டீர்கள். இது ஏதோ எதிர்பாராமல் நடப்பது அல்ல; இது இயற்கையாகவே நடப்பது; அதனால் தான் உங்களால் அதை மறக்க முடியவில்லை.



தியானம் என்பதும் அதே போன்றது தான். அதுவும் உங்களுக்குள் கட்டமைக்கப்பட்டுள்ள ஏதோ ஒன்று தான். அது வேலை செய்வதற்கு, நீங்கள் ஒரு இடத்தை உருவாக்க வேண்டும். அதற்கு வெறுமனே ஒரு சந்தர்ப்பம் கொடுக்க வேண்டியது தான்.

மனம் என்பது என்ன? மனம் என்பது ஒரு பொருள் அல்ல. ஆனால், அது ஒரு நிகழ்ச்சி. ஒரு பொருள் என்பதில் அதில் உறுதி இருக்கும். ஆனால், ஒரு நிகழ்ச்சி என்பது வெறுமனே ஒரு செயல்முறை. பொருள் என்பது ஒரு பாறையைப் போன்றது; ஒரு நிகழ்ச்சி என்பது ஒரு அலையைப் போன்றது. அது இருக்கும்; ஆனால், அது உறுதியானது அல்ல. அலை என்பது கடலுக்கும் காற்றுக்கும் இடையே நடக்கின்ற ஒரு நிகழ்ச்சி, ஒரு செயல்முறை, ஒரு புலன்களால் அறியக்கூடிய நடப்பு.

ஒரு அலை போன்று, ஒரு நதியைப் போன்று, இந்த மனமும் ஒரு செயல்முறை தான். ஆனால், அதில் எந்த உறுதியான தன்மையும் கிடையாது என்பதை நீங்கள் முதல் விஷயமாகப் புரிந்து கொள்ள வேண்டும். அதில் உறுதி என்பது இருந்தால், அதன்பிறகு அதைக் கலைக்க முடியாது. அதனிடம் உறுதி என்பது இல்லாத போது, அது, தான் இருந்ததற்கான எந்த தடயத்தையும் விட்டு வைக்காமல் மறைந்து போய்விடும்.

ஒரு அலையானது கடலில் மறைந்துவிடும் போது, அதன் பின்னால் என்ன விட்டு விடப்பட்டிருக்கிறது? எதுவும் இல்லை; அதற்கான தடம் கூட இல்லை. ஆகவே, மனதை அறிந்தவர்கள், மனம் என்பது வானத்தில் பறந்து செல்லும் பறவை போன்றது. அவைகள் எந்தக் காலடித் தடத்தையும், எந்தவிதமான தடயங்களையும் விட்டுவிட்டுப் போவதில்லை என்று கூறுகின்றனர். பறவை பறக்கிறது; ஆனால், எந்த ஒரு பாதையையும், எந்த ஒரு காலடித் தடத்தையும் விட்டுவிட்டுப் போவதில்லை.

மனம் என்பது வெறும் செயல்முறை. உண்மையில், மனம் என்பதே இல்லை; எண்ணங்கள் மட்டுமே இருக்கின்றன. அந்த எண்ணங்கள் அதி வேகத்துடன் நகர்ந்து செல்வதால், தொடர்ந்து அங்கே ஏதோ ஒன்று இருப்பது போன்று நீங்கள் நினைக்கவும், உணரவும் செய்கிறீர்கள். ஒரு எண்ணம் வருகிறது, அடுத்த எண்ணம் வருகிறது, அடுத்தது, இப்படி அவைகள் போய்க் கொண்டே இருக்கின்றன. ஒரு எண்ணத்திற்கும், அடுத்த எண்ணத்திற்கும் இடையே உள்ள இடைவெளி மிகவும் சிறியதாக இருப்பதால், உங்களால் அந்த இடைவெளியை காண முடியவில்லை. ஆகவே, இரண்டு எண்ணங்கள் ஒன்று

சேர்ந்துவிடுகின்றன. அவைகள் ஒரு தொடர் நிகழ்வு போல் ஆகிவிடுகின்றன; மேலும், இப்படி அவைகள் தொடர்ந்து இருப்பதால், நீங்கள் அங்கே மனம் என்பது இருப்பதாக நினைக்கிறீர்கள்.

எண்ணங்கள் அங்கே உள்ளன. 'மனம்' என்பது இல்லை. எப்படி, 'பொருள்' என்பது இல்லாமல், வெறும் எலக்ட்ரான்கள் மட்டுமே இருக்கிறதோ, அதைப்போல எண்ணங்கள் தான் மனதின் எலக்ட்ரான்கள். வெறுமனே ஒரு கூட்டம் போன்றது. கூட்டம் என்பது ஒருவிதத்தில் பார்த்தால், இருக்கிறது; மற்றொரு விதத்தில் பார்த்தால், இல்லை. அங்கே, தனி மனிதர்கள் மட்டுமே இருக்கிறார்கள். ஆனால், அநேக தனி மனிதர்கள் ஒன்றாக இருக்கும் போது, அவர்கள் ஏதோ ஒருவர் போன்ற உணர்வைக் கொடுக்கிறது. அதே போன்று தான், ஒருவிதத்தில் இந்த நாடு என்பது இருக்கிறது. அதே சமயம், இல்லாமலும் இருக்கிறது. இங்கேயும் தனி மனிதர்கள் மட்டுமே இருக்கின்றனர். தனி மனிதர்கள் தான் இந்த நாட்டின், இந்த சமூகத்தின், இந்த கூட்டத்தின் எலக்ட்ரான்கள்.

**எண்ணங்கள் அங்கே உள்ளன. 'மனம்' என்பது இல்லை. எப்படி, 'பொருள்' என்பது இல்லாமல், வெறும் எலக்ட்ரான்கள் மட்டுமே இருக்கிறதோ,. அதைப்போல எண்ணங்கள் தான் மனதின் எலக்ட்ரான்கள்.**



எண்ணங்கள் இருக்கின்றன. மனம் என்பது இருக்கவில்லை. மனம் என்பது வெறும் தோற்றம் தான். மேலும், நீங்கள் மனதினுள் ஆழ்ந்து பார்த்தால், அது மறைந்துவிடும். அதன்பிறகு, அங்கு எண்ணங்கள் மட்டுமே இருக்கும். மேலும் இப்படி, 'மனம்' என்பது மறைந்து, வெறும் எண்ணங்கள் மட்டுமே இருக்கிறபோது, அநேக விஷயங்கள் உடனடியாக தீர்க்கப்பட்டுவிடுகின்றன. அதில் முதல் விஷயம் என்னவென்றால், நீங்கள் உடனடியாக அந்த எண்ணங்கள் எல்லாம் மேகங்களைக் போன்றவை தான் என்பதை அறிந்து கொள்வதாகும். அவைகள் வருகின்றன, போகின்றன. ஆனால், நீங்கள் தான் அந்த வானம். மனம் என்று ஒன்று இல்லாத போது, உடனடியாக நீங்கள் அந்த எண்ணங்களோடு ஈடுபாடு உள்ளவர் அல்ல என்கிற உணர்வு வந்துவிடும். எண்ணங்கள் அங்கு இருக்கும்; ஆனால், அவைகள் வானத்தில் கடந்து செல்லும் மேகங்கள் போல அல்லது மரங்களின் ஊடே கடந்து செல்லும் காற்றினைப் போல இருக்கும். எண்ணங்கள் உங்களின் வழியாக கடந்து செல்கின்றன. மேலும், அவைகள் அப்படி



கடந்து செல்ல முடியும். ஏனெனில், நீங்கள் ஒரு பரந்து விரிந்த வெறும் வெளி. அங்கே இடையூறுகள் இருக்காது, தடைகள் இருக்காது. அவைகளைத் தடுப்பதற்கு எந்தச் சுவரும் அங்கு கிடையாது. நீங்கள், உண்மையில் சுவர் போன்றதொரு விஷயம் அல்ல. உங்களது வானம் எல்லையற்று விரிந்து திறந்துள்ளது. எண்ணங்கள் அதில் வருகின்றன, போகின்றன. மேலும், இப்படி இந்த எண்ணங்கள் வருகின்றன, போகின்றன என்றும், நீங்கள் அவற்றைக் கவனித்துக் கொண்டிருக்கின்ற கவனிப்பாளர், சாட்சியாளர் என்று நீங்கள் உணர ஆரம்பித்துவிட்டால், அதன்பிறகு இந்த மனதைக் கையாளுகின்ற திறனைப் பெற்றுவிடுவீர்கள்.

சாதாரணமாக எண்ணிப் பார்த்தால், மனம் என்பதை கட்டுப்படுத்த முடியாது. அதற்கான முதல் காரணம், அது அங்கே இல்லாமல் இருப்பது தான். அது இல்லாத போது, அதை எப்படி நீங்கள் கட்டுப்படுத்த முடியும்? இரண்டாவது விஷயம், அதைக் கட்டுப்படுத்துவது யார்? ஏனெனில், மனதிற்குப் பின்னால் யாரும் இல்லை, வெறுமை தான் உள்ளது. இந்த மனதை கட்டுப்படுத்துவது யார்? யாராவது இந்த மனதை கட்டுப்படுத்த முடியும் என்றால், அப்போது அது, இந்த மனதின் ஒரு பகுதியே, மனதின் அடுத்த பகுதியை, மனதின் அடுத்தத் துண்டினை கட்டுப்படுத்துவது தான் ஆகும். அது தான் 'நான்' என்னும் தன்முனைப்பாகும்.

அப்படிப்பட்ட வழியில் மனதைக் கட்டுப்படுத்த முடியாது. அப்படி முடியாது, மேலும் அதைக் கட்டுப்படுத்துவதற்கு அங்கே யாரும் கிடையாது. உங்களுக்குள் உள்ள அந்த வெறுமை, உங்களது மனதைப் பார்க்க மட்டும் தான் முடியுமே தவிர, அதைக் கட்டுப்படுத்த அதனால் முடியாது. அதனால் பார்க்க முடியும்; ஆனால், கட்டுப்படுத்த முடியாது. ஆனால், அப்படி அது பார்ப்பதே கட்டுப்படுத்துவதாக ஆகிவிடும். அப்படி உங்களது மனதை அது கவனிக்கின்ற, சாட்சி போன்று பார்க்கின்ற அந்த விஷயமே உங்களது மனதை கையாளுவதில் திறமை பெற்றதாக ஆகிவிடும். ஏனெனில், அப்படி அது சாட்சியாக பார்க்கும் நேரத்தில், உங்களது மனம் மறைந்து போய்விடும்.

இது எதைப் போலவென்றால், நீங்கள் ஒரு இருட்டான இரவில் யாரோ உங்களைப் பின்தொடர்வதாக எண்ணிக் கொண்டு, பயந்து கொண்டு வேகமாக ஓடுவதைப் போன்றது. ஆனால், அந்த யாரோ ஒருவர் உங்களது சொந்த நிழலைத் தவிர வேறு எதுவும் கிடையாது. எனவே, நீங்கள் எந்த அளவுக்கு அதிகமாக ஓடுகிறீர்களோ, அந்த அளவுக்கு அந்த நிழல் உங்களுக்கு மிகவும் நெருங்கியே வரும். நீங்கள் எவ்வளவு வேகத்தில் ஓடுகிறீர்கள் என்பது எந்த வேறுபாட்டையும்

உருவாக்காது. அந்த நிழல் அங்கே இருக்கும். நீங்கள் திரும்பிப் பார்க்கும் போதெல்லாம், அந்த நிழல் அங்கே இருக்கும். அதிலிருந்து தப்பிப்பதற்கு அது வழியல்ல. மேலும், அதைக் கட்டுப்படுத்துவதற்கும் அது வழியாகாது. நீங்கள், உங்களது நிழலை மிகவும் ஆழமாக கவனிக்க வேண்டும். நீங்கள் அப்படியே நின்று கொண்டு, உங்களது நிழலை ஆழமாகப் பாருங்கள். அப்போது அந்த நிழல் மறைந்துவிடும். ஏனெனில், நிழல் என்பதே கிடையாது; அது வெறுமனே வெளிச்சம் இல்லாததால் இருக்கிறது.

மனம் என்பது நீங்கள் உங்களுக்குள் ஆஜராகாமல் இருப்பதைத் தவிர, வேறு ஒன்றும் கிடையாது. நீங்கள் அமைதியாக உட்கார்ந்து கொண்டிருக்கும் போது, நீங்கள் உங்களது மனதை ஆழ்ந்து கவனித்தால், அந்த மனம் வெறுமனே மறைந்து போய்விடும். எண்ணங்கள் இருக்கும்; அவைகள் இருப்பவை; ஆனால், மனம் என்பதைக் காண முடியாது.

மேலும், அப்படி மனம் என்பது போய்விடும் போது, அதன்பின்னர் உங்களுக்கு இரண்டாவதாக ஒரு உணர்வு சாத்தியமாகும். உங்களது எண்ணங்களும்கூட உங்களுக்குச் சொந்தமானவை கிடையாது என்பது தான் அது. நிச்சயமாக அவைகள் வருகின்றன; மேலும், சில வேளைகளில் உங்களுக்குள் அவைகள் கொஞ்ச நேரம் ஓய்வெடுக்கின்றன. அதன்பின்னர், அவைகள் போய்விடுகின்றன. அப்போது, நீங்கள் ஒரு ஓய்வெடுக்கும் இடமாகத்தான் இருக்கக்கூடும்; ஆனால், அவைகள் உங்களுக்குள் தொடங்குவதில்லை. உங்களுக்குள் இருந்து ஒரு சிறு எண்ணம்கூட எழுவது இல்லை என்பதை நீங்கள் எப்போதாவது கவனித்தது உண்டா? ஒரு சிறு எண்ணம்கூட உங்களது உயிரின் மூலம் வருவதில்லை. அவைகள் எப்போதும் வெளியில் இருந்து தான் வருகின்றன. அவைகள் உங்களுக்குச் சொந்தமானவை அல்ல; வேர்கள் இல்லாமல், வீடுகள் இல்லாமல் அவைகள் சுற்றித் திரிகின்றன. சில நேரங்களில் அவைகள் உங்களுக்குள் ஓய்வெடுக்கின்றன. அவ்வளவு தான். அதாவது, மலையின் உச்சியில் ஓய்வெடுக்கும் மேகங்களைப் போல அவை ஓய்வெடுக்கின்றன. அதன்பிறகு, அவைகளின் சொந்தப் பாதையில் நகர்ந்து சென்றுவிடும்; நீங்கள் எதையுமே செய்ய வேண்டியதில்லை. நீங்கள் வெறுமனே உங்களது எண்ணங்களைப் பார்த்தால் போதும். அவை கட்டுப் படுத்துதல் அடைகிறது.

'கட்டுப்பாடு' என்கிற வார்த்தை நல்லதல்ல; ஏனெனில், வார்த்தைகள் நல்லவைகளாக இருக்க முடியாது. வார்த்தைகள் மனதிற்குச் சொந்தமானவை; எண்ணங்கள் உலகுக்குச் சொந்தமானவை. வார்த்தைகள் மிகவும் ஊடுருவிச் செல்ல முடியாது; அவைகள் ஆழமற்றவை. கட்டுப்பாடு என்கிற வார்த்தை, நல்ல வார்த்தை அல்ல. ஏனெனில், இங்கே கட்டுப்படுத்துவதற்கும் யாரும் இல்லை. மேலும், கட்டுப்படுத்தப்படுவதற்கும் யாரும் இல்லை. ஆனால் உத்தேசமாக, அது ஒரு குறிப்பிட்ட விஷயம் நடப்பதைப் புரிந்து கொள்ள உதவுகிறது. நீங்கள், ஆழமாக உங்களது மனதைப் பார்க்கும் போது, உங்களது மனம் கட்டுப்படுத்தப்படுகிறது. திடீரென்று, நீங்கள் அதன் எஜமான் ஆகிவிடுவீர்கள். எண்ணங்கள் அங்கு இருக்கும்; ஆனால், அவைகள் ஒருபோதும் உங்களது எஜமான்களாக இருக்காது. அவைகள் உங்களுக்கு எதுவும் செய்ய முடியாது; அவைகள் வெறுமனே வரும், போகும். ஆனால் நீங்களோ, பெய்கின்ற மழையினால் தொடப்படாத ஒரு தாமரை மலரைப் போன்று இருப்பீர்கள். மழைத் துளிகள் அதன் இதழ்களில் விழும்; ஆனால், அவைகள் நழுவிக் கொண்டு போய்விடும். அவைகள் அந்த இதழ்களைத் தொடுவதும்கூட கிடையாது. அந்த தாமரை தொடப்படாததாகவே இருக்கும்.

அதனால் தான், கீழை நாடுகளில் தாமரை மலர் சிறப்பானதாகவும், ஒரு அடையாளக் குறியீடாகவும் ஆகிவிட்டது. கீழைநாட்டிலிருந்து வந்த ஒரு மாபெரும் அடையாளக் குறியீடு தான் தாமரை. அது, இந்த கீழை நாடுகளின் தன்னுணர்வின் முழு அர்த்தத்தையும் சுமந்து கொண்டிருக்கிறது. அது கூறுவதாவது, "நீங்கள் ஒரு தாமரை மலர் போல இருங்கள். அவ்வளவு தான். எதனாலும் தொடப்படாமல் இருங்கள்; அப்போது நீங்கள் கட்டுப்பாட்டில் இருப்பீர்கள். தொடப்படாமல் இருங்கள்; அப்போது நீங்கள் தான் எஜமான்" என்பதாகும்.

எனவே, ஒரு நிலையில் பார்த்தால், மனம் என்பது அலைகள் போன்றது - ஒரு அமைதிக்குலைவு. கடலானது அமைதியாகவும், தொந்தரவு இல்லாமலும் இருக்கும் போது, அலைகள் அங்கு இருக்காது. ஆனால், ஒரு அலையாலோ அல்லது பலத்த காற்றாலோ அந்த கடல் அமைதி குலைந்துவிடும் போது, மாபெரும் அலைகள் எழும்போது, அந்த பரப்பு முழுவதும் வெறும் குழப்பத்தில் இருக்கின்ற அந்த நிலையைப் போல, மனதும் ஒரு நிலையில் பார்த்தால், இருக்கிறது. வார்த்தைகளால் சொல்ல முடியாத, உங்களுக்குள் உள்ள சில குறிப்பிட்ட தன்மைகளைப் புரிந்து கொள்வதற்கு இந்த உவமைகள் எல்லாம் வெறுமனே உதவும். இந்த உவமைகள் எல்லாம் கவிதைத்தனமானவை. நீங்கள் இவற்றை கருணையோடு புரிந்து கொள்ள முயற்சி செய்தால், உங்களால் புரிந்து கொள்ள முடியும். ஆனால், இவைகளை தர்க்கரீதியில் புரிந்து கொள்ள முயற்சி செய்தால், நீங்கள் அதன் உட்கருத்தைத் தவறவிட்டு விடுவீர்கள். அவைகள், வெறும் உவமைகள் தான்.

மனம் என்பது உங்களது தன்னுணர்வில் ஏற்படுகின்ற ஒரு அமைதிக்குலைவு; கடலுக்கு எப்படி அலைகள் அமைதிக்குலைவாக இருக்கின்றனவோ, அதே போன்று. அந்நியமான ஏதோ ஒன்று - அதாவது, காற்று கடலினுள் வந்துவிட்டது. வெளியில் இருந்து ஏதோ ஒன்று அந்த கடலுக்கும் அல்லது உங்களது தன்னுணர்விற்கும் நிகழ்ந்துவிட்டது. அது காற்று அல்லது உங்களது எண்ணங்களாக இருக்கும். எனவே, அங்கே குழப்பம் ஏற்படுகிறது. ஆனால், குழப்பம் மற்றும் சீற்றம் எப்போதும் மேற்பரப்பில் மட்டுமே இருக்கும். அலைகள், மேற்பரப்பில் மட்டுமே இருக்கும். கடலின் அடி ஆழத்தில், அங்கே அலைகள் இருக்காது - இருக்கவும் முடியாது. ஏனெனில், கடலின் அடி ஆழத்திற்குள் காற்று நுழைய முடியாது. எனவே, எல்லாமே வெறுமனே மேற்பரப்பில் மட்டுமே உள்ளது. எனவே, நீங்கள் உங்களுக்குள் நகர்ந்து சென்றுவிட்டால், கட்டுப்பாடு என்பது அடையப்படுகிறது. நீங்கள், மேற்பரப்பில் இருந்து உங்களுக்குள் செல்லும் போதும் நீங்கள் உங்களது மையத்திற்குச் சென்று விடுகிறீர்கள். அப்போது, உங்களது மேற்பரப்பில் அமைதி குலைந்து இருந்தாலும், நீங்கள் அமைதிக்குலைவுடன் இருக்க மாட்டீர்கள்.

தியானம் என்பதன் முழு அறிவியலுமே, நீங்கள் மையத்திலிருப்பது. அதாவது, மையத்தை நோக்கி நகர்ந்து செல்வது; அங்கே வேரூன்றி நிற்பது; அங்கேயே குடி இருப்பதைத் தவிர, வேறு எதுவும் அல்ல. மேலும், அங்கிருந்து நீங்கள் பார்க்கும் போது, உங்களது முழுத் தோற்றமும் மாறிவிடும். அப்போது நீங்கள், அலைகள் உங்களுக்குச் சொந்தமானவை அல்ல என்றும், அது உங்களது மேற்பரப்பில் ஏதோ ஒரு அந்நியன் வந்துவிட்டதால் ஏற்பட்ட குழப்பம் தான் என்பதைக் கண்டுகொள்ள முடியும்.

மேலும், அப்படி அந்த மையத்தில் இருந்து கொண்டு நீங்கள் பார்க்கும் போது, கொஞ்சம் கொஞ்சமாக அந்தக் குழப்பம் இல்லாமல் போய்விடும். கொஞ்சம் கொஞ்சமாக நீங்கள் ஒய்வடைவீர்கள். அப்போது, நீங்கள் கொஞ்சம் கொஞ்சமாக உங்களது மேற்பரப்பில் எழுகின்ற பலத்த காற்றையும், அதனால் அலைகள் எழுவதையும் ஏற்றுக் கொள்வீர்கள். ஆனால், நீங்கள் அதற்காக கவலைப்பட மாட்டீர்கள். மேலும், அப்படி நீங்கள் கவலைப்படாமல் இருக்கும் போது, அந்த அலைகளையும்கூட நீங்கள் சந்தோஷமாக அனுபவிக்க முடியும். அலைகள் மீது எந்தத் தவறும் கிடையாதே.

நீங்களும் ஆழத்தில் இல்லாமல், அந்த மேற்பரப்போடு சேர்ந்து அங்கே இருக்கும் போது தான் பிரச்சனை எழுகிறது. கடலின் மேறபரப்பில் நீங்கள் ஒரு சிறிய படகில் இருக்கிறீர்கள். அப்போது ஒரு பலத்த காற்று வீசுகிறது; மிகப்பெரிய அலைகள் எழுகின்றன; அந்தக் கடலே அப்போது பைத்தியம் பிடித்தது போல் ஆகிவிடுகிறது. அந்த சமயத்தில், நிச்சயமாக நீங்கள் கவலைப்படுவீர்கள்; இறந்துபோய் விடுவோமோ என்று பயப்படுவீர்கள்! நீங்கள் ஆபத்தில் இருப்பீர்கள், எந்த நேரத்திலும் அலைகள் உங்களது சிறிய படகை கவிழ்த்துவிடலாம்; எந்த நேரத்திலும் மரணம் சம்பவிக்கலாம். அப்போது உங்களது சிறிய படகை வைத்துக் கொண்டு நீங்கள் என்ன செய்ய முடியும்? உங்களால் எப்படி எதையும் கட்டுப்படுத்த முடியும்? நீங்கள் அந்த அலையோடு போராட ஆரம்பித்தால், நீங்கள் நிச்சயம் தோற்கடிக்கப்பட்டு விடுவீர்கள். அப்போது போராட்டம் உதவாது; நீங்கள் அந்த அலைகளை ஏற்றுக் கொள்ள வேண்டும். உண்மையில், நீங்கள் அந்த அலைகளை ஏற்றுக் கொண்டு, உங்களது படகு எவ்வளவு தான் சிறியதாக இருந்தாலும், அந்த அலைகளோடு சேர்ந்து செல்ல வேண்டும். மேலும், அந்த அலைகளுக்கு எதிராகச் செல்லக்கூடாது. அதன்பிறகு, அங்கே அபாயம் இருக்காது. அலைகள் அங்கே இருக்கும். ஆனால், நீங்கள் வெறுமனே அதை அனுமதித்துவிடுவீர்கள். நீங்கள் வெறுமனே உங்களை அந்த அலைகளோடு நகர்ந்து செல்ல அனுமதித்துவிடுவீர்கள். அலைகளுக்கு எதிராகச் செல்ல மாட்டீர்கள். நீங்கள் அதன் ஒருபகுதியாக ஆகிவிடுவீர்கள். அதன் பின்னர், அளவு கடந்த சந்தோஷம் எழுந்துவிடும்.

நீர்ச்சறுக்கு விளையாட்டின் முழுக் கலையும் இதுதான். அலைகளோடு சேர்ந்து செல்வது, அலைகளுக்கு எதிராகச் செல்வது அல்ல. அலைகளோடு அலைகளாக, அலைகளுக்கும் உங்களுக்கும் வேறுபாடு இல்லாமல் செல்வீர்கள். நீர்ச்சறுக்கு என்பது ஒரு மிகப்பெரிய தியானமாக இருக்க முடியும். அது, உங்களுக்குள் உள்ள அந்த மையத்தின் காட்சிகளை உங்களுக்குக் கொடுக்க முடியும். ஏனெனில், அது ஒரு போராட்டம் அல்ல; அது உங்களை அலையின் போக்கிலேயே விட்டு விடுவதாகும். இந்தக் கலையை நீங்கள் அறிந்து கொண்டால், அதன்பிறகு, அந்த பேரலைகளையும்கூட நீங்கள் ஆனந்தமாக அனுபவிக்கலாம். மேலும், நீங்கள் உங்களது மையத்தில் இருக்கும் போது தான் இந்த விஷயத்தை உங்களால் பார்க்க முடியும்.

நீங்கள் ஒரு காட்டில் பயணம் செய்து கொண்டிருக்கிறீர்கள். அப்போது மேகங்கள் திரண்டு வருகின்றன; அங்கே மின்னல் மின்னுகிறது; ஆனால் நீங்களோ, பாதையைத் தவறவிட்டு விட்டீர்கள். எனவே நீங்கள், எப்படியாவது வீட்டிற்குப் போய்விட வேண்டும் என்று அவசரப்படுகிறீர்கள். நீங்கள் மேற்பரப்பில் இருக்கும் போது நிகழ்வது இதுதான். பாதை தவறிவிட்ட பயணி, அநேக மேகம், அதிக மின்னல்,

விரைவில் அங்கே பலத்த மழை இருக்கும். நீங்களோ வீட்டைத் தேடுகிறீர்கள்; ஏதாவது ஒரு பாதுகாப்பான வீட்டைத் தேடுகிறீர்கள். அப்போது, திடீரென்று நீங்கள் அங்கே போய்ச் சேர்ந்து விடுகிறீர்கள். இப்போது நீங்கள் அந்த வீட்டினுள் உட்கார்ந்து கொண்டு இருப்பீர்கள்; வரப்போகின்ற மழைக்காக நீங்கள் காத்துக் கொண்டு இருப்பீர்கள். இப்போது அந்த மின்னல், அதற்கே உரித்தான அந்த அழகுடன் உங்களுக்குத் தெரியும். நீங்கள், வெளியில் காட்டில் பாதை தெரியாமல் இருந்த போது, இப்படி இருந்திருக்காது. ஆனால், இப்போது உங்களது வீட்டிற்குள் உட்கார்ந்திருக்கும் போது, இந்த முழு விஷயமும் அபரிமிதமான அழகுடன் இருக்கும். இப்போது, மழை வரும் போது அதை அனுபவிப்பீர்கள். இப்போது மின்னல் இருக்கும்; ஆனால், அதையும் அனுபவிப்பீர்கள்; மேகங்களுக்கிடையே மிகப்பெரிய இடியோசை கேட்கும்; ஆனால், இப்போது நீங்கள் இதை அனுபவிப்பீர்கள். ஏனெனில், இப்போது நீங்கள் பத்திரமாக உள்ளுக்குள் இருக்கிறீர்கள்.

எனவே, நீங்கள் உங்களது மையத்திற்குள் சென்றுவிட்டால், அதன்பிறகு மேற்பரப்பில் என்ன தான் நடந்தாலும், அதை நீங்கள் அனுபவிக்க ஆரம்பித்துவிடுவீர்கள். எனவே, நீங்கள் மேற்பரப்பில் அதோடு சண்டை போடாமல், அதற்கு மாறாக உங்களது மையத்திற்கு நழுவிச் சென்றவிடுங்கள். அப்போது, அங்கே அடக்கி ஆளும் திறன் இருக்குமே தவிர, வெளியிலிருந்து திணிக்கப்படுகின்ற ஒரு கட்டுப்பாடு அங்கு இருக்காது; நீங்கள் உங்களது மையத்தில் இருப்பதனால் தானாகவே நிகழ்கின்ற ஒரு திறமையாக அது இருக்கும்.

உங்களது தன்னுணர்வில் மையம் கொண்டிருப்பது தான், மனதை ஆளுகின்ற திறமை ஆகும்.

ஆகவே, உங்களது 'மனதைக் கட்டுப்படுத்த' முயற்சி செய்யாதீர்கள். அந்த மொழி உங்களை தவறாக வழி நடத்திச் சென்றுவிடும். யாரும் கட்டுப்படுத்த முடியாது. மேலும், யாராவது கட்டுப்படுத்த முயற்சி செய்தால், அவர்கள் பைத்தியமாகிப் போவார்கள். அவர்கள், வெறுமனே மனம் கலங்கிவிடுவார்கள். ஏனெனில், மனதைக் கட்டுப்படுத்த முயற்சித்தல் என்பது, உங்களது மனதின் ஒரு பகுதியானது அந்த மனதின் மற்றொரு பகுதியைக் கட்டுப்படுத்துவது போல் அது ஆகிவிடும்.

நீங்கள் யார்? கட்டுப்படுத்த முயற்சிப்பது யார்? நீங்களும் ஒரு அலைதான். ஆனால், ஒரு சமயநெறிமிக்க அலை. ஆனால், நீங்கள் மனதைக் கட்டுப்படுத்த முயற்சிக்கிறீர்கள். மேலும், உங்களிடம் சமயநெறி அல்லாத அலைகளும் உள்ளன. அங்கே, உங்களிடம் பாலியல் உணர்வு இருக்கிறது, கோபம் இருக்கிறது, வெறுப்பு இருக்கிறது; இதைப் போன்று லட்சக்கணக்கான சமயநெறியற்ற அலைகளும் உள்ளன. மேலும், சமயநெறி உள்ள அலைகளும் உள்ளன. தியானம், அன்பு, கருணை இவைகளும் உள்ளன. ஆனால், இவைகள் எல்லாம் உங்களது மேற்பரப்பில் உள்ளவை, மேற்பரப்புக்குரியவை. அவைகள் சமயநெறி உள்ளதா அல்லது இல்லாததா என்பது எந்த வேறுபாட்டையும் ஏற்படுத்தாது.

உண்மையான சமயம், உங்களது மையத்திலும், அதில் தோன்றும் தோற்றத்திலும் தான் உள்ளது. உங்களது வீட்டில் உட்கார்ந்து கொண்டு, நீங்கள் உங்களது சொந்த மேற்பரப்பினை உற்றுப் பாருங்கள். அப்போது, எல்லாமே மாறிவிடும். ஏனெனில், உங்களது காட்சி புதியதாக இருக்கும். திடீரென்று நீங்கள் எஜமான் ஆகிவிடுவீர்கள். உண்மையில், நீங்கள் ஒரு கட்டுப்பாட்டில் இருப்பதால்; உங்களது கட்டுப்பாடானது, கட்டுப்பாடு இல்லாமல் இருந்தாலும்கூட, அதை அப்படியே விட்டுவிட முடியும். இது, உங்கள் கண்களுக்குத் தெரியாத ஒன்று. உங்களது மேற்பரப்பைப் பற்றி கவலைப்படாமல், நீங்கள் வேருன்றி அவ்வளவு கட்டுப்பாட்டுடன் இருப்பதால், உண்மையில் உங்களால் அந்த மேற்பரப்பில் நிகழும் அலைகள், பேரலைகள், சூறாவளி ஆகியவற்றைச் சந்தோஷமாக அனுபவிக்க முடியும். அது அழகானது; அது சக்தி கொடுப்பது; அது பலம் கொடுப்பது - அதைப் பற்றி கவலைப்பட ஒன்றும் இல்லை. பலவீனமானவர்கள் தான் தங்கள் எண்ணங்களைப் பற்றி கவலைப்படுவார்கள். பலவீனமானவர்கள் தான் மனதைப் பற்றி கவலைப்படுவார்கள். பலம் வாய்ந்தவர்கள், வெறுமனே அந்த முழுமையை உள்வாங்கிக் கொள்வார்கள். மேலும், அவர்கள் அதனால் செழிப்பானவர்கள் ஆகிவிடுவார்கள். பலம் வாய்ந்த மனிதர்கள் ஒருபோதும் எதையும் ஒதுக்கித் தள்ளுவதில்லை.

ஒதுக்கித் தள்ளுவது என்பது பலவீனத்தால் வருகிறது. நீங்கள் அப்போது பயப்படுகிறீர்கள். பலமுள்ள மக்கள், வாழ்க்கை தங்களுக்கு எதைக் கொடுத்தாலும் அதை ஏற்றுக் கொள்ள விரும்புவார்கள். சமயநெறியுடன் இருப்பதோ அல்லது சமயநெறி இல்லாமல் இருப்பதோ; நல்லொழுக்கமோ அல்லது தீய ஒழுக்கமோ; தெய்வீகமோ அல்லது சாத்தானின் செயலோ - இவற்றில் எந்த வேறுபாடும் அவர்களுக்கு இருக்காது! பலம் வாய்ந்த மக்கள், இவைகள் எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்வார்கள். மேலும் அவர், அவற்றால் மிகவும் செழிப்புமிக்கவராக ஆவார். சாதாரண சமயநெறியுள்ள மக்களால் பெறமுடியாத, முற்றிலும் வேறுபட்டதொரு ஆழத்தை அவர் பெற்றிருப்பார்; சாதாரண சமயநெறியுள்ள மக்கள் அப்பாவிகள், ஆழம் குறைந்தவர்கள்.

சாதாரண சமயப்பற்று உள்ள மக்கள் கோவிலுக்கோ அல்லது மசூதிக்கோ அல்லது தேவாலயத்திற்கோ செல்வதை நீங்கள் கவனியுங்கள். அப்போது, மிகமிக ஆழம் குறைந்த, ஆழமே இல்லாத மக்களை நீங்கள் எப்போதும் காண முடியும். ஏனெனில், அவர்கள் தங்களின் ஒரு பகுதியையே அவர்கள் நிராகரித்துவிடுகின்றனர்; அவர்கள் முடமானவர்கள் ஆகிவிடுகின்றனர். அவர்கள், ஒருவகையில் முடக்கு வாதத்தில் தாக்கப்பட்டவர்கள்.

மனம் என்பதில் எந்தத் தவறும் கிடையாது; எண்ணங்கள் என்பதிலும் எந்தத் தவறும் கிடையாது. எதுவும் தவறு என்றால், அது மேற்பரப்பிலேயே இருக்கும். ஏனெனில், அப்போது நீங்கள் முழுமையைப் பற்றி அறிந்திராததால், நீங்கள் தேவையில்லாமல் ஏதாவது ஒரு பகுதியை பாரபட்சத்தோடு உணர்வீர்கள். முழுமையான உணர்வு தேவை. மேலும் அது, நீங்கள் மையத்தில் இருக்கும் போது மட்டுமே சாத்தியப்படும்; ஏனெனில், மையத்திலிருந்து நீங்கள் எல்லாப் பரிமாணங்களிலும், எல்லாத் திசைகளிலும், உங்களது இருப்பின் மேற்பரப்பு முழுவதையும் உங்களால் பார்க்க முடியும். மேலும், உங்களது மேற்பரப்பு மிகவும் பரந்தது. உண்மையில், இந்த இயற்கையைப் போல் அது பரந்து விரிந்தது. ஆனால், நீங்கள் உங்கள் மையத்தில் இருக்கும் போது, நீங்கள் மேலும் மேலும் அகலமாகவும், மேலும் மேலும் பெரிதாகவும் ஆகிக் கொண்டே போவீர்கள். மேலும், இறுதியில் நீங்கள் அந்த முழுமையோடு முடிவு பெற்றுவிடுவீர்கள்; அதற்குக் குறைவாக எதோடும் முடிவுற மாட்டீர்கள்.

மற்றொரு நிலையில் பார்க்கும் போது, உங்களது மனம் என்பது பிரயாணம் செய்கின்ற ஒருவரின் ஆடைகளில் சேர்கின்ற தூசி போன்றது. மேலும், நீங்களோ பல லட்சம் பிறவிகளாக பிரயாணம் செய்து கொண்டே இருக்கிறீர்கள். ஆனால், ஒருபோதும் குளித்ததில்லை. எனவே, அதிக தூசி இயல்பாகவே சேர்ந்துவிட்டது. அதில் எந்தத் தவறும்இல்லை; அது அப்படித்தான் இருந்தாக வேண்டும். அடுக்கடுக்காக தூசிகள் சேர்ந்துவிட்டன; ஆனால், நீங்களோ அந்த அடுக்குகள் தான் உங்களது தனிமனிதப் பண்பு என்று நினைக்கிறீர்கள். நீங்கள், அதோடு அந்த அளவுக்கு ஐக்கியமாகிவிட்டீர்கள். நீங்கள் அந்த அடுக்கடுக்கான தூசியுடன் அதிககாலம் வாழ்ந்துவிட்டபடியால், இப்போது அவைகள் உங்களது தோல் போன்று காணப்படுகின்றன. நீங்கள் அதோடு ஐக்கியமாகிவிட்டீர்கள்.

மனம் என்பது உங்களது கடந்த காலம், நினைவுகள், உங்கள் மீது படிந்த தூசி. நாம் எல்லோரும் அந்த தூசியை சேகரித்துத் தான் ஆக வேண்டும். நீங்கள் பிரயாணம் செய்தால், நிச்சயம் உங்கள்மீது தூசி



படியத்தான் செய்யும். ஆனால், அதற்காக நீங்கள் அதோடு உங்களை சம்பந்தப்படுத்திக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. ஏனெனில், நீங்கள் அதோடு ஒன்றாகிவிட்டால், தூசி அல்ல; நீங்கள் தன்னுணர்வாக இருக்கிறீர்கள். ஓமர் கயாம், "தூசியோடு தூசியாக," என்று கூறுகிறார். மனிதன் இறந்து போனவுடன் என்ன நடக்கிறது? தூசி, தூசிக்கு திரும்பிச் சென்றுவிடுகிறது; வேறு எதுவும் மீதம் இருப்பதில்லை. ஆனால், நீங்கள் என்பது வெறும் தூசி தானா, அடுக்கடுக்கான தூசி தானா அல்லது உங்களுக்குள் உள்ள ஏதோ ஒன்றா? நீங்கள் என்பது தூசி அல்ல; நீங்கள் என்பது இந்த பூமிக்குரியது அல்ல.

அது உங்களது தன்னுணர்வு, விழிப்புணர்வு. விழிப்புணர்வு தான் உங்களது இருப்பு நிலை; தன்னுணர்வு தான் உங்களது ஆன்மா. மேலும், அந்த விழிப்புணர்வு, தன்னைச் சுற்றிலும் சேர்த்து வைத்துள்ள தூசி தான் உங்களது மனம்.

இந்தத் தூசியோடு நடவடிக்கை எடுப்பதற்கு இரண்டு வழிகள் உள்ளன. சாதாரண "சமயப் பற்றுள்ள" வழி என்னவென்றால், உங்களது ஆடைகளைச் சுத்தம் செய்வது; அதன்பின்னர், உங்களது உடலை நன்றாகத் தேய்த்துக் கழுவுவது. ஆனால், அந்த வழிகள் அதிகம் உதவாது. நீங்கள் எவ்வளவு தான் உங்களது ஆடைகளை சுத்தம் செய்தாலும், அந்த ஆடைகள் தற்போது மீண்டும் பழையபடிக்கு கொண்டு வர முடியாதபடி, அதிக அழுக்குப் படிந்துவிட்டது. உங்களால் அதை சுத்தம் செய்ய முடியாது; அதற்கு மாறாக, நீங்கள் அதை சுத்தம் செய்வதற்காக எதைச் செய்தாலும், அது அவைகளை இன்னும் அதிக அசுத்தமானதாகத் தான் ஆக்கிவிடும்.

இது, நடந்தது :

முல்லா நஸ்ருதீன், ஒருமுறை என்னிடம் வந்தார். அவர் ஒரு குடிகாரர். அவரது கைகள் நடுங்கும். அவர் சாப்பிட்டாலும், தேநீர் குடித்தாலும், எல்லாம் அவரது ஆடைகளில் கொட்டிவிடும். எனவே, அவரது ஆடைகள் எல்லாம் தேநீர், உணவு, இது அல்லது அது என்று ஏதாவது கறை படிந்து இருக்கும். எனவே, நான் நஸ்ருதீனிடம், "நீங்கள் ஏன் ஒரு வேதியல் வல்லுநரிடம் சென்று இந்தக் கறைகளைப் போக்குவதற்கு ஏதாவது ஒன்றைக் கேட்கக் கூடாது? இந்தக் கறைகளின் மீது தேய்த்து, அதன்பிறகு துவைத்துவிடுவதற்கு சில திரவங்கள் உள்ளன," என்று கூறினேன்.

அவரும் போனார். ஏழு தினங்களுக்குப் பிறகு அவர் திரும்பவும் வந்தார்; அவரது ஆடைகள் முன்பை விடவும் இன்னமும் மோசமான நிலையில் இருந்தன. நான் அவரிடம், "என்ன நடந்தது? நீங்கள் ரசாயன

வல்லுநரிடம் சென்றீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர், "நானும் போனேன். மேலும், அந்த இரசாயனத் திரவம் மிகவும் அற்புதமானது. அது நன்றாக வேலை செய்கிறது. இப்போது அந்த தேநீர் மற்றும் உணவு கறைகள் போய்விட்டன. ஆனால், இப்போது எனக்கு வேறு ஒரு திரவம் தேவைப்படுகிறது. ஏனெனில், ஏற்கனவே நான் உபயோகித்த இரசாயனத் திரவத்தின் கறைகள் துணியின் மீது படிந்துவிட்டன," என்றார்.

சமயநெறியாளர்கள், மக்கள் உங்களுக்கு சோப்புகளையும், இரசாயன திரவங்களையும், அழுக்கை அகற்றிக் களைவதற்கான செயல்முறைகளையும் கொடுப்பார்கள். ஆனால், அதன்பிறகு அந்த திரவங்கள் தங்களின் சொந்தக் கரையை துணிகளின்மீது விட்டுச் சென்றுவிடும். அதனால் தான் தீய ஒழுக்கம் உள்ள ஒரு மனிதன், நல்ல ஒழுக்கம் உள்ளவனாக அவன் அழுக்கானவனாகவே இருப்பான். ஆனால், இப்போது ஒரு நல்லொழுக்கமான வழியில் இருப்பான். ஆனால், அவன் அழுக்கடைந்து தான் இருப்பான். சில நேரங்களில் சூழ்நிலை, முன்பு இருந்ததைவிட இப்போது இன்னும் மோசமானதாக ஆகிவிடும்.

ஒரு தீய ஒழுக்கம் உள்ள ஒரு மனிதன், பல விதத்தில் கள்ளம் கபடம் இல்லாதவனாக, குறைந்த ஆணவம் கொண்டவனாக இருப்பான். ஆனால், ஒரு நல்ல ஒழுக்கம் உள்ள மனிதன், அவனது மனதிற்குள் எல்லாவிதமான தீய ஒழுக்கங்களையும் வைத்திருப்பதோடு மட்டுமல்ல, அவன் இப்போது இன்னும் பல புதிய விஷயங்களாகிய, அதாவது, அந்த நல்லொழுக்கம், புனிதத்தன்மை, நான் என்னும் ஆணவப் போக்கு ஆகியவற்றையும் பெற்றிருப்பான். அவன், எல்லோரையும்விட உயர்ந்தவனாகவும்; அவன், தான் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒருவனாக இருப்பதாகவும் உணர்வான். மேலும், மற்றவர்கள் எல்லோரும் நரகத்திற்குப் போவார்கள்; அவன் மட்டுமே சொர்க்கத்திற்குப் போவதாக உணர்வான். ஆனால், தீய ஒழுக்கங்கள் எல்லாம் அப்படியே உள்ளே இருக்கும். ஏனெனில், உங்களால், உங்களது மேற்பரப்பில் இருந்து கொண்டு உங்களது மனதை கட்டுப்படுத்துதல் முடியாது; அதற்கு வழி இல்லை. அது அப்படிப்பட்ட வழியில் நடக்காது. ஒரே ஒரு கட்டுப்பாடு மட்டுமே உள்ளது. அது என்னவென்றால், அது மையத்தில் இருந்து வருகின்ற உணர்வு தான்.

மனம் என்பது நீங்கள் பல லட்சம் பிரயாணங்களில் சேர்த்துக் கொண்ட தூசி போன்றது. உண்மையான சமயநெறி மிக்க நிலைப்பாடு, சாதாரண சமயநெறி நிலைப்பாட்டிற்கு நேர் எதிரான சமயநெறி நிலைப்பாடு என்னவென்றால், நீங்கள் வெறுமனே அந்த ஆடையைத்



தூக்கி எறிந்துவிடுவது தான். அவைகளைச் சுத்தம் செய்ய வேண்டும் என்று கவலைப்படாதீர்கள். அவைகளைச் சுத்தம் செய்ய முடியாது. பாம்பு தனது பழைய தோலை உரித்துக் கொண்டு, வெறுமனே வெளியே வருவதைப் போன்று வாருங்கள். மேலும், அதைத் திரும்பிக்கூடப் பார்க்காதீர்கள்.

மீண்டும், மற்றொரு நிலையில் இருந்து பார்த்தால், உங்களது மனம் என்பது உங்களது கடந்த காலம், உங்களது நினைவுகள், உங்களது அனுபவங்கள் எல்லாவற்றின் சேகரம். நீங்கள் இதுவரை செய்தது எல்லாம், நீங்கள் இதுவரை நினைத்தது எல்லாம், இதுவரை நீங்கள் ஆசைப்பட்டது எல்லாம், இதுவரை நீங்கள் கண்ட கனவுகள் எல்லாம், இவைகள் எல்லாம் உங்களது முழு கடந்த காலமும், உங்களது நினைவுகள் எல்லாம் தான், மனம் என்பதாக இருக்கிறது. எனவே, நீங்கள் உங்களது நினைவுகளை விட்டு ஒழிக்காத வரையில், உங்களால் உங்களது மனதை ஆளுகின்ற எஜமான் ஆக முடியாது.

இந்த நினைவை விட்டு ஒழிப்பது எப்படி? அது எப்போதும் அங்கே உள்ளது. உங்களைப் பின்தொடர்ந்து வருகிறது. உண்மையைச் சொல்லப் போனால், நீங்கள் என்பதே அந்த நினைவுகள் தான். எனவே, அதை விட்டொழிப்பது எப்படி? இந்த நினைவுகள் தவிர, நீங்கள் என்பது யார்? நான் உங்களிடம், "நீ யார்?" என்று கேட்கும் போது, நீங்கள் உங்களது பெயரைச் சொல்கிறீர்கள். அது உங்களது நினைவாற்றல். சில காலத்திற்கு முன்பு, உங்களது பெற்றோர் உங்களுக்கு கொடுத்தனர். ஆனால், நான் கேட்பது, "நீங்கள் யார்?." அதற்கு நீங்கள் உங்களது குடும்பத்தைப் பற்றி, உங்களது தந்தை, உங்களது தாயார் இவர்களைப் பற்றி கூறுகிறீர்கள். இதுவும் நினைவு தான். நான் கேட்பது, "நீங்கள் யார்?." அதற்கு நீங்கள் உங்களது படிப்பைப் பற்றி, உங்களது பட்டங்களைப் பற்றி, நீங்கள் முதுகலைப் பட்டம் பெற்றவர் என்றோ அல்லது நீங்கள் முனைவர் பட்டம் பெற்றவர் என்றோ அல்லது ஒரு பொறியியல் வல்லுநர் அல்லது கட்டிடக் கலை நிபுணர் என்கிறீர்கள். இது ஒரு நினைவு தான்.

நான் உங்களிடம், "நீங்கள் யார்?" என்று கேட்கும் போது, நீங்கள் உண்மையில் உங்களுக்குள் போய்ப் பார்த்தால், உங்களுக்கான ஒரே பதில், "எனக்குத் தெரியாது," என்பதாக மட்டுமே இருக்கும். நீங்கள் எதைச் சொன்னாலும், அது உங்களது நினைவாற்றலாகத் தான் இருக்குமே தவிர, அது நீங்களாக இருக்காது. உண்மையான; அதிகாரப்பூர்வ பதில், "எனக்குத் தெரியாது," என்பதாக மட்டுமே இருக்கும். ஏனெனில், ஒருவர் தன்னைத் தானே அறிந்து கொள்வது தான்

இறுதியான விஷயமாக இருக்கும். என்னால், நான் யார் என்று பதில் கூற முடியும். ஆனால், நான் பதில் கூற மாட்டேன். நீங்கள் யார் என்று உங்களால் பதில் கூற முடியாது. ஆனால், நீங்கள் பதில்களோடு தயாராக இருக்கிறீர்கள். அறிந்து கொண்டவர்கள் இது குறித்து மௌனமாக இருந்து விடுகின்றனர். ஏனெனில், எல்லா நினைவுகளும் வெளியில் போடப்பட்டுவிடும் போது, எல்லா மொழிகளையும்வெளியே எறிந்து விடும் போது, அதன் பிறகு நான் யார் என்பதை சொல்லவே முடியாது. நான் உங்களுக்குள் பார்க்க முடியும்; நான் உங்களுக்குச் சில சைகைகளைக் கொடுக்க முடியும்; நான் உங்களோடு இருக்க முடியும்; எனது முழு ஆன்மாவோடு உங்களோடு இருக்க முடியும் - அது தான் எனது பதில். ஆனால், அதற்கான எதைச் சொன்னாலும், அது எனது நினைவாற்றலின் ஒரு பகுதியாகத் தான் இருக்க முடியும்; மனதின் ஒரு பகுதியாகத் தான் இருக்க முடியும். தன்னுணர்வின் ஒரு பகுதியாக இருக்க முடியாது.

இந்த நினைவுகளை விட்டொழிப்பது எப்படி? அவற்றை கவனியுங்கள். அவற்றிற்கு சாட்சியாக இருங்கள். மேலும், எப்போதும், "இது எனக்கு நிகழ்ந்துள்ளது. ஆனால், இந்த நிகழ்வு என்பது நான் அல்ல," என்பதை நினைவில் வைத்திருங்கள். நிச்சயமாக, நீங்கள் ஒரு குறிப்பிட்ட குடும்பத்தில் பிறந்திருக்கிறீர்கள். ஆனால், இது நீங்கள் அல்ல. அது உங்களுக்கு நிகழ்ந்துள்ளது; இது உங்களுக்கு வெளியில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி. நிச்சயமாக, யாரோ ஒருவர் உங்களுக்கு ஒரு பெயரைக் கொடுத்துவிட்டார்கள். அதனால் பயன் உண்டு. ஆனால், அந்தப் பெயர் தான் நீங்கள் அல்ல. நிச்சயமாக, உங்களுக்கு ஒரு உருவம் உள்ளது. ஆனால், அந்த உருவம் தான் நீங்கள் அல்ல. அந்த உருவம் என்பது, நீங்கள் வெறுமனே இருக்கும்படியாக ஆகிவிட்ட ஒரு வீடு. இந்த உருவம் என்பது, நீங்கள் உள்ளே இருப்பதற்கான ஒரு உடல். மேலும், இந்த உடல் உங்களுக்கு உங்களது பெற்றோர்களால், ஒரு வெகுமதி போன்று கொடுக்கப்பட்டது. எனவே, அதுவும் நீங்கள் அல்ல.

இப்படி கவனித்து, ஒவ்வொன்றாக ஆராய்ந்து விலக்குங்கள். இதைத் தான் கீழைநாடுகள் விவேகம் என்று அழைக்கின்றன. நீங்கள் தொடர்ந்து இப்படி ஆராய்ந்து விலக்கிக் கொண்டே இருந்தால், நீங்கள் எதுவாக இல்லையோ, அவற்றையெல்லாம் ஆராய்ந்து விலக்கிவிட்ட ஒரு தருணம் வரும். திடீரென்று, அந்த நிலையில் முதல்முறையாக நீங்கள் உங்களை எதிர்கொள்வீர்கள். உங்களது ஆன்மாவை நீங்கள் எதிர் நோக்குவீர்கள். நீங்கள் அல்லாத எல்லா அடையாளங்களையும் வெட்டி எறிந்து கொண்டே செல்லுங்கள். அதாவது, இந்த குடும்பம், இந்த உடல், இந்த மனம் - இப்படி எல்லாவற்றையும் வெட்டி எறியுங்கள். அப்போதுள்ள அந்த வெறுமையில், நீங்கள் அல்லாத



எல்லாம் வெளியே தூக்கி எறியப்பட்ட பின்னர், திடீரென்று உங்களது ஆன்மா மேலே எழுந்து வரும். முதல் முறையாக நீங்கள், உங்களை எதிர்கொள்வீர்கள். மேலும், அந்த எதிர் கொள்ளுதல் தான் உங்களை ஆளும் திறமையுள்ளவராக ஆக்கும்.



**நீங்கள் அல்லாத எல்லா அடையாளங்களையும் வெட்டி எறிந்து கொண்டே செல்லுங்கள். அதாவது, இந்த குடும்பம், இந்த உடல், இந்த மனம் - இப்படி எல்லாவற்றையும் வெட்டி எறியுங்கள். அப்போதுள்ள அந்த வெறுமையில், நீங்கள் அல்லாத எல்லாம் வெளியே தூக்கி எறியப்பட்ட பின்னர், திடீரென்று உங்களது ஆன்மா மேலே எழுந்து வரும். முதல் முறையாக நீங்கள், உங்களை எதிர்கொள்வீர்கள். மேலும், அந்த எதிர் கொள்ளுதல் தான் உங்களை ஆளும் திறமையுள்ளவராக ஆக்கும்.**



எண்ணங்களை நிறுத்த முடியாது; அது நிற்காது என்பதற்காக அல்ல. அதை நீங்கள் நிறுத்த முடியாது. அது, தானாகவே தான் நிற்கும். இந்த வித்தியாசத்தைப் புரிந்து கொள்ள வேண்டும்; இல்லையெனில், நீங்கள் உங்களது மனதினை துரத்திக் கொண்டு சென்றே பைத்தியமாகி விடுவீர்கள்.

உங்களது எண்ணங்களை நிறுத்துவதால், மனம் என்பது இல்லாமல் இருக்கின்ற நிலை எழாது. எண்ணங்கள் என்பது அங்கே இல்லாத போது, மனம் என்பது இல்லாத நிலை இருக்கிறது. நீங்கள், எண்ணங்களை நிறுத்த வேண்டும் என்கின்ற அந்த முயற்சியே, அதிக பதற்றத்தை உருவாக்கிவிடும். உங்களுக்குள் சச்சரவை உருவாக்கிவிடும்; அது உங்களை பிளவுபட்டவராக ஆக்கிவிடும். இது உங்களுக்கு உதவாது.

மேலும், நீங்கள் வலுக்கட்டாயமாக ஒரு சில நொடிகள் அதை நிறுத்துவதில் வெற்றி பெற்றாலும், அது ஒரு சாதனை ஆகாது. ஏனெனில், அந்த ஒருசில நொடிகளும்கூட, கிட்டத்தட்ட உயிரற்றவைகளாகத் தான் இருக்கும்; அவைகள் உயிர்த்துடிப்புடன் இருக்காது. நீங்கள் ஒருவிதமான அசைவற்ற நிலையை உணரலாம்; ஆனால், அமைதியை உணர முடியாது. ஏனெனில், திணிக்கப்பட்ட அசைவற்ற நிலை அமைதி ஆகாது. அதற்கு அடியில், உங்களது தன்னுணர்வற்ற அடி ஆழத்தில், அப்படி நீங்கள் அடக்கி வைத்த மனம் வேலை செய்து கொண்டு தான் இருக்கும்.

எனவே, மனதை நிறுத்துவதற்கு எந்த ஒரு வழியும் இல்லை. ஆனால், அந்த மனம் என்பது நிற்கும்; அது மட்டும் நிச்சயம். அது தானாகவே நிற்கும்.

ஆகவே, என்ன செய்ய வேண்டும்? இந்த கேள்வி முக்கியமானது. கவனியுங்கள். அதை நிறுத்துவதற்கு முயற்சி செய்யாதீர்கள். மனதிற்கு எதிராக எந்தச் செயலையும் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. முதலில், அதை யார் செய்வது? அது, உங்களது மனமே, தனக்கு எதிராகச் சண்டை போடுவது போல் ஆகிவிடும். நீங்கள், உங்களது மனதை இரண்டாகப் பிரித்துவிடுவீர்கள். மற்றொரு பகுதியை, தானே கொன்றுவிட்டு, அந்தப் பகுதி மட்டுமே எஜமானாக இருப்பதற்கு முயற்சி செய்வதாகும். அது அர்த்தமற்றது. அது ஒரு முட்டாள்தனமான விளையாட்டு. அது உங்களை பைத்தியமாக ஆக்கிவிடும். நீங்கள், உங்களது மனதையோ அல்லது சிந்தனையையோ நிறுத்துவதற்கு முயற்சி செய்யாதீர்கள். வெறுமனே அதை கவனியுங்கள்; அதை அனுமதியுங்கள். அதற்கு முழு சுதந்திரம் கொடுங்கள். அது எந்த அளவுக்கு வேகமாகச் செல்ல விரும்புகிறதோ, அந்த அளவுக்கு செல்லட்டும். நீங்கள், எந்த ஒரு வழியிலும் அதைக் கட்டுப்படுத்த முயற்சி செய்யாதீர்கள். நீங்கள் வெறும் சாட்சியாக மட்டுமே இருங்கள்.

இது மிகவும் அழகானது! மனம் என்பது மிகவும் அழகான இயந்திர நுட்பங்களில் ஒன்று. விஞ்ஞானத்தால், இதுவரை இந்த மனம் என்பதற்கு இணையாக எது ஒன்றையும் உருவாக்க இயலவில்லை. மனம் இன்னமும் ஒரு தனியான அற்புதப் பொருளாக, மிகவும் சிக்கல் நிறைந்ததாக, அபரிமிதமான சக்தி மிக்கதாக, அநேகவிதமான சக்திகளை உள்ளடக்கியதாக இன்னமும் உள்ளது. அதை கவனியுங்கள்! அதை அனுபவியுங்கள்!

மேலும், ஒரு எதிரியைப் போன்று கவனிக்காதீர்கள். ஏனெனில், நீங்கள் உங்களது மனதினை எதிரியைப் போல் பார்க்க ஆரம்பித்தால், உங்களால் கவனிக்க முடியாது. நீங்கள் ஏற்கனவே அதைப் பற்றிய தப்பெண்ணத்துடன், அதற்கு எதிராக இருக்கிறீர்கள். நீங்கள் ஏற்கனவே உங்களது மனதில் ஏதோ ஒரு தவறு உள்ளது என்று தீர்மானித்துவிட்டீர்கள். நீங்கள் ஏற்கனவே முடிவெடுத்துவிட்டீர்கள். மேலும், நீங்கள் யாராவது ஒருவரை ஒரு விரோதியாகப் பார்க்கும் போது, உங்களால் ஒருபோதும் ஆழமாகப் பார்க்க முடியாது. நீங்கள், அவரது கண்களை ஒருபோதும் பார்க்க மாட்டீர்கள். நீங்கள் அதை தவிர்த்துவிடுவீர்கள்.

மனதினை கவனித்தல் என்பது, அதை நீங்கள் ஆழ்ந்த அன்புடன், ஆழ்ந்த மரியாதையுடன், பெருமதிப்புடன் பார்ப்பதாகும். அது, கடவுள் உங்களுக்கு கொடுத்த பரிசு. மனம் என்பதில் தனியாக தவறு ஒன்றும் கிடையாது. சிந்தனை என்பதில் எந்தத் தவறும் கிடையாது. மற்ற செயல்பாடுகளைப் போல அதுவும் ஒரு அழகான செயல்பாடு தான். வானத்தில் நகர்ந்து செல்லும் மேகங்கள் அழகாக இருக்கும் போது, உங்களுக்குள் உள்ள ஆகாயத்தில் நகர்ந்து செல்லும் எண்ணங்கள் மட்டும் ஏன் அழகற்றவையாகும்? மரங்களில் மலர்கள் மலர்வது அழகாக இருக்கும் போது, உங்களது ஆன்மாவில் எண்ணங்கள் மலர்ந்தால் என்ன? ஒரு நதி, கடலை நோக்கி ஓடுவது அழகாக இருக்கும் போது, ஏதோ ஒரு தெரியாத இலக்கினை நோக்கி எண்ணங்கள் எங்கோ ஓடுவது ஏன் அழகற்றதாகிறது? அது அழகில்லையா? அதனை பயபக்தியுடன் பாருங்கள். அதோடு சண்டை போடுபவராக இல்லாமல், நேசிப்பவராக இருங்கள்.



உங்கள் கண்களுக்குத் தெரியாத மனதின் சிறு சிறு வேறுபாடுகளைக் கவனியுங்கள். அதன் திடீர் திருப்பங்களை, அதன் அழகான திருப்பங்களை கவனியுங்கள். அது திடீரென்று தாவிக் குதிப்பதையும், தாண்டிச் செல்வதையும், மனம் விளையாடுகின்ற விளையாட்டுகளையெல்லாம்; அதை, அலையடிக்கின்ற கனவுகளையும், கற்பனைகளையும், அந்த நினைவுகளையும், அது உருவாக்குகின்ற ஆயிரத்தோரு திரையிடல்களையும் - கவனியுங்கள்! அங்கே தனியாக நின்று கொண்டு, அதில் ஈடுபடாமல், தொலைவில் இருந்து கவனியுங்கள். கொஞ்சம் கொஞ்சமாக நீங்கள் உணர ஆரம்பிப்பீர்கள். உங்களது கவனித்தல் ஆழமாக ஆக ஆக, உங்களது விழிப்புணர்வும் ஆழமாக ஆகிவிடும். அதில் இடைவெளிகள், இடைவேளைகள் எழுவதற்கு ஆரம்பித்துவிடும். ஒரு எண்ணம் போயிருக்கும், அடுத்த எண்ணம் இன்னமும் வந்திருக்காது. ஆனால், அங்கே ஒரு இடைவெளி இருக்கும். ஒரு மேகம் கடந்து போயிருக்கும். அடுத்தது வந்து கொண்டிருக்கும். இடையில் அங்கே ஒரு இடைவெளி இருக்கும்.

அந்த இடைவெளிகளில், முதல் முறையாக உங்களுக்கு அந்த மனம் இல்லாத நிலையில், காட்சிகள் தென்படும். நீங்கள் அப்போது, இந்த மனம் என்பது இல்லாததன் சுவையை பெறுவீர்கள் - அந்தச் சுவையை ஜென்னின் சுவை என்றோ அல்லது தாவோ அல்லது யோகா இவற்றின் சுவை என்றோ அழையுங்கள். அந்த சிறிய இடைவெளிகளில், திடீரென்று வானம் தெளிவாக இருக்கும். அப்போது சூரியன் பிரகாசமாக இருக்கும். திடீரென்று இந்த உலகமே முழுவதும் புதிரானதாகவும் தெரியும். ஏனெனில், எல்லா தடைகளும், விட்டு ஒழிந்து போய்விட்டன; உங்களது கண்களுக்கு முன்பு இருந்த திரை இப்போது அங்கே இருக்காது. நீங்கள் தெளிவாகப் பார்க்க முடியும்;

நீங்கள் ஊடுருவிப் பார்க்க முடியும். இந்த முழு இயற்கையுமே தெளிவாகத் தெரிய ஆரம்பிக்கும்.

ஆரம்பத்தில், இது ஏதோ அபூர்வமான நேரங்களில் நடப்பதாக இருக்கும். கொஞ்ச நேரமாகவும், அதிக இடைவெளியுடனும் இருக்கும். ஆனால், அவைகள் உங்களுக்கு சமாதி நிலை என்றால் என்ன என்கிற காட்சியைக் கொடுக்கும். சிறிது நேரம் அமைதி நிரம்பி இருக்கும் - இந்த அமைதி வரும், அதன்பின்னர் மறைந்து போய்விடும். ஆனால், இப்போது நீங்கள் சரியான பாதையில் சென்று கொண்டிருக்கிறீர்கள் என்பதை அறிந்து கொள்ள முடியும். நீங்கள் மீண்டும் கவனிக்க ஆரம்பிப்பீர்கள். ஒரு எண்ணம் கடந்து செல்லும் போது, நீங்கள் அதை கவனியுங்கள்; ஒரு இடைவெளி கடந்து செல்லும் போதும், அதை நீங்கள் கவனியுங்கள். மேகங்களும் அழகானவை தான், சூரியப்பிரகாசமும் அழகானது தான். இப்போது நீங்கள் எதையும் தேர்வு செய்பவராக இருக்க மாட்டீர்கள். இப்போது உங்களிடம், இது தான் வேண்டும் என்கிற நிலையான மனம் இருக்காது. இப்போது நீங்கள், "எனக்கும் எண்ணங்களுக்கும் இடையே உள்ள இந்த இடைவெளி மட்டுமே விருப்பம்," என்று கூற மாட்டீர்கள். அது முட்டாள்தனமாது. ஏனெனில், அந்த இடைவெளிகளை மட்டுமே வேண்டும் என்று, நீங்கள் அதன்மீது பற்று கொள்ளும் போது, நீங்கள் எண்ணங்களுக்கு எதிராக முடிவெடுத்து விடுகிறீர்கள். அதன்பிறகு, அந்த இடைவெளிகளும் மறைந்து போய்விடும்.

அந்த இடைவெளிகள், நீங்கள் தொலைவில் தனியாக இருக்கும் போது மட்டுமே நிகழும். அவைகள் தானாகத் தான் நிகழும். அவைகளை நீங்கள் பிடித்து இழுத்துக் கொண்டு வர முடியாது. அவைகள் தானாகவே நிகழும்; நீங்கள், அவைகள் நிகழும்படி நிர்பந்திக்க முடியாது. அவைகள் எல்லாம் தானாகவே நிகழும் நினைவுகள்.

எனவே, கவனித்துக் கொண்டே போங்கள். எண்ணங்கள் வரட்டும், போகட்டும் - அவைகள் எங்கு போக வேண்டும் என்று நினைக்கிறதோ, அங்கு போகட்டும். அதில் தவறேதும் இல்லை! அவைகளை இயக்குவதற்கோ அல்லது உங்கள் இஷ்டத்துக்கு மாற்றி அமைக்கவோ முயற்சி செய்யாதீர்கள். உங்களது எண்ணங்கள் முழு சுதந்திரத்துடன் நகர்ந்து செல்லட்டும். அதன் பிறகு மிகப்பெரிய இடைவெளிகள் வரும். அப்போது நீங்கள், சிறிய அளவிலான சமாதி நிலையினால் ஆசீர்வதிக்கப்படுவீர்கள். சில நேரங்களில், ஒரு நிமிடம்கூட கடந்து போயிருக்கும்; ஆனால், அங்கே எண்ணங்கள் இருக்காது; அங்கே போக்குவரத்து இருக்காது - அங்கே, கலக்கமடையாத ஒரு முழு அமைதி இருக்கும்.



மேலும், மிகப்பெரிய இடைவெளிகள் வரும் போது, நீங்கள் உங்களுக்குள் ஒரு புதிய தெளிவு எழுவதைக் காண முடியும். அப்போது உங்களால், இந்த புற உலகினைப் பார்க்கின்ற தெளிவு மட்டுமல்ல, உங்களால் உங்களது அக உலகினையும் பார்க்கின்ற தெளிவு கிடைத்துவிடும். முதல் இடைவெளியின் மூலம், நீங்கள் இந்த உலகினைக் காண்பீர்கள். அப்போது, மரங்கள் இப்போது தெரிவதைவிட இன்னும் அதிக பசுமையுடன் தெரியும். உங்களைச் சுற்றிலும் கோளங்களின் சங்கீதமாகிய, முடிவில்லாத சங்கீதம் சூழ்ந்து கொள்ளும். நீங்கள் திடீரென்று கடவுள் தன்மையின் பிரசன்னத்தில், சொல்லில் அடங்காத, புதிர் நிறைந்த நிலையில் இருப்பீர்கள். உங்களது கைகளால் அதைப் பிடிக்க முடியவில்லை என்றாலும்கூட, அது உங்களைத் தொட்டுக் கொண்டிருக்கும். உங்களது கைகளுக்கும் எட்டும் தூரத்தில் இருக்கும் என்றாலும்கூட, எல்லாவற்றையும் கடந்து இருக்கும். மிகப்பெரிய இடைவெளிகளின் போதும், இதே விஷயங்கள் உங்களுக்கு நிகழும். கடவுள் என்பவர் வெளியில் மட்டுமே இருப்பவராக இல்லாமல், அவர் உள்ளுக்குள்ளும் கூட இருக்கிறார் என்பதைக் கண்டு, நீங்கள் திடீரென்று ஆச்சரியமடைவீர்கள். கடவுள் பார்க்கப்படுகின்ற பொருட்களில் மட்டுமல்ல, பார்க்கின்றவருக்கு உள்ளேயும் கூட அவர் இருப்பார் - உள்ளேயும் வெளியேயும் இருப்பார்.

ஆனால், இப்படிப்பட்ட நிலையோடு நீங்கள் ஒருவிதமான பற்றுதலும் கூட பெற மாட்டீர்கள். பற்றுதல் என்பது தான், உங்களது மனம் என்பது தொடர்வதற்கானதொரு ஆதாரம். பற்றுதல் இல்லாமல் சாட்சிபாவனையோடு இருப்பது தான் மனதை நிறுத்துவதற்கு எந்த முயற்சியும் எடுக்காமல், அதை நிறுத்துவதற்கான வழியாகும். மேலும், உங்களால் அந்த பேரானந்தமயமான தருணங்களை நீங்கள் சந்தோஷமாக அனுபவிக்க ஆரம்பிக்கின்ற போது, அந்த ஆனந்தத்தை இன்னும் நீண்ட நேரம் தக்க வைத்துக் கொள்வதற்கான திறமையும் எழுந்துவிடும். இறுதியாக, அதன் விளைவாக, ஒருநாள் நீங்கள் அதன் எஜமான் ஆகிவிடுவீர்கள். அதன் பிறகு, நீங்கள் சிந்திக்க விரும்பும் போது மட்டுமே நீங்கள் சிந்திப்பீர்கள்; எண்ணங்கள் உங்களுக்குத் தேவை என்றால், நீங்கள் அதை பயன்படுத்துவீர்கள். எண்ணங்கள் உங்களுக்குத் தேவையில்லை என்று நினைத்தால், நீங்கள் அதை ஓய்வெடுக்க அனுமதித்துவிடுவீர்கள். இப்போது அங்கே மனம் என்பது இல்லை என்பதாகிவிடாது - மனம் என்பது அங்கே இருக்கும், நீங்கள் அதை, இப்போது வேண்டும் என்றால் பயன்படுத்த முடியும் அல்லது வேண்டாம் என்றால், பயன்படுத்தாமலும் இருக்க முடியும். இப்போது, அது உங்களின் முடிவாக இருக்கும்; அதாவது, உங்களது கால்களைப்

போன்று மனம் இருக்கும். நீங்கள் ஓட வேண்டும் என்று விரும்பினால், நீங்கள் அதைப் பயன்படுத்துகிறீர்கள். நீங்கள் ஓடுவதற்கு விரும்பவில்லை என்றால், நீங்கள் வெறுமனே ஓய்வெடுக்கிறீர்கள். ஆனால், இப்போதும் கூட உங்களது கால்கள் உங்களிடம் தான் இருக்கும். இதே போன்று, மனமும் அங்கே இருக்கும்.

நான் உங்களோடு பேசும் போது, நான் எனது மனதை பயன்படுத்துகிறேன். பேசுவதற்கு, அதைவிட்டால் வேறு வழி கிடையாது. நான் உங்களது கேள்விகளுக்கு பதில் அளிக்கும் போது, நான் எனது மனதை உபயோகிக்கிறேன் - அதை விட்டால், வேறு வழி கிடையாது. எனவே, நான் உங்களோடு உறவு கொள்ளவும், மறுதலிப்பதற்கும் அது வேண்டும். மேலும், மனம் என்பது மிகவும் அழகானதொரு இயந்திர நுட்பம். நான் உங்களுடன் பேசாமல் இருக்கும் போதும், மேலும், நான் தனியாக இருக்கும் போதும், அங்கே மனம் என்பது இருப்பதில்லை. ஏனெனில், மனம் என்பது உறவு கொள்வதற்கானதொரு ஊடகம். நான் தனியாக உட்கார்ந்திருக்கும் போது, அது தேவைப்படாது.

ஆனால் நீங்களோ, அதற்கு ஓய்வே கொடுப்பதில்லை. அதனால் தான், உங்களது மனம் இரண்டாம் தரமானதாக ஆகிவிடுகிறது. இடைவிடாமல் உபயோகப்படுத்தப்பட்டு, களைப்புடன் அது வேலை செய்து கொண்டே போகிறது. பகலிலும் அது வேலை செய்கிறது; இரவிலும் அது வேலை செய்கிறது. பகலில் நீங்கள் சிந்திக்கிறீர்கள்; இரவில் நீங்கள் கனவு காண்கிறீர்கள். பொழுது விடிந்து பொழுது முடியும்வரை, அது வேலை செய்து கொண்டே இருக்கிறது. நீங்கள் எழுதும் அல்லது எண்பது ஆண்டுகள் இருந்தால், அதுவரை அது இடைவிடாமல் தொடர்ந்து வேலை செய்து கொண்டே இருக்கிறது.

உங்களது மனதின் உழைக்கின்ற பண்பு நயத்தைப் பாருங்கள் - மிகவும் மென்மையானது. உங்களது சிறிய தலையில், இந்த உலகில் உள்ள எல்லா நூல் நிலையங்களையும் அடக்கிவிட முடியும். இதுவரை எழுதப்பட்டுள்ளவை எல்லாம், ஒரு தனி மனதில் அடக்கி வைக்க முடியும். மனதின் திறன் அபரிமிதமானது - அதுவும், இவ்வளவு சிறிய இடத்தில்! மேலும், அது எந்தவிதமான சப்தமும் எழுப்புவதில்லை. விஞ்ஞானிகள், என்றாவது ஒருநாள் இந்த மனதிற்கு இணையானதொரு கணிப்பொறியை உருவாக்கும் திறமை பெற்றால் ... .... இப்போதும் கணிப்பொறிகள் உள்ளன. ஆனால், அவைகள் இன்னமும் மனம் போன்று இல்லை. அவைகள் இன்னமும் இயந்திர நுட்பமாகத் தான் உள்ளன; அவைகளுக்குள் உயிரோட்டமுள்ள ஒரு ஒருங்கிணைப்பு



இல்லை; அவைகளுக்கு என்று தனிப்பட்ட மையம் இல்லை. என்றாவது ஒருநாள், இது சாத்தியப்படும் போது - மேலும், என்றாவது ஒருநாள் விஞ்ஞானிகள் மனம் என்பதை உருவாக்குவது சாத்தியமாகலாம் - அப்போது தான், அத்தகைய கணிப்பொறியானது எவ்வளவு பெரிய இடத்தை அடைத்துக் கொண்டு இருக்கும் என்பதையும், அது எவ்வளவு சப்தத்தை எழுப்பும் என்பதையும் உங்களால் அறிந்து கொள்ள முடியும்!

ஆனால், உங்களது மனம், இப்போது எந்த ஒரு சத்தத்தையும் எழுப்பாமல் வேலை செய்து கொண்டிருக்கிறது; அது அமைதியாக வேலை செய்து கொண்டே இருக்கிறது. மேலும், இது போன்றதொரு வேலைக்காரன் - எழுபது அல்லது எண்பது ஆண்டுகள் வேலை செய்யும் வேலைக்காரன் இருப்பது ஆச்சரியம்! மேலும், அதற்குப் பின்னரும்கூட, நீங்கள் இறக்கும் போது, உங்களது உடல் வேண்டுமானால் வயதானதாக இருக்கலாம். ஆனால், உங்களது மனம் இளமையோடு தான் இருக்கும். அதனுடைய திறன் இன்னமும் அப்படியே தான் இருக்கும். சில நேரங்களில், நீங்கள் உங்கள் மனதை சரியாக பயன்படுத்தி வந்தால், அது, உங்களது வாழும் வயதையும் கூட அதிகரிக்கும். ஏனெனில், நீங்கள் எந்த அளவுக்கு அதிகம் அறிந்து கொள்கிறீர்களோ, அந்த அளவுக்கு நீங்கள் புரிந்து கொள்வீர்கள். நீங்கள் எந்த அளவுக்கு, அதிகமாக அனுபவத்துடன் வாழ்கிறீர்களோ, அந்த அளவுக்கு உங்களது மனமும் அதிக திறமைமிக்கதாக ஆகிவிடும். நீங்கள் இருக்கும் போது, உங்களது உடலில் உள்ள எல்லாம் இறப்பதற்குத் தயாராக இருக்கும், மனதைத் தவிர.

அதனால் தான், எங்களது கீழைநாடுகளில் இந்த மனம் என்பது, ஒருவர் இறக்கும் போது அவரது உடலைவிட்டு வெளியேறி, அது, வேறு ஒரு கருவறைக்குள் நுழைகிறது என்று நாங்கள் கூறுகிறோம். மறுபிறவி என்பது மனதின் பிறப்பு. எனவே, நீங்கள் மனம் என்பது இல்லாமல் இருக்கின்ற நிலையை அடைந்துவிட்டால், அதன்பிறகு உங்களுக்கு மறுபிறவி கிடையாது. அப்போது நீங்கள் வெறுமனே மரணம் மட்டுமே அடைவீர்கள். மேலும், அப்படி நீங்கள் மரணமடையும் போது, எல்லாமே கரைந்து போய்விடும் - உங்களது உடல், உங்களது மனம் எல்லாம் கரைந்து போய்விடும் - சாட்சிபாவனையில் உள்ள உங்களது ஆன்மா மட்டுமே மிஞ்சி இருக்கும். அது, காலத்திற்கும் வெளிக்கும் அப்பாற்பட்டது. அதன்பின்னர், நீங்கள் இந்தப் பிரபஞ்சத்தோடு ஒன்றாகி விடுவீர்கள்; அதன்பிறகு, நீங்கள் இந்தப் பிரபஞ்சத்தினின்று ஒருபோதும் தனியானவர் ஆக மாட்டீர்கள். உங்களுக்கும், இந்த பிரபஞ்சத்திற்கும் இடையே உள்ள பிரிவினை உங்களது மனதினால் தான் வருகிறது.

ஆனால், உங்களது மனதைக் கட்டாயப்படுத்தி நிறுத்துவதற்கு எந்த ஒரு வழியும் கிடையாது - வன்முறையாக அதோடு நடந்து கொள்ளாதீர்கள். அதனுடன் அன்பாக நகர்ந்து செல்லுங்கள், ஆழ்ந்த மரியாதையுடன் செல்லுங்கள். மேலும், அது தானாகவே நிகழ ஆரம்பித்துவிடும். நீங்கள் வெறுமனே கவனியுங்கள். மேலும், எதற்கும் அவசரப்படாதீர்கள்.

நவீனகால மனம், அதிக அவசரத்தில் இருக்கிறது. மனதை நிறுத்துவதற்கு உடனடியான வழிமுறைகளை அது விரும்புகிறது. அதனால் தான், போதைப் பொருட்களுக்கு அவ்வளவு நாட்டம் உள்ளது. நீங்கள் இரசாயனங்கள், போதைப் பொருட்கள் இவைகளைப் பயன்படுத்தி, உங்களது மனதை நிறுத்துவதற்கு கட்டாயப்படுத்தலாம். ஆனால், மீண்டும் நீங்கள் உங்களது மனதின் இயந்திர நுட்பத்தோடு வன்முறையாக இருக்க ஆரம்பித்து விடுகிறீர்கள். அது நல்லதல்ல, அது அழிவுப்பாதை. இப்படிப்பட்ட வழியில், நீங்கள் உங்களது மனதிற்கு எஜமான் ஆக முடியாது. நீங்கள், போதைப் பொருட்களால் உங்களது மனதை நிறுத்தலாம். ஆனால், அப்போது அந்த போதைப் பொருட்கள் தான் எஜமானாக இருக்கும்; நீங்கள் ஒருபோதும் உங்களது மனதிற்கு எஜமான் ஆக முடியாது. நீங்கள் வெறுமனே முதலாளிகளை மட்டுமே மாற்றிவிடுகிறீர்கள். மேலும், நீங்கள் மோசமானதொரு முதலாளியை மாற்றாக அமர்த்திவிடுகிறீர்கள். இப்போது அந்த போதைப் பொருட்கள் தான் உங்கள்மீது அதிகாரத்தைச் செலுத்தும்; அவைகள் உங்களை தங்களுடையவராக ஆக்கிவிடும். அவைகள் இல்லாமல் உங்களால் எங்கும் இருக்க முடியாது.

தியானம் என்பது, உங்களது மனதிற்கு எதிரானதொரு முயற்சி கிடையாது; அது, அதைப் புரிந்து கொள்வதற்கானதொரு வழி. அது, சாட்சியைப் போன்று இருக்கின்றதொரு அன்பு வழி. ஆனால், நிச்சயமாக ஒருவர் அதிக பொறுமையுடன் இருக்க வேண்டும். நீங்கள் உங்களது தலைக்குள் சுமந்து செல்கின்ற அந்த மனம், பல நூற்றாண்டுகளாக, பல லட்சம் ஆண்டுகளாக எழுந்தது. உங்களது சிறிய மனமானது, இந்த ஒரு மனித இனத்தின் அனுபவங்களையும் சுமந்து கொண்டு உள்ளது. மேலும், இந்த மனித இனம் மட்டுமல்ல; விலங்குகள், பறவைகள், தாவரங்கள், பாறைகள் ஆகிய இவற்றின் அனுபவங்களையும் கடந்து தான் நீங்கள் இருக்கிறீர்கள். இதுவரை இந்த பூமிக்கு என்னவெல்லாம் நடந்துள்ளதோ, அவைகள் எல்லாமும் உங்களுக்கும்கூட நடந்துள்ளது.

சுருக்கமாகக் கூற வேண்டுமெனில், நீங்கள் இந்த இயற்கையின் அனுபவங்களை எல்லாம் சுமந்து கொண்டிருக்கிறீர்கள். அதுதான்



உங்களது மனம் ஆக இருக்கிறது. உண்மையில், அது உங்களுடையது என்று சொல்வதும் கூட சரியானதல்ல. இது சேகரிக்கப்பட்டது, அது நம் எல்லோருக்கும் சொந்தமானது. நவீன மனோதத்துவம் அதை இந்த நோக்கத்தில் அணுகுகிறது. குறிப்பாக, ஜீங் அவர்களின் மன ஆய்வுகள் இந்த கோணத்தில் தான் அணுகி வந்துள்ளது. மேலும் அவர்கள், ஒன்று திரண்ட ஏதோ ஒரு தன்னுணர்வற்ற நிலை ஒன்று இருப்பதாக உணர ஆரம்பித்துள்ளார்கள். உங்களது மனம், உங்களுக்கு மட்டும் சொந்தமானதல்ல. அது நம் எல்லோருக்கும் சொந்தமானது. நமது உடல்கள் தனித்தனியானவை; நமது மனங்கள் அப்படி தனித்தனியானவை அல்ல. நமது உடல்கள் தெளிவாக தனித்தனியானவை; நமது மனங்கள் ஒன்றன்மீது ஒன்று சேர்ந்து இருப்பவை. மேலும், நமது ஆன்மாவும் ஒன்றானது.

உடல்கள் தனித்தனியானவை; மனங்கள் ஒன்றன்மேல் ஒன்று கவிழ்ந்திருப்பவை; ஆனால், ஆன்மாக்கள் ஒன்றானவை. எனக்கு, தனி ஆன்மா இல்லை; உங்களுக்கும் தனி ஆன்மா இல்லை. இந்த பிரபஞ்சத்தின் மையத்தில் நாம் எல்லோரும் சந்தித்து ஒன்றாக இருக்கிறோம். அது தான் 'கடவுள்' என்பதாகும் - நாம் எல்லாம் சந்திக்கும் அந்த இடம் கடவுளுக்கும், இந்த உலகிற்கும் இடையில் - இந்த 'உலகம்' என்றால், உடல்கள் என்று அர்த்தம் - இருப்பது தான் மனம்.

மனம் என்பது ஒரு பாலம்; உடலுக்கும் ஆன்மாவிற்கும் இடையில் உள்ள, இந்த உலகிற்கும் கடவுளுக்கும் இடையே உள்ள பாலம். அதை அழித்துவிட முயற்சிக்காதீர்கள்!



**உடல்கள்**
**தனித்தனியானவை;**
**மனங்கள்**
**ஒன்றன்மேல் ஒன்று**
**கவிழ்ந்திருப்பவை;**
**ஆனால், ஆன்மாக்கள்**
**ஒன்றானவை.**
**எனக்கு, தனி ஆன்மா**
**இல்லை; உங்களுக்கும்**
**தனி ஆன்மா இல்லை.**
**இந்த பிரபஞ்சத்தின்**
**மையத்தில் நாம்**
**எல்லோரும் சந்தித்து**
**ஒன்றாக இருக்கிறோம்.**
**அது தான் 'கடவுள்'**
**என்பதாகும் - நாம்**
**எல்லாம் சந்திக்கும்**
**அந்த இடம்**
**கடவுளுக்கும், இந்த**
**உலகிற்கும் இடையில் -**
**இந்த 'உலகம்'**
**என்றால், உடல்கள்**
**என்று அர்த்தம் -**
**இருப்பது தான் மனம்.**



யோகாவின் மூலம், அநேகர் அதை அழிப்பதற்கு முயற்சி செய்துள்ளனர். அது யோகாவை தவறாகப் பயன்படுத்துவதாகும். அநேகம் பேர் உடல் ஆசனங்கள் மூலமாகவும், சுவாசத்தின் மூலமாகவும்

அதை அழிப்பதற்கு முயற்சி செய்திருக்கிறார்கள்; அதுவும்கூட, உங்களுக்குள் கண்ணுக்குத் தெரியாத ரசாயன மாற்றங்களைக் கொண்டு வரும். உதாரணமாக, நீங்கள் உங்கள் தலையால் சிரசாசனத்தில் நிற்கும் போது, நீங்கள் உங்கள் மனதை வெகு சுலபமாக அழித்துவிட முடியும். ஏனெனில், நீங்கள் உங்களது தலையில் நிற்கும் போது, ரத்தமானது வெள்ளப் பெருக்கு போல உங்களது தலைக்குள் அதிக அளவு பாய்ந்து செல்லும். உங்களது மூளையின் அமைப்பு மிகவும் மென்மையானது. நீங்கள் அந்த மென்மையான அமைப்புகளை அதிக ரத்த ஓட்டத்தை ஏற்படுத்தும் போது, மூளையில் உள்ள மென்மையான திசுக்கள் இறந்து போய்விடும். அதனால் தான், நீங்கள் ஒருபோதும் புத்திசாலித்தனம் நிறைந்த ஒரு யோகியை காண முடிவதில்லை; முடியாது. யோகிகள், கிட்டத்தட்ட முட்டாள்கள். அவர்களது உடல் ஆரோக்கியமாக இருக்கும். அது உண்மைதான், பலமானதாக இருக்கும். ஆனால், அவர்களின் மனம் உயிரற்றதாக இருக்கும். நீங்கள் புத்திசாலித்தனத்தின் மங்கிய ஒளியைக் காண முடியாது. நீங்கள் மிருகத்தைப் போல, ஒரு கட்டான உடலைக் காணலாம். ஆனால், அவரிடம் மனிதன் என்பவன் எப்படியோ மறைந்து போயிருப்பான்.

உங்களது தலையில் நிற்கும் போது, நீங்கள் ஈர்ப்புவிசை மூலமாக உங்களது ரத்தத்தை உங்களது தலைக்குள் வருவதற்கு கட்டாயப்படுத்துகிறீர்கள். உங்களது தலைக்கு ரத்தம் தேவைதான். ஆனால், அது குறைவான அளவே போதும். அதுவும் வெள்ளப்பெருக்கு போல் அல்லாமல், கொஞ்சம் கொஞ்சமாக மெதுவாகச் சென்றால் போதும். புவி ஈர்ப்பு விசைக்கு எதிராக கொஞ்ச அளவு ரத்தம் தான் தலைக்குச் செல்கிறது. அதுவும்கூட, ஒரு அமைதியான முறையில் செல்கிறது. எனவே, அளவுக்கு அதிகமாக ரத்தம் உங்களது தலையை வந்தடையும் போது, அது அழிவுக்கு வழி வகுத்துவிடுகிறது.

யோகா என்பது, உங்களது மனதைக் கொல்வதற்கு பயன்படுத்தப்படுகிறது. சுவாசமும்கூட உங்களது மனதை அழிப்பதற்கு பயன்படுத்தப்பட முடியும். உங்களது சுவாசத்தில் ஒழுங்குநயம் ஒன்று உள்ளது, மெல்லிய அதிர்வுகள் உள்ளன. அது உங்களது மென்மையான மனதிற்கு அழிவானதாக ஆகிவிட முடியும். அதன்மூலம் நீங்கள் மனதை அழிக்கலாம். இவைகள் எல்லாம் பழைய தந்திரங்கள். இப்போது விஞ்ஞானத்தினால், புதிய வரவுகளான எல்.எஸ்.டி, மரிஜுவானா, இன்னும் பிற, அதிக நுட்பம் நிறைந்த போதைப் பொருட்கள் விரைவில் கிடைக்கும்.



நான் மனதை நிறுத்துவதை ஆதரிப்பவன் அல்ல. நான் மனதை வெறுமனே கவனிப்பதை ஆதரிப்பவன். அப்போது, அது தானாகவே நின்றுவிடும். அதன்பிறகு, அது அழகானதாகும். வன்முறை அல்லாமல் ஏதாவது ஒன்று கிடைக்கும் போது, அது, அதற்கே உரிய அழகோடு இருக்கும். இது இயல்பான வளர்ச்சியோடு இருக்கும். நீங்கள், ஒரு மலரை வலுக்கட்டாயமாக மலர வைக்க முடியும். நீங்கள், மொட்டின் இதழ்களை வலுக்கட்டாயமாக இழுத்து மலர வைக்கலாம். ஆனால், அப்போது நீங்கள் அந்த மலரின் அழகை அழித்துவிடுகிறீர்கள். இப்போது அது, கிட்டத்தட்ட உயிரற்றுவிட்டது. உங்களது வன்முறைக்கு எதிராக அதனால் தாக்குப்பிடிக்க முடியாது. அதன் இதழ்கள் உயிரற்று, தளர்வுடன் தொங்கிக் கொண்டிருக்கும். ஒரு மொட்டு, தனது சொந்த சக்தியினால் விரியும் போது, அது தானாகவே விரியும் போது, அதன் இதழ்கள் உயிர்த்துடிப்புடன் இருக்கும்.

மனம் என்பது உங்களின் மலர்ச்சி - அதை எந்த வழியிலும் கட்டாயப்படுத்தாதீர்கள். எல்லா வகையான வலுக்கட்டாயங்களுக்கும், எல்லா வகையான வன்முறைகளுக்கும் நான் எதிரானவன். அதிலும் குறிப்பாக, நீங்கள் உங்கள் மீது காட்டும் வன்முறைக்கு நான் எதிரானவன்.

எனவே, வெறுமனே கவனியுங்கள்! ஆழ்ந்த அன்பு, பிரார்த்தனை, மரியாதை இவற்றோடு கவனியுங்கள். அதன்பிறகு என்ன நிகழ்கிறது என்று பாருங்கள். அப்போது, தானாகவே அற்புதங்கள் நிகழும். நீங்கள் எதையும் இழுக்கவும், தள்ளவும் தேவையில்லை.

எண்ணங்களை நிறுத்துவது எப்படி? வெறுமனே கவனியுங்கள், விழிப்புணர்வுடன் இருங்கள் என்று மட்டுமே நான் கூறுகிறேன். மேலும், அதை நிறுத்த வேண்டும் என்கிற எண்ணத்தை விட்டுவிடுங்கள். இல்லையென்றால், மனதின் இயல்பான மாற்றத்தை அது தடுத்துவிடும். நிறுத்த வேண்டும் என்கிற அந்த எண்ணத்தை விட்டுவிடுங்கள்! அதை நிறுத்துவதற்கு நீங்கள் யார்?

அதிகபட்சமாக, அனுபவியுங்கள். மேலும், அதில் எந்தத் தவறும் கிடையாது. கெட்ட எண்ணங்கள் உங்களது மனதிற்குள் கடந்து சென்றாலும்கூட, அவைகள் கடந்து செல்லட்டும். அதில் தவறு கிடையாது. நீங்கள் அதிலிருந்து பிரிந்து நில்லுங்கள்; அப்போது எந்தக் கெடுதலும் செய்யப்பட மாட்டாது. அது வெறும் கற்பனை தான்; நீங்கள், உங்களுக்குள் ஒரு திரைப்படத்தைப் பார்ப்பீர்கள். அதனை, அதன் போக்கிலேயே அனுமதித்துவிட்டால், அதன்பிறகு அது கொஞ்சம் கொஞ்சமாக, உங்களை மனம் என்பது இல்லாத ஒரு நிலைக்கு வழி

நடத்திச் செல்லும். கவனித்தல், உங்களை இறுதியில் மனம் என்பது இல்லாத நிலையில் நிறுத்திவிடும்.

மனம் இல்லாத நிலை என்பது, மனதிற்கு எதிரான நிலை அல்ல; மனம் இல்லாத நிலை என்பது மனதைக் கடந்து அதற்கு அப்பால் இருக்கும் நிலை. மனம் என்பது இல்லாத ஒரு நிலை, நீங்கள் அந்த மனதினை கொல்வதாலும், அதை அழிப்பதாலும் வராது; நமக்கு எண்ணங்கள் என்பது தேவையில்லை என்று நீங்கள் மனதை முழுமையாகப் புரிந்து கொள்ளும் போது, மனம் இல்லாத நிலை வந்துவிடும். உங்களது புரிதில், அதை இடம் மாற்றிவிடும்.

## பழக்கப்பட்ட பாதையும் அதன் வழியில் பயணமும்

மனிதன் நிகழ்காலத்தில் இருப்பது போன்று தோன்றுகிறான். ஆனால், அது வெறும் தோற்றம் மட்டுமே. மனிதன், கடந்த காலத்தில் தான் வாழ்கிறான். அவன், நிகழ்காலத்தின் மூலம் கடந்து செல்கிறான். ஆனால் அவன், கடந்த காலத்தில் தான் வேரூன்றி இருக்கிறான். சாதாரண தன்னுணர்விற்கு, நிகழ்காலம் என்பது, உண்மையில் காலம் அல்ல. சாதாரண தன்னுணர்விற்கு, கடந்த காலம் தான், உண்மையில் இருக்கின்ற காலமாகும். இந்த நிகழ்காலம் என்பது, கடந்த காலத்தில் இருந்து எதிர்காலத்திற்குள் செல்வதற்கான ஒரு பாதை; ஒருநொடிப் பொழுதே இருக்கின்ற பாதை. சாதாரண தன்னுணர்விற்கு, கடந்த காலம் என்பது உண்மையானது. மேலும், எதிர்காலமும் கூட உண்மையானது. ஆனால், நிகழ்காலம் உண்மையானதல்ல.

எதிர்காலம் என்பது, உங்களது கடந்த காலத்தின் நீட்டிப்பு தான். எதிர்காலம் என்பது, உங்களது கடந்த காலத்தை மீண்டும் மீண்டும் திரையிடுவது தான். நிகழ்காலம் என்பது, இல்லாத ஒன்றாகிவிடுகிறது. நீங்கள், நிகழ்காலம் என்பதை சிந்தித்துப் பார்த்தால், உங்களால் அதைக் கண்டு கொள்ளவே முடியாது. ஏனெனில், நீங்கள் அதைக் கண்டு கொள்கின்ற அந்த நொடிப்பொழுதே, அது ஏற்கனவே கடந்து போயிருக்கும். நீங்கள் பார்ப்பதற்கு ஒருநொடிப் பொழுது முன்பு, அது எதிர்காலத்தில் இருந்தது.

ஒரு புத்தரின் தன்னுணர்விற்கு, விழிப்புநிலை அடைந்த ஒரு ஆன்மாவிற்கு, நிகழ்காலம் மட்டுமே இருக்கும். சாதாரண தன்னுணர்விற்கு, விழிப்புணர்வு இல்லாதவர்களுக்கு, தூக்கத்தில் நடக்கும் வியாதி உள்ளவர் போல் தூங்கி வழிபவர்களுக்கு இந்த கடந்த காலமும், எதிர்காலமும் உண்மையானதாகத் தெரியும். ஆனால்,



நிகழ்காலம் உண்மையற்றதாகத் தோன்றும். ஒருவர், இந்த நிகழ்கால உண்மையில் விழித்து எழும் போது மட்டுமே, கடந்த காலமும் எதிர்காலமும் உண்மையற்றதாக ஆகிவிடும்.

இது ஏன் இப்படி இருக்கிறது? நீங்கள் ஏன் கடந்த காலத்திலேயே வாழ்கிறீர்கள்? ஏனெனில், மனம் என்பது கடந்த காலத்தின் ஒரு குவியலே தவிர, வேறு ஒன்றும் அல்ல. மனம் என்பது நினைவாற்றல். நீங்கள் செய்தன எல்லாம், நீங்கள் கனவு கண்டது எல்லாம், நீங்கள் செய்ய வேண்டும் என்று ஆசைப்பட்டு செய்ய முடியாமல் போனது எல்லாம், நீங்கள் கடந்த காலத்தில் கற்பனை செய்தது எல்லாம், ஆகிய இவைகள் தான் உங்களது மனம். மனம் என்பது ஒரு உயிரற்ற வஸ்து. நீங்கள், மனதின் வழியாகப் பார்த்தால், உங்களால் ஒருபோதும் நிகழ்காலத்தைக் காண முடியாது. ஏனெனில், நிகழ்காலம் என்பது தான் வாழ்க்கை. மேலும், வாழ்க்கை என்பதை நீங்கள் ஒருபோதும் ஒரு உயிரற்ற ஊடகத்தின் வழியாக அதை அணுக முடியாது. மனம் உயிரற்றது.

மனம் என்பது ஒரு முகம் பார்க்கும் கண்ணாடியில் படிந்துள்ள தூசி போன்றது. அதில் எந்த அளவுக்கு தூசி சேர்ந்துள்ளதோ, அந்த அளவுக்கு அது முகம் பார்க்கும் கண்ணாடியாக இருக்க முடியாது. மேலும், இது போன்ற தூசியின் படிதல் மிகவும் கனமானதாக இருந்தால், இப்போது உங்களுக்கு இருப்பதைப் போல இருந்தால், அதன்பிறகு இந்தக் கண்ணாடி பிரதிபலிக்கவே செய்யாது.

ஒவ்வொருவரும் இப்படி தூசியை சேர்த்துக் கொண்டே வருகிறோம். இப்படி சேர்த்துக் கொண்டே வருவது மட்டுமல்ல, நீங்கள் அதன்மீது பற்றுதலும் வைக்கிறீர்கள்; ஏதோ ஒரு பொக்கிஷம் போன்று பற்றிக் கொண்டு இருக்கிறீர்கள். கடந்த காலம் என்பது போய்விட்டது - நீங்கள் ஏன் அதைப் பிடித்து தொங்கிக் கொண்டிருக்கிறீர்கள்? உங்களால் அதைக் குறித்து எதுவும் செய்ய இயலாது. உங்களால் கடந்த காலத்திற்கு திரும்பிப் போக முடியாது. நீங்கள் அதை செய்யாமல் இருக்க முடியாது. அப்படி இருக்கும் போது, நீங்கள் ஏன் அதைப் பற்றிக் கொண்டு இருக்கிறீர்கள்? அது ஒரு புதையல் கிடையாது. மேலும், நீங்கள் உங்களது கடந்த காலத்தைப் பற்றிக் கொண்டு, அதை ஒரு புதையல் போன்று நினைத்துக் கொண்டிருந்தால், நிச்சயமாக உங்களது மனம் அதை எதிர்காலத்தில் மீண்டும் மீண்டும் வாழ்ந்து பார்க்கத் தான் விரும்பும். உங்களது எதிர்காலம் என்பது, உங்களது கடந்த காலத்தின் திருத்தி அமைக்கப்பட்ட ஒன்றாகத் தான் இருக்க முடியும். கடந்த காலத்தை கொஞ்சம் சுத்தம் செய்து, கொஞ்சம் அதிகம் அலங்கரித்து வைத்ததாகத் தான் இருக்கும். ஆனால், உங்களது கடந்த காலம்

அப்படியே தான் இருக்கும். ஏனெனில், உங்களது மனதால் அறியாத ஒன்றினை சிந்திக்க முடியாது. மனம் எப்போதும், நீங்கள் அறிந்த ஒன்றினைத் தான் திரையிட முடியும். நீங்கள் அறிந்த அதைத்தான் திரையிடும்.

நீங்கள் ஒரு பெண்ணைக் காதலிக்கிறீர்கள், அந்தப் பெண் இறந்துவிடுகிறாள். இப்போது, நீங்கள் எப்படி வேறு ஒரு பெண்ணை பார்க்கப் போகிறீர்கள்? அந்த அடுத்த பெண், எப்போதும், இறந்து போன உங்களது காதலியின் மாற்றியமைக்கப்பட்ட உருவமாகத் தான் இருக்கும்; அந்த ஒரு வழியை மட்டுமே நீங்கள் அறிவீர்கள். நீங்கள், எதிர்காலத்தில் எதைச் செய்தாலும், அது உங்களது கடந்த காலத்தின் ஒரு தொடர்ச்சியாகத் தான் இருக்குமே தவிர, வேறு ஒன்றாகவும் இருக்காது. நீங்கள் வேண்டுமானால், கொஞ்சம் அதை மாற்றிக் கொள்ளலாம். இங்கு கொஞ்சம் ஒட்டுப்போட்டு, அங்கு கொஞ்சம் ஒட்டுப்போட்டு வைக்கலாம். ஆனால், முக்கிய பகுதி, இன்னமும் உங்களது கடந்த காலமாகத் தான் இருக்கும்.

முல்லா நஸ்ருதீன் சாகும் தருவாயில் இருக்கும் போது, யாரோ அவரிடம், "உங்களுக்கு மீண்டும் ஒரு பிறவி கொடுத்தால், அதை நீங்கள் எப்படி வாழ்வீர்கள் நஸ்ருதீன்? அதில் ஏதாவது மாற்றம் செய்வீர்களா? என்று கேட்டார்கள். அதற்கு நஸ்ருதீன் தனது கண்களை மூடிக் கொண்டு சிந்தித்தார், தியானித்தார். அதன்பிறகு, தனது கண்களைத் திறந்து கொண்டு, "சரி, மீண்டும் எனக்கு ஒரு பிறவி கொடுத்தால், அதில் நான் எனது தலைமுடியை நடுவகிடு எடுத்து சீவுவேன். அதுதான் எப்போதுமே எனது ஆசையாக இருந்து வந்தது. ஆனால், எனது தந்தையார் நான் அப்படி செய்யக்கூடாது என்று வலியுறுத்தி வந்தார். மேலும், எனது தந்தையார் இறந்த பின்னர், எனது தலைமுடி ஏற்கனவே பழக்கப்பட்டுவிட்டதால், என்னால் நடுவகிடு எடுத்து தலைசீவ முடியவில்லை," என்று பதிலளித்தார்.

இதைக் கேட்டு சிரிக்கிறீர்கள்! உங்களுக்கு மீண்டும் உயிர் கிடைத்தால், நீங்கள் என்ன செய்வீர்கள் என்று உங்களிடம் கேட்கப்பட்டாலும் கூட, இதைப் போன்று சிறு மாற்றங்களுடன் தான் நீங்களும் சொல்வீர்கள். ஒரு வேறுபட்ட மூக்குடன் கூடிய கணவர் அல்லது வேறுபட்ட முக அமைப்புடன் கூடிய ஒரு மனைவி, ஒரு பெரிய அல்லது சிறிய வீடு - இப்படித் தான் உங்களது விருப்பம் இருக்கும். ஆனால், அவைகள் எல்லாம், நீங்கள் உங்களது தலைமுடியில் நடுவகிடு எடுப்பது போன்றது தான், முக்கியமற்றது தான், அற்பமானதாகத் தான் இருக்கும். நீங்கள் அதை அநேக அநேக தடவைகள் செய்துவிட்டீர்கள் என்றாலும்கூட, உங்களது முக்கியமான வாழ்க்கை அதே போன்று தான்



இருக்கிறது. அநேக தடவைகள் உங்களுக்குப் பிறவிகள் கொடுக்கப்பட்டுள்ளன. நீங்கள் அநேக பிறவிகள் வாழ்ந்துவிட்டீர்கள், நீங்கள் மிக மிக பழமையானவர். நீங்கள் இந்த பூமிக்குப் புதியவர் அல்ல; இந்த பூமியைவிடவும் நீங்கள் வயதானவர். ஏனெனில், நீங்கள் இதே போன்று அடுத்த பூமியிலும், அடுத்த கிரகங்களிலும் வாழ்ந்து இருக்கிறீர்கள். இந்த பிரபஞ்சத்தைப் போன்று நீங்களும் வயதானவர் - அது அப்படித்தான் இருந்தாக வேண்டும். ஏனெனில், நீங்களும் இந்தப் பிரபஞ்சத்தின் ஓர் அங்கம் தான். நீங்கள் பழமையானவர். ஆனால், அதே வாழ்க்கை முறையை மீண்டும் மீண்டும் திருப்பிச் செய்கிறீர்கள். அதனால் தான், இந்துக்கள் இதை பிறப்பு இறப்பு என்றும், சக்கரம் என்றும் அழைக்கிறார்கள். இது ஒரு சக்கரம் போன்றது. ஏனெனில், அது திரும்பவும் செய்ததையே செய்து கொண்டிருக்கிறது. இது ஒரு திருப்பச் செய்தல். அந்த சக்கரத்தில் உள்ள ஆரங்கள் மேலே வருகின்றன, கீழே செல்கின்றன, கீழே சென்றபின் மீண்டும் மேலே வருகின்றன.

மனம் என்பது தன்னைத் தானே நீட்டித்துக் கொள்கிறது. மேலும், மனம் என்பது உங்களது கடந்த காலம். ஆகவே, உங்களது எதிர்காலமும் கூட உங்களது கடந்த காலத்தைவிட வேறு எதுவாகவும் இருக்கப் போவதில்லை. மேலும், கடந்த காலம் என்பது என்ன? நீங்கள், கடந்த காலத்தில் செய்தது என்ன? நீங்கள் எதைச் செய்திருந்தாலும் - நல்லது, கெட்டது, இது, அது என்று என்ன செய்திருந்தாலும், அது அதுவே திரும்பவும் சுயமாக திருப்பிச் செய்யப்படுகிறது. அதுதான் கர்மம் என்னும் விதி. நேற்று முன்தினம் நீங்கள் கோபம் கொண்டிருந்தால், மீண்டும் நேற்றைய தினமும் நீங்கள் திரும்பவும் கோபப்படுவதற்கு உரிய, ஒரு உள் உறைகின்ற சக்தியை உருவாக்கிவிடுவீர்கள். அதன் பின்னர், நீங்கள் திரும்பவும் கோபம் கொள்ளும் போது, நீங்கள் உங்களது கோபத்திற்கு அதிக சக்தியைக் கொடுத்திருப்பீர்கள். உங்களது கோபம் என்னும் அந்த மனநிலைக்கு - நீங்கள் அதிக வேர் விட்டிருப்பீர்கள், அதற்குத் தண்ணீர் ஊற்றி வளர்த்திருப்பீர்கள்; இப்போது மீண்டும் அதை அதிக பலத்துடனும், அதிக சக்தியுடனும் இன்று நீங்கள் திரும்பவும் செய்வீர்கள். அதன்பிறகு, நாளைக்கு மீண்டும் - இன்று பலிகடா ஆனது போல் - மீண்டும் பலிகடா ஆகிவிடுவீர்கள்.

நீங்கள் செய்கின்ற ஒவ்வொரு செயலும், அல்லது நீங்கள் நினைக்கின்ற ஒவ்வொன்றும் மீண்டும் மீண்டும் வலியுறுத்திக் கொண்டு இருப்பதற்கான தங்களின் சொந்த வழிகளைக் கொண்டுள்ளது. ஏனெனில், அவைகள் உங்களது இருப்பு நிலையில் ஒரு வாய்க்காலை உருவாக்கி விடுகிறது. அது, உங்களிடமிருந்து சக்தி முழுவதையும் உறிஞ்சிக் கொள்ள ஆரம்பிக்கிறது. நீங்கள் கோபமாக இருக்கிறீர்கள்;

அதன்பின்னர் அந்த மனநிலை போய்விடுகிறது. இப்போது நீங்கள், இனிமேல் நான் கோபப்பட மாட்டேன் என்று நினைக்கிறீர்கள். அதன்பிறகு, மீண்டும் நீங்கள் அதைத் தவறவிட்டு விடுவீர்கள். அந்த மனநிலை போனபின்னர், எதுவும் நடந்திருக்காது. இப்போது அந்தச் சக்கரம் மட்டுமே நகர்ந்து, அதில் மேலே இருந்த ஆரங்கள் கீழே வந்திருக்கும். கொஞ்ச நொடிகளுக்கு முன்பு, கோபம் என்பது உங்களது மேற்பரப்பில் இருந்தது; அந்தக் கோபம், இப்போது கீழே உங்களது தன்னுணர்வற்ற மனதிற்குள், உங்களத உயிரின் ஆழத்திற்குள் சென்றுவிட்டது. அது மீண்டும் வருவதற்கான நேரத்திற்கு அது காத்துக் கொண்டிருக்கும். நீங்கள் அதன்படியே நடந்து கொண்டிருந்தால், நீங்கள் அதை மிகவும் வலுவுடையதாக ஆக்கிவிடுகிறீர்கள். அதன் பிறகு, நீங்கள் மீண்டும் உங்களது வாழ்க்கையை குத்தகைக்கு விட்டுவிடுகிறீர்கள். நீங்கள் மீண்டும் அதற்கு ஒரு அதிகாரத்தை, சக்தியை கொடுத்து விடுகிறீர்கள். அது, பூமிக்கடியில் உள்ள ஒரு விதையைப் போன்று துடித்துக் கொண்டிருக்கும். சரியான சந்தர்ப்பத்திற்காகவும், காலநிலைக்காகவும் காத்துக் கொண்டிருக்கும். அதன்பின்னர், அது முளைவிடும்.

ஒவ்வொரு செயலும் மீண்டும் தொடர்ந்திருக்கச் செய்யும், ஒவ்வொரு எண்ணமும் மீண்டும் தொடர்ந்திருக்கச் செய்யும். ஒரு தடவை நீங்கள் அதோடு ஒத்துழைத்துவிட்டால், நீங்கள் அதற்கு சக்தியைக் கொடுத்துவிடுகிறீர்கள். கூடிய விரைவில், அதுவே உங்களது பழக்கமாக ஆகிவிடும். நீங்கள் அதைச் செய்வீர்கள். ஆனால், நீங்கள் அதைச் செய்பவர் ஆகமாட்டீர்கள். உங்களது பழக்கதின் வலுக்கட்டாயத்தினால், நீங்கள் வெறுமனே அதைச் செய்வீர்கள். பழக்கம் என்பது இரண்டாவது இயற்கை என்று மக்கள் கூறுவதுண்டு. அது மிகைப்படுத்தப்பட்ட ஒன்று அல்ல. அதற்கு மாறாக, இது ஒரு தவறான சொல் ஆகும். உண்மையான



**ஒவ்வொரு செயலும் மீண்டும் தொடர்ந்திருக்கச் செய்யும், ஒவ்வொரு எண்ணமும் மீண்டும் தொடர்ந்திருக்கச் செய்யும். ஒரு தடவை நீங்கள் அதோடு ஒத்துழைத்துவிட்டால், நீங்கள் அதற்கு சக்தியைக் கொடுத்துவிடுகிறீர்கள். கூடிய விரைவில், அதுவே உங்களது பழக்கமாக ஆகிவிடும். நீங்கள் அதைச் செய்வீர்கள். ஆனால், நீங்கள் அதைச் செய்பவர் ஆகமாட்டீர்கள். உங்களது பழக்கதின் வலுக்கட்டாயத்தினால், நீங்கள் வெறுமனே அதைச் செய்வீர்கள்.**





பழக்கம் என்பது, முதல் இயற்கையாகவும், உண்மையான இயற்கை இரண்டாவதாகவும் ஆகிவிடும். இயற்கை என்பது பிற்சேர்க்கையாக, அல்லது புத்தகங்களில் வரும் கீழ்க்குறிப்பு போன்று ஆகிவிடும். மேலும், பழக்கம் என்பது தான் அந்த புத்தகத்தின் முக்கிய பகுதி போல் ஆகிவிடும்.

நீங்கள், பழக்கங்களின் மூலமாகத் தான் வாழ்கிறீர்கள். அதாவது, அந்தப் பழக்கம், அடிப்படையில் உங்கள் மூலம் வாழ்கிறது என்று தான் அர்த்தம். அந்தப் பழக்கம் அதுவாகவே நிலைத்து நிற்கும்; அதற்கு சுயமான சக்தி உண்டு. ஆனால், அது, அதற்குத் தேவையான சக்தியை உங்களிடமிருந்து தான் எடுக்கிறது. ஆனால், கடந்த காலத்தில் நீங்கள் அதோடு ஒத்துழைத்தபடியால், இப்போது இந்த நிகழ்காலத்தில் அதற்கு ஒத்துழைப்பு கொடுத்துவிடுகிறீர்கள். கொஞ்சம் கொஞ்சமாக அந்தப் பழக்கம் ஒரு எஜமான் ஆகிவிடும். நீங்கள் அதன் வேலைக்காரனைப் போல, ஒரு நிழல் போல ஆகிவிடுவீர்கள். அந்தப் பழக்கம் உங்களுக்கு ஒரு கட்டளையை, ஒரு உத்தரவைக் கொடுக்கும். அப்போது நீங்கள் ஒரு கீழ்படிதலுள்ள வேலைக்காரனாக இருப்பீர்கள். நீங்கள் அதைப் பின்பற்றித்தான் ஆக வேண்டும்.

இந்து ஞானியாகிய ஏக்நாத் என்பவர், ஒரு புனித யாத்திரை சென்ற போது நடந்தது இது. அந்த புனிதப் பயணம், குறைந்தது ஒரு வருட காலமாவது நீடிக்கும். ஏனெனில், அவர் இந்த நாட்டில் உள்ள அத்தனை புனித ஸ்தலங்களையும் பார்க்க விரும்பினார். நிச்சயமாக, இப்படிப்பட்ட புனித யாத்திரையின் போது ஏக்நாத்துடன் செல்வது ஒரு தனிச்சிறப்பு என்பதால், ஆயிரக்கணக்கான மக்கள் அவரோடு பயணம் செய்தனர். அந்த நகரத்தில் உள்ள ஒரு திருடனும்கூட அவரிடம் வந்து, "நான் ஒரு திருடன் என்பது எனக்குத் தெரியும். உங்களது சமயப்பற்று மிக்க இந்த கூட்டத்தினருடன் இருப்பதற்கு, எனக்கு போதுமான தகுதி இல்லை என்பதும் எனக்குத் தெரியும். ஆனால், எனக்கும்கூட ஒரு சந்தர்ப்பம் கொடுங்கள். நானும் புனித யாத்திரை வர விரும்புகிறேன்," என்றான்.

ஏக்நாத் அவனிடம், "இது மிகவும் கடினம். ஏனெனில், ஒரு வருடம் என்பது மிகவும் நீண்ட காலம். எனவே, நீ மக்களின் பொருட்களை திருட ஆரம்பித்துவிடுவாய். நீ தொந்தரவை உருவாக்குவாய். தயவுசெய்து இந்த எண்ணத்தை விட்டுவிடு," என்றார். ஆனால், அந்தத் திருடன் விடாப்பிடியாக இருந்தான். அவன் அவரிடம், "அந்த ஒரு வருடத்திற்கு நான் திருடுவதை விட்டுவிடுகிறேன். எனவே, நான் உங்களுடன் வந்தாக வேண்டும். மேலும், அந்த ஒரு வருட காலத்தில் நான் மற்றவர்களிடமிருந்து ஒரு சிறு பொருளைக்கூட திருட மாட்டேன்," என்று கூறினான். ஏக்நாத் ஒத்துக் கொண்டார்.

ஆனால், ஒரு வாரத்திற்குள் பிரச்சனை ஆரம்பித்துவிட்டது. அந்தப் பிரச்சனை இதுதான் : மக்களின் உடைமைகளில் இருந்து பொருட்கள் காணாமல் போக ஆரம்பித்தன. இன்னும் இதைவிட ஆச்சரியமான விஷயம் என்னவென்றால், யாரும் அந்தப் பொருட்களை திருடவில்லை - யாராவது ஒருவரது பையில் இருந்து பொருட்கள் காணாமல் போகும்; ஆனால், அவைகள் சில நாட்களுக்குப் பிறகு வேறு ஒருவருடைய பையில் இருந்து கண்டு எடுக்கப்படும். எந்த ஆளின் பையில் இருந்து அந்தப் பொருளை எடுக்கிறார்களோ, அந்த ஆள், "நான் எதுவும் செய்யவில்லை. இந்தப் பொருட்கள் உண்மையில் என்னுடைய பைக்கு எப்படி வந்தன என்றுகூட எனக்குத் தெரியாது," என்று கூறுவார்.

ஏக்நாத்திற்கு சந்தேகம் வந்தது; ஆகவே, ஒருநாள் அவர் தூங்குவது போல் பாசாங்கு செய்தார். ஆனால், அவர் விழித்துக் கொண்டு கவனித்து வந்தார். அந்த திருடன் கிட்டத்தட்ட நடு இரவில், ராத்திரியின் நடுவில் எழுந்தான். அதன்பின்னர், அவன் ஒருவர் பையில் இருந்த பொருட்களை எடுத்து மற்றவர்களின் பைகளில் மாற்றி வைக்க ஆரம்பித்தான். ஏக்நாத் அவனை கையும் களவுமாகப் பிடித்தார். அவர் அவனிடம், "நீ செய்வது என்ன காரியம்? நீ என்னிடம் வாக்குறுதி கொடுத்தாயே!" என்றார்.

அதற்கு அந்தத் திருடன், "நான் எனது வாக்குறுதியைப் பின்பற்றிக் கொண்டு தான் இருக்கிறேன். நான் ஒரு சிறு பொருளையும் திருடவில்லை. ஆனால், இது என்னுடைய பழைய பழக்கம். நடுராத்திரியில் இதுபோன்று நான் ஏதாவது திருட்டுச் செயல் செய்யவில்லையென்றால், என்னால் தூங்க முடியாது. மேலும், ஒரு வருடம் நான் தூங்காமல் இருக்க முடியுமா? நீங்கள் ஒரு கருணை மிக்க மனிதர். எனவே, என்மீது நீங்கள் கருணை காட்ட வேண்டும். மேலும், நான் திருடவில்லை! பொருட்கள் மீண்டும் மீண்டும் கண்டுபிடிக்கப்பட்டு விடுகின்றன; அவைகள் எங்கும் போகவில்லை. ஆனால், அவைகள் ஒரு ஆளிடம் இருந்து மற்றொரு ஆளுக்கு மாற்றி வைக்கப்படுகிறது. மேலும், ஒரு வருடம் கழித்து நான் மீண்டும் எனது திருட்டுத் தொழிலை ஆரம்பிக்க வேண்டும். எனவே, இது எனக்கு ஒரு நல்ல பயிற்சியாகவும் இருக்கும்," என்று பதில் கூறினான்.

பழக்கங்கள், உங்களை ஏதாவது செய்யும்படி கட்டாயப்படுத்தும். நீங்கள் ஒரு பலிகடா. இந்துக்கள், இதை கர்மவினை என்று கூறுவார்கள். ஒவ்வொரு எண்ணமோ அல்லது செயலோ, நீங்கள் திரும்பவும் செய்கிறீர்கள். ஏனெனில், எண்ணம் என்பதும் கூட உங்களது மனதின் கண்ணுக்குத் தெரியாத செயல் தான். ஆனால், அது மிக மிக சக்தி வாய்ந்ததாக ஆகிவிடும். அதன்பின்னர், நீங்கள் அதன் பிடியில் சிக்கிக்



கொள்வீர்கள். நீங்கள் அதன்பிறகு அந்தப் பழக்கத்தால் சிறை பிடிக்கப்பட்டு விடுவீர்கள். அதன்பிறகு, நீங்கள் ஒரு சிறைக் கைதியைப் போல, ஒரு அடிமை போல் வாழ்வீர்கள். ஆனால், அந்த சிறைவாசம் கண்களுக்குத் தெரியாது; அந்த சிறை, உங்களது பழக்கங்களாலும், கண்டிப்புகளாலும், நீங்கள் இதுவரை செய்த செயல்களால் ஆனதாகவும் இருக்கும். அது உங்களது உடலைச் சுற்றிலும் இருக்கிறது. மேலும், நீங்கள் அதனால் சுற்றி வளைக்கப்பட்டு இருப்பீர்கள். ஆனால், நீங்களோ, அதைச் செய்வது நீங்கள் தான் என்று நினைத்துக் கொண்டு, உங்களையே முட்டாளாக்கிக் கொண்டு போவீர்கள்.

நீங்கள் கோபப்படும் போது, அதை நீங்கள் தான் செய்வதாக நினைக்கிறீர்கள். நீங்கள் அதை பகுத்தறிவிற்கு ஏற்றவாறு ஆக்கிக் கொள்வீர்கள். மேலும், அந்தச் சூழ்நிலையில் அது தேவைப்பட்டது என்று கூறுவீர்கள். "அந்தச் சூழ்நிலையில், நான் கோபப்பட்டு தான் தீர வேண்டும். இல்லையெனில், அந்தக் குழந்தை வழிதவறிப் போய்விடும். அப்படி நான் கோபப்படாமல் இருந்தால், விஷயங்கள் தவறாகப் போய்விடும். அதன்பின்னர், இந்த அலுவலகத்தில் குழப்பம் ஏற்பட்டுவிடும். வேலைக்காரர்கள், சொல்வதைக் கேட்க மாட்டார்கள். எனவே, விஷயங்களை சமாளிக்க, நான் கோபம் கொண்டு தான் ஆக வேண்டும்," என்று கூறுவீர்கள். இவைகள் எல்லாம் உங்களது பகுத்தறிவு வாதங்கள். இப்படித்தான் உங்களது ஆணவம், இன்னமும் அதுதான் தலைவர் என்று நினைத்துக் கொண்டே செல்கிறது. நீங்கள் தலைவர் அல்ல.

கோபம் என்பது பழைய வாழ்க்கை முறையால், கடந்த காலத்திலிருந்து வருகிறது. மேலும், இப்படி கோபம் வரும் போது, நீங்கள் அதற்கு ஒரு சாக்குபோக்கை கண்டுபிடித்துக் கொள்கிறீர்கள். மனோதத்துவ விஞ்ஞானிகள் இது குறித்து பரிசோதனைகள் மேற்கொண்டு வந்திருக்கிறார்கள். அதில், இந்த கீழை நாட்டு மனோதத்துவம் கூறுவதைப் போன்று, மனிதன் ஒரு எஜமான் அல்ல; அவன் ஒரு பலிகடா என்று கண்டுபிடித்துள்ளனர். மனோ விஞ்ஞானிகள், மக்களை முற்றிலும் தனிமையில் வைத்து, ஆனால், எல்லா வசதிகளையும் செய்து கொடுப்பார்கள். அவர்களுக்குத் தேவையானது எல்லாம் கொடுக்கப்படும். ஆனால், அவர்கள் அடுத்த மனிதர்களுடன் எந்தவிதமான தொடர்பும் கொள்ள முடியாது. அவர்கள், குளிர்சாதன வசதி செய்யப்பட்ட ஒரு தனி அறையில் தனிமையில் வைக்கப்படுவார்கள். அவர்களுக்கு வேலை ஒன்றும் கிடையாது, தொந்தரவு கிடையாது, பிரச்சனை கிடையாது. என்றாலும்கூட, அவர்களின் அந்த பழைய பழக்க வழக்கங்கள் தொடர்ந்து கொண்டு

தான் இருந்தன. ஒருநாள் காலையில், இப்போது எந்தக் காரணமும் இல்லாமல் அந்த மனிதருக்கு கோபம் எழுவதைக் கண்டனர். ஏனெனில், அவரது எல்லா சௌகரியங்களும் நிறைவேற்றப்பட்டன. அங்கு கவலை என்பதே இல்லை. அப்போது கோபம் கொள்வதற்கு எந்தவிதமான சாக்குப் போக்கும் கிடையாது. என்றாலும்கூட, அவருக்குக் கோபம் எழுவதைக் கண்டனர்.

எனவே, கோபம் என்பது உங்களுக்கு உள்ளே தான் உள்ளது. சில நேரங்களில், எந்த ஒரு வெளிப்படையான காரணமும் இல்லாமல் உங்களுக்கு துக்கம் வரும். அதே போன்று, சிலர் சந்தோஷத்தை உணர்வார்கள்; சில வேளைகளில், சிலர் களிப்பும் பேரானந்தமும் கொள்வார்கள். மற்றவர்களுடன் உறவாடிக் கொள்வதன் மூலம் எல்லா நிலைகளையும் பெறுகின்ற மனிதனும், இந்த சமூக உறவுகள் தவிர்க்கப்பட்ட, தனிமையில் சௌகரியமாக வைக்கப்பட்ட, எல்லாத் தேவைகளும் செய்து கொடுக்கப்பட்ட, அந்த மனிதனும் ஒரே மனநிலையில் தான் செயல்புரிகிறார்கள் என்று கண்டறியப்பட்டுள்ளது. எனவே, அதற்கு, உங்களுக்கு உள்ளே இருந்து தான் ஏதோ ஒன்று வருகிறது என்று அர்த்தமாகிறது. ஆனால், நீங்கள் அதை மற்றவர்கள் மீது பழி போட்டுவிடுகிறீர்கள். அது, உங்களது பகுத்தறிவு விளக்கம் தான்.

நீங்கள் நன்றாக இருப்பதாக உணர்கிறீர்கள்; நீங்கள் கெட்டவற்றை உணர்கிறீர்கள்; ஆனால், இந்த உணர்வுகள் எல்லாம் உங்களது சொந்த தன்னுணர்வில் இருந்து, உங்களது சொந்த கடந்த காலத்தில் இருந்து தான் நீர்க்குமிழி போல் வருகிறது. உங்களைத் தவிர, வேறு யாரும் இதற்கு காரணம் கிடையாது. யாரும் உங்களை கோபம் அடையச் செய்யவும் முடியாது. யாரும் உங்களை சந்தோஷம் அடையச் செய்யவும் முடியாது. நீங்கள், உங்களது சொந்த முயற்சியால் தான் சந்தோஷம் அடைகிறீர்கள். நீங்கள், உங்களது சொந்த முயற்சியால் தான் கோபம் கொள்கிறீர்கள். மேலும், உங்களது சுயத்தினால் தான் துக்கம் அடைகிறீர்கள். இதை நீங்கள் புரிந்து கொள்ளாதவரையில், நீங்கள் ஒரு அடிமையாகத் தான் இருப்பீர்கள்.

"எனக்கு நடப்பதெற்காலம் நான் தான் முழுப்பொறுப்பு. எது நிகழ்ந்தாலும், நிபந்தனையின்றி - நான் தான் முழுப் பொறுப்பு," என்று ஒருவன் உணர்ந்து கொள்ளும் போதுதான், ஒருவனுக்குத் தன்னையே வெல்லும் திறமை வருகிறது.

ஆரம்பத்தில் அப்படிச் சொல்வது, உங்களது கவலையும், மனத்துயரமும் கொள்ள வைக்கும். ஏனெனில், நீங்கள் பொறுப்பினை



மற்றவர்கள் மீது போட்டுவிடும் போது, நீங்கள் தவறு செய்யவில்லை என்று நீங்கள் சந்தோஷப்படுகிறீர்கள். உங்களது மனைவி, இப்படிப்பட்ட மோசமான வழியில் நடந்து கொள்ளும் போது, உங்களால் என்ன செய்ய முடியும். நீங்கள் கோபம் கொள்ளத்தான் வேண்டும். ஆனால், மனைவியானவள், அவளுக்குள் உள்ள அவளது சொந்த இயந்திர நுட்பத்தால் தான் அப்படி மோசமாக நடந்து கொள்கிறாள் என்பதை நினைவில் கொள்ளுங்கள். அவள், உங்களிடம் மோசமாக நடக்கவில்லை. நீங்கள் அங்கு இல்லாமல் இருந்தால், அவள் குழந்தையிடம் மோசமாக நடந்திருப்பாள். அப்படி அந்த குழந்தையும் அங்கு இல்லாமல் போனால், அவள் அதை உணவுகளின் மீது காட்டுவாள். அவள், அவைகளை தரையில் தூக்கி வீசி எறிவாள். அவள், வானொலிப் பெட்டியை உடைப்பாள். அவள் ஏதாவது செய்தாக வேண்டும். ஏனெனில், அவளுக்குள் அருவெறுப்பு எழுந்து வருகிறது. நீங்கள், செய்தித்தாளை படித்துக் கொண்டிருக்கும் போது, அவள் அப்படி அருவெறுக்கத்தக்க வகையில் நடந்து கொண்டது, எதிர்பாராமல் ஏற்பட்ட ஒன்று தான். தவறான ஒரு நேரத்தில், நீங்கள் அங்கு இருந்தது தான் எதிர்பாராமல் நடந்தது.

உங்களது மனைவி மோசமாக நடந்து கொண்டாள் என்பதற்காக, நீங்கள் கோபம் கொள்வதில்லை. அவள், அதற்கான சந்தர்ப்பத்தை உங்களுக்கு கொடுத்திருக்கலாம். அவ்வளவு தான். நீங்கள் கோபம் கொள்வதற்கான ஒரு சாத்தியத்தை, கோபம் கொள்வதற்கான ஒரு சாக்குபோக்கை, அவள் உங்களுக்குக் கொடுத்திருக்கலாம். ஆனால், கோபம் உங்களுக்குள் கொப்பளித்துக் கொண்டிருந்தது என்பது தான் உண்மை. உங்களது மனைவி அங்கு இல்லாமல் போயிருந்தால், நீங்கள் எப்படியும் கோபம் கொண்டிருப்பீர்கள். அதாவது, வேறு யாருடனோ, வேறு ஏதாவது கருத்து மோதலோ இருந்திருக்கும். ஆனால், கோபம் என்பது அங்கே உங்களுக்குள் இருந்திருக்க வேண்டும். அது, உங்களது தன்னுணர்வில் இருந்து வருகின்ற ஒன்று.

தனது இருப்பிற்கும், தனது நடத்தைக்கும் ஒவ்வொருவரும் தான் பொறுப்பு; முழுப் பொறுப்பு. ஆரம்பத்தில் அது உங்களுக்கு மனச்சோர்வை ஏற்படுத்தலாம். ஏனெனில், நீங்கள் எப்போதும் சந்தோஷமாக இருக்க வேண்டும் என்று தான் விரும்புவீர்கள். எனவே, நீங்கள் எப்படி சந்தோஷம் இல்லாமல் இருப்பதற்கு பொறுப்பாக முடியும்? நீங்கள் எப்போதும் பேரானந்தத்திற்கு ஆசைப்படுகிறீர்கள். அப்படி இருக்கும் போது, நீங்களே எப்படி சுயமாக கோபம் கொள்ள முடியும்? இதனால் தான், நீங்கள் மற்றவர்கள் மீது பொறுப்பை போட்டு விடுகிறீர்கள்.

இப்படி, நீங்கள் மற்றவர்கள் மீது பொறுப்பை போட்டுக் கொண்டே வந்தால், அதன்பிறகு நீங்கள் எப்போதும் ஒரு அடிமை போன்று தான் இருப்பீர்கள். ஏனெனில், யாராலும் மற்றவர்களை மாற்ற முடியாது. உங்களால் மற்றவர்களை எப்படி மாற்ற முடியும்? யாராவது மற்றவர்களை மாற்றி இருக்கிறார்களா? மற்றவர்களை மாற்ற முடியவில்லையே என்பது தான் இந்த உலகில் நிறைவேற்ற முடியாத ஆசைகளில் ஒன்றாகும். இதை யாரும் ஒருபோதும் செய்தது கிடையாது; அது சாத்தியமற்றது. ஏனெனில், அடுத்தவரும் அவரது சுய உரிமையுடன் இருக்கிறார். எனவே, உங்களால் அவரை மாற்ற முடியாது. நீங்கள், பொறுப்பை மற்றவர்கள் மீது போட்டுக் கொண்டே செல்கிறீர்கள். ஆனால், உங்களால் மற்றவர்களை மாற்ற முடியாது. மேலும், இப்படி நீங்கள் மற்றவர்கள் மீது பொறுப்பை வீசி எறிவதால், உங்களால், அடிப்படையான பொறுப்பு உங்களுடையது என்பதை ஒருபோதும் கண்டு கொள்ள முடியாது. அடிப்படை மாற்றம், அங்கே உங்களுக்குள் தேவையாகிறது.

இப்படித்தான், நீங்கள் பொறியில் மாட்டிக் கொள்கிறீர்கள். உங்களது செயல்களுக்கு எல்லாம், உங்களது மனநிலைகளுக்கு எல்லாம், நீங்கள் தான் காரணம் என்று நீங்கள் நினைக்க ஆரம்பித்துவிட்டால், ஆரம்பத்தில் ஒருவித மனச்சோர்வு உங்களை ஆட்கொள்ளும். ஆனால், நீங்கள் அந்த மனச்சோர்வை கடந்து சென்றுவிட்டால், விரைவில் நீங்கள் இலகுவானவராக உணர்வீர்கள். ஏனெனில், இப்போது நீங்கள் அடுத்தவரிடமிருந்து விடுதலை பெற்றுவிட்டீர்கள். இப்போது நீங்கள், உங்களது சுயபுத்தியில் செயலாற்ற முடியும். உங்களால் சுதந்திரமாக இருக்க முடியும். உங்களால் சந்தோஷமாக இருக்க முடியும். இந்த முழுவுலகமும் சுதந்திரமாக இல்லாமலும், சந்தோஷமாக இல்லாமலும் இருந்தாலும்கூட, அதனால் நீங்கள் கவலைப்பட மாட்டீர்கள். எனவே, முதல் விடுதலை என்பது, பொறுப்பை மற்றவர்கள் மீது போடுவதை நிறுத்துவது தான். நீங்கள் தான் பொறுப்பாளி என்பதை அறிந்து கொள்வது தான் முதல் விடுதலை. அதன் பின்னர், அநேக விஷயங்கள் உடனடியாக சாத்தியப்படும்.

பொறுப்பை மற்றவர்கள் மீது போட்டுக் கொண்டே சென்றாலும், நீங்கள் ஒரு அடிமையாகத் தான் இருப்பீர்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஏனெனில், யாராலும் மற்றவர்களை மாற்ற முடியாது. மற்றவர்களை எப்படி உங்களால் மாற்ற முடியும்? மற்றவர்களை யாராவது, எப்போதாவது மாற்றி இருக்கிறார்களா? உங்களுக்கு எது நடந்தாலும், அதாவது, நீங்கள் துக்கமாக இருக்கிறீர்கள் என்றால், அப்போது கண்களை மூடிக் கொண்டு உங்களது துக்கத்தைக்



கவனியுங்கள். அது, உங்களை எங்கு வழிநடத்திச் செல்கிறதோ, அதோடு செல்லுங்கள். அதோடு ஆழ்ந்து செல்லுங்கள். விரைவில் உங்களது துக்கத்திற்கான காரணம் வந்துவிடும். இதற்காக நீங்கள் கொஞ்சம் அதிக தூரம் பயணம் செய்ய வேண்டியது இருக்கலாம். ஏனெனில், இதில் உங்களது முழு வாழ்க்கையும் ஈடுபட்டுள்ளது. மேலும், இந்தப் பிறவி மட்டுமல்லாமல், மேலும் அநேகப் பிறவிகளும் இதில் ஈடுபட்டுள்ளன. நீங்கள், உங்களுக்குள் அநேக காயங்களைக் காண்பீர்கள். அவை, உங்களை காயப்படுத்தும். அந்தக் காயங்களினால் நீங்கள் துக்கத்தை உணர்வீர்கள்; அவைகள் துக்கமானவை; அந்தக் காயங்கள் இன்னமும் காய்ந்து போகவில்லை; அவைகள் உயிர்த்துடிப்புடன் தான் இருக்கின்றன. மூலகாரணத்தை தேடிச் செல்கின்ற இந்த வழிமுறை, விளைவில் இருந்து காரணத்தை நோக்கிச் செல்வது, அந்தக் காயங்களை ஆற்றிவிடும். அது எப்படி குணப்படுத்தும்? ஏன் அது குணப்படுத்துகிறது? அதில் அடங்கியுள்ள கருத்து என்ன?

நீங்கள் இப்படி பின்னோக்கி உங்களுக்குள் செல்வதில், முதல் காரியமாக, நீங்கள் உங்களது செயல்களுக்கான காரணத்தை மற்றவர்கள் மீது போடுவதை விட்டுவிடுவீர்கள்; ஏனெனில், நீங்கள் பொறுப்பினை மற்றவர்கள் மீது போடும் போது, நீங்கள் உங்களை விட்டுவிட்டு வெளியே செல்கிறீர்கள். அதன்பிறகு, அந்த வழிமுறையே தவறாகப் போய்விடுகிறது. நீங்கள், அதற்கான காரணத்தை அடுத்தவரிடம் கண்டு கொள்ள முயற்சி செய்கிறீர்கள்; நீங்கள், "எனது மனைவி ஏன் இப்படி அருவருக்கத்தக்க வகையில் நடந்து கொள்கிறாள்?" என்று நினைக்கும் போது, இந்த "ஏன்?" என்பது, உங்களது மனைவியின் நடத்தையைத் தான் ஊடுருவிச் செல்கிறது. இப்போது, நீங்கள் முதல் அடியே தவறாக எடுத்து வைத்து விட்டதால், உங்களது முழு செயல்பாடும் தவறாகத் தான் இருக்கும்.

"நான் என் சந்தோஷமாக இல்லை? நான் ஏன் கோப்படுகிறேன்?" என்று உங்களது கண்களை மூடிக் கொண்டு, இதை ஒரு ஆழ்ந்த தியானம் போன்று செய்யுங்கள். தரையில் படுத்துக் கொண்டு, கண்களை மூடிக் கொண்டு, உடலை ஒய்வாக வைத்துக் கொண்டு, நீங்கள் ஏன் கோபமாக இருக்கிறீர்கள் என்பதை உணர்ந்து பாருங்கள். வெறுமனே உங்களது மனைவியை மறந்துவிடுங்கள்; அது ஒரு சாக்குபோக்கு தான் - அது A, B, C, D இப்படி எதுவாக இருந்தாலும் இருந்துவிட்டு போகட்டும். வெறுமனே அந்த சாக்குபோக்குகளை மறந்துவிடுங்கள். உங்களுக்குள் ஆழ்ந்து செல்லுங்கள், கோபத்தை ஊடுருவிச் செல்லுங்கள். கோபம் என்பதை ஒரு நதியைப் போன்று பயன்படுத்துங்கள்; அந்த

கோபத்தினுள் நீங்கள் குதித்தால், அந்த கோபம் என்னும் நதி உங்களை உங்களுக்குள் எடுத்துச் செல்லும். அப்போது கண்ணுக்குப் புலப்படாத, மெல்லிய காயங்களைக் காண்பீர்கள். மனைவியின் செயல் அருவருக்கத்தக்கதாக தோன்றியது ஏனெனில், அவள் உங்களுக்குள் உள்ள கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஒரு காரியத்தைத் தொட்டுவிட்டாள். அது உங்களைக் காயப்படுத்துகிறது. ஒருவேளை, நீங்கள் எப்போதும் அழகாக இல்லை, உங்களது முகம் அசிங்கமாக இருக்கிறது என்று நினைத்திருக்கலாம். மேலும், அந்த காயம் உள்ளே இருக்கும். எனவே, உங்களது மனைவி அருவருக்கும்படி நடந்து கொள்ளும் போது, அவள் உங்களது முகத்தை உங்களுக்கு ஞாபகப்படுத்தி இருக்கலாம். "போய் கண்ணாடியில் உங்களது முகத்தைப் பாருங்கள்!" என்று அவள் கூறியது போல் இருக்கலாம். இப்படி, ஏதோ ஒன்று உங்களை காயப்படுத்தும். நீங்கள், உங்களது மனைவிக்கு விசுவாசம் உள்ளவராக இருந்திருக்க மாட்டீர்கள். எனவே, அவள் அருவருக்கும் செயல்களைச் செய்யும் போது, அவள் அந்த ஞாபகத்தை மீண்டும் உங்களுக்கு கொண்டு வருகிறாள். "அந்த பெண்ணோடு ஏன் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தீர்கள்? அந்தப் பெண்ணோடு அவ்வளவு சந்தோஷமாக ஏன் உட்கார்ந்திருந்தீர்கள்? இப்படி ஏதாவது ஒரு காயத்தை அவள் தொடுவாள். நீங்களும் மனைவிக்கு விசுவாசமாக இருந்திருக்கவில்லை. அதனால், உங்களுக்கு குற்ற உணர்வு ஏற்படும்; அந்தக் காயம் அப்படியே உயிரோடு இருக்கும்.

நீங்கள் கண்களை மூடிக் கொண்டு, உங்களது கோபத்தை உணருங்கள். அது, அதன் முழுமையுடன் எழுந்து வரட்டும். அப்போது தான், நீங்கள் அது என்ன என்பதை முழுமையாக பார்க்க முடியும். அதன்பிறகு, அந்த சக்தியே உங்களது கடந்த காலத்தை நோக்கி நகர்ந்து செல்ல உங்களுக்கு உதவும். ஏனெனில், கோபம் என்பது கடந் காலத்தில் இருந்து தான் வருகிறது. நிச்சயமாக, அது எதிர்காலத்தில் இருந்து வராது. எதிர்காலம் என்பது, இன்னும் இருப்பிற்கு வரவில்லை. அது, இப்போதுள்ள நிகழ்காலத்தில் இருந்தும்கூட வராது. இது தான் கர்மவினை என்பதன் நிலைப்பாடு. அது, எதிர்காலத்தில் இருந்தும் வர முடியாது. ஏனெனில், எதிர்காலம் என்பது இன்னும் வரவில்லை; அது, நிகழ்காலத்தில் இருந்தும் வர முடியாது. ஏனெனில், உங்களுக்கு நிகழ்காலம் என்றால் என்ன என்றே தெரியாது. நிகழ்காலம் என்பதை விழிப்படைந்தவர்கள் மட்டுமே அறிந்து கொண்டுள்ளார்கள். நீங்கள், கடந்த காலத்தில் தான் வாழ்கிறீர்கள். எனவே, அது கடந்த காலத்திலிருந்து தான் வரவேண்டும். அந்தக் காயம் எங்கோ உங்களது நினைவில் இருக்க வேண்டும். எனவே, திரும்பிச் செல்லுங்கள். அங்கு ஒரு காயம் மட்டுமல்ல, அங்கே சிறியதும், பெரியதுமாக பல காயங்கள்



இருக்கலாம். உங்களுக்குள் ஆழமாகச் சென்று, முதல் காயத்தை, உங்களது கோபத்திற்கு மூலகாரணமான காயத்தை கண்டுபிடியுங்கள். நீங்கள் முயற்சி செய்தால், உங்களால் அதைக் கண்டுபிடிக்க முடியும். ஏனெனில், அது ஏற்கனவே அங்கேயே தான் இருக்கிறது. அது அங்கே தான் உள்ளது; உங்களது கடந்த காலம் எல்லாம் அங்கே தான் உள்ளது. அது, சுருட்டி வைக்கப்பட்ட ஒரு படம் போல் உள்ளே காத்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் அதைப் பிரித்து, அந்தப் படத்தைப் பாருங்கள். இது தான் மூல காரணத்தைத் தேடி பின்னோக்கிச் செல்கின்ற செயல்முறையாகும். மேலும், இந்த செயல்முறையின் அழகு என்னவென்றால், நீங்கள் தன்னுணர்வுடன் பின்னோக்கிச் சென்றால், உங்களால் தன்னுணர்வுடன் ஒரு காயத்தைக் கண்டு கொள்ள முடிந்தால், அந்தக் காயம் உடனடியாக குணப்படுத்தப்பட்டு விடுகிறது.

அது ஏன் குணப்படுத்தப்படுகிறது? ஏனெனில், ஒரு காயம் என்பது உங்களது தன்னுணர்வு அற்ற நிலையிலும், விழிப்புணர்வு இல்லாத நிலையிலும் தான் உருவாக்கப்படுகிறது. ஒரு காயம் என்பது, உங்களது அறியாமை அல்லது தூக்க நிலையின் ஒரு பகுதி தான். நீங்கள் தன்னுணர்வோடு பின்னோக்கிச் செல்லும் போது, அந்தக் காயத்தைப் பார்க்கும் போது, உங்களது தன்னுணர்வானது ஒரு குணப்படுத்தும் சக்தியாக செயல்படுகிறது. கடந்த காலத்தில், இந்த காயம் ஏற்பட்ட போது, அது உங்களது ஆழ்மனதில் நடக்கிறது. நீங்கள் எப்போதோ கோபமாக இருக்கும் போது, ஏதோ ஒன்றைச் செய்துவிட்டீர்கள். அப்போது, நீங்கள் ஒருவரைக் கொலை செய்துவிட்டு, அந்த உண்மையை இந்த உலகத்திடமிருந்து நீங்கள் மறைத்துக் கொண்டிருக்கலாம். நீங்கள் அதை காவல்துறையிடமிருந்தும், நீதிமன்றம் மற்றும் சட்டத்திலிருந்தும் மறைத்து வாழலாம். ஆனால், அதை எப்படி உங்களுக்குள் மறைத்து வாழ முடியும்? உங்களுக்கு அது தெரியும். எனவே, அது காயப்படுத்தும். எனவே, யாராவது உங்களுக்கு கோபம் கொள்வதற்கான ஒரு சந்தர்ப்பத்தைக் கொடுக்கும் போது, நீங்கள் மீண்டும் அது நடந்துவிடுமோ, நீங்கள் உங்களது மனைவியைக் கொன்று விடுவீர்களோ என்று பயப்பட ஆரம்பித்துவிடுவீர்கள். எனவே, திரும்பவும் பின்னோக்கிச் செல்லுங்கள்; ஏனெனில், நீங்கள் ஒருவரைக் கொலை செய்த அதே நேரத்தில், அல்லது நீங்கள் கோபத்துடனோ அல்லது பைத்தியக்காரத்தனத்துடனோ நடந்து கொண்ட போது, நீங்கள் சுயநினைவு இழந்து இருந்தீர்கள். எனவே, உங்களது தன்னுணர்வற்ற மனதில் அந்தக் காயங்கள் பாதுகாக்கப்படுகின்றன. இப்போது அங்கே தன்னுணர்வுடன் செல்லுங்கள்.

பின்னோக்கிச் செல்லுங்கள் என்றால், நீங்கள் உங்களது தன்னுணர்வு இல்லாத நிலையில் செய்த விஷயங்களை நோக்கிச்

செல்லுங்கள் என்று அர்த்தம். பின்னோக்கிச் செல்லுங்கள் - உங்களது தன்னுணர்வின் ஒளி குணப்படுத்தும்; அது ஒரு குணப்படுத்தும் சக்தி. நீங்கள் உங்களது தன்னுணர்வுடன் என்ன செய்தாலும், அது குணப்படுத்தப்பட்டுவிடும்; மேலும், அதன்பிறகு அது உங்களை ஒருபோதும் காயப்படுத்தாது.

பின்னோக்கிச் செல்கின்ற ஒருவன், தனது கடந்த காலத்தினை வெளியேற்றி விடுகிறான். அதன்பின்னர், கடந்த காலம் என்பது ஒருபோதும் வேலை செய்யாது. அதன்பிறகு, கடந்த காலம் என்பது அவன் மீது தனது பிடியை இறுக்காது. மேலும், கடந்த காலம் என்பது முடிந்துவிடும். கடந்த காலம் என்பதற்கு அவனது உயிரில் இடம் இருக்காது. மேலும், கடந்த காலத்திற்கு உங்களது உயிரில் இடம் இல்லாத போது, நீங்கள் இந்த நிகழ்காலத்திற்கு கிடைக்கக் கூடியவராக இருப்பீர்கள், அதற்கு முன்பு ஒருபோதும் அல்ல.

உங்களுக்கு இடம் தேவை - உங்களுக்குள் கடந்த காலம் என்பது அந்த அளவுக்கு அதிகம் நிறைந்துள்ளது. உயிரற்ற விஷயங்களின் குப்பை மேடாக உள்ளது. அங்கே, நிகழ்காலம் என்பது நுழைவதற்கு இடமே இல்லை. அந்த குப்பை மேடு, எப்போதும் எதிர்காலத்தைப் பற்றியே கனவு கண்டு கொண்டிருக்கிறது. எனவே, உங்களுக்குள் பாதி இடம், இப்போது இல்லாத ஒன்றினால் நிரப்பப்பட்டு உள்ளது. மீதிப் பாதி இடம், இன்னும் வராத பாதியால் நிரப்பப்பட்டு இருக்கிறது. எனவே, நிகழ்காலம் என்ன செய்யும்? அது, வெறுமனே கதவுக்கு வெளியே காத்துக் கொண்டிருக்கிறது. அதனால் தான், இந்த நிகழ்காலம் ஒரு பாதையாக, கடந்த காலத்தில் இருந்து எதிர்காலத்திற்குள் செல்லும் ஒரு பாதையாக, ஒருநொடிப் பொழுதில் கடந்து செல்லக் கூடிய பாதையாக இருக்கிறது.

எனவே, கடந்த காலத்தோடு எல்லாவற்றையும் முடித்துவிடுங்கள். அப்படி, நீங்கள் கடந்த காலத்தை முடித்துவிடவில்லையெனில், நீங்கள் வாழ்வது ஒரு பேயின் வாழ்க்கை தான். உங்களது வாழ்க்கை உண்மையானது அல்ல. அது இருக்கின்ற ஒன்று ஆகாது. கடந்த காலம் தான் உங்கள் மூலம் உயிர் வாழ்கிறது. உயிரற்ற ஒன்று தான் உங்களை அடிக்கடி நினைவு கொள்ளச் செய்கிறது. எனவே, பின்னோக்கிச் செல்லுங்கள் - உங்களுக்கு எப்போதெல்லாம் சந்தர்ப்பம் கிடைக்கிறதோ, உங்களுக்குள் எப்போதெல்லாம் ஏதாவது ஒன்று நடக்கிறதோ, அப்போதெல்லாம் பின்னோக்கிச் செல்லுங்கள். சந்தோஷம், துக்கம், கோபம், பொறாமை இப்படி எது நடந்தாலும், உங்களது கண்களை மூடிக் கொண்டு பின்னோக்கிச் செல்லுங்கள். விரைவில், இப்படி பின்னோக்கிப் பயணம் செய்வதில் நீங்கள்



திறமைசாலி ஆகிவிடுவீர்கள். விரைவில், நீங்கள் காலத்திற்குள் திரும்பிச் செல்லும் தகுதி பெற்றுவிடுவீர்கள். அதன்பின்னர், அநேக காயங்கள் திறக்கப்படும். அப்படி அந்தக் காயங்கள் உங்களுக்குத் திறக்கப்படும் போது, அதை நீங்கள் ஒன்றும் செய்யாதீர்கள். அதை எதுவும் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. நீங்கள் வெறுமனே அதைப் பாருங்கள், கவனியுங்கள். அந்தக் காயம் அங்கே இருக்கிறது, நீங்கள் அதை வெறுமனே கவனியுங்கள், உங்களது சக்தியை அந்த காயத்திற்குக் கொடுங்கள். அதைப் பாருங்கள். அதை எந்த ஒரு தீர்மானமும் இல்லாமல் பாருங்கள். ஏனெனில், நீங்கள் ஏதாவது தீர்மானித்தால், நீங்கள், "இது கெட்டது, இது இப்படி இருந்திருக்கக் கூடாது," என்று கூறினால், அந்தக் காயம் திரும்பவும் மூடிக் கொள்ளும். அதன் பிறகு, அதை மறைத்து கொள்ளத் தான் வேண்டும். எப்போதெல்லாம் நீங்கள் எதையாவது கண்டனம் செய்கிறீர்களோ, அப்போது அந்த மனம், அந்த விஷயத்தை மறைப்பதற்கு முயற்சி செய்யும். அப்படித்தான் தன்னுணர்வுள்ள, தன்னுணர்வு அற்ற பகுதிகள் உருவாக்கப் படுகின்றன. இல்லையெனில், மனம் என்பது ஒன்று தான்; அதில், பிரிவினைக்கான அவசியம் கிடையாது. ஆனால், நீங்கள் கண்டனம் செய்யும் போது, உங்களது மனம் அதைப் பிரித்து, அந்த விஷயங்களை இருட்டில், அடித்தளத்தில் போட்டு விடுகிறது. எனவே, உங்களால் அதை மீண்டும் பார்க்க முடியாது. மேலும், அதை நீங்கள் கண்டனம் செய்ய வேண்டிய அவசியமும் இருக்காது.



**எப்போதெல்லாம் நீங்கள் எதையாவது கண்டனம் செய்கிறீர்களோ, அப்போது அந்த மனம், அந்த விஷயத்தை மறைப்பதற்கு முயற்சி செய்யும். அப்படித்தான் தன்னுணர்வுள்ள, தன்னுணர்வு அற்ற பகுதிகள் உருவாக்கப்படுகின்றன. இல்லையெனில், மனம் என்பது ஒன்று தான்; அதில், பிரிவினைக்கான அவசியம் கிடையாது. ஆனால், நீங்கள் கண்டனம் செய்யும் போது, உங்களது மனம் அதைப் பிரித்து, அந்த விஷயங்களை இருட்டில், அடித்தளத்தில் போட்டுவிடுகிறது. எனவே, உங்களால் அதை மீண்டும் பார்க்க முடியாது.**



எதையும் கண்டனம் செய்யாதீர்கள்; எதையும் பாராட்டவும் செய்யாதீர்கள். நீங்கள் வெறுமனே ஒரு சாட்சி போன்று, எந்தவிதமான

பற்றுதலும் இல்லாமல், ஒரு கவனிப்பாளனாக மட்டுமே இருங்கள். எதையும் மறுக்காதீர்கள். “இது நல்லதல்ல,” என்று கூறாதீர்கள். ஏனெனில், அது ஒரு மறுப்பாக ஆகிவிடுவதால், நீங்கள் அதை அடக்கி வைக்க ஆரம்பித்துவிடுவீர்கள்.

அதைவிட்டு பிரிந்து இருங்கள். வெறுமனே கவனியுங்கள், பாருங்கள். நீங்கள் கருணையோடு பார்க்கும் போது, குணப்படுத்துதல் நிகழும்.

அது ஏன் நடக்கிறது என்று என்னிடம் கேட்காதீர்கள். ஏனெனில், அது ஒரு இயல்பான விஷயம். தண்ணீர் எப்படி நூறு டிகிரி கொதிக்கும் போது நீராவியாக மாறுகிறதோ, அதைப் போன்று இயற்கையானது.

“99 டிகிரி கொதிநிலையில் ஏன் நீராவி வருவதில்லை?” என்று நீங்கள் ஒருபோதும் கேட்பதில்லை. யாராலும் அதற்கு பதில் சொல்ல முடியாது. நூறு டிகிரி கொதி நிலையில் தண்ணீர் ஆவியாக மாறுவது வெறுமனே நிகழ்வது. அங்கே கேள்விக்கே இடமில்லை; கேள்வியே சம்பந்தம் இல்லாதது. அது, 99 டிகிரியில் கொதிநிலை அடைந்தால், அதன்பின்னர் நீங்கள், ஏன் என்று கேட்க முடியும். அது 98 டிகிரி கொதிநிலையில் ஆவியானால், அதன்பிறகு நீங்கள், ஏன் என்று கேட்க முடியும். தண்ணீர் 100 டிகிரி கொதிக்கும் போது, ஆவியாகிவிடும் என்பது வெறுமனே இயற்கையான ஒன்று.

இதே உண்மை தான். உங்களுக்குள் உள்ள இயற்கைக்கும், இயல்புக்கும் பொருந்தும். காயத்தைவிட்டு பிரிந்து நின்று கொண்டு, கருணையுடன் பார்க்கின்ற தன்னுணர்வு நிலை வரும் போது, அந்தக் காயம் மறைந்து போகிறது, ஆவியாகப் போய்விடுகிறது. அதற்கு ஏன் என்பது கிடையாது. அது வெறுமனே இயல்பானது; அது அப்படித்தான் இருக்கிறது; அது அப்படித்தான் நடக்கும். நான் இதைக் கூறும் போது, நான் எனது அனுபவத்தில் இருந்து கூறுகிறேன். முயற்சி செய்து பாருங்கள், உங்களுக்கும் கூட இந்த அனுபவம் சாத்தியப்படும். இது தான் வழி.



# செயலில் விழிப்புணர்வு



“அவன் ஒரு அமைதியான மனதுடன் இருக்கிறான்,” என்று கூறுகிறோமே, அது முட்டாள்தனமானதாகும். மனம் என்பது ஒருபோதும் அமைதியாக இருக்க முடியாது. மனது என்பதன் இருப்பே அமைதியற்ற நிலை தான். மனம் என்பது சப்தம்; அமைதி அல்ல. உண்மையிலேயே, ஒரு மனிதர் அமைதியாக இருக்கிறார் என்றால், அதன்பின்னர் நாம், அவர் மனம் என்பது இல்லாமல் இருக்கிறார் என்று தான் கூற வேண்டும்.



தூக்கிக் கொண்டிருக்கிற ஒரு மனிதன், எதிலும் முழுமையாக இருக்க முடியாது. நீங்கள் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறீர்கள். நாம் எப்போது அப்போது, நீங்கள் முழுமையாக அதில் இருப்பதில்லை; ஆயிரத்தோரு விஷயங்களை அப்போது நீங்கள் சிந்தித்துக் கொண்டு இருக்கிறீர்கள். ஆயிரத்தோரு கனவுகளை நீங்கள் கண்டு கொண்டு இருக்கிறீர்கள். அப்போது, வெறுமனே நீங்கள் உங்களது வயிற்றை நிரப்பிக் கொள்கிறீர்கள். நீங்கள், உங்களது ஆணிடமோ அல்லது பெண்ணிடமோ காதல் செய்து கொண்டிருக்கலாம். அப்போது நீங்கள், அதில் முழுமையாக இருப்பதில்லை. உங்களது மனைவியோடு இன்பமாக இருந்து கொண்டு, வேறு ஒரு பெண்ணைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பீர்கள்; அல்லது, நீங்கள் சந்தை நிலவரத்தை எண்ணிக் கொண்டு இருக்கலாம்; அல்லது, நீங்கள் வாங்க விரும்புகின்ற பொருட்களின் விலையைப் பற்றி எண்ணிக் கொண்டிருக்கலாம்; அல்லது, ஒரு காரைப் பற்றியோ அல்லது ஒரு வீட்டைப் பற்றியோ அல்லது இப்படி ஆயிரத்தோரு விஷயங்களை எண்ணிக் கொண்டிருப்பீர்கள். ஆனால், அப்போது நீங்கள் இயந்திரத்தனமாக உங்களது மனைவியிடம் காதல் செய்து கொண்டிருப்பீர்கள்.

உங்களது செயலில் முழுமையாக இருங்கள்; மேலும், நீங்கள் முழுமையாக இருக்க வேண்டுமெனில், நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும். விழிப்புணர்வுடன் இல்லாமல் ஒருவரும் முழுமையாக இருக்க முடியாது. முழுமையாக இருத்தல் என்றால், வேறு எந்த சிந்தனையும்

இல்லாமல் இருப்பது என்று அர்த்தம். நீங்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தால், நீங்கள் வெறுமனே சாப்பிடுவீர்கள்; நீங்கள் அப்போது அங்கேயே இருப்பீர்கள். சாப்பிடுவது தான் அப்போது உங்களுக்கு எல்லாமும் ஆக இருக்கும். நீங்கள் வெறுமனே வயிற்றை நிரப்ப மாட்டீர்கள். அதை நீங்கள் அனுபவித்துச் சாப்பிடுவீர்கள். உடல்,மனம், ஆன்மா, இவைகள் எல்லாம் நீங்கள் சாப்பிடும் போது ஒரே ராகத்தோடு, ஒரு ஒத்திசையோடு, ஒரு ஆழ்ந்த இசைநயத்தோடு, உங்களின் அந்த மூன்று அடுக்குகளிலும் இருப்பீர்கள். அதன்பின்னர், சாப்பிடுதல் என்பது தியானமாகிவிடும்; நடப்பது என்பது தியானமாகிவிடும்; விறகு வெட்டுவதும் கூட தியானமாகிவிடும்; கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்து வருவதும் கூட தியானமாகிவிடும்; உணவு சமைப்பதும் தியானமாகிவிடும். சிறிய விஷயங்கள்கூட மாற்றமடைந்துவிடும். அவைகள் எல்லாம் ஒளி வீசும் செயல்கள் ஆகிவிடும்.

## மையத்திலிருந்து துவங்கு

அமைதி என்பது, மனதில் ஒரு அங்கம் அல்ல என்கிற ஒரு விஷயத்தை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். ஆகவே, நாம் எப்போது "அவன் ஒரு அமைதியான மனதுடன் இருக்கிறான்," என்று கூறுகிறோமே, அது முட்டாள்தனமானதாகும். மனம் என்பது ஒருபோதும் அமைதியாக இருக்க முடியாது. மனது என்பதன் இருப்பே அமைதியற்ற நிலை தான். மனம் என்பது சப்தம்; அமைதி அல்ல. உண்மையிலேயே, ஒரு மனிதர் அமைதியாக இருக்கிறார் என்றால், அதன்பின்னர் நாம், அவர் மனம் என்பது இல்லாமல் இருக்கிறார் என்று தான் கூற வேண்டும்.

அமைதியான மனம் என்பது வார்த்தைகளின் முரண்பாடாகும். மனம் என்பது அங்கு இருந்தால், அது அமைதியாக இருக்க முடியாது. எனவே, அது அமைதியாக இருக்கிறது என்றால், அது அங்கு இல்லை என்றாகிவிடும். அதனால்தான், ஜென் துறவிகள் மனம் இல்லாமல் இருத்தல் என்கிற வார்த்தையைத் தான் பயன்படுத்துவார்கள். ஒருபோதும், அமைதியான மனம் என்று கூறமாட்டார்கள். மனம் இல்லாமல் இருப்பது என்றால், அமைதி என்பதாகும். மேலும், அப்படி மனம் இல்லாமல் இருக்கும் போது, நீங்கள் உங்களது உடலை உணர முடியாது. ஏனெனில், மனம் என்பதன் வழியாகத் தான் நீங்கள் உடல் என்பதை உணர்கிறீர்கள். மனம் என்பது இல்லாத போது, நீங்கள் என்பது இந்த உடல் தான் என்று உங்களால் உணர முடியாது. இந்த உடல் உங்களது தன்னுணர்வில் இருந்து மறைந்து போய்விடும். அங்கே



உடலும் இருக்காது, மனமும் இருக்காது - சுத்தமாக இருப்பு மட்டுமே இருக்கும். அத்தகைய சுத்த இருப்பு தான் அமைதியின் மூலம் சுட்டிக்காட்டப்படுகிறது.

இந்த அமைதியை அடைவது எப்படி? இந்த அமைதியில் இருப்பது எப்படி? இதற்காக நீங்கள் எதைச் செய்தாலும், அது பயனற்றதாகத் தான் இருக்கும்; அது தான் மிகப்பெரிய பிரச்சனை. அமைதியைத் தேடுகின்ற ஒரு சாதகனுக்கு இதுதான் மிகப்பெரிய பிரச்சனை. ஏனெனில், நீங்கள் என்னவெல்லாம் செய்தாலும், அது உங்களை எங்கேயும் கொண்டு போய் சேர்க்காது. ஏனெனில், செய்தல் என்பது அதற்கு சம்பந்தம் இல்லாதது. நீங்கள் ஒரு குறிப்பிட்ட ஆசனத்தில் உட்காரலாம் - அதுதான் நீங்கள் செய்வது. நீங்கள் புத்தர் சிலையின் ஆசனத்தைப் பார்த்திருப்பீர்கள். நீங்களும் புத்தரைப் போன்று உட்கார முடியும். ஆனால், அது நீங்களே செய்வதாக ஆகிவிடும். புத்தருக்கு உட்காரும் நிலை, தானே நிகழ்வது. அது, அவரது அமைதிக்கான காரணம் அல்ல; மாறாக, அந்த இருப்பு நிலையானது, அவரது அமைதியால் ஏற்பட்ட ஒரு உபவிளைவு.

மனம் என்பது இல்லாத போது, ஆத்மாவானது அமைதியாக இருக்கும் போது, இந்த உடல் அதை ஒரு நிழல் போல் பின்தொடர்கிறது. அப்போது, உடல் ஒரு குறிப்பிட்ட ஆசனத்தை, அதாவது, மிகுந்த ஓய்வுடன் இருக்கின்ற அமரும் நிலையை எடுக்கிறது. ஆனால், இதை நீங்கள் அப்படியே மாற்றிச் செய்ய முடியாது. நீங்கள் முதலில் ஒரு ஆசனத்தில் அமர்ந்து, அதன்பிறகு அமைதியை பின்தொடர வைக்க முடியாது. புத்தர் ஒரு குறிப்பிட்ட நிலையில் அமர்ந்திருப்பதை நாம் பார்ப்பதால், இப்படிப்பட்ட ஒரு ஆசனத்தில் நாமும் அமர்ந்தால், அதன்பிறகு உள் அமைதி தானாக பின்தொடர்ந்து வரும் என்று நாம் நினைக்கிறோம். இது தவறானதொரு தொடர்முறை. புத்தருக்கு அந்த அக நிகழ்வு முதலில் நடந்தது; அதன்பிறகு, அந்த அமரும் நிலை பின் தொடர்ந்தது.

இதை, உங்களது சொந்த அனுபவத்தின் மூலமே பாருங்கள் : நீங்கள் கோபம் கொள்ளும் போது, உங்களது உடல் குறிப்பிட்ட நிலையை எடுக்கிறது. உங்களது கண்கள் ரத்தச் சிகப்பாக மாறுகிறது; உங்களது முகம் ஒரு குறிப்பிட்ட முகபாவத்தை எடுக்கிறது. கோபம் உள்ளே இருக்கிறது, அதன்பிறகு உடல் அதனைப் பின் தொடர்கிறது. அதாவது, உள்முகமாக மட்டுமல்ல; வெளியிலும்கூட தெரிகிறது; உடலின் முழு ரசாயனமும் மாறுகிறது. உங்களது ரத்த ஓட்டம் அதிகரிக்கிறது, நீங்கள் வித்தியாசமாக சுவாசிக்க ஆரம்பிக்கிறீர்கள்.

நீங்கள் அப்போது சண்டை போடுவதற்கோ அல்லது தப்பி ஓடுவதற்கோ தயாராக ஆகிவிடுகிறீர்கள். ஆனால், கோபம் முதலில் உங்களுக்குள் வருகிறது; அதன்பின்னர் உங்களது உடல் அதைப் பின்பற்றி நடக்கிறது.

அதே போன்று, அடுத்த முனையில் இருந்து ஆரம்பித்துப் பாருங்கள் : உங்களது கண்களை முதலில் சிவப்பாக ஆக்குங்கள்; அதிக வேகமாக மூச்சு விடுங்கள்; கோபம் உங்களிடம் வரும் போது, உங்களது உடல் என்னவெல்லாம் செய்யுமோ அதைசெயல்லாம் செய்து பாருங்கள். உங்களால் அப்படி நடிக்கத்தான் முடியுமே தவிர, உங்களால் உங்களுக்குள் கோபத்தை உருவாக்க முடியாது. ஒரு நடிகர், ஒவ்வொரு நொடிப்பொழுதும் அதைத் தான் செய்து கொண்டிருக்கிறார். அவர் ஒரு காதலன் வேடத்தில் நடிக்கும் போது, நமக்குள் காதல் ஏற்படும் போது நமது உடலில் என்னவெல்லாம் செய்யப்படுமோ, அதையெல்லாம் அவர் செய்கிறார். ஆனால், அங்கே காதல் இருப்பதில்லை. அந்த நடிகர் உங்களைவிட மிகவும் நன்றாகச் செய்யலாம். ஆனால், காதல் பின்தொடர்ந்து வராது. நீங்கள் நிஜமாகவே கோபத்தில் இருப்பதைவிட, அவர் இன்னும் உண்மையாகக் கோபப்படலாம். ஆனால், அது வெறுமனே பொய்யானது. அவருக்குள் எதுவும் நடைபெறவில்லை.

எனவே, வெளியில் இருந்து நீங்கள் ஆரம்பிக்கும் போதெல்லாம், நீங்கள் ஒரு பொய்யான நிலையை உருவாக்குவீர்கள். உண்மைநிலை எப்போதும் மையத்தில் தான் ஆரம்பிக்கும். அதன்பின்னர், அதன் அலைகள் மேற்பரப்பிற்கு வந்து சேரும்.

உங்களுக்குள் உள்ள மையம் அமைதியில் இருக்கிறது. அங்கிருந்து ஆரம்பியுங்கள்.

அமைதியினால் மட்டுமே செயல்கள் எழுகின்றன. நீங்கள் அமைதியாக இல்லாத போது - ஆழ்ந்த தியானத்தில் எப்படி அமைதியாக உட்காருவது, அல்லது அமைதியாக எழுந்து நிற்பது என்பதை நீங்கள் அறிந்து கொள்ளாத போது, நீங்கள் எதைச் செய்தாலும், அது எதிர்செயல் தானே தவிர, அது ஒரு செயல் ஆகாது. நீங்கள் எதிர் செயலாற்றுகிறீர்கள். யாரோ ஒருவர் உங்களை அவமானப்படுத்துகிறார்; அவர், உங்களின் ஒரு பொத்தானை அழுத்துகிறார். உடனே நீங்கள் எதிர்ச்செயல் ஆற்றகிறீர்கள். நீங்கள் உடனே கோபப்படுகிறீர்கள்; நீங்கள் அதன்மீது தாவிக் குதிக்கிறீர்கள் - இதை நீங்கள் செயல் என்றா அழைப்பீர்கள்? அது செயல் அல்ல; மனதில் வைத்துக் கொள்ளுங்கள், அது எதிர்ச்செயல். அவர், உங்களை திறமையாகக் கையாளுபவர் ஆகிறார். மேலும், நீங்கள் திறமையாக கையாளப்படுபவர் ஆகிவிடுகிறீர்கள். அவர் ஒரு பொத்தானை அழுத்தினார். உடனே, நீங்கள் ஒரு இயந்திரத்தைப் போல் வேலை செய்ய



ஆரம்பித்துவிட்டீர்கள். அதாவது, நீங்கள் ஒரு பொத்தானை அழுத்தியவுடன் விளக்கு எரிவதைப் போன்றும், அதன்பிறகு அந்த பொத்தானை அழுத்தியவுடன் விளக்கு அணைந்து போவதைப் போன்றும் நடந்து கொள்கிறீர்கள். அதைத்தான் மக்கள் உங்களிடம் செய்து வருகிறார்கள். அவர்கள், உங்களை எரியவும் வைக்கிறார்கள்; அவர்கள் தான் உங்களை அணைக்கிறார்கள்.

யாராவது ஒருவர் வந்து உங்களைப் புகழ்ந்து பேசி, உங்களது ஆணவத்திற்கு ஊதிப் பெரிதாக்குகிறார்கள்; அப்போது நீங்கள் மிகப் பெரியவர் போன்று உணர்கிறீர்கள். வேறு யாராவது வந்து உங்களை ஊசியால் குத்துகிறார்கள். உடனே, உங்களது காற்று வெளியேறி, நீங்கள் தரையில் சுருண்டு விடுகிறீர்கள். நீங்கள், உங்களுக்குச் சொந்த எஜமானாக இருப்பதில்லை. யார் வேண்டுமானாலும் உங்களை அவமானப்படுத்தி உங்களை துக்கம், கோபம், பைத்தியம், வன்முறை, சினம் கொண்டவராக, கோபம் கொண்டவராக ஆக்கிவிட முடியும். அதே போன்று, யாராவது உங்களைப் புகழ்ந்து பேசி, உங்களை மிகவும் உயரத்தில் இருப்பவர் போன்றும், உங்களை மிகப் பெரியவர் போன்று உணர வைக்க முடியும். எனவே, நீங்கள் மற்றவர்கள் கையாளுவதற்கு ஏற்ப செயலாற்றுகிறீர்கள். இது உண்மையான செயல் கிடையாது.

புத்தர், ஒரு கிராமத்தின் வழியாகக் கடந்து போய்க் கொண்டிருந்தார். அப்போது, அங்குள்ள மக்கள் வந்து அவரை அவமானப்படுத்தினார்கள். அவர்கள் அவமானப்படுத்துவதற்கு என்னவெல்லாம் வார்த்தைகளை பயன்படுத்த முடியுமோ, அந்த வார்த்தைகளையெல்லாம் பயன்படுத்தினார்கள்; அவர்களுக்குத் தெரிந்த எல்லா கெட்ட வார்த்தைகளையும் உபயோகித்தார்கள். புத்தர் அங்கே அமைதியாக, கவனமாக அவர்கள் திட்டுவதைக் கேட்டுக் கொண்டு நின்றார்; அதன்பிறகு அவர், அவர்களிடம், "என்னிடம் வந்ததற்கு நன்றி; ஆனால், நான் அவசரமாகச் செல்ல வேண்டும். நான் அடுத்த கிராமத்திற்குப் போக வேண்டும். மக்கள் எனக்காக அங்கு காத்துக் கொண்டிருப்பார்கள். என்னால் உங்களுக்கு அதிக நேரம் ஒதுக்க முடியவில்லை. நீங்கள், நாளை மீண்டும் ஒன்று சேர்ந்து வந்து, நீங்கள் சொல்ல விரும்பி - ஆனால், உங்களால் சொல்ல முடியாமல் போனவற்றையெல்லாம், நீங்கள் என்னிடம் கூறலாம். ஆனால், இன்று என்னை மன்னித்துவிடுங்கள்," என்று கூறினார்.

அந்த மக்களால் தங்களது காதுகளை நம்ப முடியவில்லை; தங்களது கண்களை நம்ப முடியவில்லை; இந்த மனிதன் எதனாலும் முழுமையாக பாதிக்கப்படாதவனாக, திசை திருப்பப்பட்டவராகத் தெரியவில்லையே என்று நினைத்தனர். அவர்களில் ஒருவர், "நாங்கள்

பேசியதை நீங்கள் கேட்கவில்லையா? நாங்கள் உங்களை எப்படியெல்லாமோ திட்டினோம். நீங்கள் அதற்கெல்லாம் பதில் சொல்லவில்லையே!" என்றனர்.

அதற்கு புத்தர், "உங்களுக்கு பதிலை நீங்கள் விரும்பினால், நீங்கள் காலம் கடந்து தாமதமாக வந்திருக்கிறீர்கள். நீங்கள் பத்து ஆண்டுகளுக்கு முன்பு வந்திருக்க வேண்டும். அப்போது, நான் உங்களுக்கு பதில் கூறி இருப்பேன். ஆனால், இந்த பத்து ஆண்டுகளாக மற்றவர்களால் நான் கையாளப்படுவதை நான் தடுத்துவிட்டேன். நான் இப்போது ஒரு அடிமை அல்ல. எனக்கு நானே எஜமான். நான் எனக்குத் தக்கபடி தான் காரியம் செய்வேன், மற்றவர்களுக்கு ஏற்றபடி அல்ல. நான் எனக்குள் ஏற்படுகின்ற அக தேவைகளுக்கேற்ப காரியமாற்றுகிறேன். உங்களால் என்னை எதையும் கட்டாயப்படுத்தி செய்ய வைக்க முடியாது. நீங்கள் செய்தது முற்றிலும் நல்லது. நீங்கள் என்னை திட்ட வேண்டும் என்று விரும்பினீர்கள்; என்னைத் திட்டி விட்டீர்கள். மனநிறைவை உணருங்கள்; நீங்கள் உங்களது வேலையை முற்றிலும் நன்றாகச் செய்துவிட்டீர்கள். ஆனால், என்னைப் பொருத்தவரையில், நான் உங்களது அவமானங்களை எடுத்துக் கொள்ளப் போவதில்லை. மேலும், நான் அவைகளை எடுத்துக் கொள்ளாத போது, அவைகள் அர்த்தமற்றவை ஆகிவிடுகின்றன," என்றார்.

யாராவது உங்களை அவமானப்படுத்தும் போது, நீங்கள் அதைப் பெற்றுக் கொள்பவராக இருக்க வேண்டும்; அவர் என்ன சொல்கிறாரோ, அதை நீங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும். அப்போது மட்டுமே, உங்களால் எதிர்செயல் ஆற்ற முடியும். ஆனால், நீங்கள் அதை ஏற்றுக் கொள்ளவில்லை என்றால், நீங்கள் தனியாகப் பிரிந்து கொண்டு நின்றுவிட்டால், நீங்கள் தூர விலகி நின்றுவிட்டால், நீங்கள் மனம் குளிர்ந்து இருந்துவிட்டால், அவரால் என்ன செய்ய முடியும்?

புத்தர் கூறுகிறார், "யாராவது எரிகின்ற ஒரு தீப்பந்தத்தை ஆற்றில் எரியலாம். ஆற்றை அடையும்வரை அது எரியும். அது, ஆற்றில் விழுந்துவுடன் எல்லா நெருப்பும் போய்விடும். அந்த ஆறு அதை குளிர்வித்துவிடுகிறது. நானும் ஒரு நதியாக ஆகிவிட்டேன். நீங்கள் என்மீது வசைகளை தூக்கி எறியலாம். ஆனால், அவைகள் என்னை வந்து சேர்கின்ற அந்த நொடியிலேயே, எனது குளிர்ச்சியில் அவைகளின் வெப்பம் மறைந்து போகிறது. அவைகள் ஒருபோதும் என்னைக் காயப்படுத்துவதில்லை. நீங்கள் முட்களை தூக்கி எறியலாம். ஆனால், அவைகள் எனது அமைதியில் விழும் போது, அவைகள் மலர்களாக ஆகிவிடுகின்றன. நான் எனக்குள் உறைகின்ற இயல்பின்படியே காரியமாற்றுகின்றேன்."



இதுதான், புறத்தூண்டுதல் இல்லாமல், தானே இயங்குவது ஆகும்.

புரிந்து கொண்ட, விழிப்புணர்வுள்ள மனிதன் மட்டுமே செயல்புரிகிறான். விழிப்புணர்வு இல்லாதவன், தன்னுணர்வு இல்லாதவன், இயந்திரம் போன்று எதிர்செயல் புரிகிறான்.

மேலும், விழிப்புணர்வுள்ள மனிதன் வெறுமனே கவனித்துக் கொண்டிருக்கிறான் என்பதாகாது. கவனித்தல் என்பது, அவன் இருப்பின் ஒரு கோணம். கவனிக்காமல் அவன் செயல்புரிவதில்லை. ஆனால், தவறாகப் புரிந்து கொள்ளாதீர்கள். உதாரணமாக, இந்தியா முழுவதிலும் மக்கள் புத்தர் போன்றவர்களைத் தவறாகத் தான் புரிந்து கொண்டார்கள். அதனால் தான், இந்த நாடு, முழுவதும் செயலாற்றாமல் இருந்துவிட்டது. எல்லா குருமார்களும், "அமைதியாக உட்கார்," என்று கூறுகிறார்கள் என்பதை நினைத்துக் கொண்டு, இந்த நாடு சோம்பேறித்தனமானதாக, தூங்கி வழிவதாக ஆகிவிட்டது. இந்த நாடு சக்தியை, உயிர்சக்தியை, உயிரை இழந்துவிட்டது. இந்த நாடு முழு சோம்பேறித்தனமானதாக, புத்திக்கூர்மை அற்றதாக ஆகிவிட்டது. ஏனெனில், புத்திக்கூர்மை என்பது, நீங்கள் காரியம் செய்யும் போது தான் கூர் தீட்டப்படுகிறது.

மேலும், உங்களது விழிப்புணர்வினால், நீங்கள் நொடிப்பொழுதிற்கு நொடிப்பொழுது காரியம் ஆற்றும் போது, மாபெரும் புத்திசாலித்தனம் எழுகிறது. அப்போது நீங்கள் பிரகாசிக்க, ஒளி வீச, ஆரம்பித்துவிடுகிறீர்கள். நீங்கள் ஒரு ஒளி நிறைந்தவர் ஆகிவிடுகிறீர்கள். ஆனால், அது இரண்டு விஷயங்களால் நடக்கிறது. அதாவது, கவனித்தல்; மேலும், அப்படி கவனிப்பதன் மூலம் செயலாற்றுதல். ஆனால், கவனித்தல் என்பது, செயல்புரியாமல் இருப்பதற்காக இருக்குமானால், நீங்கள் தற்கொலை செய்து கொள்வது போலாகிவிடும்.

கவனித்தல் என்பது, உங்களை செயல்புரிவதற்கு வழி நடத்திச் செல்ல வேண்டும்; ஒரு புதிய வகையான செயல்புரிதலுக்கு வழி நடத்திச் செல்ல வேண்டும். செயலில் ஒரு புதிய குணம் கொண்டு வரப்படும். நீங்கள் கவனிக்கிறீர்கள், நீங்கள் முற்றிலும் அமைதியாக, சலனமற்று இருக்கிறீர்கள். அப்போது, சூழ்நிலை எப்படி இருக்கிறது என்று நீங்கள் கவனிக்கிறீர்கள். மேலும், அப்படி கவனிப்பதிலிருந்து நீங்கள் பதில் செயலாற்றுகிறீர்கள். விழிப்புணர்வுள்ள மனிதன் பொறுப்புடன் பதில் செயலாற்றுகிறான். பொறுப்புடன் என்பதை அதே அர்த்தத்தில் எடுத்துக் கொள்ளுங்கள்! அவன் பொறுப்புடன் பதில் செயல்புரிகிறான்; அவன் எதிர்செயல் செய்வதில்லை; அவனது செயல், அவனது

விழிப்புணர்வில் இருந்து வருவது, நீங்கள் அவனைக் கையாளுவதன் மூலம் வருவதல்ல; அது தான் வித்தியாசம். ஆகையால், அங்கே கவனிப்பதற்கும், தானே செயல்புரிவதற்கும் முரண்பாடு இல்லை. கவனித்தல் என்பது, தானே இயங்குவதன் ஆரம்பம்; அதே போன்று, தானே இயங்குவது என்பது கவனித்தலின் நிறைவு.

உண்மையான புரிதல் உள்ள மனிதன் செயல்புரிவான் - அபரிமிதமாகச் செயல்புரிவான், முழுமையாகச் செயல்புரிவான். ஆனால், அவன் அந்த நொடிப்பொழுதில் அவனது தன்னுணர்விலிருந்து செயல்படுவான். அவன் ஒரு, முகம் பார்க்கும் கண்ணாடி போன்றவன். சாதாரண மனிதன், தன்னுணர்வற்ற மனிதன் முகம் பார்க்கும் கண்ணாடி போன்றவன் அல்ல. அவன் புகைப்படமெடுக்கும் தகடு (Photo Plate) போன்றவன். கண்ணாடிக்கும், புகைப்படமெடுக்கும் தகட்டிற்கும் உள்ள வேறுபாடு என்ன? ஒரு புகைப்படமெடுக்கும் தகட்டை ஒரு தடவை வெளிச்சத்தில் காட்டிவிட்டால், அதன்பிறகு அது பயன் அற்றதாக ஆகிவிடும். அது உருவத்தைப் பதிவு செய்யும்; உருவம் அதில் பதியும் - அதில் படம் இருக்கும். ஆனால், அந்தப் படம் உண்மை அல்ல - உண்மையானது வளர்ந்து கொண்டே போகும். நீங்கள் தோட்டத்திற்குச் சென்று, ஒரு ரோஜாச் செடியினைப் புகைப்படம் எடுக்கலாம். நாளையும் அந்தப் படம் அப்படியே தான் இருக்கும்; நாளை மறுநாளும் அந்தப் படம் அப்படியே தான் இருக்கும். ஆனால், நீங்கள் போய் அந்த ரோஜாச் செடியைப் பாருங்கள் - அது ஒருபோதும் அன்று இருந்தது போல இருக்காது. பழைய ரோஜாக்கள் வாடியிருக்கும், அல்லது புதிய ரோஜாக்கள் வந்திருக்கும். அங்கே ஆயிரம் விஷயங்கள் நிகழ்ந்திருக்கும்.

வாழ்க்கை, ஒருபோதும் நிலையானது அல்ல. அது மாறிக் கொண்டே இருக்கும். உங்களது மனம் ஒரு, புகைப்படம் எடுக்கும் கருவி போன்றது. அது, புகைப்படங்களைச் சேகரித்துக் கொண்டே போகும். அது ஒரு புகைப்படத் தொகுப்பு. அதன்பிறகு, அந்தப் படங்களில் இருந்து நீங்கள் எதிர்ச்செயல் புரிந்து கொண்டிருக்கிறீர்கள். ஆகவே, நீங்கள் ஒருபோதும் வாழ்க்கைக்கு உண்மையானவராக இல்லை. ஏனெனில், நீங்கள் என்ன செய்தாலும், அது தவறாகப் போய்விடும். நான் கூறுகிறேன், நீங்கள் என்ன செய்தாலும், அது தவறாகப் போய்விடும். அது ஒருபோதும் பொருந்திவராது.

ஒரு பெண்மணி, தனது குழந்தையிடம் அவர்களின் குடும்ப புகைப்படத் தொகுப்பைக் காட்டிக் கொண்டிருந்தாள். அப்போது, அதில் அடர்ந்த முடியுடன், தாடியுடன், மிகவும் இளமையாகவும், மிகவும் உயிர்த்துடிப்புடனும் இருந்த ஒரு அழகான ஆணின் படம் இருந்தது. அந்தப் பையன், "அம்மா, இந்த ஆள் யார்?" என்று கேட்டான்.



அதற்கு அந்தப் பெண்மணி, "அவரை உனக்குத் தெரியவில்லையா? அவர் தான் உனது அப்பா!" என்றாள்.

அதிர்ச்சியுடன் பார்த்த அந்தப் பையன், தாயிடம், "இவர் தான் எனது அப்பா என்றால், இங்கே நம்மோடு வசிக்கும் வழுக்கைத் தலை மனிதர் யார்?" என்று கேட்டான்.

ஒரு புகைப்படம் நிலையானது. அது அப்படியே தான் இருக்கும். அது ஒருபோதும் மாறுவதில்லை.

தன்னுணர்வற்ற மனம், ஒரு புகைப்படக் கருவி போன்றும், ஒரு புகைப்படமெடுக்கும் தகடு போன்றும் செயலாற்றுகிறது. கவனிக்கின்ற மனம், தியானம் செய்கின்ற மனம் ஒரு முகம்பார்க்கும் கண்ணாடி போன்று செயலாற்றுகிறது. அப்போது, அந்தக் கண்ணாடியின் முன்பு என்னவெல்லாம் வருகிறதோ, அதையெல்லாம் அது பிரதிபலிக்கும். நீங்கள் அதன்முன் நின்று கொண்டிருந்தால், அது உங்களைப் பிரதிபலிக்கும். நீங்கள் அதைவிட்டு விலகிவிட்டால், அந்தக் கண்ணாடி உங்களுக்குத் துரோகம் இழைத்துவிட்டதாகக் கூறாதீர்கள். கண்ணாடி என்பது வெறும் கண்ணாடி தான். நீங்கள் போய்விட்டால், அதன்பிறகு அது உங்களை பிரதிபலிக்காது. உங்களை பிரதிபலிக்க வேண்டும் என்கிற எந்த கடமையும் அதற்குக் கிடையாது. இப்போது வேறு யாராவது அதன்முன் நிற்பார்கள்; அதுவும் அவர்களைப் பிரதிபலிக்கும். யாரும் இல்லையென்றால், அது எதையும் பிரதிபலிக்காது. அது எப்போதும் வாழ்க்கைக்கு உண்மையானதாகவே இருக்கும்.



**தன்னுணர்வற்ற மனம், ஒரு புகைப்படக் கருவி போன்றும், ஒரு புகைப்படமெடுக்கும் தகடு போன்றும் செயலாற்றுகிறது. கவனிக்கின்ற மனம், தியானம் செய்கின்ற மனம் ஒரு முகம்பார்க்கும் கண்ணாடி போன்று செயலாற்றுகிறது. அப்போது, அந்தக் கண்ணாடியின் முன்பு என்னவெல்லாம் வருகிறதோ, அதையெல்லாம் அது பிரதிபலிக்கும்.**



ஒரு புகைப்பட தகடு, ஒருபோதும் வாழ்க்கைக்கு உண்மையானதாக இருப்பதில்லை. இப்போது தான் உங்களைப் படம் பிடித்திருந்தாலும்கூட, புகைப்படக்காரர் தனது புகைப்படக் கருவியில்

இருந்து அதை எடுக்கின்ற அந்த நேரத்திலேயும் கூட, நீங்கள் முன்பு இருந்த அதே ஆளாக இருக்க மாட்டீர்கள். அப்போது, கங்கையில் அதிக வெள்ளம் போயிருக்கும். நீங்கள் வளர்ந்துவிடுவீர்கள், மாறிவிடுவீர்கள், நீங்கள் வயதானவர் ஆகிவிடுவீர்கள். அப்போது, ஒரே ஒரு நிமிடம் தான் கடந்து போயிருக்கும். ஆனால், அந்த ஒரு நிமிடம் என்பது மிகப்பெரிய விஷயம்; அதற்குள், நீங்கள் இறந்தும்கூட போகலாம்! ஒரு நிமிடத்திற்கு முன்புவரை நீங்கள் உயிரோடு இருந்திருக்கலாம்; அந்த ஒரு நிமிடம் கழிந்தபிறகு, நீங்கள் இறந்தும்கூட போகலாம். ஆனால், அந்த புகைப்படம் ஒருபோதும் இறக்காது.

ஆனால், ஒரு முகம் பார்க்கும் கண்ணாடியில், நீங்கள் உயிருடன் இருந்தால், நீங்கள் உயிருடன் தான் இருப்பீர்கள்; நீங்கள் இறந்துவிட்டால், இறந்து விட்டவராகத் தான் இருப்பீர்கள்.

அமைதியாக உட்காருவதற்கு கற்றுக் கொள்ளுங்கள் - ஒரு முகம் பார்க்கும் கண்ணாடி ஆகிவிடுங்கள். அமைதி, உங்களது தன்னுணர்விலிருந்து ஒரு கண்ணாடியை உருவாக்கிவிடும். அதன்பின்னர், நீங்கள் நொடிக்கு நொடி செயல்புரிவீர்கள். நீங்கள் வாழ்க்கையைப் பிரதிபலிப்பீர்கள். நீங்கள், உங்களுக்குள் ஒரு புகைப்படத் தொகுப்பை சுமந்து செல்ல மாட்டீர்கள். உங்கள் கண்கள் தெளிவாகவும், கள்ளம் கபடமற்றும் இருக்கும். உங்களிடம் தெளிவு இருக்கும், உங்களிடம் பார்வை இருக்கும்; நீங்கள் வாழ்க்கைக்கு உண்மையற்றவராக இருப்பதில்லை. இதுதான் உண்மையான வாழ்க்கை.

## தங்குதடையில்லாமல் இரு

நீங்கள் செயல்புரியும் போது, எப்போதும் உங்களது கடந்த காலத்தின் மூலமாகவே செயல்புரிகிறீர்கள். நீங்கள் இதுவரை சேர்த்து வைத்துள்ள அனுபவத்தின் மூலமே செயல்புரிகிறீர்கள்; கடந்த காலங்களில் நீங்கள் எடுத்த முடிவுகளின்படி தான் செயலாற்றுகிறீர்கள் - அப்படியிருக்கும் போது, உங்களால் எப்படி இயல்பாகச் செயலாற்ற முடியும்?

கடந்த காலம் தான் ஆதிக்கம் செலுத்தும்; மேலும், கடந்த காலத்தினால், உங்களால் இந்த நிகழ்காலத்தையும் கூட பார்க்க முடியாது. உங்களது கண்கள் கடந்த காலத்தால் நிறைந்திருக்கும். கடந்த காலத்தின் புகைமண்டலம் மிகவும் பெரியது. அதனால், உங்களால் பார்ப்பது சாத்தியப்படாது. உங்களால் பார்க்க முடியாது! நீங்கள் கிட்டத்தட்ட



குருடன் போன்று ஆகிவிடுவீர்கள். அதாவது, புகையினால் குருடாகிவிடுவீர்கள். கடந்த காலத்தில் எடுத்த முடிவுகளால் குருடாகிவிடுவீர்கள். உங்களது அறிவினால் குருடர் ஆகிவிடுவீர்கள்.

கல்வி அறிவுள்ள மனிதன் தான் இந்த உலகிலேயே மிகவும் குருடானவன். அவன் தனது கல்வி அறிவின் மூலம் செயல்புரிவதால், அவனால் அப்போது உள்ள நிலை என்ன என்பதை காண முடியாது. அவன் வெறுமனே ஒரு இயந்திரம் போன்று செயலாற்றுவான். அவன் ஏதோ ஒன்றைக் கற்றிருக்கிறான். அப்படி அவன் கற்றது, அவனுக்குள் ஏற்கனவே தயாராக உள்ள ஒரு இயந்தி நுட்பம் போல் ஆகிவிடும். எனவே, அவன் அதன் மூலம் தான் செயலாற்றுவான்.

ஒரு புகழ் பெற்ற கதை.

ஜப்பானில் இரண்டு கோவில்கள் இருந்தன. காலம் காலமாக, கோவில்கள் ஒன்றுக்கு ஒன்று எதிரி போன்று இருப்பதால், அந்த இரண்டு கோவில்களும் ஒன்றுக்கொன்று எதிரியாக இருந்தன. அதில் உள்ள பூசாரிகள் இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்வதுகூட கிடையாது. அவர்கள், சாலையில் ஒருவருக்கொருவர் எதிரில் வந்தாலும் கூட அவர்கள் பேசுவது கிடையாது; பல நூற்றாண்டுகளாக அந்த இரண்டு கோவிலின் பூசாரிகளும் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்வது கிடையாது.

ஒவ்வொரு பூசாரியும், அவருக்கு உதவியாக ஒரு சிறு பையனை சிறு சிறு வேலைகள் செய்வதற்காக வைத்திருந்தனர். மேலும், அந்தச் சிறுவர்கள், ஒருவருக்கொருவர் நண்பர்களாக ஆகிவிடுவார்களோ என்றும் பயப்பட ஆரம்பித்தனர்.

அதில் ஒரு பூசாரி தனது சிறுவனிடம், "நன்றாக ஞாபகம் வைத்துக் கொள். அடுத்த கோவில் நமது எதிரி. ஒருபோதும், அடுத்த கோவிலின்



**கல்வி அறிவுள்ள மனிதன் தான் இந்த உலகிலேயே மிகவும் குருடானவன். அவன் தனது கல்வி அறிவின் மூலம் செயல்புரிவதால், அவனால் அப்போது உள்ள நிலை என்ன என்பதை காண முடியாது. அவன் வெறுமனே ஒரு இயந்திரம் போன்று செயலாற்றுவான். அவன் ஏதோ ஒன்றைக் கற்றிருக்கிறான். அப்படி அவன் கற்றது, அவனுக்குள் ஏற்கனவே தயாராக உள்ள ஒரு இயந்தி நுட்பம் போல ஆகிவிடும். எனவே, அவன் அதன் மூலம் தான் செயலாற்றுவான்.**



சிறுவனோடு நீ பேசாதே. அவர்கள் மிகவும் ஆபத்தானவர்கள். ஒருவன் நோயைத் தவிர்ப்பது போல் அவர்களைத் தவிர்த்துவிடு. பிளேக் நோயை தவிர்த்துவிடுவது போல் தவிர்த்துவிடு!" என்று கூறினார்.

ஆனால், அந்தச் சிறுவனோ ஆர்வமுடன் இருந்தான். ஏனெனில், அந்தக் கோவிலில் மிகப்பெரிய பிரசங்கங்களைக் கேட்டு அவன் களைப்படைந்திருந்தான். அவனால் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை; விநோதமான புனித நூல்கள் படிக்கப்பட்டன. அந்த பாஷையை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. அங்கே முக்கியமான வாழ்க்கையின் பிரச்சனைகள் விவாதிக்கப்பட்டன. ஆனால், அங்கே விளையாடுவதற்கு யாரும் இல்லை, பேசுவதற்கு யாரும் இல்லை. மேலும், அடுத்த கோவிலில் உள்ள பையனோடு பேசாதே என்று கூறியது, அவனுக்கு ஆசையைத் தூண்டியது. இப்படித்தான் ஆசை தூண்டப்படுகிறது. அன்றைய தினம் அடுத்த கோவிலின் பையனிடம் அவனால் பேசாமல் இருக்க முடியவில்லை. அவன் அந்தப் பையனை சாலையில் போய்க் கொண்டிருக்கும் போது பார்த்த போது, அவனிடம், "நீ எங்கே போகிறாய்?" என்று கேட்டான்.

அந்த அடுத்த பையனோ கொஞ்சம் தத்துவவாதியாக இருந்தான்; மிகப்பெரிய தத்துவங்களைக் கேட்டு அவனும் தத்துவவாதி ஆகியிருந்தான். உடனே அவன், "போவதா? யாரும் போவதும் இல்லை, வருவதும் இல்லை! அது, தானே நடக்கிறது. காற்று என்னை எங்கே கொண்டு செல்கிறதோ, அங்கே செல்கிறேன்," என்றான். புத்தர் இப்படித்தான் வாழ்ந்தார். ஒரு காய்ந்து போன சருகு போல, காற்ற எந்தப்பக்கம் அடிக்கிறதோ, அந்தப் பக்கம் அது போகும் என்று அநேக முறை அவனது குரு கூறுவதைக் கேட்டிருக்கிறான். எனவே தான் அந்தப் பையன், "நான் என்பவன் இல்லை! செய்பவன் இங்கே கிடையாது. எனவே, என்னால் எப்படி போக முடியும்? நீ என்ன முட்டாள்தனமாக பேசுகிறாய்? நான் ஒரு காய்ந்த சருகு. காற்று என்னை எங்கு எடுத்துச் செல்கிறதோ ... ...," என்று கூறினான்.

இதைக் கேட்ட அந்த முதல் பையன், வாயடைத்து ஊமையாக நின்றான். அவனால் எந்தப் பதிலும் கூட சொல்ல முடியவில்லை. அவனால் சொல்வதற்கு எதையும் கண்டுபிடிக்க முடியவில்லை. அவன் உண்மையிலேயே வெட்கப்பட்டான், சங்கடப்பட்டான். உடனே, 'இந்த மனிதர்களிடம் பேச வேண்டாம் என்று எனது குரு சொன்னது சரிதான். இவர்கள் ஆபத்தான மனிதர்கள் தான். என்ன பேச்சு இது? நான் கேட்டது மிகவும் எளிய கேள்வி. நீ எங்கே போகிறாய்? என்னும் எளிய கேள்வி. உண்மையில், அவன் எங்கு போய்க் கொண்டிருக்கிறான் என்பதும்கூட எனக்குத் தெரியும். ஏனெனில், நாங்கள் இருவரும் சந்தைக்குப் போய்



காய்கறி வாங்கவதற்காகத் தான் போய்க் கொண்டிருந்தோம். அதற்கு எளிதாக பதில் அளித்திருக்க முடியும்,' என்றான்.

அந்தப் பையன் திரும்பிப் போய் தனது குருவிடம், "என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும். நீங்கள் என்னைத் தடுத்தீர்கள். ஆனால், நீங்கள் சொன்னதை நான் கேட்கவில்லை. உண்மையில், நீங்கள் போகக் கூடாது என்று தடை செய்ததால் தான், எனக்கு அங்கு போக வேண்டும் என்று ஆசை தூண்டியது. அந்த ஆபத்தான மக்களிடம் நான் பேசியது இதுதான் முதல்முறை. நான் அவனிடம், 'நீ எங்கே போகிறாய்?' என்று ஒரு எளிய கேள்வியைத் தான் கேட்டேன். ஆனால் அவனோ, அதற்கு விநோதமான பதில்களை அளித்தான். 'போவது, வருவது என்று ஒன்றும் கிடையாது. போவது யார்? வருவது யார்? நான் வெறும் வெறுமையானவன். நான், காற்றில் பறந்து செல்லும் ஒரு காய்ந்த சருகு. அந்த காற்று என்னை எங்கு எடுத்துச் செல்கிறதோ, அங்கு நான் செல்வேன்,' என்கிறான்," என்று கூறினான்.

அதைக் கேட்ட அவனது குரு, "நான் ஏற்கனவே கூறினேன். இப்போது, நாளை நீ அதே இடத்தில் நின்று கொண்டு, அவன் வரும் போது, 'நீ எங்கே போகிறாய்?' என்று கேள். அப்போது, அவன் அந்த விஷயங்களை மீண்டும் கூறும்போது, நீ அவனிடம், "ஆம், அது உண்மை தான். ஆம், நீ ஒரு காய்ந்து போன சருகு தான். நானும் அதே போன்று தான். ஆனால், காற்று அடிக்காத போது நீ எங்கே போவாய்? அதன்பின்னர், உன்னால் எங்கு போக முடியும்?' என்று வெறுமனே அவனிடம் கூறு. அதனால், அவன் தர்மசங்கடத்தில் மாட்டிக் கொள்வான். மேலும், அவன் மாட்ட வேண்டும்; அவன் தோற்கடிக்கப்பட வேண்டும். நாங்கள் தொடர்ந்து இதே போன்று விவாதம் செய்து கொண்டு வருகிறோம். அந்த கோவிலைச் சேர்ந்தவர்கள், விவாதத்தில் எங்களை ஒருபோதும் தோற்கடிக்க முடியவில்லை. எனவே, நாளைக்கு இதை நீ செய்தாக வேண்டும்," என்றார்.

அந்தப் பையன் காலையில் எழுந்தான். தான் சொல்ல வேண்டிய பதிலை, தான் போவதற்கு முன்பு மீண்டும் மீண்டும் சொல்லிப் பார்த்துக் கொண்டான். அதன்பின்னர், எதிர் கோவிலின் பையன் கடந்து போகும் சாலையின் சந்திப்பில் நின்று கொண்டு, தான் சொல்ல வேண்டியதை திரும்பத் திரும்ப சொல்லிப் பார்த்தான். அதன்பின்னர், அந்தப் பையன் வருவதைப் பார்த்தான். உடனே அவன், 'சரி, இப்போது பார்ப்போம்!' என்று தயாரானான்.

அந்தப் பையனும் வந்தான். இவன் உடனே அவனிடம், "நீ எங்கே போகிறாய்?" என்று கேட்டான். மேலும், அவனுக்கு பதிலடி

கொடுப்பதற்கு தனக்கு ஒரு சந்தர்ப்பம் வரும் என்று நம்பிக் கொண்டிருந்தான்.

ஆனால், அந்தப் பையனோ, "எனது கால்கள் போகும் திசையில் போவேன்," என்றான். இந்த முறை காற்றைப் பற்றிக் கூறவில்லை, வெறுமை என்பதைப் பற்றி கூறவில்லை, செய்பவன் என்பவன் இல்லை என்கிற கேள்விக்கே இடமில்லை. எனவே, இப்போது என்ன செய்வது? அவன் ஏற்கனவே தயார் செய்து வைத்திருந்த பதில்கள் முட்டாள்தனமானதாகத் தெரிந்தது. இப்போது காற்றைப் பற்றி பேசுவது சம்பந்தமில்லாததாக இருக்கும். மீண்டும் அவன் கீழே விழுந்துவிட்டது போன்று, இப்போது உண்மையிலேயே அவமானம் அடைந்தான். அவன் தன்னை முட்டாள் என்று நினைத்துக் கொண்டு, 'இந்தப் பையனுக்கு நிச்சயமாக ஏதோ வித்தியாசமான விஷயங்கள் தெரிந்திருக்கிறது. இப்போது இவன், 'எனது கால்கள் போகும் போக்கில் போகிறேன்,' என்கிறானே!' என்று நினைத்தான்.

அந்தப் பையன் மீண்டும் தனது குருவிடம் சென்றான். அந்த குரு அவனிடம், "நான் அந்த மக்களிடம் பேசாதே என்று உன்னிடம் கூறினேன். அவர்கள் மிகவும் ஆபத்தானவர்கள்; இது எங்களுக்கு நூற்றாண்டு கால அனுபவம். ஆனால், இப்போது இதை சும்மா விடக்கூடாது, ஏதாவது செய்தாக வேண்டும். எனவே, நாளை நீ அவனிடம், 'நீ எங்கே போகிறாய்?' என்று கேள். அதற்கு அவன், 'எனது கால்கள் போகும் போக்கில்,' என்று கூறுவான். உடனே நீ, அவனிடம், 'உனக்கு கால்கள் இல்லையெனில், அதன் பிறகு ... ...?' என்று கேள். அவன் அதற்கு எப்படியாவது வாயடைத்து நின்றாக வேண்டும்," என்று கூறினார்.

ஆகவே, அடுத்த நாள் இந்தப் பையன் அவனிடம், "நீ எங்கே போகிறாய்?" என்று கேட்டுவிட்டு, அவனது பதிலுக்காகக் காத்திருந்தான்.

அதற்கு அந்தப் பையன், "நான் சந்தைக்கு காய்கறி வாங்கப் போகிறேன்," என்று பதில் கூறினான்.

மனிதன், சாதாரணமாக தனது கடந்த காலத்தில் இருந்து தான் செயல்புரிகிறான். ஆனால், வாழ்க்கையோ மாறிக் கொண்டே இருக்கிறது. வாழ்க்கைக்கு உங்களது முடிவுகளோடு பொருந்திப் போக வேண்டும் என்று எந்த கடமையும் கிடையாது. அதனால் தான், வாழ்க்கை குழப்பம் நிறைந்ததாக உள்ளது. அறிவாளிக்கும் குழப்பம் நிறைய உள்ளது. அவரிடம் ஏற்கனவே தயாராக உள்ள பதில்கள் உள்ளன. பகவத் கீதை, புனித குர்ஆன், பைபிள், வேதங்கள் என்று



எல்லாம் உள்ளன. அவர் எல்லாவற்றையும் மனப்பாடம் செய்து, எல்லாவிதமான பதில்களையும் அறிந்து வைத்திருக்கிறார். ஆனால், வாழ்க்கை ஒருபோதும் அதே கேள்வியை மீண்டும் எழுப்பாது. எனவே, கற்றறிந்தவர்கள் எப்போதும் குறையுள்ளவர்களாகவே உள்ளனர்.

## தீர்மானம் கொள்

மனம் ஒருபோதும் திடமான முடிவெடுக்காது. ஒருவருடைய மனம் மட்டும் தானா அல்லது அடுத்தவரின் மனமும் அப்படித்தானா என்கிற கேள்விக்கே அங்கு இடமில்லை; மனம் என்பது முடிவெடுக்க முடியாதது. இரண்டு எதிர் எதிர் துருவங்களுக்கு இடையே அவை பாய்ந்து கொண்டு, அதில் எது சரியான பாதை என்று கண்டுகொள்ள முயற்சிப்பது தான் மனம் செய்கின்ற வேலை. அது, நீங்கள் உங்களது கண்களை மூடிக் கொண்டு வாசலைக் கண்டுபிடிப்பதற்கு முயற்சிப்பது போன்றதாகும். நிச்சயமாக, நீங்கள் இந்தப் பக்கம் போவதா அல்லது அந்தப் பக்கமா என்று இரண்டிற்கும் இடையே தொங்கிக் கொண்டிருப்பதைப் போன்ற உணர்வீர்கள். அது தான் மனதின் இயல்பு.

சோரன் கியார்காடு என்பவர், டேனிஷ் நாட்டின் மிகப்பெரிய தத்துவமேதையாக இருந்தார். அவர் 'இதுவா / அல்லது அதுவா'(Either / or) என்னும் புத்தகத்தை எழுதினார். அது, அவரது சொந்த வாழ்க்கையின் அனுபவம் தான். அவரால், ஒருபோதும் எதையும் பற்றி முடிவெடுக்க முடிவதில்லை! அவருக்கு எல்லாமே, அவர்இந்த வழியில் முடிவெடுத்தால், அதன் பிறகு அந்த வழி தான் சரியானதாகத் தெரிந்தது. அவரை ஒரு பெண் காதலித்து, அவளைத் திருமணம் செய்து கொள்ளும்படி கேட்டுக் கொண்ட போதிலும்கூட, அவர் திருமணம் செய்து கொள்ளாமலே இருந்தார். ஆனால் அவர், "நான் அதைப் பற்றி சிந்திக்க வேண்டும். திருமணம் என்பது ஒரு பெரிய விஷயம். எனவே, உடனடியாக என்னால் சரி அல்லது வேண்டாம் என்று கூற முடியாது," என்று கூறினார். அந்தக் கேள்வியுடனேயே, அவர் திருமணம் செய்து கொள்ளாமலேயே இறந்தும் போய்விட்டார்.

அவர் நாற்பது ஆண்டுகள் வாழ்ந்தார். மேலும், அவர் தொடர்ந்து விவாதித்து, கலந்துரையாடி வந்தார். ஆனால், அவரால் இதுதான் முடிவான பதில் என்று கூறக்கூடிய, அதற்குச் சமமான எதிர் பதில் இல்லாத, எந்த ஒரு பதிலையும் அவரால் கண்டுபிடிக்க முடியவில்லை. அவரால் ஒரு பேராசிரியர் ஆக முடியவில்லை. அவர், அதற்கான மனுவை நிரப்பிவிட்டார். அவருக்கு எல்லாத் தகுதிகளும் இருந்தது.

அவர், அநேக புத்தகங்களை எழுதிய பெருமை உடையவர். அந்தப் புத்தகங்கள் இந்த நூற்றாண்டிலும்கூட, அவை பழமை அல்லது காலத்திற்கு ஒவ்வாதது என்று அல்லாமல், சமகாலத்திற்கு உரிய ஒன்றாகத் திகழ்கின்றன. அவர் மனுவை நிரப்பிவிட்டார். ஆனால், அவரால் கையெழுத்துப் போட முடியவில்லை. ஏனெனில், இதுவா / அல்லது அதுவா ... ... இந்த பல்கலைக் கழகத்தில் சேர்வதா அல்லது வேண்டாமா? என்னும் பிரச்சனை. அவர் வசித்த சிறிய அறையிலிருந்து, அவர் இறந்த பின்னர், அந்த மனு கண்டு பிடிக்கப்பட்டது.

அவர், ஒரு சாலைகளின் சந்திப்பில் நின்று கொண்டு, மணிக்கணக்காக, இந்தப் பக்கம் போவதா அல்லது அந்தப் பக்கம் போவதா என்று முடிவெடுக்க முடியாமல் நின்று கொண்டிருப்பார். அந்த கோபன் ஹேகன் முழுவதும் இவரது இந்த விநோத நடவடிக்கை தெரிந்திருந்தது. மேலும், குழந்தைகள் அவருக்கு இதுவா / அல்லது அதுவா என்று பட்டப்பெயர் வைத்து அழைத்தார்கள்; அல்லது குறும்புக்கார சிறுவர்கள் அவரைப் பின்தொடர்ந்து சென்று, "இதுவா / அல்லது அதுவா" என்று கத்திக் கொண்டே செல்வார்கள். இந்தச் சூழ்நிலையைப் பார்த்துவிட்டு, அவரது தந்தை, அவர் இறப்பதற்கு முன்பு தனது வியாபாரத்தை எல்லாம் ஒழித்துவிட்டு, எல்லாப் பணத்தையும் சேர்த்து வங்கியில் ஒரு கணக்கில் போட்டுவிட்டார். ஒவ்வொரு மாதமும் முதல் தேதி அன்று, கியர் கார்டு அந்த வங்கியில் இருந்து பணத்தைப் பெற்றுக் கொள்ளும்படி ஏற்பாடு செய்துவிட்டார். அதனால் அவர், வாழ்நாள் முழுவதும் உயிர் வாழ முடிந்தது. மேலும், ஒரு மாதத்தின் முதல் நாளில், அவர் அந்தப் பணத்தின் கடைசி தவணையை எடுத்துக் கொண்டு வீட்டிற்கு வந்து கொண்டிருந்த போது - அந்தப் பணம் முடிந்து விட்டதால் - அவர் தெருவில் விழுந்து இறந்துவிட்டார். அந்த கடைசி தவணை பணத்தோடு! அதுதான் அவர் செய்த சரியான காரியம். வேறு என்ன செய்ய முடியும்? ஏனெனில், இந்த மாதத்திற்கு பிறகு அவர் என்ன செய்ய முடியும்?

அவர், புத்தகங்களை எழுதிக் கொண்டே இருப்பார். ஆனால், அவைகளை பதிப்பித்து வெளியிடலாமா அல்லது வேண்டாமா என்று முடிவெடுக்காமல் இருப்பார். பதிப்பிக்கப்படாமல், அநேக புத்தகங்களை அவர் விட்டுவிட்டார். அவைகள் மிகவும் மதிப்பு மிக்கவை. ஒவ்வொரு புத்தகமும் விஷயங்களை ஊடுருவிச் செல்லக் கூடியது. எல்லா விஷயங்களைப் பற்றியும் அவர் எழுதியுள்ளார். அவர், அந்த விஷயங்களின் வேர்கள் வரை சென்று, ஒவ்வொரு சிறு விவரங்களையும குறிப்பிட்டிருப்பார். அவர் ஒரு மாமேதை; ஆனால், மனதின் மாமேதை.



மனதோடு அது தான் பிரச்சனை. மேலும், மிகச் சிறந்த மனதை நீங்கள் பெற்றிருந்தால், உங்களுக்குப் பிரச்சனைகள் அதிகமாக இருக்கும். குறைந்த மனதுடையோர் அந்த அளவுக்குப் பிரச்சனையின் குறுக்கே வருவதில்லை. மேதைகளின் மனம் தான் இரண்டு எதிர் துருவங்களுக்கு இடையில் மாட்டிக் கொண்டு, அதில் ஒன்றைத் தேர்வு செய்ய முடியாமல் இருக்கும். அதன் பின்னர், அவர் இடையில் இருப்பது போல் உணர்வார்.

நான் உங்களுக்குச் சொல்வதெல்லாம் என்னவென்றால், அங்கும் போகாமல், இங்கும் போகாமல் இடையில் இருப்பது தான் மனதின் இயல்பு. எதிர் எதிர் துருவங்களுக்கு மத்தியில் இருப்பது தான் மனதின் இயல்பு. நீங்கள் இந்த மனதிலிருந்து வெளியே நகர்ந்து வந்து, அதன்பின்னர் ஒரு சாட்சியாளனாக மாறி, இந்த மனதின் விளையாட்டுகளை சாட்சிபாவனையில் பார்க்காத வரையில், நீங்கள் ஒருபோதும் திடமான முடிவெடுக்க மாட்டீர்கள். அதையும் மீறி, சில வேளைகளில் நீங்கள் முடிவெடுத்தால், நீங்கள் அதற்காக மனம் வருந்துவீர்கள். ஏனெனில், நீங்கள் தீர்மானிக்காமல் விட்ட அடுத்த பகுதி, உங்களுக்கு எப்போதும் மனதைவிட்டு அகலாமல் தொந்தரவு கொடுக்கும். ஒருவேளை, அதுதான் சரியாக இருக்குமோ, நாம் தேர்ந்தெடுத்தது தவறாக இருக்குமோ என்று மனம் கலங்கும். மேலும், இப்போது அதை அறிவதற்கு வழி இல்லை. ஒருவேளை, நீங்கள் விட்டுவிட்ட தேர்வு சிறந்ததாகக்கூட இருக்கலாம். ஆனால், அப்படியே நீங்கள் அதனைத் தேர்ந்தெடுத்திருந்தாலும்கூட, சூழ்நிலை வேறுபட்டதாக இருந்திருக்காது. இப்போது நீங்கள் தேர்வு செய்திருப்பது, அப்போது உங்களால் விட்டுவிடப்படும். எனவே, அது உங்களது மனதை தொந்தரவு செய்யும்.



**எதிர் எதிர் துருவங்களுக்கு மத்தியில் இருப்பது தான் மனதின் இயல்பு. நீங்கள் இந்த மனதிலிருந்து வெளியே நகர்ந்து வந்து, அதன்பின்னர் ஒரு சாட்சியாளனாக மாறி, இந்த மனதின் விளையாட்டுகளை சாட்சிபாவனையில் பார்க்காத வரையில், நீங்கள் ஒருபோதும் திடமான முடிவெடுக்க மாட்டீர்கள்.**



மனம் என்பது, அடிப்படையில், பைத்தியத்தின் ஆரம்பம். மேலும், நீங்கள் அதில் அதிகம் ஆழ்ந்து சென்றால், அது உங்களைப் பைத்தியமாக்கிவிடும்.

என்னுடைய கிராமத்தில், நான் ஒரு தங்க நகை செய்பவரின் கடைக்கு எதிரே வசித்தேன். நான் வீட்டின் முன்பு உட்கார்ந்து கொண்டு இருப்பது வழக்கம். அப்போது, அவருக்கு ஒரு விசித்திரமான பழக்கம் இருப்பதை உணர்ந்தேன். அவர் தனது கடையைப் பூட்டிவிட்டு, அதன்பிறகு, அது நன்றாக பூட்டப்பட்டு இருக்கிறதா என்று இரண்டு, மூன்று தடவை பார்ப்பார். ஒருநாள், நான் ஆற்றிற்கு சென்றுவிட்டு திரும்பிக் கொண்டிருந்தேன். அப்போது தான், அவர் கடையைப் பூட்டிவிட்டு வீட்டிற்குப் போய்க் கொண்டிருந்தார். நான் அவரிடம், "கடையை நன்றாகப் பூட்டினீர்களா என்று சோதனை செய்தீர்களா?" என்று கேட்டேன்.

அதற்கு அவர், "என்னது?" என்றார்.

நான் அவரிடம், "நீங்கள் பூட்டை சரியாக பார்க்கவில்லை," என்றேன். அவர் அதை சரிபார்த்திருந்தார். நானே, அவர் அந்தப் பூட்டை இரண்டு மூன்று முறை இழுத்துப் பார்த்ததைப் பார்த்தேன். ஆனால், இபபோது நான் அவருக்கு ஒரு சந்தேகத்தை உருவாக்கினேன். உடனே, அவரது மனம் தயாராக இருந்தது.

எனவே, அவர் என்னிடம், "ஒருவேளை நான் மறந்திருப்பேன். நான் போய்ப் பார்க்க வேண்டும்," என்று கூறினார். அவர் திரும்பவும் போய் அந்த பூட்டை மீண்டும் சரிபார்த்தார். அது எனக்கு சந்தோஷமாக ஆகிவிட்டது. எனவே நான், அவர் எங்கு போனாலும், அதாவது சில சமயம் அவர் சந்தையில் காய் வாங்கிக் கொண்டிருக்கும் போது, நான் அவரிடம் போய், "நீங்கள் இங்கு என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? நீங்கள் அங்கு பூட்டை சரியாகப் பூட்டாமல் வந்துவிட்டீர்களே!" என்பேன்.

அவர், கடையில் காய்கறிகளை அப்படியே போட்டுவிட்டு, என்னிடம், "நான் திரும்பி வருகிறேன். முதலில், நான் பூட்டைப் போய் பார்க்க வேண்டும்," என்று கூறிவிட்டுச் செல்வார். ஒருமுறை, இரயில் நிலையத்தில் அவர், எங்கோ செல்வதற்கு பயணச் சீட்டு வாங்கிக் கொண்டிருந்தார். அப்போது நான் அவரிடம் போய், "இங்கு நீங்கள் என்ன செய்கிறீர்கள்? அந்தப் பூட்டு...," என்று தான் கூறினேன்.

உடனே அவர், "அட கடவுளே, நான் அதைச் சரி பார்க்கவில்லையா?" என்று கேட்டார்.

அதற்கு நான், "இல்லை" என்றேன்.

உடனே அவர், "இப்போது என்னால் ஊருக்குப் போக முடியாது" என்று கூறிவிட்டு, அவர் பயணச்சீட்டினை திரும்பக் கொடுத்துவிட்டு, வீட்டிற்குப் போய் பூட்டை சரியாகப் பூட்டியுள்ளதா என்று பார்த்தார். ஆனால், அதற்குப் பிறகு அவர் ரயில் நிலையத்திற்குப் போனால், அங்கு ரயில் ஏற்கனவே போய்விட்டது. மேலும், அவர் என்னை முழுமையாக நம்பினார். ஏனெனில், நான் எப்போதும் அவரது கடையின் முன்னால் தான் உட்கார்ந்திருப்பேன்.



கொஞ்சம் கொஞ்சமாக இந்த விஷயம் எல்லோருக்கும் தெரிந்துவிட்டது. ஆகவே, அவர் எங்கு சென்றாலும் மக்கள் அவரிடம், "நீங்கள் எங்கே போகிறீர்கள்? உங்களது கடையின் பூட்டை சரியாகப் பார்த்தீர்களா?" என்று கேட்க ஆரம்பித்துவிட்டார்கள்.

கடைசியில், அவர் என்மீது கோபம் கொண்டார். அவர் என்னிடம், "நீங்கள் தான் இதை பரப்பி இருக்க வேண்டும். நான் எங்கு சென்றாலும் எல்லோரும் இந்த பூட்டைப் பற்றியே பேசுகிறார்கள்," என்றார்.

நான் அவரிடம், "அப்படியானால் அவர்கள் சொல்வதைக் கேட்காதீர்கள். அவர்கள் என்ன வேண்டுமானாலும் சொல்லிவிட்டுப் போகட்டும்," என்றேன்.

உடனே அவர், "நீ என்ன சொல்கிறாய். அவர்கள் சொல்வதைக் கேட்கக் கூடாதா! ஒருவேளை, அவர்கள் கூறியது சரியாக இருந்தால், அதன்பிறகு நான் எல்லாவற்றையும் இழந்துவிடுவேன். அப்படிப்பட்டதொரு சந்தர்ப்பத்தை எடுக்க நான் விரும்பவில்லை. அந்த ஆள் சொல்வது முற்றிலும் பொய் என்பது எனக்குத் தெரிந்தாலும்கூட, நான் கண்டிப்பாக திரும்பி வந்து பூட்டை சரியாகப் பார்க்க வேண்டும். நான் அதை சரிபார்த்தேன் என்று எங்கோ எனக்கு ஞாபகம் இருக்கும். ஆனாலும்கூட, யாருக்கு நிச்சயமாகத் தெரியும்?" என்பார்.

எதைப் பற்றியும், எந்தவிதமான நிச்சயமும் மனதிற்குக் கிடையாது. எனவே இப்படி, மனதின் இரண்டு துருவங்களுக்கு இடையில் இருந்தால், இப்படி இடையில் இருந்தால், எப்போதுமே இதைச் செய்வதா அல்லது செய்யாமல் விட்டுவிடுவதா என்று நினைத்தால், நீங்கள் பைத்தியமாகிப் போய்விடுவீர்கள். நீங்களே பைத்தியம் தான்! அது நிகழ்வதற்கு முன்பு நீங்கள் வெளியே குதித்து வந்து, வெளியில் இருந்து அந்த மனதைப் பாருங்கள்.

மனதைக் குறித்து ஜாக்கிரதையாக இருங்கள். அதன் வெளிச்சமான பக்கம், இருள் நிறைந்த பக்கம், அதன் தவறுகள், அதன் சரிகள், ஆகியவற்றைக் குறித்து ஜாக்கிரதையாக இருங்கள். அது என்ன துருவத்தில் இருந்தாலும், அதை நீங்கள் விழிப்புடன் பாருங்கள். அந்த

விழிப்புணர்வினால், இரண்டு விஷயங்கள் நடக்கும். முதலாவது, நீங்கள் என்பது அந்த மனம் அல்ல என்பது; இரண்டாவது, உங்களது மனதிற்கு இல்லாத திடமான ஒரு முடிவை அந்த விழிப்புணர்வானது கொண்டிருக்கும்.



> **மனதைக் குறித்து ஜாக்கிரதையாக இருங்கள். அதன் வெளிச்சமான பக்கம், இருள் நிறைந்த பக்கம், அதன் தவறுகள், அதன் சரிகள், ஆகியவற்றைக் குறித்து ஜாக்கிரதையாக இருங்கள். அது என்ன துருவத்தில் இருந்தாலும், அதை நீங்கள் விழிப்புடன் பாருங்கள். அந்த விழிப்புணர்வினால், இரண்டு விஷயங்கள் நடக்கும். முதலாவது, நீங்கள் என்பது அந்த மனம் அல்ல என்பது; இரண்டாவது, உங்களது மனதிற்கு இல்லாத திடமான ஒரு முடிவை அந்த விழிப்புணர்வானது கொண்டிருக்கும்.**



மனம் என்பது அடிப்படையாக முடிவெடுக்க முடியாதது; மேலும், விழிப்புணர்வு என்பது அடிப்படையில் முடிவெடுக்கக் கூடியது. ஆகவே தான், விழிப்புணர்வுடன் செய்கின்ற எந்த ஒரு செயலும் முழுமையானதாக இருக்கும், மனம் வருந்தக் கூடியதாகவும் இருக்காது.

இப்போது நாம் எடுத்த முடிவைவிட, வேறு விதமாக முடிவெடுத்திருந்தால் இன்னும் நன்றாக இருந்திருக்குமோ என்று நான் எதைப் பற்றியும் என் வாழ்நாளில் மீண்டும் சிந்தித்ததில்லை. நான் ஒருபோதும் மனம் திரும்பியவதில்லை. நான் ஏதாவது தவறு செய்துவிட்டேன் என்று ஒருபோதும் நான் எண்ணியதில்லை. ஏனெனில், அப்படிப்பட்ட விஷயங்களைச் சொல்வதற்கு அங்கு எனக்குள் யாரும் இல்லை. நான், எனது விழிப்புணர்வின் மூலமே காரியங்களைச் செய்து வருகிறேன். அதுதான் எனது முழு இருப்பு நிலை. இப்போது எது நடந்தாலும், அது சாத்தியமானதாகத் தான் இருக்கிறது. இந்த உலகம் அதை சரி அல்லது தவறு என்று கூறலாம். அது அவர்களின் வேலை; ஆனால், அது என்னுடைய பிரச்சனை அல்ல.

இடையில் தொங்குவதிலிருந்து விழிப்புணர்வு தான் உங்களை வெளியே கொண்டு வரும். மனதின் அந்த இரு துருவங்களுக்கு இடையில் தொங்கிக் கொண்டிருப்பதைவிடவும், நீங்கள் அந்த இரண்டையும் விட்டுவிட்டு வெளியே குதித்து வந்துவிட்டால், நீங்கள் மனம் என்பதில் இருந்தால் தான் அந்த இரண்டும் இரண்டு துருவங்களாகத் தெரிகிறது



என்பதை கண்டு கொள்வீர்கள். நீங்கள், உங்களது மனதைவிட்டு வெளியே வந்துவிட்டால், அவைகள் இரண்டும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள் தான் என்பதை அறிந்து ஆச்சரியப்படுவீர்கள். அதன்பின்னர், முடிவெடுத்தல் என்ற கேள்விக்கே இடமில்லாமல் போய்விடும்.

விழிப்புணர்வுடன் இருக்கும் போது, உங்களிடம் தெளிவு, முழுமை, அதன் போக்கில் விடுதல் ஆகியவை இருக்கும். அப்போது, இயற்கை உங்களுக்குள் இருந்து முடிவெடுக்கும். நீங்கள் எது சரி, எது தவறு என்பதைப் பற்றி சிந்திக்க வேண்டியதிருக்காது. இந்த இயற்கை, அதன் கையோடு உங்களது கையைப் பிடித்துக் கொண்டு செல்லும். அப்போது நீங்கள் ஒரு பதற்றமற்ற வழியில் நகர்ந்து செல்வீர்கள். அது ஒன்று மட்டுமே வழி, சரியான வழி. மேலும், நீங்கள் புத்தி சுவாதீனத்துடன் இருப்பதற்கும் அது ஒன்று மட்டுமே வழி; இல்லையெனில், நீங்கள் குழப்பத்தில் தான் இருப்பீர்கள்.

இப்போது, சோரன் கியர்காடு ஒரு மாபெரும் மனதை உடையவர். ஆனால், அவர் ஒரு கிறிஸ்தவராக இருந்து விட்டபடியால், அவருக்கு விழிப்புணர்வு என்னும் கருத்து தெரியவில்லை. அவரால் சிந்திக்க முடியும்; மிகவும் ஆழ்ந்து சிந்திக்க முடியும். ஆனால், அவரால் அமைதியாக இருந்து கொண்டு கவனிக்க முடியாது. அந்த எளிய மனிதர் - கவனித்தல், சாட்சியாக இருத்தல், விழிப்புணர்வு இவைகளைப் போன்றவற்றை அவர் ஒருபோதும் கேள்விப்பட்டதில்லை. சிந்தனை தான் அவர் கேள்விப்பட்ட ஒன்று. எனவே அவர், தனது முழு அறிவையும் சிந்தனையில் வைத்துவிட்டார். அவர் மிகப்பெரிய புத்தகங்களை உருவாக்கினார். ஆனால் அவர், தனக்கு ஒரு மிகப்பெரிய வாழ்க்கையை உருவாக்க முடியவில்லை. அவர் முழு துன்பத்தில் வாழ்ந்தார்.

## ஒவ்வொரு நொடியிலும் முழுமையாக இரு

கனவு ஏன் தேவைப்படுகிறது? நீங்கள் யாரையாவது கொலை செய்ய வேண்டும் என்று விரும்பியிருப்பீர்கள். ஆனால், அவரைக் கொலை செய்திருக்க மாட்டீர்கள். எனவே நீங்கள், அவரை உங்களது கனவில் கொலை செய்வீர்கள். அது உங்களது மனதிற்கு ஓய்வைக் கொடுத்துவிடும். மறுநாள் காலையில், நீங்கள் அவரைக் கொன்றுவிட்டதால், நீங்கள் புத்துணர்ச்சியுடன் இருப்பீர்கள். அதற்காக,

நீங்கள் போய் அவரைக் கொன்றுவிட்டால், அதன்பிறகு நீங்கள் கனவு காண வேண்டிய அவசியம் இருக்காது என்று நான் கூறவில்லை! ஆனால், இதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள் : நீங்கள் யாரையாவது கொல்ல விரும்பினால், உங்களது அறையை மூடிக் கொள்ளுங்கள்; அவரைக் கொல்வது குறித்து தியானம் செய்யுங்கள்; மேலும், தன்னுணர்வுடன் அவரைக் கொலை செய்யுங்கள். நான் உங்களிடம், "அவரைக் கொலை செய்யுங்கள்," என்று கூறும்போது, ஒரு தலையணையைக் கொல்லுங்கள்; அவரைப் போன்ற உருவ பொம்மையைக் கொல்லுங்கள் என்னும் அர்த்தத்தில் நான் கூறுகிறேன். அந்த சுயநினைவுடன் கூடிய முயற்சி, அந்த தன்னுணர்வுடன் கூடிய தியானம், உங்களுக்குள் அதிக உண்மைக் கண்டறிதல்களை கொடுத்துவிடும்.

ஒவ்வொரு நொடிப்பொழுதையும் நிறைவு செய்ய வேண்டும் என்பதை நினைவில் கொள்ளுங்கள். இதற்கு மேல் எந்த நொடிப்பொழுதும் வராது என்று எண்ணிக் கொண்டு, இருக்கின்ற அந்த நொடிப்பொழுதை முழுமையாக வாழுங்கள். அதன் பிறகே நீங்கள் அதை நிறைவு செய்ய முடியும். மரணம் எப்போது வேண்டுமானாலும் வரலாம் என்பதை அறிந்து கொள்ளுங்கள். இது தான் கடைசி நொடியாகக்கூட இருக்கலாம். "நான் ஏதாவது செய்ய வேண்டுமெனில், அதை இங்கேயே, இந்த நொடிப்பொழுதிலேயே நான் முழுமையாகச் செய்து முடிக்க வேண்டும்," என்கிற உணர்வை கொள்ளுங்கள்.

ஒரு கிரேக்க படைத்தளபதியைப் பற்றி நான் ஒரு கதை கேள்விப்பட்டிருக்கிறேன். அந்த நாட்டின் அரசர் அவருக்கு எதிராக இருந்தார். அது நீதிமன்ற ரகசியமாக இருந்தது. மேலும், அன்று அந்த படைத்தளபதியின் பிறந்த நாளாகவும் இருந்தது. அவர் தனது நண்பர்களுடன் அதைக் கொண்டாடிக் கொண்டிருந்தார். திடீரென்று மாலையில், அந்த ராஜாவின் மேலாளர் வந்து அந்த படைத்தளபதியிடம், "என்னை மன்னிக்க வேண்டும். இதைச் சொல்வதற்கு எனக்கு கஷ்டமாக உள்ளது; ஆனால், இன்று மாலை ஆறு மணிக்கு உங்களைத் தூக்கிலிட வேண்டும் என்று ராஜா தீர்மானித்துவிட்டார். எனவே, ஆறு மணிக்கு தயாராக இருங்கள்," என்று கூறினார்.

அங்கே நண்பர்கள் கூடி இருந்தனர்; இசை இசைக்கப்பட்டுக் கொண்டிருந்தது. அங்கே விருந்தும், குடியும் ஆட்டமுமாக இருந்தது. அது அவரது பிறந்த நாள். ஆனால், இந்தச் செய்தி அங்கிருந்த சூழ்நிலையை அப்படியே மாற்றிவிட்டது. எல்லோரும் துக்கம் அடைந்தனர். ஆனால், அந்தப் படைத்தளபதியோ, "இப்போது துக்கப்படாதீர்கள். ஏனெனில், இது தான் எனது வாழ்வின் கடைசிப் பகுதியாக இருக்கப் போகிறது. ஆகவே, நாம் ஆடிவந்த நடனத்தை நாம் முடிப்போம். நாம் உண்டு வந்த விருந்தையும் முடிப்போம். இப்போது எனக்கு எந்தச் சாத்தியமும் இல்லை. எனவே, நாம் இதை எதிர்காலத்தில் நிறைவு செய்ய முடியாது. மேலும், இந்த துக்ககரமான சூழ்நிலையில் என்னை வழியனுப்பாதீர்கள். அப்படிச் செய்தால், எனது மனம் மீண்டும் மீண்டும், நிறுத்தப்பட்ட இந்த இசைக்காகவும், நின்று போன இந்த விழாக்கோலத்தையும் நினைத்து ஏங்கும். அது எனது மனதில் ஒரு சுமையாக ஆகிவிடும். எனவே, நாம் அதை நிறைவு செய்துவிடுவோம். அதை நிறுத்துவதற்கு இப்போது நேரம் இல்லை," என்றார்.



அவர் கூறியதால், அங்கிருந்தவர்கள் நடனமாடினார்கள். ஆனால், அது அவர்களுக்கு கஷ்டமாக இருந்தது. அவர் மட்டும் மிகவும் வேகத்துடன் நடனமாடினார்; அவர் மட்டும் அதிக கொண்டாடும் உற்சாகத்துடன் இருந்தார்; ஆனால், அந்தக் கூட்டம் முழுவதும் அங்கு இல்லை. அவரது மனைவி அழுது கொண்டிருந்தாள். ஆனால், அவர் தொடர்ந்து ஆடினார்; அவர், நண்பர்களுடன் தொடர்ந்து பேசினார். அவர் மிகவும் மகிழ்ச்சியாக இருந்ததைப் பார்த்துவிட்டு, அங்கு வந்த மேலாளர் அரசரிடம் திரும்பிப் போய், "அந்த ஆள் மிகவும் அபூர்வமானவர். அவர் அந்த செய்தியைக் கேட்டார். ஆனால், அதற்காக அவர் துக்கப்படவில்லை. ஆனால், அவர் அதை முற்றிலும் வேறுபட்ட, முற்றிலும் கருத்தில் கொள்ள முடியாததொரு வகையில் எடுத்துக் கொண்டார். அவர் சிரித்துக் கொண்டும், நடனமாடிக் கொண்டும், கொண்டாட்டத்தில் இருந்தார். மேலும், இது தான் அவரது கடைசி நேரம் என்பதாலும், இனிமேல் எதிர்காலம் என்பது இப்போது இல்லாமல் போய்விட்டதாலும், அவரால் இதை வீணாக்க முடியாது என்றும், அதை அவர் வாழ்ந்து தான் தீரவேண்டும் என்றும் கூறினார்," என்று அரசரிடம் சொன்னார்.

உடனே, அந்த அரசர் நேரில் போய், அங்கு என்ன நடக்கிறது என்று பார்த்தார். அங்கு எல்லோரும் துக்கத்தில் அழுது கொண்டிருந்தார்கள். ஆனால், அந்த படைத்தளபதி மட்டுமே பாடிக் கொண்டும், ஆடிக் கொண்டும் இருந்தார். அந்த அரசர் அவரிடம், "நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார்.

அதற்கு அந்த படைத்தளபதி, அரசரிடம், "எந்த நேரத்திலும் மரணம் வரும் என்று தொடர்ந்து விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும் என்பது தான் எனது வாழ்நாள் கொள்கையாக இருந்து வந்தது. இந்தக் கொள்கையால், நான் ஒவ்வொரு நொடிப்பொழுதையும் எந்த அளவுக்கு சாத்தியப்படுமோ, அந்த அளவுக்கு வாழ்ந்து வந்தேன். ஆனால், நீங்கள்

இன்று அதைத் தெளிவாக்கிவிட்டீர்கள். நான் உங்களுக்கு நன்றி சொல்ல வேண்டும். ஏனெனில், இதுவரை நான், எந்த நேரத்திலும் மரணம் என்பது வரலாம் என்று நினைத்துக் கொண்டுதான் இருந்தேன். அது வெறும் சிந்தனையாக மட்டுமே இருந்தது. அடுத்த நொடிப்பொழுது தானே நாம் மரணம் அடையப் போகிறோம் என்கிற எண்ணம், எங்கோ மறைந்து கொண்டு இருந்தது. எதிர்காலம் என்பது அங்கு இருந்தது. ஆனால், இப்போது நீங்கள் என்னுடைய அந்த எதிர்காலத்தை விட்டுவிட்டீர்கள். இன்று மாலை தான் கடைசி. வாழ்க்கை என்பது மிகவும் குறுகியது; என்னால் அதை ஒத்திப் போட முடியாது.



நாம் ஒத்திப் போடுவது தான், நமக்குள் ஒரு உரையாடல் போல் ஆகிவிடுகிறது. நமக்கு நாமே பேசிக் கொள்வது போல் ஆகிவிடுகிறது. எதையும் ஒத்திப் போடாதீர்கள். இங்கேயே, இந்த நொடிப் பொழுதே வாழுங்கள். மேலும், நீங்கள் நிகழ்காலத்தில் எந்த அளவுக்கு, அதிகமாக வாழ்கிறீர்களோ, அந்த அளவுக்கு உங்களின் இடைவிடாத இந்த 'நினைத்தல்,' இந்த இடைவிடாத சிந்தனை உங்களுக்குள் குறையும்.



அந்த அரசர் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார். அவர் அந்த மனிதருக்கு சீடர் ஆகிவிட்டார். அவர், படைத்தளபதியிடம், "எனக்கு கற்றுக் கொடுங்கள்! இதுதான் ரசவாதம். இப்படித்தான் வாழ்க்கை வாழப்பட வேண்டும்; இது தான் அந்தக் கலை. நான் உங்களை தூக்கில் போடப் போவதில்லை. ஆனால், எனது ஆசிரியராக இருங்கள். இந்த நொடிப் பொழுதில் வாழ்வது எப்படி என்று எனக்கு கற்றுக் கொடுங்கள்," என்றார்.

நாம் ஒத்திப் போட்டுக் கொண்டே செல்கிறோம். அப்படி நாம் ஒத்திப் போடுவது தான், நமக்குள் ஒரு உரையாடல் போல் ஆகிவிடுகிறது. நமக்கு நாமே பேசிக் கொள்வது போல் ஆகிவிடுகிறது. எதையும் ஒத்திப் போடாதீர்கள். இங்கேயே, இந்த நொடிப் பொழுதே வாழுங்கள். மேலும், நீங்கள் நிகழ் காலத்தில் எந்த அளவுக்கு, அதிகமாக வாழ்கிறீர்களோ, அந்த அளவுக்கு உங்களின் இடைவிடாத இந்த 'நினைத்தல்,' இந்த இடைவிடாத சிந்தனை உங்களுக்குள் குறையும். அது குறைந்த அளவே உங்களுக்குத் தேவைப்படும். நீங்கள் ஒத்திப் போடுவதால் தான் அது அங்கே இருக்கிறது. மேலும், நாம் எல்லாவற்றையும் ஒத்திப் போட்டுக் கொண்டே போகிறோம். நாம் எப்போதும் நாளை என்பதில் தான்



வாழ்கிறோம். அது ஒருபோதும் வராது; அதனால் வரவும் முடியாது. அது சாத்தியமற்றது. எது வருகிறதோ, அது இன்றைய பொழுதாகத் தான் இருக்கும். ஆனால் நாமோ, நாளைக்காக இன்றைய பொழுதை தியாகம் செய்து கொண்டிருக்கிறோம். அது எங்குமே இல்லை. அதன்பிறகு உங்களது மனம், நீங்கள் அழித்துவிட்ட, நீங்கள் வராத ஒன்றிற்காக நீங்கள் தியாகம் செய்த, அந்த கடந்த காலத்தைப் பற்றி நாளைக்கு அதை ஒத்திப் போட்டுக் கொண்டே போகும்.



நீங்கள் தவறவிட்டுவிட்ட ஒன்றினை, எதிர்காலத்தில் எங்கோ பிடித்துவிடலாம் என்று நீங்கள் நினைத்துக் கொண்டே போகிறீர்கள். உங்களால் அதைப் பிடிக்க முடியாது! கடந்த காலத்திற்கும், எதிர்காலத்திற்கும் இடையே உள்ள இந்த இடைவிடாத பதற்றம், தொடர்ந்து நிகழ்காலத்தை தவறவிட்டுக் கொண்டு வருவது, ஆகிய இவை தான் உங்களுக்குள் எழுகின்ற கூச்சல். அது நிற்காத வரையில், உங்களால் அமைதியாக இருக்க முடியாது. ஆகவே, முதல் விஷயமாக, ஒவ்வொரு நொடிப்பொழுதும் முழுமையாக இருப்பதற்கு முயற்சி செய்யுங்கள்.

நீங்கள் தவறவிட்டுவிட்ட ஒன்றினை, எதிர்காலத்தில் எங்கோ பிடித்துவிடலாம் என்று நீங்கள் நினைத்துக் கொண்டே போகிறீர்கள். உங்களால் அதைப் பிடிக்க முடியாது! கடந்த காலத்திற்கும், எதிர்காலத்திற்கும் இடையே உள்ள இந்த இடைவிடாத பதற்றம், தொடர்ந்து நிகழ்காலத்தை தவறவிட்டுக் கொண்டு வருவது, ஆகிய இவை தான் உங்களுக்குள் எழுகின்ற கூச்சல்.



இரண்டாவது விஷயம், உங்களது மனதிற்குள் இவ்வளவு கூச்சல் இருக்கிறது. ஏனெனில், நீங்கள், மற்றவர்கள் தான் அதை உருவாக்குவதாக எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள்; அதற்கு நீங்கள் பொறுப்பல்ல என்று நினைக்கிறீர்கள். அதனால் தான், இதைவிட இன்னும் சிறந்ததொரு உலகில், அதாவது, ஒரு சிறந்த மனைவியோடு, இப்போது இருப்பதைவிட சிறந்த ஒரு கணவனோடு, இப்போதைவிட சிறந்த குழந்தைகளோடு, இப்போது இருப்பதைவிட சிறந்த ஒரு வீட்டில், இப்போது இருப்பதைவிட இன்னும் சிறந்ததொரு இடத்தில், எல்லாம் நன்றாக இருக்கும். எனவே, நீங்கள் அப்போது அமைதியாக இருக்கலாம் என்று நினைக்கிறீர்கள். உங்களைச் சுற்றிலும் எல்லாமே தவறாக இருப்பதால், நான் எப்படி அமைதியாக இருக்க முடியும் என்று எண்ணிக் கொண்டு, நீங்கள் அமைதி இல்லாமல் இருக்கிறீர்கள்.

இப்படிப்பட்ட வழியில் நீங்கள் சிந்தித்தால், இது தான் உங்களது தர்க்கவாதம் என்றால், அதன்பின்னர் அந்த சிறந்த உலகம் ஒருபோதும் வரப்போவதில்லை. எங்கும் இது போன்று தான் உலகம் உள்ளது. எங்கு பார்த்தாலும் இது போன்று தான் கணவன்களும், இது போன்று தான் மனைவிமார்களும், மேலும், இது போன்று தான் குழந்தைகளும் இருப்பார்கள். சொர்க்கம் என்பது எங்கோ இருக்கிறது என்கிற மாயையை நீங்கள் உருவாக்க முடியும். ஆனால், எங்கும் நரகம் தான் உள்ளது. இப்படிப்பட்ட மனம் இருக்கும் போது, எங்கும் நரகம் தான். இந்த மனம் தான் நரகம்.

ஒருநாள் இரவில், முல்லா நஸ்ருதீனும் அவரது மனைவியும் அவர்களின் வீட்டிற்கு தாமதமாக வந்தனர். அப்போது, முல்லாவின் வீட்டில் திருட்டுப் போயிருந்தது. எல்லோரும் சேர்ந்து கொண்டு முல்லாவை அர்ச்சனை செய்ய ஆரம்பித்தனர். பக்கத்து வீட்டுக்காரர் ஒருவர், "நான் இதை எதிர்பார்த்தேன். நீங்கள் ஏன் இதை முன்பே எதிர்பார்க்கவில்லை? நீங்கள் கவனக்குறைவுடன் இருந்துவிட்டீர்கள்!" என்றார். இரண்டாமவர், "உங்களது வீட்டின் ஜன்னல்கள் திறந்திருந்தன. நீங்கள் வீட்டைவிட்டு வெளியே போகும் போது, ஏன் அவற்றை மூடவில்லை?" என்று கூறினார். மூன்றாமர், "உங்களது பூட்டில் குறைபாடு உள்ளது. நீங்கள் ஏன் அதை மாற்றவில்லை?" என்றார். இப்படி, எல்லோரும் முல்லாவின் மீது குற்றச்சாட்டு கூறினார்கள்.

அதன்பிறகு முல்லா, "தயவு செய்து ஒரு நிமிடம் பொறுங்கள்! என்மீது எந்தத் தவறும் கிடையாது," என்றார்.

அதற்கு, பக்கத்தில் இருந்தவர்கள் எல்லோரும் சேர்ந்து கொண்டு, "அப்படி நீங்கள் குற்றவாளி இல்லை என்றால், யாரைக் குற்றவாளி என்று நினைக்கிறீர்கள்?" என்று கேட்டனர்.

அதற்கு முல்லா, அவர்களிடம், "திருடன் குற்றவாளி இல்லையா?" என்றார்.

எனவே, மனம் எப்போதும் பழியை வேறு யார் மீதாவது போட்டுவிடும். மனைவி, முல்லாவின் மீது பழியைப் போடுகிறார். பக்கத்து வீட்டுக்காரர்கள் அனைவரும் முல்லாவின் மீது போடுகின்றனர். ஆனால், அப்பாவி முல்லா, அங்குள்ள யார் மீதும் பழியைப் போட முடியாது. எனவே அவர், "திருடன் குற்றவாளி இல்லையா?" என்று கேட்கிறார்.

நாம் மற்றவர்கள் மீது பழியைப் போடுகிறோம். இது, நீங்கள் தவறு செய்யவில்லை என்கிற மாயத்தோற்றத்தை உங்களுக்கு கொடுத்துவிடுகிறது. யாரோ ஒரு எங்கோ தவறு செய்கிறார்கள் என்று



கூறுகிறீர்கள். மேலும், இந்த எண்ணம், மனதின் அடிபபடை எண்ணங்களில் ஒன்றாகும். மேலும், எப்போது நாம் இப்படி ஒரு தப்பிக்கும் வழியை கண்டு கொள்கிறோமோ, அப்போது நாம் சௌகரியமாக ஆகிவிடுகிறோம்; அதன்பின்னர், சுமை மற்றவர்கள் மீது வீசப்பட்டு விடுகிறது.

சாதகன் ஒருவனுக்கு இத்தகைய மனம் உதவாது; இது ஒரு இடையூறு தான். மனம் தான் இடையூறு. சூழ்நிலை எதுவாக இருந்தாலும், விஷயம் எதுவாக இருந்தாலும், நீங்கள் தான் அதற்கு பொறுப்பு என்றும், மற்றவர்கள் அல்ல என்றும் நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். நீங்கள் பொறுப்பாளி என்னும் போது, அதன்பிறகு ஏதாவது சாத்தியமாகும். வேறு யாரோ தான் பொறுப்பாளி என்ற பிறகு, எதுவுமே சாத்தியப்படாது.

சமயப்பற்று உள்ள மனதிற்கும், சமயப்பற்று இல்லாத மனதிற்கும் இடையே உள்ள அடிப்படைப் பிரச்சனை இதுதான். சமயப்பற்றற்ற ஒரு மனம், எப்போதும் வேறு ஏதோ ஒன்று தான் பொறுப்பு என்று நினைக்கிறது. அதாவது, இந்த சமூகத்தை மாற்றுங்கள், சூழ்நிலைகளை மாற்றுங்கள், பொருளாதார நிலைகளை மாற்றுங்கள். அதன்பின்னர் எல்லாம் சரியாகும் என்கின்றனர். ஆனால், சமயப்பற்றுள்ள ஒரு மனம் கூறுவது என்னவென்றால், என்ன தான் சூழ்நிலை இருந்தாலும், இது தான் உங்களது மனம் என்றால், அதன்பிறகு நீங்கள் நரகத்தில் தான் இருப்பீர்கள்; நீங்கள் துன்பத்தில் இருப்பீர்கள். உங்களால் அமைதியை அடைய முடியாது.

உங்கள் மீது பொறுப்பை போடுங்கள்; பொறுப்பாளியாக இருங்கள். ஏனெனில், அப்போது தான் ஏதாவது செய்ய முடியும். அப்போது தான் நீங்கள் உங்களைக் குறித்து ஏதாவது செய்ய முடியும். உங்களால் வேறு யாரையும் இந்த உலகத்தில் மாற்ற முடியாது; உங்களால் உங்களை மட்டுமே மாற்ற முடியும். இது மட்டுமே, சாத்தியப்படுகின்ற ஒரே ஒரு புரட்சி. ஒருவன் தன்னை மட்டுமே திருத்திக் கொள்ளமுடியும். ஆனால், நாம் தான் இதற்கு பொறுப்பாளி என்று உணரும் போது மட்டுமே, இதை எண்ணிப் பார்க்க முடியும்.

## நல்லவனாக இருக்க முயற்சிக்காதே

விழிப்புணர்வு இல்லாமல் இருப்பது மட்டுமே பாவச் செயலாகும். அதே போன்று, விழிப்புணர்வுடன் இருப்பது மட்டுமே புண்ணியச் செயலாகும். விழிப்புணர்வு இல்லாமல் செய்ய முடியாத

எதுவும் புண்ணியச் செயல் அல்ல. விழிப்புணர்வுடன் செய்யக்கூடியவை மட்டுமே புண்ணியச் செயல்கள் ஆகும். நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்தால், உங்களால் கொலை செய்ய முடியாது; உங்களால் வன்முறையாக இருக்க முடியாது. உங்களால் கற்பழிக்கவோ, திருடவோ, கொடுமைப்படுத்தவோ முடியாது. அங்கே விழிப்புணர்வு இருந்தால், இவையெல்லாம் சாத்தியமில்லாதவைகள். விழிப்புணர்வு இல்லாத நிலை நிலவும் போது தான், விழிப்புணர்வு அற்ற இருளில் தான் எல்லா வகையான எதிரிகளும் உங்களுக்குள் நுழைகிறார்கள்.

வீட்டில் விளக்குகள் எரிந்தால், திருடர்கள் அதை தவிர்த்துவிடுவார்கள். மேலும், காவல்காரன் விழித்திருக்கும் போது, திருடர்கள் முயற்சி செய்துகூட பார்க்க மாட்டார்கள் என்று புத்தர் கூறுகிறார். மேலும், மக்கள் நடமாடிக் கொண்டும், வீட்டிற்குள் பேசிக் கொண்டும், வீட்டில் எல்லோரும் இன்னும் தூங்காமலும் இருந்தால், அதன்பிறகு திருடர்கள் உள்ளே நுழைவதற்கான சாத்தியங்கள் இருக்காது; அல்லது, திருடர்கள் அதைப் பற்றி நினைத்துக்கூடப் பார்க்க மாட்டார்கள்.

இதே கதை தான் உங்களுக்கும்; நீங்கள் எந்த ஒரு விளக்கும் இல்லாத வீடு போல் இருக்கிறீர்கள். மனிதனின் சாதாரண நிலை என்பது இயந்திரத்தனமாக செயல்புரிவதாக உள்ளது. மனித இயந்திரங்கள் பெயரளவில் மட்டுமே மனிதன் என்பது உள்ளது. இல்லையெனில், நீங்கள் ஒரு பயிற்சிபெற்ற, திறமையான இயந்திரம். மேலும், நீங்கள் எதைச் செய்தாலும் அது தவறாகத் தான் இருக்கப் போகிறது. மேலும் நினைவில் கொள்ளுங்கள். நான், நீங்கள் எதைச் செய்தாலும் என்று கூறுகிறேன். அதாவது, நீங்கள் விழிப்புணர்வு இல்லாமல் இருந்தால், உங்களது புண்ணியச் செயல்களும் கூட புண்ணியச் செயல்களாக இருக்காது. நீங்கள் விழிப்புணர்வு இல்லாமல் இருக்கும் போது, நீங்கள் எப்படி புண்ணியவானாக இருக்க முடியும்? உங்களது புண்ணியச் செயலுக்குப் பின்னால் ஒரு மிகப்பெரிய, அதிக அளவிலான ஆணவம் இருக்கும். அது கண்டிப்பாக இருந்தே தீரும். நீங்கள் அதிக முயற்சி செய்து, மிகவும் கடினமாக உழைத்து, பயிற்சி பெற்ற, வளர்த்துக் கொண்ட உங்களது புனிதத்தனங்கள் எல்லாமும்கூட ஒன்றுமில்லாமல் போய்விடும். ஏனெனில், அது உங்களிடம் எளிமையைக் கொண்டு வராது. மேலும், அது உங்களிடம் பணிவைக் கொண்டு வராது. உங்களது ஆணவம் மறைந்து போகும் போது மட்டுமே நிகழ்கின்ற அந்த மாபெரும் தெய்வீக அனுபவத்தைக் கொண்டு வராது. ஒரு புனிதத்துறவியாக, நீங்கள் ஒரு மரியாதைக்குரிய வாழ்க்கையை நீங்கள் வாழலாம். ஆனாலும்கூட, மற்றவர்கள் எந்த அளவுக்கு ஏழைகளோ,



அந்த அளவுக்கு நீங்களும் உங்களுக்குள் நாற்றமடிக்கின்ற, உங்களுக்குள் ஓர் அர்த்தமற்ற வாழ்க்கையைத் தான் வாழ்ந்து வருவீர்கள். அது வாழ்க்கை ஆகாது. அது வெறுமனே செடி போல் வளர்வது. உங்களது பாவச் செயல்களும் பாவங்களாக இருக்கும்; உங்களது புண்ணியச் செயல்களும் பாவங்களாகவே இருக்கும். உங்களது தீய ஒழுக்கம், தீய ஒழுக்கமாகத் தான் இருக்கும். அதே சமயம், உங்களது நல்ல ஒழுக்கமும் கூட தீய ஒழுக்கமாகத் தான் இருக்கும்.



**நான் உங்களுக்கு நல் ஒழுக்கத்தை போதிக்கவில்லை. மேலும், நான் புண்ணியச் செயல்களையும் போதிக்கவில்லை. ஏனெனில், உங்களிடம் விழிப்புணர்வு இல்லாத போது, அவைகள் எல்லாம் வெறும் பாசாங்குகள் என்றும், போலித்தனமானவை என்றும் நான் அறிவேன். அவைகள் உங்களை போலியானவர் ஆக்கிவிடும். அவைகள் உங்களை விடுதலை அடையச் செய்யாது. அவைகளால் உங்களை விடுதலை அடையச் செய்ய முடியாது. அதற்கு மாறாக, அவைகள் உங்களை சிறைப்படுத்தி விடும்.**



நான் உங்களுக்கு நல் ஒழுக்கத்தை போதிக்கவில்லை. மேலும், நான் புண்ணியச் செயல்களையும் போதிக்க வில்லை. ஏனெனில், உங்களிடம் விழிப்புணர்வு இல்லாத போது, அவைகள் எல்லாம் வெறும் பாசாங்குகள் என்றும், போலித்தனமானவை என்றும் நான் அறிவேன். அவைகள் உங்களை போலியானவர் ஆக்கிவிடும். அவைகள் உங்களை விடுதலை அடையச் செய்யாது. அவைகளால் உங்களை விடுதலை அடையச் செய்ய முடியாது. அதற்கு மாறாக, அவைகள் உங்களை சிறைப்படுத்தி விடும்.

ஒரே ஒரு விஷயம் மட்டுமே போதுமானது; விழிப்புணர்வு ஒன்று தான் எல்லாவற்றையும் திறக்கும் திறவுகோல். அது இயற்கையில் உள்ள எல்லாப் பூட்டுகளையும் திறக்கும். விழிப்புணர்வு என்றால், நீங்கள் நொடிக்கு நொடி உஷாராக, உங்களைக் குறித்த தன்னுணர்வுடன், மேலும் உங்களைச் சுற்றிலும் அந்த நொடிக்கு நொடி என்ன நடக்கிறதோ, அதற்கு மறுதலிப்புடன், தன்னுணர்வுடன் இருப்பது என்று தான் அர்த்தம். அப்போது நீங்கள், ஒரு முகம் பார்க்கும் கண்ணாடி போன்று இருப்பீர்கள். நீங்கள் எல்லாவற்றையும் பிரதிபலிப்பீர்கள். ஆனால்,

நீங்கள் அந்த அளவுக்கு முழுமையாகப் பிரதிபலிப்பதால், அப்போது அதிலிருந்து எந்தச் செயல் பிறந்தாலும், அது சரியானதாகவே இருக்கும். ஏனெனில், அது அந்த நொடிக்கு பொருந்திப் போகும். அது இயற்கையோடு ஒத்திசைந்து போகும். அந்தச் செயல், உண்மையில் உங்களுக்குள் எழுவதில்லை. அந்தச் செயலைச் செய்பவர் நீங்கள் அல்ல. அது, அப்போதுள்ள சூழல், நீங்கள், மற்றும் எல்லாம் சேர்ந்த ஒரு முழு சந்தர்ப்பமாக இருக்கும். அப்படிப்பட்ட அந்த முழுமையில் இருந்து தான் அந்த செயல் பிறக்கும்.; அது உங்களது செயல் ஆகாது. அந்தச் செயலை எந்த விதத்தில் செய்ய வேண்டும் என்று முடிவெடுப்பது நீங்கள் அல்ல. அது உங்களது முடிவு அல்ல; அது உங்களது எண்ணம் அல்ல; அது உங்களது குணநலன் அல்ல; அதைச் செய்வது நீங்கள் அல்ல. அது நிகழ்வதற்கு, நீங்கள் அனுமதி மட்டுமே அளிக்கிறீர்கள்.

இது எதைப் போன்றதென்றால், நீங்கள் அதிகாலையில் நடைப்பயிற்சி செய்து கொண்டிருக்கிறீர்கள். சூரியன் இன்னும் உதிக்கவில்லை. அப்போது, நீங்கள் போகும் பாதையில் ஒரு பாம்பு குறுக்கிடுகிறது. அப்போது உங்களால் எதுவும் சிந்திக்க முடியாது. நீங்கள் அந்த நேரத்தில் அதை பிரதிபலிக்க மட்டுமே முடியும். அப்போது என்ன செய்ய வேண்டும், என்ன செய்யக்கூடாது என்று முடிவெடுப்பதற்கு நேரம் இருக்காது. நீங்கள் உடனடியாக தாவிக் குதித்துவிடுவீர்கள்! 'உடனடியாக' என்னும் வார்த்தையைக் குறித்துக் கொள்ளுங்கள். அப்போது, ஒரு சிறு நொடிப்பொழுது கூட தாமதிக்க மாட்டீர்கள். அதன்பிறகு, நீங்கள் ஒரு மரத்தின் அடியில் உட்கார்ந்து கொண்டு அதைப் பற்றி சிந்திக்காமல்; என்ன நடந்தது, நீங்கள் அதை எப்படிச் செய்தீர்கள், மேலும், உங்களது முதுகை நீங்களே தட்டிக் கொடுத்து, நன்றாகச் செய்தாய் என்று கூறிக் கொள்ள முடியும். ஆனால், உண்மையில் நீங்கள் அதைச் செய்யவில்லை. அது தானாகவே நடந்தது. அந்த முழு சந்தர்ப்பத்திற்கும் தகுந்தாற்போல அதுவாகவே நடந்தது. அதில், நீங்கள், அந்தப் பாம்பு, நீங்கள் இறந்துவிடும் அபாயம், உயிரைப் பாதுகாப்பதற்கான முயற்சி, இப்படி அதில் ஆயிரம் விஷயங்கள் அடங்கி உள்ளன. அந்த முழுச் சூழலும் தான் அந்தச் செயலை உருவாக்கிவிட்டது. நீங்கள், அதற்கு வெறும் ஒரு ஊடகம் தான்.

இப்போது இந்தச் செயல், அந்த சந்தர்ப்பத்தோடு பொருந்துகிறது. நீங்கள் அதைச் செய்பவர் இல்லை. ஒரு சமயப்பற்றுள்ள வழியில் கூற வேண்டுமென்றால், கடவுள் உங்கள் மூலம் அதைச் செய்துவிட்டார். அது, சமயப்பற்றுடன் சொல்கின்ற வழி மட்டும் தான். அவ்வளவு தான். அந்த முழுமையானது, நீங்கள் என்னும் ஒரு பகுதி மூலமாக செயல்புரிந்து உள்ளது.



இது தான் புண்ணியச் செயல். இதற்காக நீங்கள் ஒருபோதும் மனம் வருந்த மாட்டீர்கள். மேலும், இது உண்மையில் உங்களை சுதந்திரமானவர் ஆக்கிவிடுகின்ற ஒரு செயல். ஒருமுறை நிகழ்ந்துவிட்டால், அது முடிந்துவிடும். அதன்பிறகு, நீங்கள் வேறு காரியம் செய்வதற்குச் சுதந்திரமானவர் ஆகிவிடுவீர்கள். நீங்கள் இந்தச் செயலை உங்களது மண்டைக்குள் சுமந்து கொண்டு செல்ல மாட்டீர்கள். அது உங்களது மன இயலின் நினைவாக இருக்காது. இது எந்தவிதமான காயத்தையும் உங்களுக்குள் விட்டுச் செல்லாது. இது, புறத்தூண்டுதல் இன்றி, தானே நடந்தால், இது அதன் தடத்தைப் பதிக்காது. இந்தச் செயல் ஒருபோதும் கர்மம் ஆகாது. இந்தச் செயல் ஒருபோதும் எந்த வடுக்களையும் ஏற்படுத்தாது. கர்மம் என்று அழைக்கப்படுகின்ற அந்தச் செயல் உண்மையிலேயே ஒரு செயல் ஆகாது. ஆனால், அது ஒரு எதிர்ச்செயல் ஆகத்தான் இருக்கும். அதில் நீங்கள் தான் தேர்ந்தெடுப்பவராகவும், நீங்கள் தான் தீர்மானிப்பவராகவும் இருப்பீர்கள். அது உங்களது விழிப்புணர்வினால் நடந்ததாக இருக்காது. ஆனால், உங்களது விழிப்புணர்வு இல்லாத நிலையில் செய்த செயலாகத் தான் இருக்கும். அதாவது, உங்களது கடந்த காலத்திலிருந்தோ, அல்லது நிவைாற்றலில் இருந்தோ, உங்களது சிந்தனையில் இருந்தோ தான் வந்ததாக இருக்கும். அதன்பிறகு, அது, எல்லாம் பாவச்செயல் தான்.

உங்களுக்குத் தேவை தன்னுணர்வு தானே தவிர, ஒரு குணநலன் அல்ல என்பது தான் எனது முழு செய்தியாகும். தன்னுணர்வு தான் உண்மையான விஷயம். குணாதிசயம் என்பது பொய்யான இருப்பு. தன்னுணர்வு இல்லாதவர்களுக்குத் தான் குணநலன் என்பது தேவைப்படும். உங்களுக்கு கண்கள் இருக்கும் போது, உங்களது வழியைக் கண்டுபிடிக்க ஒரு நடைப்பயண கைத்தடி தேவையில்லை. உங்களால் பார்க்க முடியும் போது, நீங்கள் மற்றவர்களிடம், "கதவு எங்கே இருக்கிறது?" என்று கேட்பதில்லை.

மக்கள் தன்னுணர்வு இல்லாமல் இருப்பதால் தான், குணநலன் என்பது தேவைப்படுகிறது. குணநலன் என்பது ஒரு மசகு எண்ணெய் போன்றது; உங்களது வாழ்க்கை தடையின்றி மென்மையாகச் செல்வதற்கு அது உதவுகிறது. ஜார்ஜ் குர்ட்ஜியஃப் இதை, தாக்குதலின் வேகத்தைக் குறைக்கும் சாதனம் (Buffer) என்று கூறுகிறார். இந்தச் சாதனங்கள், இரயில் பெட்டிகளில் ஒன்றோடு ஒன்று மோதிக் கொள்வதில் இருந்து தடுத்துவிடுகின்றன. அல்லது, இவைகள், பட்டைகள் போல் இருக்கும். கார்களின் அடியில் இரும்புப்பட்டைகள் உள்ளதால், நீங்கள் மெத்தென்று செல்ல முடிகிறது. அந்தப் பட்டைகள், அதிர்வுகளை எல்லாம் தாங்கிக் கொள்கின்றன. அவைகளுக்கு அதிர்வு

தாங்கிகள் என்று பெயர். குணநலனும் அப்படிப்பட்டது தான். அதுவும் ஒரு அதிர்வு தாங்கி தான்.

மக்கள் பணிவுடன் இருக்கும்படி கூறப்படுகிறார்கள். நீங்கள் பணிவுடன் இருப்பதற்கு கற்றுக் கொண்டால், அதன்பின்னர், அது ஒரு அதிர்ச்சி தாங்கியாக ஆகிவிடுகிறது. அதாவது, நீங்கள் பணிவாக இருப்பது எப்படி என்று கற்றுக் கொள்வதன் மூலம், நீங்கள் உங்களை மற்றவர்களின் ஆணவத்திலிருந்து காப்பாற்றிக் கொள்ள முடியும். அவர்களும் உங்களை அதிகம் காயப்படுத்த மாட்டார்கள். நீங்கள் தான் பணிவானவர் ஆயிற்றே. நீங்கள் ஒரு ஆணவக்காரராக இருந்தால், நீங்கள் மீண்டும் மீண்டும் காயப்படுவீர்கள். உங்களது ஆணவம் மிகவும் உணர்ச்சிமிக்கது. எனவே நீங்கள், உங்களது ஆணவத்தை பணிவு என்னும் போர்வையால் மூடிக் கொள்கிறீர்கள். அது உங்களுக்கு உதவுகிறது. இது ஒருவித மெத்தென்ற தன்மையை கொடுக்கிறது. ஆனால், இது உங்களை திருத்தாது.

உங்களை மாற்றம் அடையச் செய்வது தான் எனது வேலை. இது ஒரு ரசவாதப் பள்ளி; இங்கே நீங்கள் உங்களது தன்னுணர்வற்ற நிலையில் இருந்து, தன்னுணர்வுக்கு மாற வேண்டும்; இருளில் இருந்து ஒளிக்கு மாற வேண்டும் என்று நான் விரும்புகிறேன். என்னால் உங்களுக்கு ஒரு குணநலனைக் கொடுக்க முடியாது; என்னால் உங்களுக்கு ஆழ்ந்த உண்மைக் கண்டறிதலை, விழிப்புணர்வைத் தான் கொடுக்க முடியும். இந்த அரசோ, இந்த திருச்சபையோ, இந்த சமுதாயமோ உங்களுக்கு ஏற்கனவே தயார் செய்து கொடுத்துள்ள ஒரு வாழ்க்கை முறையில் வாழாமல், நீங்கள் நொடிக்கு நொடி வாழ வேண்டும் என்பது தான் எனது விருப்பமாகும். உங்களுக்குள் உள்ள விழிப்புணர்வின் சிறிய வெளிச்சத்தில், உங்களுக்குச் சொந்தமான தன்னுணர்வின்படி நீங்கள் வாழ வேண்டும் என்று தான் நான் விரும்புகிறேன்.

ஒவ்வொரு நொடிப்பொழுதிற்கும் மறுதலியுங்கள். குணநலன் என்றால், வாழ்க்கையின் எல்லாக் கேள்விகளுக்கும் நீங்கள் ஏற்கனவே ஒரு குறிப்பிட்ட பதிலை தயாரித்து வைத்திருக்கிறீர்கள் என்று அர்த்தம். ஆகவே, ஒரு சூழ்நிலை எழும் போது, நீங்கள் ஏற்கனவே தயாரித்து வைத்துள்ள அந்த விதத்தின்படி பதில் செயல் புரிகிறீர்கள். இப்படி, நீங்கள் ஏற்கனவே தயாரித்து வைத்துள்ள பதிலினால் பதில் செயல் புரியும் போது, அது உண்மையான பதில் செயலாக இருக்காது. அது ஒரு எதிர்ச்செயல் மட்டும் தான். குணநலன் உள்ள ஒருவன் எதிர்ச்செயல் புரிகிறான். தன்னுணர்வுள்ள ஒரு மனிதன் பதில் செயல் புரிகிறான். அவன் அங்கிருக்கும் சூழ்நிலையை உள்வாங்கிக் கொண்டு, வெளியில்



உள்ள உண்மையை அப்படியே உள்ளுக்குள் பிரதிபலிக்கிறான். மேலும், அந்தப் பிரதிபலிப்பின் மூலம் அவன் செயலாற்றுகிறான். குணநலன் உள்ள ஒரு மனிதன் எதிர்ச்செயல் ஆற்றுகிறான்; தன்னுணர்வுள்ள மனிதன் வெறுமனே செயலாற்றுகிறான். குணநலன் உள்ள ஒரு மனிதன் இயந்திரம் போன்று, எந்திரனாகச் செயலாற்றுகிறான். அவன் தனது மனதில் எல்லா விஷயங்களும் அடங்கிய ஒரு களிப்பொறியை வைத்திருக்கிறான். நீங்கள் அவனிடம் எதைக் கேட்டாலும், அதற்காக ஏற்கனவே தயார் செய்து வைக்கப்பட்டுள்ள பதில், அவனது கணிப்பொறியில் இருந்து வெளியே வரும்.

தன்னுணர்வுள்ள ஒரு மனிதன் வெறுமனே அப்போதுள்ள அந்த நொடிப் பொழுதில் செயல்புரிகிறான்; அவன் தனது கடந்த காலத்தில் இருந்தோ அல்லது தனது நினைவாற்றலில் இருந்தோ செயல்புரிவதில்லை. அவனது பதில் செயல் ஒரு அழகையும், இயற்கை தன்மையையும் கொண்டிருக்கும். அவனது பதில் செயல் அந்த சூழ்நிலைக்கு உண்மையானதாக இருக்கும். குணநலன்கள் உள்ள ஒரு மனிதன், எப்போதும் முழுத்திறனோடு இருக்க முடியாது. ஏனெனில், வாழ்க்கை என்பது தொடர்ந்து மாறிக் கொண்டே இருக்கும்; அது ஒருபோதும் அப்படியே இருப்பதில்லை. ஆனால், நீங்கள் ஏற்கனவே தயாரித்து வைத்துள்ள பதில்களோ, எப்போதும் ஒரே மாதிரி தான் இருக்கும். அவைகள் வளர்ச்சி அடைவதில்லை. அவைகளால் வளரவும் முடியாது, அவைகள் உயிரற்றவை.

உங்களது குழந்தைப் பருவத்தில், ஏதாவது ஒரு குறிப்பிட்ட விஷயம் சொல்லப்பட்டிருக்கும். அது அப்படியே தான் அங்கு இருக்கும். இப்போது நீங்கள் வளர்ந்திருப்பீர்கள்; வாழ்க்கை மாறி இருக்கும். ஆனால், உங்களது பெற்றோர்களால் அல்லது ஆசிரியர்களால் அல்லது மதகுருக்களால் உங்களுக்கு, உங்கள் குழந்தைப் பருவத்தில் கொடுக்கப்பட்ட அந்த பதில் இன்றும் அப்படியே தான் அங்கு இருக்கும். எனவே, இப்போது ஏதாவது நடந்தால், நீங்கள் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு உங்களுக்குக் கொடுக்கப்பட்ட அந்த பதிலின்படி தான் நீங்கள் செயல்புரிவீர்கள். ஆனால், இந்த ஐம்பது ஆண்டுகளில் கங்கை நதியில் எவ்வளவோ தண்ணீர் போயிருக்கும்; இப்போது இருப்பது முற்றிலும் வேறுபட்ட வாழ்க்கையாக இருக்கும்.

நீங்கள் அதே ஆற்றில் இரண்டு முறை காலடி வைக்க முடியாது என்று ஹெராக் விட்டஸ் கூறுகிறார். மேலும், நான் கூறுவதாவது : நீங்கள் ஒருமுறை கூட ஆற்றில் காலடி வைக்க முடியாது. அந்த ஆறு அந்த அளவுக்கு அதிக வேகத்துடன் ஓடிக் கொண்டிருக்கிறது.

குணநலன் என்பது தேங்கி நிற்பது; அழுக்கு நீர் தேங்கியுள்ள ஒரு குட்டை அது. தன்னுணர்வு என்பது ஒரு நதி.

அதனால் தான், நான் என்னுடைய மக்களுக்கு எந்தவிதமான நடத்தை விதிகளையும் கொடுப்பதில்லை. நான், அவர்களுக்கு பார்ப்பதற்கான கண்களை கொடுக்கிறேன்; பிரதிபலிக்கக் கூடிய ஒரு தன்னுணர்வை கொடுக்கிறேன். எழுகின்ற சூழ்நிலை எதுவாக இருந்தாலும், அதற்கு பதில் செயல் புரிகின்ற ஒரு கண்ணாடி போன்ற இருப்பு நிலையை அவர்களுக்கு கொடுக்கிறேன். எதைச் செய்ய வேண்டும், எதைச் செய்யக் கூடாது என்று விரிவான தகவல்களை நான் அவர்களுக்குக் கொடுப்பதில்லை; நான் அவர்களுக்கு பத்து கட்டளைகளைக் கொடுக்கவில்லை. மேலும், அப்படி கட்டளைகளைக் கொடுக்க வேண்டும் என்றால், அதன்பிறகு உங்களால் பத்தோடு நிறுத்திவிட முடியாது. ஏனெனில், வாழ்க்கை என்பது அநேக சிக்கல்கள் நிறைந்தது.

புத்த மதத்தின் புனித நூல்கள், புத்தத் துறவிகளுக்கு 33000 சட்டங்கள் உள்ளன. 33000 சட்டங்கள்! எந்த ஒரு காலத்திலும் எழுகின்ற எல்லா சாத்தியப்பட்ட சூழ்நிலைக்கும், அவர்கள் ஏற்கனவே தயார் செய்யப்பட்ட பதிலை கொடுத்துள்ளார்கள். ஆனால், இந்த 33000 நடத்தை விதிகளையும் நீங்கள் எப்படி ஞாபகம் வைத்திருக்க முடியும்? மேலும், இந்த 33000 நடத்தை விதிகளையும் ஞாபகத்தில் வைத்துக் கொள்கின்ற ஒருவன், எப்போதும் இவைகளில் இருந்து வெளியே வருவதற்கான கெட்டிக்காரத்தனத்துடனும் தான் இருப்பான். அவனுக்கு ஒரு காரியத்தைச் செய்ய விருப்பம் இல்லை என்றால், உடனே அவன், அதற்கு ஒரு வழியைக் கண்டுபிடித்து விடுவான். அதே போன்று, அவன் ஒரு காரியத்தைச் செய்ய வேண்டும் என்று விரும்பினாலும், அதற்கும் ஒரு வழியைக் கண்டுபிடித்துவிடுவான்.

ஒரு கிறிஸ்தவ துறவியைப் பற்றி கேள்விப்பட்டது இது : யாரோ ஒருவர் அவரை கன்னத்தில் அடித்துவிட்டார்கள். ஆனால், அன்று காலையில் தான் பிரசங்கம் செய்யும் போது, அவர், "ஒருவர் உங்களை ஒரு கன்னத்தில் அறைந்தால், நீங்கள் மறு கன்னத்தையும் காட்டுங்கள் என்று இயேசு கூறுகிறார்," என்று கூறியிருந்தார். எனவே, அந்த மனிதன் அதை முயற்சி செய்து பார்க்க விரும்பினான். ஆகவே, அவரை அவன் கன்னத்தில் அடித்தான். உண்மையிலேயே, அவன் ஒரு கன்னத்தில் அவரை பலமாக அடித்தான். அந்தத் துறவியும் உண்மையானவராக இருந்தார். அவர் அவனிடம் மறுகன்னத்தையும் காட்டினார். ஆனால், அந்த மனிதனும்கூட விடவில்லை. அவன், அடுத்த கன்னத்திலும் இன்னும் பலமாக அடித்தான். அதன்பிறகு நடந்ததைப் பார்த்து, அவன்



ஆச்சரியம் அடைந்தான். அப்போது அந்தத் துறவி அவன் மீது தாவிக் குதித்து அவனை பலமாக அடிக்க ஆரம்பித்தார். இதை சற்றும் எதிர்பாராத அந்த மனிதன், துறவியிடம், "நீங்கள் செய்வது என்ன? நீங்கள் ஒரு துறவி. மேலும், இன்று காலை தான் நீங்கள், 'யாராவது ஒரு கன்னத்தில் அடித்தால் மறுகன்னத்தையும் காட்டுங்கள்' என்று கூறினீர்கள்" என்று கேட்டான்.

அதற்கு அந்த துறவி, "ஆம். ஆனால், என்னிடம் மூன்றாவது கன்னம் இல்லையே. மேலும், இயேசு இரண்டு கன்னத்தோடு நிறுத்திவிட்டார். இப்போது நான் சுதந்திரமானவன் ஆகிவிட்டேன். இப்போது நான் என்ன செய்ய விரும்புகிறேனோ அதைச் செய்ய முடியும். இயேசு அதைப் பற்றி வேறு எந்தத் தகவலும் சொல்லவில்லை," என்று பதில் கூறினார்.

இதே போன்று இயேசுவின் வாழ்க்கையிலும் கூட நடந்தது. ஒருமுறை அவர் ஒரு சீடனிடம், "ஏழுமுறை மன்னியுங்கள்," என்றார். அந்த சீடன், "சரி," என்றான். அவன், "சரி," என்று கூறிய விதத்தைப் பார்த்து இயேசுவிற்கு சந்தேகம் வந்தது; உடனே அவர், "77 முறை என்று நான் கூறுகிறேன்," என்றார்.

அந்த சீடன் கொஞ்சம் கலங்கினான். ஆனாலும் கூட, அவன், "சரி," என்றான். ஏனெனில், "எண்கள் எழுபத்தி ஏழோடு நின்றுவிடவில்லை. எழுபத்தி எட்டாவது முறை என்ன செய்வது? அப்போது நான் சுதந்திரம் பெற்றுவிடுகிறேன். அப்போது, நான் விரும்புவதை என்னால் செய்ய முடியும்," என்றான்.

நீங்கள் மக்களுக்காக எத்தனை சட்டங்களைத் தான் உருவாக்க முடியும்? அது முட்டாள்தனமானது, அர்த்தமற்றது. இப்படித்தான், மக்கள் சமயப்பற்றுடன் இருப்பதாக நினைக்கின்றனர். என்றாலும்கூட, அவர்கள் சமயப்பற்றுடன் இருப்பதில்லை. அவர்கள் எப்போதும் அந்த நடத்தை விதிகள் மற்றும் கட்டளைகளை விட்டு வெளியே வருவதற்கு ஒரு வழியைக் கண்டுபிடித்து விடுவார்கள். அவர்கள் எப்போதும் பின்பக்கத்தின் வாசல் வழியாக ஒரு பாதையை கண்டு கொள்வார்கள். எனவே, குணநலன் என்பது உங்களுக்கு, உங்களது உடலின் தோலின் ஆழம் வரை தான். உங்களுக்கு ஒரு பொய்யான முகமூடியை கொடுக்க முடியும். தோலின் ஆழம்கூட கிடையாது; நீங்கள் உங்கள் புனிதத் துறவிகளை கொஞ்சம் சுரண்டிப் பாருங்கள்; அப்போது, அதன் பின்னால், ஒரு மிருகம் மறைந்திருப்பதைக் காண்பீர்கள். மேற்பரப்பில் அவைகள் அழகாகத் தோன்றும். ஆனால் அது, மேற்பரப்பில் மட்டும் தான் இருக்கும்.

நீங்கள் மேலெழுந்தவாரியாக இருக்க நான் விரும்பவில்லை. நீங்கள் உண்மையிலேயே மாற்றம் அடைய வேண்டும் என்று நான் விரும்புகிறேன். ஆனால், உண்மையானதொரு மாற்றம் உங்களது ஆன்மாவின் மையத்தின் மூலமாகத் தான் நிகழும்; மேற்பரப்பின் மூலம் நடக்காது. குணநலன் என்பது மேற்பரப்பில் வர்ணம் பூசுவது. ஆனால், தன்னுணர்வு என்பது மையத்தின் உருமாற்றம் ஆகும்.

எனவே, நீங்கள் உங்களது குறைகளை பார்க்க ஆரம்பிக்கின்ற அந்த நொடிப்பொழுதிலேயே, அவைகள் காய்ந்த இலைகள் போல் கீழே விழ ஆரம்பித்து விடுகின்றன. அதன் பிறகு வேறு எதுவும் செய்ய வேண்டியதில்லை. அவைகளைப் பார்த்தாலே போதும். உங்களது குற்றம் குறைகளைப் பற்றி வெறுமனே விழிப்புணர்வு கொள்வது தான் தேவை. அந்த விழிப்புணர்வில் அவைகள் மறைந்து போக ஆரம்பித்துவிடும்; அவைகள் ஆவியாகிப் போய்விடும்.

ஒருவன் தன்னுணர்வில்லாமல் இருந்தால் தான் மட்டுமே, அவன் ஒரு குறிப்பிட்ட தவறை மீண்டும் மீண்டும் செய்து கொண்டே போவான். செய்த தவறை மீண்டும் செய்து கொண்டே போவதற்கு தன்னுணர்வு இல்லாமல் இருப்பது கண்டிப்பாக தேவை. மேலும், அப்போது நீங்கள் உங்களை மாற்ற முயற்சித்தாலும்கூட, நீங்கள் அதே தவறை வேறு உருவத்தில், வேறு ஏதாவது வடிவத்தில் செய்து கொண்டே போவீர்கள். அவைகள் எல்லா உருவத்திலும், எல்லா வடிவத்திலும் வந்துவிடும்! நீங்கள் அதை பரிமாற்றம் செய்யலாம். நீங்கள் அதற்கு பதிலாக வேறு ஒன்றைச் செய்யலாம். ஆனால், உங்களால் அதை விட்டுவிட முடியாது. ஏனெனில், உங்களுக்குள் ஆழத்தில் அதை ஒரு தவறாக நீங்கள் பார்ப்பதில்லை. மற்றவர்கள் அந்தத் தவறைப் பார்ப்பதால், அவர்கள் வேண்டுமானால் சொல்லிக் கொண்டே போகலாம்.

அதனால் தான், ஒவ்வொருவரும் தன்னைப் பற்றி அழகானவராகவும், அறிவுடையவராகவும், புண்ணியம் செய்பவராகவும், புனிதமானவராகவும் நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால், இதை மற்றவர்கள் யாரும் ஒத்துக் கொள்வதில்லை! இதற்கான காரணம் இதுதான். நீங்கள் மற்றவர்களைப் பார்க்கிறீர்கள். நீங்கள் அவர்களின் உண்மைகளைப் பார்க்கிறீர்கள். ஆனால், உங்களைப் பற்றி நீங்கள் கற்பனைகளை, அழகான கற்பனைகளை சுமந்து செல்கிறீர்கள். உங்களைப் பற்றி நீங்கள் தெரிந்து வைத்திருப்பதெல்லாம், கிட்டத்தட்ட ஒரு புனைக்கதை; அதற்கும் உண்மைக்கும் சம்பந்தமே இல்லை.

ஒருவன் தனது தவறுகளைப் பார்க்கின்ற அந்த நொடிப்பொழுதே, அவனிடம் ஒரு தலைகீழ் மாற்றம் வந்துவிடுகிறது. அதனால் தான்,



காலம் காலமாக புத்தர்கள் ஒரே ஒரு விஷயத்தை மட்டுமே போதித்து வந்துள்ளனர். அது தான் விழிப்புணர்வு என்பது. அவர்கள் உங்களுக்கு குணநலன்களைப் போதிப்பதில்லை. குணநலன்கள் மதகுருக்களால், அரசியல்வாதிகளால் போதிக்கப்படுகின்றன. ஆனால், புத்தர்களால் போதிக்கப்படுவதில்லை. புத்தர்கள் உங்களுக்கு போதிப்பது தன்னுணர்வை, மனசாட்சியை அல்ல.

**ஒருவன் தனது தவறுகளைப் பார்க்கின்ற அந்த நொடிப்பொழுதே, அவனிடம் ஒரு தலைகீழ் மாற்றம் வந்துவிடுகிறது. அதனால் தான், காலம் காலமாக புத்தர்கள் ஒரே ஒரு விஷயத்தை மட்டுமே போதித்து வந்துள்ளனர். அது தான் விழிப்புணர்வு என்பது. அவர்கள் உங்களுக்கு குணநலன்களைப் போதிப்பதில்லை. குணநலன்கள் மதகுருக்களால், அரசியல்வாதிகளால் போதிக்கப்படுகின்றன. ஆனால், புத்தர்களால் போதிக்கப்படுவதில்லை. புத்தர்கள் உங்களுக்கு போதிப்பது தன்னுணர்வை, மனசாட்சியை அல்ல.**



மனசாட்சி என்பது மற்றவர்களால் உங்கள் மீது விளையாடிய தந்திரம். மற்றவர்கள் உங்களிடம் எது சரி, எது தவறு என்று கூறுகிறார்கள். அவர்கள், தங்களின் கருத்துக்களை உங்கள் மீது வலுக்கட்டாயமாக திணிக்கின்றனர். மேலும், இதை அவர்கள் உங்களின் குழந்தைப் பருவத்தில் இருந்தே கட்டாயப்படுத்தி வருகிறார்கள். நீங்கள் கள்ளம் கபடமற்று, மென்மையானவராக, எதிர்ப்பை தாங்க முடியாதவராக இருக்கும் போது, அங்கே உங்களிடம் ஒரு எண்ணத்தை உண்டாக்குவதற்கு, ஒரு பதிலை உங்களுக்குள் உண்டாக்குவதற்கு சாத்தியங்கள் அதிகம் இருந்தன. எனவே, ஆரம்பத்தில் இருந்தே அவர்கள் உங்களை கண்டித்துவிட்டனர். அந்த கண்டிப்பு தான் மனசாட்சி என்று அழைக்கப்படுகிறது. மேலும், அந்த மனசாட்சி தான் உங்களது வாழ்க்கை முழுவதையும் ஆதிக்கம் செலுத்தி வருகிறது. மனசாட்சி என்பது, உங்களை அடிமையாக்குவதற்கு இந்த சமுதாயம் செய்த போர்த் தந்திரம்.

புத்தர்கள் உங்களுக்கு தன்னுணர்வைத் தான் போதிப்பார்கள். தன்னுணர்வு என்றால், எது சரி எது தவறு என்று நீங்கள் மற்றவர்களிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டும் என்பது கிடையாது என்று தான் அர்த்தம். யாரிடமிருந்தும் கற்றுக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லை. நீங்கள் வெறுமனே உங்களுக்குள் செல்ல வேண்டியது தான். வெறுமனே உள்நோக்கிய பயணம் மட்டுமே

போதுமானது. நீங்கள் எந்த அளவுக்கு ஆழமாகச் செல்கிறீர்களோ, அந்த அளவுக்கு தன்னுணர்வு உங்களுக்குள் இருந்து வெளியிடப்படும். நீங்கள், உங்களது மையத்தை அடையும் போது, இருள் மறைந்து நீங்கள் முழு ஒளியுடன் இருப்பீர்கள்.

நீங்கள், உங்களது அறைக்குள் வெளிச்சத்தை கொண்டுவந்து விட்டால், நீங்கள் இருளை வெளியே பிடித்துத் தள்ள வேண்டியதில்லை. வெளிச்சம் என்பது அங்கு இருந்து விட்டாலே போதும். ஏனெனில், இருள் என்பது வெளிச்சம் இல்லாமல் இருப்பது தான். அப்படிப்பட்டது தான், உங்களது எல்லா பைத்தியக்காரத்தனங்களும், புத்தி சுவாதீனமற்ற செயல்களும்.

அடால்ஃப் ஹிட்லரைப் போன்று உடை அணிந்த ஒருவன், மனநோய் மருத்துவரிடம் வந்தான்.

அவன் மருத்துவரிடம், "இங்கே பாருங்கள், எனக்கு எந்தப் பிரச்சனையும் கிடையாது. இந்த உலகிலேயே மிகப்பெரிய ராணுவம் என்னிடம் உள்ளது. எனக்குத் தேவையான அளவு பணம் உள்ளது. மேலும், நீங்கள் கற்பனை செய்கின்ற எல்லா ஆடம்பரங்களும் என்னிடம் உள்ளன," என்றான்.

அதற்கு மருத்துவர், "அப்படியானால், உங்களது பிரச்சனை தான் என்ன?" என்று கேட்டார்.

"எனது மனைவி தான் பிரச்சனை. அவள், தன்னை திருமதி வீவர் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாள்," என்றார் அந்த நோயாளி.

எனவே, அந்த ஒன்றுமறியாத மனிதனைப் பார்த்து சிரிக்காதீர்கள். அது நீங்கள் தானே தவிர, வேறு யாரும் அல்ல.

ஒருவன், ஒரு தையல்காரரின் கடைக்குச் சென்றான். அங்கே மேற்கூரையின் நடுவில் ஒருவன் ஒற்றைக் கையில் தொங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தான்.

எனவே, தையல்காரரிடம், "அவர் அங்கே என்ன செய்து கொண்டிருக்கிறார்?" என்று கேட்டான்.

அதற்கு அந்த தையல்காரன், "ஓ, அதைக் கவனிக்காதீர்கள். அவன் தன்னை ஒரு எரியும் விளக்கு என்று நினைத்துக் கொண்டு தொங்குகிறான்," என்றார்.

"அது சரி, நீங்கள் அவனிடம், அவன் எரியும் விளக்கு அல்ல என்று ஏன் சொல்லக் கூடாது?" என்று வந்தவன் கேட்டான்.

உடனே அந்த தையல்காரன், "என்ன? என்னை இருட்டில் வேலை பார்க்கச் சொல்கிறாயா?" என்று கேட்டார்.



ஆகவே, எந்த நொடிப்பொழுதில் நீங்கள் பைத்தியம் அல்ல என்று அறிந்து கொள்கிறீர்களோ, அதன்பின்னர் நீங்கள் ஒருபோதும் பைத்தியம் அல்ல. அது மட்டும் தான் புத்திசுவாதீனத்தின் ஒரே ஒரு அடிப்படைத் தத்துவம். நீங்கள் ஒன்றும் அறியாதவர் என்று அறிந்து கொள்கிற அந்த நொடிப்பொழுதே, நீங்கள் ஞானமுள்ளவர் ஆகி விடுகிறீர்கள்.

டெல்பியில் ஒரு அசரீரி வாக்கு, 'இந்த பூமியில் சாக்ரட்டீஸ் தான் மிகச்சிறந்த ஞானி,' என்று கூறியது. சிலர் உடனே சாக்ரட்டீஸிடம் ஓடிப்போய், "தயவுசெய்து, இப்போது நீங்கள் மகிழ்ச்சியாக இருங்கள்! டெல்பியின் அசரீரி உங்களை இந்த பூமியின் மிகச்சிறந்த ஞானி என்று கூறிவிட்டது," என்றனர்.

அதற்கு சாக்ரட்டீஸ், "அது எல்லாம் முட்டாள்தனம். எனக்கு ஒன்றே ஒன்று தான் தெரியும் : எனக்கு ஒன்றும் தெரியாது என்பது தான் அது," என்று பதில் கூறினார்.

மக்கள் ஆச்சரியமும், குழப்பமும் அடைந்தனர். அவர்கள் மீண்டும் கோவிலுக்கு திரும்பச் சென்று, அந்த அசரீரியிடம், "நீ சாக்ரட்டீஸ் தான் இந்த பூமியில் மிகச் சிறந்த ஞானி என்கிறாய். ஆனால், அவரே அதை மறுக்கிறாரே. அதற்கு மாறாக, அவர் தான் முற்றிலும் ஒன்றும் அறியாதவன் என்றும் கூறுகிறார். அவருக்கு ஒன்றும் தெரியாது என்பது ஒன்று தான் அவருக்குத் தெரிந்த ஒரே விஷயம் என்று வேறு கூறுகிறாரே," என்று கூறினார்.

அந்த அசரீரி சிரித்துக் கொண்டே, "அதனால் தான் அவரை இந்த உலகின் தலைசிறந்த ஞானியாக அறிவித்தேன். அவர், தான் ஒன்றும் அறியாதவர் என்று அறிந்து இருக்கிறாரே, குறிப்பாக, அதற்குத் தான் நான் அவரை அறிவித்தேன்," என்று பதில் கூறியது.

அறியாதவர்கள், தங்களை ஞானிகள் என்று நம்பிக் கொண்டிருக்கிறார்கள். பைத்தியக்காரர்கள், தாங்கள் புத்தி சுவாதீனம் உள்ளவர்கள் என்று நம்பிக் கொண்டிருக்கிறார்கள்.

மேலும், நாம் எப்போதும் வெளியே தான் பார்க்கிறோம் என்பது இந்த மனித இயல்பின் ஒரு பகுதிதான். நாம், நம்மைத் தவிர, அடுத்து உள்ள ஒவ்வொருவரையும் கவனிக்கிறோம். அதனால் தான், நாம் நம்மை விடவும் மற்றவர்களைப் பற்றி அதிகம் அறிந்து வைத்திருக்கிறோம். நாம், நமது சொந்த மனதின் செயல்களுக்கு சாட்சியாக இருப்பதில்லை; நாம், நமக்குள் கவனிப்பதில்லை.

நீங்கள் 180 டிகிரி திரும்ப வேண்டும். அது தான் தியானம். நீங்கள் உங்களது கண்களை மூடிக் கொண்டு, உங்களுக்குள் கவனிக்க

ஆரம்பிக்க வேண்டும். ஆரம்பத்தில், உள்ளே இருட்டைத் தவிர வேறு எதையும் பார்க்க முடியாது. எனவே, அநேகம் பேர் அந்த இருட்டைப் பார்த்து பயந்து வெளியே ஓடி வந்து விடுவார்கள். ஏனெனில், வெளியே வெளிச்சம் இருக்கிறது.

ஆம், வெளியில் வெளிச்சம் உள்ளது தான். ஆனால், அந்த வெளிச்சம் உங்களுக்கு மெய்ஞானத்தைக் கொடுக்காது. அந்த வெளிச்சம் உங்களுக்கு உதவவே உதவாது. உங்களுக்குத் தேவை உள் ஒளி; உங்களது ஆன்மாவில் தனது மூலஸ்ஸ்தானத்தை கொண்டுள்ள ஒளி; மரணத்தினாலும்கூட அணைத்துவிட முடியாத ஒளி அது; ஆதியும் அந்தமும் இல்லாத ஒளி அது. மேலும், அதை நீங்கள் பெற்றிருக்கிறீர்கள்; அதற்கான சக்தி அங்கே உள்ளது! நீங்கள் அதோடு தான் பிறந்து இருக்கிறீர்கள். ஆனால், நீங்கள் அதை உங்களுக்குப் பின்னால் வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்; நீங்கள் ஒருபோதும் அதைப் பார்ப்பது இல்லை.

மேலும், பல நூற்றாண்டுகளாக, அநேக பிறவிகளாக நீங்கள் வெளியே தான் பார்த்து வந்திருக்கிறீர்கள். அது ஒரு இயந்திரம் போன்ற பழக்கம் ஆகிவிட்டது. நீங்கள் தூங்கும் போதும்கூட, உங்களது கனவுகளைத் தான் பார்க்கிறீர்கள். கனவுகள் என்றால், இந்த வெளியுலகின் பிரதிபலிப்புகள் என்று தான் அர்த்தம். நீங்கள், உங்களது கண்களை மூடிக் கொள்ளும் போது, நீங்கள் மீண்டும் பகல் கனவு கண்டு கொண்டிருக்கிறீர்கள்; அல்லது, சிந்திக்கிறீர்கள். எனவே, அதற்கும், நீங்கள் மற்றவர்கள் மீது ஆர்வம் கொண்டுவிட்டீர்கள் என்று தான் அர்த்தம். இது உங்களிடம் மிகவும் நாட்பட்ட பழக்கமாக ஆகிவிட்டபடியால், அங்கே நீங்கள் யார் என்று பார்ப்பதற்கு, உங்களது சொந்த ஆன்மாவைப் பார்ப்பதற்கு சிறு சிறு இடைவெளிகளோ, அல்லது சிறு ஜன்னலோ கூட கிடையாது.

ஆரம்பத்தில் இது ஒரு கடினமான போராட்டமாக இருக்கும். இது கஷ்டம் நிறைந்தது. இது கடினமானது தான்; ஆனால், முடியாதது அல்ல. நீங்கள் திடமான முடிவோடு இருந்தால், உங்கள் அகத் தேடுதலுக்கு நீங்கள் உங்களை முழுமையாக ஒப்புக் கொடுத்தால், அதன்பின்னர், கூடிய விரைவில் அது நடக்கும். நீங்கள் வெறுமனே தோண்டிக் கொண்டே போக வேண்டும். நீங்கள் இருப்போடு போராடிக் கொண்டே போக வேண்டும். விரைவில், நீங்கள் அந்த இருட்டைக் கடந்து, ஒளியின் பகுதிக்குள் நுழைந்துவிடுவீர்கள். மேலும், அந்த ஒளி தான் உண்மையான ஒளி, இந்த சூரியன் அல்லது சந்திரன் இவற்றின் ஒளியைவிடவும் மிகவும் உண்மையானது. ஏனெனில், வெளியில் உள்ள ஒளிகள் எல்லாம் தற்காலிகமானவை தான். அவைகள் கொஞ்ச



நாளைக்குத் தான் இருக்கும். சூரியன்கூட ஒருநாள் உயிரற்றுப் போகப் போகிறது. தங்களிடம் உள்ள எரிபொருட்கள் தீர்ந்தவுடன், காலையில் அணைந்து போகின்ற சிறு விளக்குகள் மட்டுமல்ல; அபரிமிதமான எரிபொருளைக் கொண்டுள்ள இந்த சூரியனும்கூட ஒவ்வொரு நாளும் இறந்து கொண்டு தான் இருக்கிறது. கூடிய விரைவில், அது ஒரு கருமையான குழி ஆகிவிடும். அது உயிரற்றுப் போய்விடும்; அதிலிருந்து எந்த ஒளியும் வராது. எவ்வளவு காலம் தான் அது உயிரோடு இருந்தாலும், அது முடிவில்லாதது ஆகாது. ஆனால், உங்களுக்குள் உள்ள ஒளி முடிவில்லாதது. அதற்கு ஆதியும் கிடையாது; அந்தமும் கிடையாது.

எனவே, நான் உங்களது குறைகளை விட்டுவிடும்படியோ, உங்களை நல்லவர்களாக இருக்கும்படியோ, உங்களது குணநலன்களை வளர்த்துக் கொள்ளவோ சொல்லவில்லை; கிடையாது; அது கிடையவே கிடையாது. எனக்கு உங்களது குணநலன் முக்கியமில்லை. நான் உங்களது தன்னுணர்வில் தான் ஆர்வம் காட்டுகிறேன்.

எனவே, அதிக விழிப்புணர்வுடன் இருங்கள்; அதிக தன்னுணர்வுடன் இருங்கள். வெறுமனே உங்களுக்குள் ஆழ்ந்து சென்று, உங்களது இருப்பின் மையத்தை கண்டுபிடிக்கும் வரை செல்லுங்கள். நீங்கள் இப்போது மேற்பரப்பில் தான் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். மேலும், மேற்பரப்பில் அங்கே எப்போதும் குழப்பம் தான் இருக்கும். நீங்கள் எந்த அளவுக்கு ஆழமாகச் செல்கிறீர்களோ, அந்த அளவுக்கு அங்கே அமைதி நிலவும். மேலும், அந்த அமைதி, ஒளி, ஆனந்தம் இவற்றின் அனுபவத்தில் உங்களது வாழ்க்கை வேறு ஒரு பரிமாணத்தில் நகர்ந்து செல்ல ஆரம்பிக்கிறது. அந்த தவறுகள், அந்த தப்பிதங்கள் மறைய ஆரம்பிக்கின்றன.

எனவே, தவறுகளையும், தப்புகளையும் பற்றி கவலைப்படாதீர்கள். ஒரே ஒரு விஷயத்தை மட்டும், ஒரே ஒரு கருத்தை மட்டும் மனதில் கொள்ளுங்கள். அதிக விழிப்புணர்வுடன் இருப்பது எப்படி, அதிக தன்னுணர்வுடன் இருப்பது எப்படி என்கின்ற அந்த ஒரே லட்சியத்தில் உங்களது முழு சக்தியையும் செலுத்துங்கள். நீங்கள், உங்களது முழு சக்தியையும் செலுத்தினால், அது நடக்கத் தான் போகிறது; அது தவிர்க்க முடியாதது. அது உங்களது பிறப்புரிமை.

ஒழுக்கம் என்பது நல்ல குணங்கள் மற்றும் கெட்ட குணங்களைப் பொறுத்து உள்ளது. ஒழுக்கம் என்பதன்படி நேர்மையுடனும், உண்மையாகவும், நம்பத்தகுந்த ஒருவர் தான் நல்ல மனிதன் எனப்படுகிறார்.

ஆனால், விழிப்புணர்வுள்ள ஒரு மனிதன் நல்லவனாக மட்டும் இருப்பதோடல்லாமல், அவன் அதற்கும் மேலானவனாகவும் இருக்கிறான். நல்ல மனிதனுக்கு அவனது நல்ல குணங்கள் தான் எல்லாமே. ஆனால், விழிப்புணர்வு உள்ள ஒரு மனிதனுக்கு நல்ல குணம் என்பது வெறும் ஒரு உப பொருள் போன்றது. நீங்கள், உங்களது ஆன்மா குறித்து தன்னுணர்வு பெறுகின்ற அந்த நொடிப்பொழுதிலேயே நல்ல குணங்கள் ஒரு நிழல் போல உங்களைப் பின்தொடர்ந்து வரும். அதன்பிறகு, நல்லவனாக இருப்பதற்கு நீங்கள் எந்தவிதமான முயற்சியும் செய்ய தேவையில்லை; நல்ல குணம் உங்களது இயல்பாக ஆகிவிடுகிறது. வெறுமனே, மரங்கள் பசுமையாக இருப்பது போன்று, நீங்களும் நல்லவனாக இருப்பீர்கள்.

ஆனால், "நலல மனிதன்" என்பவன் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும் என்கிற அவசியம் இல்லை. அவனது நல்ல குணம், அவனது பெரும் முயற்சியால் வந்தது. அவன் பொய் சொல்லுதல் அல்லது திருடுதல், உண்மை பேசாதிருத்தல், நேர்மையில்லாமை, வன்முறை ஆகிய இந்த கெட்ட குணங்களுக்கு எதிராக அவன் போராடி வந்துள்ளான். இவைகள் எல்லாம் அந்த நல்ல மனிதனுக்குள்ளும் இருக்கின்றன. ஆனால், அடக்கி வைக்கப்பட்ட நிலையில் மட்டுமே இருக்கின்றன; எந்த நேரத்திலும் அவைகள் வெடித்து வெளியே வரலாம்.

ஒரு நல்ல மனிதன், எந்த முயற்சியும் இல்லாமல், சுலபமாக கெட்டவனாக மாறிவிட முடியும். ஏனெனில், அவன் முயற்சி கொண்டு அடக்கி வைத்த அந்த கெட்ட குணங்கள் எல்லாம் அங்கே செயல் இழந்து இருக்கும். அவன் தனது முயற்சியை விட்டுவிட்டால், அந்த கெட்ட குணங்கள் உடனடியாக அவனது வாழ்வில் வெடித்து வெளியே வந்துவிடும். மேலும், அவனது நல்ல குணங்கள் எல்லாம் இயற்கையானவை அல்ல; அவனால் வளர்த்து எடுக்கப்பட்டவை மட்டுமே. நேர்மையாக இருப்பதற்கும், உண்மையானவனாக இருப்பதற்கும், பொய் சொல்லாமல் இருப்பதற்கும் அவன் கடின முயற்சி மேற்கொண்டிருக்கிறான். ஆனால், அது ஒரு முயற்சியாக இருப்பதால், அவன் அதில் களைப்படைந்துவிடுகிறான்.

நல்ல மனிதன் எப்போதும் சிடுசிடு என்று இருப்பான். ஏனெனில், அவன் அடக்கி வைத்திருக்கின்ற அவனது கெட்ட குணங்களைக் கண்டு அவன் பயந்து கொண்டே இருப்பான். மேலும், அவன் கருத்தூன்றி இருப்பான். ஏனெனில், அவனுக்குள் ஆழத்தில் அவன் தனது நல்ல குணத்திற்காக மதிக்கப்பட வேண்டும்; அதற்காக பாராட்டப்பட வேண்டும் என்று ஆசையோடு இருப்பான். மரியாதை பெற வேண்டும் என்பது தான் அவனது ஏக்கமாக இருக்கும். நீங்கள் "துறவிகள்" என்று



அழைப்பவர்களில் பெரும்பாலோர், வெறுமனே "நல்ல மனிதர்கள்" மட்டும் தான்.

இந்த "நல்ல மனிதன்" என்பதைத் தாண்டிச் செல்வதற்கு ஒரே ஒரு வழி மட்டுமே உள்ளது. அது என்னவென்றால், உங்களது இருப்பு நிலைக்கு மேலும் மேலும் விழிப்புணர்வைக் கொண்டு வருவது தான் அதுவாகும். விழிப்புணர்வு என்பது நீங்கள் வளர்த்து எடுக்க வேண்டிய ஒன்று அல்ல; அது ஏற்கனவே அங்கே உங்களுக்குள் உள்ளது; அதை வெறுமனே நீங்கள் விழிப்படையச் செய்ய வேண்டும். நீங்கள் முழுமையான விழிப்பு நிலையை அடையும் போது, நீங்கள் என்ன செய்தாலும் அது நல்லதாகவே இருக்கும். மேலும், நீங்கள் செய்யாத காரியங்கள் கெட்டவையாக இருக்கும்.



ஒரு நல்ல மனிதன், எந்த முயற்சியும் இல்லாமல், சுலபமாக கெட்டவனாக மாறிவிட முடியும். ஏனெனில், அவன் முயற்சி கொண்டு அடக்கி வைத்த அந்த கெட்ட குணங்கள் எல்லாம் அங்கே செயல் இழந்து இருக்கும். அவன் தனது முயற்சியை விட்டுவிட்டால், அந்த கெட்ட குணங்கள் உடனடியாக அவனது வாழ்வில் வெடித்து வெளியே வந்துவிடும்.



ஒரு நல்ல மனிதன், தான் நல்லது செய்ய வேண்டும் என்றால், அவன் நல்லதைச் செய்வதற்கு அளவற்ற முயற்சி மேற்கொள்ள வேண்டும். மேலும், அவன் கெட்டவைகளைத் தவிர்க்க வேண்டும். ஏனெனில், கெட்டவைகள் தொடர்ந்து அவனது ஆர்வத்தை தூண்டிக் கொண்டே இருக்கும். அவன் தேர்வு செய்ய வேண்டும். ஒவ்வொரு நொடிப்பொழுதும் அவன் நல்லதைத் தேர்ந்தெடுத்து செய்ய வேண்டும். மேலும், கெட்டதைத் தேர்ந்தெடுக்காமல் இருப்பதற்கு கவனமுடன் இருக்க வேண்டும். உதாரணமாக, மகாத்மா காந்தி போன்ற மனிதர்களை எடுத்துக் கொண்டால், அவர் ஒரு நல்ல மனிதர். அவர் தனது வாழ்நாள் முழுவதும் நல்லதன் பக்கமே இருப்பதற்கு கடின முயற்சி மேற்கொண்டார். ஆனால், அவர் தனது எழுபது வயதிலும் கூட பாலுறவுக் கனவுகளைக் கண்டுவந்தார். மேலும், அதற்காக அவர் மிகவும் கவலைப்பட்டார். "நான் விழித்திருக்கும் நேரங்களைப் பொருத்த மட்டில், என்னால் பாலியல் உணர்வுகளில் இருந்து விடுபட்டு முற்றிலும் சுதந்திரமானவனாக இருக்க முடிகிறது. ஆனால், எனது தூக்கத்தில் நான் என்ன செய்ய முடியும்? நான் பகல் முழுவதும் அடக்கி வைத்தவை எல்லாம் இரவில் வந்துவிடுகின்றன," என்று கூறுகிறார்.

இது எதைக் காட்டுகிறது என்றால், அது எங்கேயும் போகவில்லை; அது உங்களுக்குள் தான் வெறுமனே காத்துக் கொண்டிருந்திருக்கிறது. நீங்கள் ஒய்வாக இருக்கின்ற அந்த நேரத்தில், நீங்கள் உங்களது முயற்சியை விலக்கிக் கொள்ளும் போது, நீங்கள் அடக்கி வைத்திருந்த எல்லா கெட்ட குணங்களும் உங்களது கனவுகளில் வருவதற்கு ஆரம்பிக்கும். மேலும், நீங்கள் ஆழ்ந்து தூங்கும் போது, கண்டிப்பாக நீங்கள் ஒய்வாக இருந்து தான் தீரவேண்டும். மேலும், அப்போது நீங்கள், உங்களது அடக்கி வைக்கும் முயற்சியை விலக்கி வைத்துத் தான் தீர வேண்டும். உங்களது கனவுகள், உங்களது அடக்கி வைக்கப்பட்ட ஆசைகளாக இருக்கின்றன.

எனவே, நல்ல மனிதன் எப்போதும் இடைவிடாது போராட்டத்தில் இருக்கிறான். அவனது வாழ்க்கை மகிழ்ச்சியான ஒன்றாக இருக்காது; அவனால் முழு உள்ளத்தோடு சிரிக்க முடியாது; அவனால் பாட முடியாது; அவனால் நடனமாட முடியாது. எல்லாவற்றிலும் அவன் தொடர்ந்து தீர்மானங்களை எடுக்க வேண்டியதிருக்கிறது. அவனது மனம் முழுவதும் கண்டனங்களும், தீர்ப்புகளுமாகத் தான் உள்ளது. மேலும், நல்லவனாக இருப்பதற்கு கடின முயற்சி மேற்கொண்டு வருவதால், அதே போன்று தான் அவன் மற்றவர்களையும் தீர்மானிக்கிறான். அவனால் உங்களை, நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அப்படியே ஏற்றுக் கொள்ள முடியாது. நீங்கள் நல்லவனாக இருப்பதற்கான அவரது எண்ணங்களை பூர்த்தி செய்தால் மட்டுமே, அவனால் உங்களை ஏற்றுக் கொள்ள முடியும். மேலும், மக்களை அப்படியே அவனால் ஏற்றுக் கொள்ள முடியாதபடியால், அவன் அவர்களை கண்டனம் செய்வான். உங்களது துறவிகள் எல்லாம், எல்லோரையும் கண்டனம் செய்பவர்களாகத் தான் இருக்கிறார்கள்; அவர்களைப் பொருத்தவரையில், நீங்கள் எல்லோரும் பாவிகள் தான்.

உண்மையான சமயப்பற்று உள்ள மனிதனின் குணாதிசயங்கள் இவைகள் அல்ல. உண்மையிலேயே, சமயப்பற்றுடன் இருக்கின்ற ஒருவனிடம் எந்தவிதமான கண்டனங்களும், எந்தவிதமான தீர்மானங்களும் இருக்காது. அவனுக்குத் தெரிந்த ஒரே விஷயம், எந்தச் செயலும் கெட்டதும் அல்ல, எந்தச் செயலும் நல்லதும் அல்ல; விழிப்புணர்வுடன் இருப்பது நல்லது, விழிப்புணர்வு இல்லாமல் இருப்பது கெட்டது என்பது ஒன்று தான் ஆகும். நீங்கள் விழிப்புணர்வு இல்லாமல் ஏதோ ஒரு காரியத்தைச் செய்யலாம், இந்த உலகிற்கு அது நல்ல காரியமாகத் தெரியலாம். ஆனால், ஒரு சமயப்பற்று உள்ள மனிதனுக்கு அது நல்ல காரியம் ஆகாது. ஆனால், நீங்கள் ஏதாவது ஒரு கெட்ட காரியத்தைச் செய்யும் போது, நீங்கள் அந்த சமயநெறிமிக்க மனிதனைத் தவிர, மற்ற அனைவராலும் கண்டனம் செய்யப்படுவீர்கள்.



அவரால் உங்களை கண்டனம் செய்ய முடியாது. ஏனெனில், நீங்கள் தன்னுணர்வு இல்லாமல் இந்தக் காரியத்தைச் செய்துவிட்டீர்கள்; உங்களுக்குத் தேவை கருணையே தவிர, தீர்ப்பு அல்ல. கண்டனம் கூடாது. நீங்கள் நரகத்திற்குப் போக வேண்டியவர் அல்ல, யாருமே நரகத்திற்குப் போக வேண்டியவர் அல்ல.

முழுமையான விழிப்புணர்வு என்னும் கருத்திற்கு வரும் போது, அங்கே இது அல்லது அது என்ற தேர்வுக்கே இடமில்லை. அப்போது, நீங்கள் நல்லது எதுவோ அதை வெறுமனே செய்துவிட்டுப் போவீர்கள். நீங்கள் கள்ளம் கபடமற்று அதைச் செய்து விடுகிறீர்கள். உங்களது நிழல் உங்களைப் பின்தொடர்வது போல, எந்த முயற்சியும் இல்லாமல் நீங்கள் அதைச் செய்துவிடுவீர்கள். நீங்கள் ஓடினால் உங்களது நிழலும் ஓடும்; நீங்கள் நின்றுவிட்டால் உங்களது நிழலும் நின்றுவிடும். ஆனால், இதில் நிழல் என்பதன் பக்கமிருந்து அந்த எந்த முயற்சியும் இருக்காது.

எனவே, ஒரு விழிப்புணர்வு உள்ள மனிதனும், ஒரு நல்ல மனிதனும் ஒன்றானவர்கள் தான் என்று எண்ணிவிட முடியாது. அவனும் நல்லவனாகத் தான் இருப்பான். ஆனால், வேறுபட்ட வழியில், வேறுபட்ட கோணத்தில் நல்லவனாக இருப்பான். அவன் முயற்சி செய்து கொண்டிருப்பதனால், நல்லவனாக இருக்க மாட்டான்; அவன் விழிப்புணர்வுடன் இருப்பதால், அவன் நல்லவனாக இருப்பான். மேலும், விழிப்புணர்வோடு இருக்கும் போது கெட்டது, தப்பானது, இப்படிப்பட்ட கண்டன வார்த்தைகள் எல்லாம் ஒளியைக் கண்டு இருள் மறைவதைப் போன்று மறைந்துவிடும்.

நீங்கள் ஒழுக்கத்துடன் மட்டுமே இருக்க வேண்டும் என்று மதங்கள் முடிவெடுத்துவிட்டன. அவைகள் நன்னெறிக் கோட்பாடுகளாகவே இருக்கின்றன. அவைகளால் இந்த சமுதாயத்திற்குப் பயன் உண்டு; ஆனால், உங்களுக்கு அதனால் பயன் கிடையாது; தனிமனிதனுக்கு அதனால் பயன் கிடையாது. இவையெல்லாம், சமூகத்தால் உருவாக்கப்பட்ட சௌகரியங்கள். இயற்கையில், எல்லோரும் திருட ஆரம்பித்துவிட்டால், அதன்பிறகு, வாழ்வது சாத்தியப்படாது. எல்லோரும் பொய் சொல்ல ஆரம்பித்துவிட்டால், அதன்பின்னர், வாழ்க்கை சாத்தியமாகாது. எல்லோரும் நேர்மை அற்றவராக இருந்தால், உங்களால் இருக்கவே முடியாது. எனவே, கீழ்மட்டத்தில், இந்தச் சமுதாயத்திற்கு ஒழுக்கம் என்பது தேவைதான்; அதற்கு ஒரு சமுதாயப் பயன்பாடு உள்ளது. ஆனால், அது ஒரு சமயப் புரட்சி அல்ல.

எனவே, வெறுமனே நல்லவனாக இருப்பதன் மூலம் திருப்தி அடைந்துவிடாதீர்கள். எது நல்லது, எது கெட்டது என்று சிந்திக்கவே

தேவையில்லை என்கின்ற அந்த நிலைக்கு நீங்கள் வரவேண்டும் என்பதை நினைவில் கொள்ளுங்கள். உங்களது விழிப்புணர்வே, உங்களது அந்த தன்னுணர்வே, எது நல்லதோ - அதைநோக்கி உங்களை எடுத்துக் கொண்டு போய்விடும். அங்கே, அடக்கி வைத்தல் என்பது இருக்காது. மகாத்மா காந்தியை, ஒரு விழிப்புணர்வு உள்ள மனிதன் என்று என்னால் அழைக்க முடியாது. அவர் ஒரு நல்ல மனிதர் மட்டுமே. மேலும், அவர் நல்லவராக இருப்பதற்கு, உண்மையிலேயே கடின முயற்சி மேற்கொண்டார். நான், அவரது நோக்கங்களை சந்தேகிக்கவில்லை. ஆனால், அவர் நல்லவைகளின் மீது அதீத பற்று வைத்திருந்தார்.

விழிப்புணர்வு உள்ள ஒரு மனிதன், எதன் மீதும் அதீத பற்று வைத்திருக்க மாட்டான். அவனுக்கு, அளவுக்கு அதிகமான பற்று இருக்காது. அவன் வெறுமனே அமைதியாகவும், மௌனமாகவும், தொல்லையற்றும், ஒய்வுடன் இருப்பான். அவனது அமைதியில் எது மலர்ந்தாலும், அது நல்லதாகத் தான் இருக்கும். அது எப்போதும் நல்லதாகத் தான் இருக்கும். அவன், எதையும் தேர்ந்தெடுக்காத விழிப்புணர்வில் வாழ்வான்.

ஆகவே, நல்ல மனிதன் என்கிற சாதாரண கருத்தைத் தாண்டிச் செல்லுங்கள். நீங்கள் நல்லவனாகவும் இருக்க மாட்டீர்கள்; நீங்கள் கெட்டவனாகவும் இருக்க மாட்டீர்கள். நீங்கள் வெறுமனே உஷாராக, தன்னுணர்வுடன், விழிப்புணர்வுடன் மட்டுமே இருப்பீர்கள். அதன்பின்னர், அதைப் பின்தொடர்ந்து வருவதெல்லாம் நல்லவைகளாகவே இருக்கும். இதை வேறுவிதமாக என்னால் சொல்ல முடியும். அது என்னவென்றால், உங்களது முழு விழிப்புணர்வு நிலையில், நீங்கள் கடவுள் தன்மை என்னும் தன்மையைப் பெற்று விடுவீர்கள். மேலும், நல்லவை என்பவை இந்த கடவுள் தன்மையின் உப விளைவுகள் மட்டுமே.

ஒருநாள் நீங்கள் கடவுளைக் காண வேண்டும் என்பதற்காகத் தான் மதங்கள் உங்களை நல்லவராக இருப்பதற்குப் போதிக்கின்றன. அது சாத்தியமற்றது. எந்த ஒரு நல்ல மனிதனும் கடவுள் தன்மையைக் கண்டதில்லை. இதற்கு நேர் எதிரானதை நான் உங்களுக்கு கற்பிக்கிறேன். முதலில், கடவுள் தன்மையைக் கண்டு கொள்ளுங்கள். அதன்பிறகு, நல்ல குணம் தானாகவே வரும். மேலும், நல்ல குணமானது இப்படி தானாகவே வரும்போது, அதற்கென்று ஒரு அழகு, ஒரு அருள், ஒரு எளிமை, ஒரு பணிவு இருக்கும். இப்போதும், இதற்குப் பின்னாலும் அது எந்தவிதமான பாராட்டையும் கேட்காது. அதுவே தனக்குப் பாராட்டாகிவிடும்.



# கவனித்தலில் பரிசோதனைகள் செய்

மக்கள், மற்றவர்களைத் தான் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களும், ஒருபோதும், தங்களைக் கவனிப்பதைப் பற்றி கவலை கொள்வதில்லை. ஒவ்வொருவரும் கவனித்துக் கொண்டு தான் இருக்கிறோம். அது ஒரு மேலோட்டமான கவனிப்பு. அடுத்தவன் என்ன சொல்கிறான், அடுத்தவன் என்ன உடை அணிந்திருக்கிறான், அடுத்தவன் எப்படி தோற்றமளிக்கிறான், இப்படித்தான் கவனிக்கிறோம். நாம் ஒவ்வொருவரும் கவனித்துக் கொண்டு தான் இருக்கிறோம். எனவே, கவனித்தல் என்பதை உங்களது வாழ்க்கையில் புதிதாக அறிமுகப்படுத்த வேண்டியதில்லை. அது, கொஞ்சம் ஆழமாக மட்டுமே செல்ல வேண்டும். மற்றவர்கள் மீதுள்ள அந்த கவனித்தலை எடுத்து, அதை அப்படியே உங்களது உள் உணர்வுகள், எண்ணங்கள், மனநிலைகள் ஆகியவற்றை நோக்கி திருப்ப வேணடும். மேலும், இறுதியாக, அந்த கவனிப்பாளன் மீது திருப்ப வேண்டும்.

ரயிலில், ஒரு பாதிரியாரின் எதிரில் யூதன் ஒருவன் உட்கார்ந்து கொண்டிருந்தான். அந்த யூதன் அவரிடம், "உங்களது வழிபாட்டினைப் பற்றி எனக்கு சொல்லுங்கள். நீங்கள் ஏன் உங்களது ஆடையில் கழுத்துப் பகுதியை பின்னால் மாற்றி அணிகிறீர்கள்?" என்று கேட்டான்.

அதற்கு அந்த பாதிரியார், "நான் ஒரு அருட்தந்தை என்பதால் அப்படி அணிகிறேன்," என்றார்.

"நானும் கூட ஒரு தந்தை தான். ஆனால், நான் உங்களைப் போன்று அணியவில்லையே," என்று கேட்டான் அந்த யூதன்.

"அப்படியா? ஆனால், நான் ஆயிரக்கணக்கானவர்களின் அருட்தந்தை," என்றார் பாதிரியார்.

"அப்படியானால், ஒருவேளை, நீங்கள் உங்களது கால்சட்டையை மட்டும் மாற்றி பின்பக்கம், முன்பக்கம் இருக்கும்படி அணிந்திருக்க வேண்டும்" என்றான் அந்த யூதன்.

மக்கள், மற்றவர்களை மிகவும் உன்னிப்பாக கவனிப்பார்கள்.

இரண்டு பேர் நடைப்பயிற்சி சென்றார்கள். திடீரென்று, அப்போது மழை பெய்ய ஆரம்பித்துவிட்டது.

"சீக்கிரம் உங்களது குடையை விரியுங்கள்," என்றான் ஒருவன் மற்றவரிடம்.

"அது உதாவது. ஏனெனில், எனது குடை முழுவதும் ஓட்டையாக உள்ளது," என்றான் அடுத்தவன்.

"அப்படியானால், ஏன் முதலில் இதைக் கொண்டு வந்தீர்கள்?"

"இப்படி மழை பெய்யும் என்று நான் நினைக்கவில்லை," என்றான் அடுத்தவன்.

இப்படி, மற்றவர்களின் பொருத்தமற்ற செயல்களைக் கண்டு, நீங்கள் சுலபமாகச் சிரிக்கலாம். ஆனால், நீங்கள் எப்போதாவது உங்களைப் பார்த்து சிரித்ததுண்டா? பொருத்தமற்ற செயல் ஏதாவது நீங்கள் செய்யும் போது, நீங்களே உங்களை கையும் களவுமாகப் பிடித்ததுண்டா? கிடையாது. நீங்கள் உங்களைக் கவனிக்காமலேயே விட்டு விடுகிறீர்கள். உங்களது முழு கவனித்தலும் மற்றவர்களைப் பற்றியே தான் இருக்கிறது. மேலும், இது உங்களுக்கு எந்த உதவியும் செய்யாது.

## காலத்தை வெல்ல நேரத்தை கடைப்பிடி

நீங்கள், உங்கள் முன்னால் உங்களது கைக்கடிகாரத்தை வைத்து, அதில் உள்ள விநாடி முள்ளின்மீது உங்களது கண்களால் கவனித்து வந்தால், அது முழுவதாக ஒரு நிமிடம் நகர்ந்து செல்லும்வரை கூட, நீங்கள் அதைக் கவனிக்க முடியாததைக் கண்டு, நீங்களே ஆச்சரியப்படுவீர்கள். ஒருவேளை, பதினைந்து விநாடி, இருபது விநாடி அல்ல அதிகபட்சமாக, 30 விநாடி வரை கவனிப்பீர்கள். அதன்பிறகு, நீங்கள் மறந்துவிடுவீர்கள். நீங்கள் வேறு ஏதோ ஒரு எண்ணத்தில் சென்று விடுவீர்கள். மேலும், அதன்பிறகு திடீரென்று, நீங்கள் அந்த விநாடி முள் நகர்வதை கவனிக்க வேண்டுமே என்று நினைவு கொள்வீர்கள். தொடர்ந்து ஒரு நிமிட நேரம்கூட விழிப்புணர்வோடு இருப்பதென்பது மிகவும் கடினமானது. ஆகவே, இது ஒரு குழந்தைகளின் விளையாட்டு அல்ல என்பதை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். நீங்கள், உங்களது வாழ்க்கையில் சிறிய விஷயங்களிலும் கூட விழிப்புணர்வுடன் இருப்பதற்கு முயற்சி செய்யும் போது, நீங்கள் அதை நினைவில் வைத்துக் கொள்ள பலமுறை மறந்துவிடுவீர்கள். நீங்கள், அதை விட்டுவிட்டு வேறு எதையோ நினைத்துக் கொண்டு வெகுதூரம் சென்றுவிடுவீர்கள். நீங்கள் மீண்டும் நினைவு கொள்ளும் போது, அதற்காக குற்ற உணர்வு கொள்ள வேண்டாம். ஏனெனில், அது நீங்கள் மாட்டிக் கொள்ளும் பொறிகளில் ஒன்று.



நீங்கள் குற்ற உணர்வு கொண்டால், அதன்பிறகு நீங்கள் பயிற்சி செய்து கொண்டு வருகின்ற அந்த விழிப்புணர்விற்கு நீங்கள் மீண்டும் வர முடியாமல் போய்விடும். அதற்காக, குற்ற உணர்வு கொள்ள வேண்டியதில்லை; அது இயல்பானது தான். அதற்காக மனம் வருந்த வேண்டாம்; அது இயல்பானது தான். மேலும், இது ஒவ்வொரு சாதகனுக்கும் நடக்கிறது. அதை இயல்பானதாக ஏற்றுக் கொள்ளுங்கள். இல்லையெனில், நீங்கள் மனம் வருந்துவதிலோ, குற்றவுணர்வு கொள்வதிலோ மாட்டிக் கொள்வதால், உங்களால் ஒருசில நொடிகள் கூட நினைவில் வைத்துக் கொள்ள முடியாமல், நீங்கள் மறந்து கொண்டே போவீர்கள்.

மகாவீரர் என்னும் சமண குரு மட்டும் தான், ஒரு மனிதன் தொடர்ந்து 48 நிமிடங்கள் நினைவில் வைத்துக் கொள்ள முடியுமெனில், விழிப்புணர்வுடன் இருக்க முடியுமெனில், அது போதும் - அவன் மெய்ஞானி ஆகிவிடலாம்; அவனை யாரும் தடுக்க முடியாது என்பதை உண்மையாகவே கண்டுபிடித்த, இந்த மனித வரலாற்றிலேயே முதல் மனிதர் ஆவார். வெறும் 48 நிமிடங்கள் தான். ஆனால், 48 நொடிகூட அது கஷ்டமானது! அநேக விதங்களில் கவனம் கலைந்துவிடும்.

எனவே, அதற்காக மன வருத்தமோ, குற்ற உணர்வோ கொள்ள வேண்டாம். நாம் என்ன செய்து கொண்டிருக்கிறோம் என்பதை மறந்து விட்டோமே என்று நீங்கள் நினைக்கின்ற அந்த நொடிப் பொழுதிலேயே, நீங்கள் வெறுமனே திரும்பவும் அதற்கு வாருங்கள். வெறுமனே திரும்பி வந்து, மீண்டும் அந்த வேலையைச் செய்யுங்கள். கீழே கொட்டிய பாலுக்காக அழுவதோ, கதறுவதோ வேண்டாம்; அது முட்டாள்தனமானது.

அதற்கு கொஞ்ச காலம் பிடிக்கும்; ஆனால், கொஞ்சம் கொஞ்சமாக நீங்கள் மேலும் மேலும் விழிப்புணர்வுடன் இருப்பதை நீங்கள் அறிவீர்கள். ஒருவேளை, ஒரு நிமிடம் முழுவதும் அல்லது இரண்டு நிமிடம் இருப்பீர்கள். அப்படி இரண்டு நிமிடம் நீங்கள் விழிப்புணர்வுடன் இருந்ததே, உங்களுக்கு அந்த அளவுக்கு சந்தோஷத்தைக் கொடுக்கும். ஆனால், அந்த சந்தோஷத்தில் நீங்கள் பிடிபட்டு விடாதீர்கள். நீங்கள் ஏதோ ஒன்றை அடைந்துவிட்டதாக நினைத்துவிடாதீர்கள். அது ஒரு தடை ஆகிவிடும். இவையெல்லாம், ஒருவன் இழந்துவிடுவதற்கான அமைப்பு முறைகள். ஒரு சிறு லாபம் கிடைத்த உடன், ஏதோ, தான் வீடுபேறினை அடைந்துவிட்டதாக ஒருவன் நினைத்துக் கொள்ளவான்.

மெதுவாகவும், பொறுமையாகவும் இருந்து கொண்டே செல்லுங்கள். அங்கே அவசரம் வேண்டாம். உங்களுக்கு எல்லையற்ற

காலம் உள்ளது. வேகமான இருப்பதற்கு முயற்சி செய்யாதீர்கள். அப்படி பொறுமை இல்லாமல் இருப்பது உதவாது. விழிப்புணர்வு என்பது ஆறு வார காலத்தில் வளர்ந்து, பருவ காலத்தில் மலர்ந்து, அதன்பின்னர், போய்விடுகின்ற பருவ மலர்கள் போன்றது அல்ல. விழிப்புணர்வு என்பது, தான் வளர்வதற்கு நூறு ஆண்டுகளை எடுத்துக் கொண்டாலும்கூட, ஆயிரம் ஆண்டுகள்கூட இருக்கின்ற, வானத்தில் 150, 200 அடி உயரம்கூட வளர்கின்ற, லெபனான் நாட்டின் ஜெடார் மரங்கள் போன்றது.

விழிப்புணர்வு மெதுவாகத் தான் வளரும். ஆனால், அது வளரும். ஒருவர் வெறுமனே பொறுமையாக இருக்க வேண்டும். அது வளரும் போது, இதற்கு முன்புவரை நீங்கள் ஒருபோதும் உணர்ந்திராத அநேக விஷயங்களை நீங்கள் உணர ஆரம்பிப்பீர்கள். உதாரணமாக, நீங்கள் உடலில் அநேக முறுக்கேறிய நிலைகளைச் சுமந்து கொண்டிருப்பதை உணர ஆரம்பிப்பீர்கள். இவைகளை, நீங்கள் ஒருபோதும் அறிய முடியாது. ஏனெனில், இவைகள் கண்களுக்குப் புலப்படாத முறுக்கேறிய நிலைகள். இப்போது, அங்கே உங்களது விழிப்புணர்வு இருப்பதால், உங்களால் அந்த மெல்லிய, மென்மையான முறுக்கேறிய நிலைகளை உணர முடியும். ஆகவே, அப்போது நீங்கள், உங்கள் உடலில் எங்கெல்லாம் அந்த முறுக்கேறிய நிலையை உணர்கிறீர்களோ, அந்தப் பகுதியை தளர்வடையச் செய்யுங்கள். இப்படி, உங்களது உடல் முழுவதும் தளர்வுடன் இருக்கும் போது, உங்களது விழிப்புணர்வு வேகமாக வளரும். ஏனெனில், உடலின் அந்த முறுக்கேறிய நிலைகள், இதுவரை தடைகளாக இருந்து வந்தன.

இன்னமும் உங்களது விழிப்புணர்வு அதிகம் வளரும் போது, நீங்கள் தூக்கத்தில் மட்டும் கனவு காணாமல், நீங்கள் விழித்துக் கொண்டிருக்கும் போதும் கனவு கண்டு கொண்டிருக்கிறீர்கள் என்பதை அறிந்து ஆச்சரியப்படுவீர்கள். அந்த கனவு, உங்களது விழிப்பு நிலையிலும்கூட, ஒரு அடி ஓட்டமாக உங்களுக்குள் ஓடிக் கொண்டிருக்கும். எந்த நேரத்திலும் உங்களது கண்களை மூடிக்கொண்டு பாருங்கள், அப்போது ஏதாவது ஒரு கனவு, வானத்தில் மேகம் செல்வதைப் போன்று சென்று கொண்டே இருக்கும். ஆனால், உங்களது விழிப்புணர்வு கொஞ்சம் அதிகமாக ஆன பிறகு மட்டும் தான், உங்களது விழிப்பு நிலை என்பது உண்மையான விழிப்பு நிலை அல்ல என்பதை நீங்கள் கண்டு கொள்வது சாத்தியமாகும். ஒரு கனவு அங்கே மிதந்து கொண்டே செல்லும். மக்கள் இதை, பகல் கனவு என்கின்றனர். மக்கள், தங்களது நாற்காலியில் ஒய்வாக அமர்ந்து, ஒரு நொடிப்பொழுது தங்கள் கண்களை மூடினால் போதும், உடனே இந்தக் கனவு தொடங்கிவிடும். அப்போது அவர்கள் இந்த நாட்டின் ஜனாதிபதியாகவோ, அல்லது ஏதோ மிகப்பெரிய காரியத்தைச் செய்ததாகவோ அல்லது ஏதாவது ஒன்றைப் பற்றி சிந்திக்க ஆரம்பித்துவிடுவார்கள். அந்த நேரத்தில், தாங்கள் காணும் கனவு அர்த்தமற்றது என்பதையும்கூட அவர்கள் அறிவார்கள். நீங்கள் இந்த நாட்டின் ஜனாதிபதி கிடையாது. ஆனாலும் கூட, அந்த கனவில் ஏதோ ஒன்று இருப்பதால், உங்களையும் மீறி அது தொடர்கிறது. விழிப்புணர்வானது, நீங்கள் விழித்துக் கொண்டிருக்கும் போது காண்கின்ற கனவுகளின் அடுக்குகளை நீங்கள் அறிந்து கொள்ளும்படி செய்துவிடும். மேலும், அவைகள் கலைந்து செல்லவும் ஆரம்பித்து விடும். எப்படி இருள் நிறைந்த ஒரு அறைக்குள், நீங்கள் ஒரு ஒளி விளக்கை கொண்டு வந்தவுடன், அந்த இருள் எப்படி கலைந்து செல்ல ஆரம்பிக்கிறதோ, அதே போன்று, உங்களது பகல் கனவுகளும் கலைந்து போகும்.



## புலன் கடந்த மெய்தீண்டல்

நடத்தல், உட்கார்ந்திருத்தல், சாப்பிடுதல், இப்படி நீங்கள் எதைச் செய்தாலும் அல்லது நீங்கள் எதுவுமே செய்யாமல் வெறுமனே சுவாசித்துக் கொண்டு, புல் தரையில் படுத்து ஓய்வு எடுக்கும் போது கூட, நீங்கள் இவற்றையெல்லாம் கவனிப்பவர் என்பதை ஒருபோதும் மறந்துவிடாதீர்கள்.

நீங்கள் மீண்டும் மீண்டும் இதை மறந்துவிடுவீர்கள். நீங்கள் ஏதாவது ஒரு எண்ணத்தில், ஏதாவது ஒரு உணர்வில், ஏதாவது மன எழுச்சியில், ஏதாவது ஒரு உணர்ச்சிக் கருத்தில் உங்களை ஈடுபடுத்திக் கொள்வீர்கள். இப்படி, இதையெல்லாம் நீங்கள் கவனிப்பவராக இருப்பதில் இருந்து, இவைகள் உங்களை விலகிச் செல்ல வைத்துவிடும். மீண்டும் நினைவு கொண்டு, உங்களது கவனித்தல் என்னும் மையத்திற்கு திரும்பவும் ஓடிப் போங்கள்.

தொடர்ந்து இதை உங்களுக்குள் செய்கின்ற, ஒரு செயல்முறையாக ஆக்கிவிடுங்கள். வாழ்க்கை எப்படி தனது முழுத் தன்மையையும் மாற்றிவிட்டது என்று நினைத்து, நீங்கள் ஆச்சரியமடைவீர்கள். நான், என்னுடைய கைகளை எந்தவிதமான கவன நிறைவும் இல்லாமல் அசைக்க முடியும். அதே போன்று, எனக்குள் கவன நிறைவுடன் இருந்து கொண்டு, எனது கையின் முழு அசைவுகளையும் கவனித்துக் கொண்டும் கூட, நான் எனது கையை அசைக்க முடியும். இந்த அசைவுகள் இரண்டும் முற்றிலும்

வேறுபட்டதாக இருக்கும். முதல் அசைவு, எந்திரன் அசைவு; இயந்திரத்தனமானது. இரண்டாவது அசைப்பது, தன்னுணர்வுள்ள அசைவு. மேலும், நீங்கள் தன்னுணர்வுடன் இருக்கும் போது, நீங்கள் உங்களுக்குள் இருந்து கொண்டு அந்த கையின் அசைவை உணர முடியும். நீங்கள் தன்னுணர்வு இல்லாமல் இருக்கும் போது, நீங்கள் வெளியில் தான் உங்களது கைகளை அறிந்தவர் ஆவீர்கள்.

வெளியில், முகம் பார்க்கும் கண்ணாடியில் மட்டுமே நீங்கள் உங்களது முகத்தை அறிவீர்கள். ஏனெனில், நீங்கள் ஒரு கவனிப்பாளர் கிடையாது. நீங்கள் கவனிக்க ஆரம்பித்தால், நீங்கள் உங்களுக்குள் இருந்து கொண்டும் கூட உங்கள் முகத்தை உணர முடியும். மேலும், உங்களுக்குள் இருந்து கொண்டு கவனித்தல் என்பது அப்படிப்பட்டதொரு அனுபவமாக இருக்கும். அதன்பிறகு, கொஞ்சம் கொஞ்சமாக அதிசயமான விஷயங்கள் நிகழ ஆரம்பிக்கும். எண்ணங்கள் மறைந்து போகும், உணர்ச்சிகள் மறைந்து போகும், மன எழுச்சிகள் மறைந்து போகும். மேலும், உங்களைச் சுற்றிலும் ஒரு அமைதி நிலவும். அமைதி என்னும் கடலின் நடுவே, நீங்கள் ஒரு தீவு போன்ற இருப்பீர்கள். உங்களது ஆன்மாவின் மத்தியில் ஒரு ஒளிச்சுடரானது, அதன் ஒளிக்கதிர்களை உங்களது ஆன்மா முழுவதும் பரப்புவதை வெறுமனே கவனிப்பவராக இருங்கள்.

ஆரம்பத்தில், இது உங்களுக்குள் ஏற்படுத்துகின்ற ஒரு அனுபவமாகத் தான் இருக்கும். மெதுவாக இந்த ஒளிக்கதிர்கள் உங்களது உடலைவிட்டு வெளியேயும் பரவும். அந்தக் கதிர்கள் மற்றவர்களைச் சென்றடையும். மற்றவர்கள் உணர்வுள்ளவராக இருந்தால், உடனடியாக அவர்களும் கண்களுக்குத் தெரியாத ஏதோ ஒன்று அவர்களைத் தொட்டது போன்று உணர்வதைப் பார்த்து, நீங்கள் ஆச்சரியமும் அதிர்ச்சியும் அடைவீர்கள். உதாரணமாக, நீங்கள் நடந்து செல்லும் போது, யார் பின்னாலாவது நடந்து செல்லும் போது, உங்களை நீங்கள் கவனித்துக் கொண்டே சென்றால், உங்களுக்கு முன்னால் செல்பவர் எந்த ஒரு காரணமும் இல்லாமல் திடீரென்று திரும்பிப் பார்ப்பார். இது, கிட்டத்தட்ட நிச்சயம் நடக்கும். நீங்கள் உங்களை கவனித்துக் கொண்டே நடக்கும் போது, அந்த நிறை கவனம் தனது அதிர்வுகளை பரப்ப ஆரம்பிக்கும். எனவே, அது உங்களுக்கு முன்னால் செல்கின்ற அந்த மனிதரை கண்டிப்பாக தொட்டே ஆகவேண்டும். மேலும், கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஒரு தொடுதல் நடக்கும் போது, அவர் திரும்பித் தான் பார்ப்பார். "என்ன விஷயம்?" என்று திரும்பிப் பார்ப்பார். ஆனால் நீங்களோ, உங்களது கைகள் கூட அவரைத் தொட முடியாத தூரத்தில் இருப்பீர்கள்.



நீங்கள் ஒரு பரிசோதனை செய்து பார்க்கலாம். யாராவது தூங்கிக் கொண்டிருக்கும் போது, அவர்கள் அருகில் உட்கார்ந்து கொண்டு, நீங்கள் வெறுமனே உங்களைப் பார்த்துக் கொண்டிருங்கள். அப்போது, அந்த மனிதர் திடீரென்று விழித்து எழுவார். கண்களைத் திறந்து, தன்னை யாரோ தொட்டதைப் போன்று சுற்றுமுற்றும் பார்ப்பார்.

கொஞ்சம் கொஞ்சமாக நீங்களும் கூட அந்தத் தொடுதலை உணர ஆரம்பித்துவிடுவீர்கள். அதுதான் அதிர்வலை என்று அழைக்கப்படுகிறது. இது ஒரு இல்லாத விஷயம் அல்ல. மற்றவர்களும் இதை உணர்வார்கள்; நீங்களும் கூட மற்றவரைத் தொட்டுவிட்டதை உணர்வீர்கள்.

இதில், தொடப்படுதல் என்கிற வார்த்தை மிகவும் சிறப்பாக பயன்படுத்தப்பட்டுள்ளது. நீங்கள் அந்த மனிதரால், "நான் தொடப்படுவதை உணர்ந்தேன்," என்று கூறும்போது, அதன் அர்த்தம் என்ன என்று புரிந்து கொள்ளாமல் கூட நீங்கள் இதை உபயோகிக்கலாம். அவர் எந்த வார்த்தையும் கூட உங்களிடம் கூறியிருக்க மாட்டார். அவர் வெறுமனே உங்களைக் கடந்து சென்றிருப்பார். அவர், ஒரே ஒரு முறை உங்களது கண்களை உற்றுப் பார்த்த உடன், நீங்கள் அந்த மனிதரால் தொடப்பட்டது போல் உணர்கிறீர்கள். அது வெறும் வார்த்தையாக இல்லாமல், அது உண்மையாகவே நடக்கிறது. அதன்பிறகு, இந்தக் கதிர்கள், மக்கள், விலங்குகள், மரங்கள், பாறைகள் இப்படி எல்லாவற்றிலும் பரவிக் கொண்டே செல்லும். மேலும், ஒருநாள் இந்த பிரபஞ்சம் முழுவதையும் நீங்கள் தொடுவதை உங்களுக்குள் இருந்து நீங்கள் காண்பீர்கள்.

## விபாஸனா

புத்தரின் வழி, விபாஸனா தியானமாக இருந்தது. விபாஸனா என்றால், சாட்சிபாவனை என்று அர்த்தம். மேலும், இதுவரை யாரும் கண்டுபிடிக்காத ஒரு மிகப்பெரிய சுவாசத்தை கவனிப்பதாகும். வெறுமனே உங்களது சுவாசத்தைக் கவனிப்பதாகும். சுவாசம் என்பது, அப்படிப்பட்டதொரு எளிமையான, இயற்கையான விஷயம். மேலும், அது ஒருநாளில் இருபத்தி நான்கு மணிநேரமும் அங்கு உள்ளது. நீங்கள், அதற்கு எந்த முயற்சியும் செய்ய வேண்டியதில்லை. நீங்கள் ஒரு மந்திரத்தை உச்சரிக்க வேண்டும் என்றால், அதன்பிறகு நீங்கள் அதற்கு ஒரு முயற்சி செய்ய வேண்டும். நீங்கள் ராம், ராம், ராம் என்று கூறுவதற்கு, உங்களைக் கட்டாயப்படுத்த வேண்டியதிருக்கும். நீங்கள்,

தொடர்ந்து உங்களைக் கஷ்டப்படுத்த வேண்டியதிருக்கும். மேலும், நீங்கள் கண்டிப்பாக பல தடவைகள் மறந்து போக நேரிடும். மேலும், ராம் என்கிற அந்த வார்த்தையும் கூட, மீண்டும் மனதின் ஏதோ ஒன்றாகத் தான் இருக்கும். எனவே, மனதிலிருந்து வருகின்ற ஏதோ ஒன்று, ஒருபோதும் உங்களை, மனதைக் கடந்து செல்ல வழிநடத்திச் செல்லாது.

புத்தர் முற்றிலும் வேறுபட்டதொரு கோணத்தைக் கண்டுபிடித்தார். வெறுமனே உங்களது சுவாசத்தை கவனியுங்கள். அதாவது, சுவாசம் உள்ளே போகிறது, சுவாசம் வெளியே வருகிறது. இதைக் கவனியுங்கள்.

இதில், நீங்கள் நான்கு இடங்களில் கவனிக்க வேண்டும். அமைதியாக உட்கார்ந்து கொண்டு வெறுமனே சுவாசம் செல்வதை பார்க்க ஆரம்பியுங்கள். சுவாசம் செல்வதை உணர ஆரம்பியுங்கள். சுவாசக் காற்று உள்ளே செல்வது தான் முதல் இடம். அதன்பிறகு, அந்த சுவாசம் உள்ளே இருக்கின்ற போது அது நிற்கிறது. ஒரு சிறு நொடிப்பொழுது, ஒரு விநாடியில் பாதி நேரம் அது நிற்கிறது. அது தான் நீங்கள் கவனிக்க வேண்டிய இரண்டாவது இடம். அதன்பிறகு, அந்த சுவாசம் மீண்டும் திரும்பி வெளியே போகிறது. இதுதான் நீங்கள் கவனிக்க வேண்டிய மூன்றாவது இடம். அதன்பிறகு, அந்த சுவாசம் முழுவதும் வெளியே சென்றபின்னர், ஒரு விநாடியில் கொஞ்ச நேரம் அது நிற்கிறது. இதுதான் நீங்கள் கவனிக்க வேண்டிய நான்காவது இடம். அதன்பிறகு, சுவாசம் உள்ளே மீண்டும் வர ஆரம்பிக்கிறது ... ... இது தான் சுவாசத்தின் சுற்று. நீங்கள் இந்த நான்கு இடங்களையும் கவனிக்க முடியுமெனில், இப்படிப்பட்ட ஒரு எளிய செயல்முறையினால் விளையும் அற்புதங்களைப் பார்த்து நீங்கள் ஆச்சரியமடைவீர்கள்; வியப்பில் ஆழ்ந்து விடுவீர்கள். ஏனெனில், மனம் என்பது இதில் ஈடுபடவே இல்லை.

கவனித்தல் என்பது மனதின் குணம் கிடையாது. கவனித்தல் என்பது ஆன்மாவின் குணம், தன்னுணர்வின் குணம். கவனித்தல் என்பது ஒரு மனதின் செயல்பாடே அல்ல. நீங்கள் கவனிக்கும் போது மனம் நின்று போகிறது, இல்லாமல் போகிறது. ஆம், ஆரம்பத்தில் அநேக தடவைகள் நீங்கள் இதை மறந்துவிடுவீர்கள். மேலும், இந்த மனம் உள்ளே வந்து, அது தனது பழைய விளையாட்டுகளை விளையாட ஆரம்பித்துவிடும். நீங்கள் மறந்துவிட்டீர்கள் என்பதை நீங்கள் நினைவுபடுத்தும் போது, அதில் மனம் வருந்ததோ, குற்ற உணர்வு கொள்ள வேண்டிய அவசியமோ கிடையாது. மீண்டும் கவனிப்பதற்கு திரும்பிச் செல்லுங்கள். மீண்டும் உங்களது சுவாசத்தை கவனிப்பற்கு திரும்பிச் செல்லுங்கள். மெதுவாக, மெதுவாக இந்த மனதன் இடையூறு கொஞ்சம் கொஞ்சமாகக் குறையும்.



மேலும், நீங்கள் உங்களது சுவாசத்தை 48 நிமிடங்கள் தொடர்ந்து கவனிக்க முடியுமெனில், நீங்கள் மெய்ஞானம் பெற்றவர் ஆகிவிடுவீர்கள். வெறும் நாற்பத்தி எட்டு நிமிடமா? என்று எண்ணி நீங்கள் ஆச்சரியப்படலாம். ஏனெனில், இது மிகவும் கடினமான ஒன்று அல்ல என்று நீங்கள் நினைக்கலாம். வெறும் 48 நிமிடங்கள் தானே! ஆனால், இது மிகவும் கடினமானது. 48 விநாடிகள் கூட ஆகியிருக்காது; அதற்குள் நீங்கள் அநேக தடவை உங்களது மனதிற்கு பலிகடா ஆகியிருப்பீர்கள். ஒரு கைக்கடிகாரத்தை முன்னே வைத்துக் கொண்டு இதை முயற்சி செய்யுங்கள். ஆரம்பத்தில், அறுபது விநாடிகள் கூட உங்களால் கவனிக்க முடியாது. அந்த அறுபது விநாடிகளில், அதாவது ஒரு நிமிடத்தில், நீங்கள் அநேக தடவை தூங்கிவிடுவீர்கள். கவனித்தல் என்பதைப் பற்றி நீங்கள் மறந்துபோய் இருப்பீர்கள். அந்த கைக்கடிகாரம், உங்களது கவனித்தல், இரண்டுமே மறந்து போயிருக்கும். ஏதாவது ஒரு எண்ணம் உங்களை மிக மிக தொலைவிற்கு கொண்டு போய்விடும். அதன்பிறகு, திடீரென்று நீங்கள் உணர்வீர்கள். அப்போது, நீங்கள் கைக்கடிகாரத்தைப் பார்த்தால், பத்து விநாடிகள் கடந்து போயிருக்கும். பத்து விநாடிகள் நீங்கள் கவனிக்கவில்லை.

ஆனால், கொஞ்சம் கொஞ்சமாக - இது ஒரு சாமர்த்தியம் இது ஒரு பயிற்சி அல்ல. இது ஒரு சாமர்த்தியம். கொஞ்சம் கொஞ்சமாக நீங்கள் இதை ருசிப்பீர்கள். ஏனெனில், நீங்கள் கவனித்த அந்த ஒரு சில விநாடிகளும், அந்த அளவுக்கு தனி அழகுடனும், அபரிமிதமான மகிழ்ச்சியுடனும் இருப்பதால், நீங்கள் இதை ஒருமுறை அந்த சில விநாடிகள் ருசித்துப் பார்த்துவிட்டால், அதன்பிறகு, நீங்கள் மீண்டும் மீண்டும் திரும்ப அங்கே வரவேண்டும் என்று விரும்புவீர்கள். அது வேறு எந்த நோக்கத்திற்காகவும் அல்ல; வெறுமனே அங்கே இருப்பதற்காகவும், சுவாசத்தோடு சேர்ந்து ஆஜராகி இருப்பதற்காகவும் வருவீர்கள்.

யோகாவில் செய்யப்படுகின்ற அதே செயல்முறை அல்ல இது என்பதை நினைவில் கொள்ளுங்கள். யோகாவில், இது பிரணாயாமம் என்று அழைக்கப்படுகிறது. அது, முற்றிலும் வேறுபட்ட செயல்முறை. உண்மையில், புத்தர் விபாஸனா என்று அழைக்கின்ற இதற்கு நேர் எதிரானது அது. பிரணாயாமத்தில் நீங்கள் ஆழ்ந்து மூழ்கிவிடுவீர்கள்; அப்போது நீங்கள், உங்களது மார்பை அதிக அளவு காற்றினால், அதிக அளவு பிராண வாயுவினால் நிரப்புவீர்கள். அதன்பிறகு, உங்களுடைய மார்பை காலி செய்வீர்கள். எந்த அளவுக்கு உள்ளே உள்ள கரியமில வாயுவை முழுமையாக வெளியேற்ற முடியுமோ, அந்த அளவுக்கு வெளியேற்றுவீர்கள். இது ஒரு உடற்பயிற்சி. இது உடலுக்கு நல்லது. ஆனால், இதற்கும் விபாஸனாவிற்கும் சம்பந்தம் இல்லை.

விபாஸனாவில், நீங்கள் உங்களது சுவாசத்தின் இயல்பான ஓட்டத்தை மாற்ற வேண்டியதில்லை. நீங்கள் மிகவும் நீண்ட, ஆழமான மூச்சை இழுக்க வேண்டியதில்லை. நீங்கள் சாதாரணமாகச் செய்வதைவிடவும் அதிகமாக மூச்சினை வெளியே விட வேண்டியதில்லை. அது முற்றிலும் இயல்பானதாகவும், சாதாரண மானதாகவும் இருக்கட்டும். உங்களது முழு தன்னுணர்வும், மூச்சினை கவனித்தல் என்கின்ற அந்த ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் இருந்தால் போதும்.

இப்படி, நீங்கள் உங்களது சுவாசத்தை கவனிக்க முடியுமெனில், அதன்பிறகு, நீங்கள் மற்ற விஷயங்களையும் கூட கவனிக்க முடியும். நடக்கும் போது, நீங்கள் நடப்பதைக் கவனிக்க முடியும். சாப்பிடும் போது, நீங்கள் சாப்பிடுவதை கவனிக்க முடியும். மேலும், இறுதியாக, முடிவாக, நீங்கள் தூங்கிக் கொண்டிருக்கிறீர்கள் என்பதையும் கூட உங்களால் கவனிக்க முடியும். அப்படி நீங்கள் தூங்கிக் கொண்டிருப்பதை நீங்களே கவனிக்கின்ற அந்த நாளில், நீங்கள் வேறு ஒரு உலகிற்கு கொண்டு செல்லப்பட்டு இருப்பீர்கள். உங்களது உடல் தூங்கிக் கொண்டே இருக்கும். ஆனால், ஒரு விளக்கு உங்களுக்குள் பிரகாசமாக எரிந்து கொண்டிருக்கும். உங்களது கவனித்தல், தொந்தரவு இல்லாமல் அப்படியே இருக்கும். அதன்பிறகு, ஒரு நாளில் இருபத்தி நான்கு மணி நேரமும், கவனித்தல் என்பது ஒரு அடி நீரோட்டம் போல் உங்களுக்குள் ஓடிக் கொண்டே இருக்கும். நீங்கள் சாதாரணமாக எல்லா வேலைகளையும் செய்து கொண்டே செல்வீர்கள் ... ... இந்த வெளி உலகிற்கு எந்த மாற்றமும் இருக்காது. ஆனால், உங்களுக்கு எல்லாமே மாறி இருக்கும்.

ஒரு ஜென் குரு, கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்துக் கொண்டு போய்க் கொண்டிருந்தார். அப்போது, அவரைப் பற்றி கேள்விப்பட்டு, வெகுதூரம் பயணம் செய்து அவரைப் பார்க்க வந்த பக்தன் ஒருவன், அவரிடம், "நான் அந்த மனிதரை எங்கே பார்க்க முடியும்? இந்த மடத்தின் குருவை எங்கே பார்க்க முடியும்?" என்று கேட்டான். அவன், இந்த ஆள் கிணற்றிலிருந்து தண்ணீர் சுமந்து கொண்டு செல்வதால், இவர் ஒரு வேலைக்காரனாக இருக்க வேண்டும் என்று நினைத்தான். ஒரு புத்தர் கிணற்றிலிருந்து தண்ணீர் சுமந்து கொண்டு செல்வதை நீங்கள் பார்க்க முடியாது; ஒரு புத்தர் தரையை சுத்தம் செய்து கொண்டிருப்பதை நீங்கள் பார்க்க முடியாது.

அந்த குரு சிரித்துக் கொண்டே, "நீ தேடுகிற ஆள் நான் தான்," என்றார். அந்த பக்தனால் அதை நம்பமுடியவில்லை. "நான் உங்களைப் பற்றி நிறைய கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால், நீங்கள் இப்படி கிணற்றிலிருந்து தண்ணீர் சுமந்து கொண்டு வருவீர்கள் என்று நினைத்துக்கூட பார்க்கவில்லை," என்று கூறினான்.



அதற்கு அந்த குரு, "நான் மெய்ஞானி ஆவதற்கு முன்பு, நான் இதைத் தான் செய்து கொண்டிருந்தேன். கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்து வருவது, விறகு வெட்டுவது, இதைத் தான் நான் முன்பும் செய்து கொண்டிருந்தேன். மேலும், அதைத் தான் நான் தொடர்ந்து செய்கிறேன். இந்த இரண்டு வேலைகளிலும் நான் கைதேர்ந்தவன். கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்து வருவது, விறகு வெட்டுவது. எனவே, என்னுடன் வா. எனது அடுத்த வேலை, விறகு வெட்டுவதாக இருக்கப் போகிறது. என்னை கவனி!" என்றார்.

அதற்கு அந்த பக்தன், அவரிடம், "அப்படியானால், என்ன வித்தியாசம் உள்ளது? மெய்ஞானி ஆவதற்கு முன்பும் நீங்கள் இந் இரண்டு விஷயங்களையும் தான் செய்து வந்தீர்கள். மெய்ஞானி ஆனபிறகும் அதே இரண்டு விஷயங்களைத் தான் செய்து வருகிறீர்கள். அப்படியானால், இதில் உள்ள வேறுபாடு என்ன?" என்று கேட்டான்.

அதைக் கேட்ட அந்த குரு சிரித்துக் கொண்டே, "வித்தியாசம் எனக்குள்ளே உள்ளது. இதற்கு முன்பு, நான் ஒவ்வொன்றையும் தூக்கத்தில் செய்து கொண்டிருந்தேன். இப்போது, நான் எல்லாவற்றையும் தன்னுணர்வோடு செய்கிறேன். அதுதான் வித்தியாசம். செயல்கள் அதே தான். ஆனால், செய்கின்ற நான், இப்போது அதே ஆள் இல்லை. இந்த உலகம் அப்படியே தான் இருக்கிறது. ஆனால், நான் அப்படியே முன்பு போல் இல்லை. மேலும், நான் இப்போது பழைய ஆளாக இல்லாமல் இருப்பதால், எனக்கு இந்த உலகமும் இப்போது அதே போன்று இல்லை," என்றார்.

உண்மையான உருமாற்றம் உங்களுக்குள் இருக்க வேண்டும். இதுதான் உண்மையான துறவறம்; பழைய உலகம் போய்விட்டது. ஏனெனில், பழைய உயிரும் போய்விட்டது.

## தூக்கத்தில் விழிப்பு

கனவு காணுதலும், கவனித்தலும் முற்றிலும் வேறுபட்ட விஷயங்கள். ஒரு விஷயத்தை நீங்கள் முயற்சி செய்து பாருங்கள். ஒவ்வொரு நாள் இரவும் படுக்கப் போகும் போது, நீங்கள் அரைத் தூக்கம், அரை விழிப்பில் இருக்கும் போது, மெதுவாக உங்களது தூக்கத்திற்குள் ஆழ்ந்து செல்லும் போது, உங்களுக்குள், "இதை ஒரு

கனவு என்று என்னால் நினைவில் கொள்ள முடியும்," என்று திரும்பத் திரும்பக் கூறுங்கள்.

நீங்கள் தூங்கிப் போகும் வரை, இதை திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டே இருங்கள். இதற்கு கொஞ்ச நாட்கள் ஆகும். ஆனால், ஒருநாள் நீங்களே ஆச்சரியப்படுவீர்கள். இந்த எண்ணம் உங்களது தன்னுணர்வற்ற மனதில் ஆழ்ந்து மூழ்கிவிடும் போது, உங்களால் ஒரு கனவை - அது ஒரு கனவு என்று நினைத்துக் கொண்டே - கவனிக்க முடியும். அதன்பிறகு, அந்த கனவு உங்கள் மீது எந்தப் பிடிப்பும் கொண்டிருக்காது. அதன்பிறகு, உங்களது நிறை கவனம் அதிக கூர்மையானதாக ஆகிவிடும் போது, கனவுகள் மறைந்துவிடும். அவைகள் வெட்கப்படுபவை; மற்றவர்கள் கவனிப்பதை அவைகள் விரும்பாது. அவைகள் உங்களது தன்னுணர்வற்ற இருளில் தான் இருக்கும். உங்களது நிறை கவனம் உள்ளே வெளிச்சத்தைக் கொண்டு வரும் போது, அவைகள் மறைந்து போக ஆரம்பித்துவிடும்.

எனவே, இந்தப் பயிற்சியை செய்து கொண்டே போனால், உங்களால் கனவுகளை விட்டு ஒழித்துவிட முடியும். மேலும், நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். உங்களது கனவுகளை விட்டு ஒழிப்பது என்பதில், பல சம்பந்தங்கள் உள்ளன. கனவுகள் மறைந்து போய்விடும் போது, பகல் பொழுதில் உங்களது மனதின் உள் பேச்சு, வழக்கம் போல் இருக்காது. இரண்டாவதாக, நீங்கள் எப்போதும் எதிர்காலத்தில் இல்லாமல், கடந்த காலத்திலும் இல்லாமல், அதிகமாக அந்த நொடிப்பொழுதில் இருப்பீர்கள். மூன்றாவதாக, உங்களது செயலின் முழுமை, தீவிரம் அதிகமாகும்.

கனவு காண்பது ஒரு நோய். மனிதன் நோயுற்று இருப்பதால் தான் அது தேவைப்படுகிறது. ஆனால், கனவுகள் முற்றிலுமாக விட்டொழிக்கப்பட்டு விடுமானால், நீங்கள் ஒரு புதுவகையான ஆரோக்கியத்தை, ஒரு புதிய பார்வையைப் பெறுவீர்கள். மேலும், உங்களது தன்னுணர்வற்ற மனதின் பகுதியானது, தன்னுணர்வு பெற்றதாக ஆகிவிடும். ஆகவே, நீங்கள் ஒரு பலம் பொருந்திய தனிமனிதத் தன்மையைப் பெற்றுவிடுவீர்கள். நீங்கள் எதைச் செய்தாலும், அதற்காக மனம் வருத்தப்பட மாட்டீர்கள். ஏனெனில், நீங்கள் அதை, அந்த அளவுக்குத் தன்னுணர்வோடு செய்து விடுவதால், அங்கே மனம் வருந்துதல் என்பதற்கு முக்கியத்துவம் இல்லாமல் போய்விடும்.

நிறை கவனம் தான், ஒருவர் கற்றுக் கொள்ள முடிகின்ற மிகப்பெரிய மாயாஜாலம். ஏனெனில், அது உங்களது முழு ஆத்மாவின் மாற்றத்தை ஆரம்பித்துவிடும்.



நீங்கள், உங்களது கனவுகளை கவனிக்க ஆரம்பித்தால், அப்போது உங்களுக்கு ஐந்து வகையான கனவுகள் நிகழ்வதை நீங்கள் காணலாம். முதல்வகை கனவு, வெறும் குப்பைக் கூழம். ஆனால், உலகில் ஆயிரக்கணக்கான மனஇயல் ஆய்வாளர்கள், வெறுமனே இந்தக் குப்பைக் கனவுகளை வைத்துக் கொண்டு தான் ஆய்வு செய்கின்றனர். இது வெறுமனே உபயோகமற்றது. நாள் முழுவதும் நீங்கள் வேலை செய்வதால், நீங்கள் அதிக குப்பை போன்ற விஷயங்களை சேகரிக்கிறீர்கள். எனவே, இந்த வகைக் கனவுகள் அதனால் தான் உண்டாகின்றன. எப்படி உங்களது உடலில் அழுக்குப் படிந்தால், உங்களுக்கு எப்படி ஒரு குளியல் தேவையோ, அதே போன்று, மனதும் குப்பைகளை சேகரிக்கிறது. மேலும், மனம் என்பது குளிப்பதற்கு எந்த வழியும் கிடையாது. ஆகவே, இந்த மனதில் இந்தக் குப்பைக் கூழங்களையெல்லாம் தூக்கி வெளியே எறிவதற்கு, அது ஒரு தானாக இயங்கக்கூடிய ஒரு இயந்திர நுட்பத்தை வைத்திருக்கிறது. எனவே, கனவு என்பது, மனம் என்பது தூக்கி எறிகின்ற இந்த தூசி தானே தவிர, வேறு எதுவும் அல்ல. இதுதான் முதல் வகை கனவு. மேலும், இது தான் கனவுகளின் மிக அதிகமான பகுதியாகும். கிட்டத்தட்ட 90 சதவீதம் இவைகள் தான். கிட்டத்தட்ட 90 சதவீதம் கனவுகள் வெறுமனே உங்கள் மனதில் உள்ள தூசிகள் தூக்கி வெளியே எறியப்படுவது தான் ஆகும். இவைகளில் அதிக கவனம் செலுத்தாதீர்கள். மேலும், போகப் போக உங்களது விழிப்புணர்வு வளரும் போது, இந்த குப்பை என்ன என்பதை நீங்கள் கண்டு கொள்ள முடியும்.

இரண்டாவது வகைக் கனவுகள், ஒரு வகையான உங்களது விருப்பங்களை நிறைவேற்றும் வகையைச் சார்ந்தவையாகும். உங்களுக்கு அநேக தேவைகள், இயற்கை தேவைகள் உள்ளன. ஆனால், இந்த மதகுருக்களும், மத ஆச்சாரியார்கள் என்று அழைக்கப்படுபவர்களும் உங்களது மனதை விஷமாக்கிவிட்டார்கள். அவர்கள், உங்களது அடிப்படைத் தேவைகளைக் கூட நீங்கள் நிறைவேற்றுவதற்கு அனுமதிக்க மாட்டார்கள். அவர்கள் அந்தத் தேவைகளை கண்டனம் செய்துவிட்டதால், அந்தக் கண்டனம் உங்களுக்குள்ளும் நுழைந்துவிட்டது. ஆகவே, நீங்கள் உங்களது அநேக அடிப்படைத் தேவைகளுக்கான பசியோடு இருக்கிறீர்கள். அப்படிப்பட்ட அந்த பசியோடு இருக்கின்ற தேவைகள், அதை நிறைவேற்றுவதற்கு கோரிக்கை விடுகின்றன. எனவே, இந்த இரண்டாவது வகையான கனவுகள், உங்களது விருப்பங்களை நிறைவேற்றுபவை தானே தவிர, வேறு எதுவும் கிடையாது. இந்த மதகுருக்கள் மற்றும் விஷமூட்டியவர்களினால், நீங்கள் என்னவெல்லாம்

உங்களது ஆன்மாவிற்கு மறுத்துவிட்டீர்களோ, அதையெல்லாம் இந்த மனம் கனவில் நிறைவேற்ற ஏதாவது ஒரு வழியில் முயற்சி செய்யும்.

ஆனால், ஒருவர் தனது தேவையைப் பார்க்க வேண்டும்; அதன் அர்த்தத்தைப் பார்க்கக் கூடாது. அர்த்தம் என்பது, தன்னுணர்வுள்ள மனதினுடையது. ஆனால், தேவை என்பது தன்னுணர்வற்ற மனதினுடையது. மேலும், இப்படித் தான் இந்த இரண்டாம் வகை கனவுகள் இருப்பிற்கு வருகின்றன. நீங்கள், உங்களது தேவைகளை வெட்டி எறிந்து கொண்டே போகிறீர்கள். அதன்பிறகு, உங்களது மனம் அதை தனது கனவுகளில் நிறைவேற்றுகிறது. நீங்கள் மிகப்பெரிய புத்தகங்களை படித்திருப்பீர்கள். சிந்தனையாளர்களால் நீங்கள் விழிப்பூட்டப்பட்டு இருக்கிறீர்கள். எனவே, அவர்கள் உங்களது மனதை ஒரு குறிப்பிட்ட விதத்தில் தயார்படுத்தி விட்டார்கள். நீங்கள் இந்த இயற்கைக்கு திறந்த மனதுடன் இருப்பதில்லை; தத்துவங்கள் உங்களது கண்களை மறைத்துவிட்டன. அதனால், நீங்கள் உங்களது தேவைகளை வெட்டி எறிய ஆரம்பித்துவிட்டீர்கள். அதன்பின்னர், அந்த தேவைகள் நீர்க்குமிழி போல் உங்களது கனவுகளில் மேலே எழுந்து வருகிறது. ஏனெனில், உங்களது தன்னுணர்வற்ற மனதிற்கு எந்த தத்துவமும் தெரியாது. உங்களது தன்னுணர்வற்ற மனதிற்கு தெரிந்த ஒரே விஷயம் என்னவென்றால், நீங்கள் மனம் நிறைவு அடைய வேண்டும் என்றால், அதற்கு என்ன தேவை என்பது தான் ஆகும். அதன்பிறகு, அந்த தன்னுணர்வற்ற மனம், தனது சுயமான கனவை வலுக்கட்டாயமாக உங்களிடம் திணிக்கிறது. இதுதான் இரண்டாவது வகை கனவு. இது புரிந்து கொள்வதற்கு அர்த்தமுள்ளது. எனவே, இதைக் குறித்து தியானம் செய்யுங்கள். உங்களது தன்னுணர்வற்ற மனம் உங்களுக்கு கனவு மூலம் தெரியப்படுத்துவதற்கு முயற்சி செய்வதற்கு முன்பு, இதைப் புரிந்து கொள்ளுங்கள். அந்த தன்னுணர்வற்ற மனம் உங்களிடம், "முட்டாளாக இருக்காதே! நீ இதற்காக துக்கப்படுவாய். மேலும், உனது ஆன்மாவை பட்டினி போடாதே. தற்கொலை மனப்பாங்குடன் இருக்காதே. மேலும், உனது தேவைகளைக் கொன்றுவிடுவதன் மூலம், மெல்ல மெல்ல தற்கொலை செய்து கொண்டு இருக்காதே," என்று தெரிவிப்பதற்கு முன்பு புரிந்து கொள்ளுங்கள்.

ஆசைகள் என்பவை, உங்களது தன்னுணர்வுள்ள மனதில் இருந்து வருபவை. ஆனால், தேவைகள் உங்களது தன்னுணர்வற்ற மனதில் இருந்து வருபவை. மேலும், உங்களது தன்னுணர்வற்ற மனதிற்கு ஆசைகளைப் பற்றி கவலை இல்லை. ஆசை என்பது என்ன? ஆசை என்பது உங்களது சிந்தனையில் இருந்து, பயிற்சியில் இருந்து, கண்டிப்புகளில் இருந்து வருகிறது. நீங்கள் இந்த நாட்டின்



ஜனாதிபதியாக இருப்பதற்கு ஆசைப்படலாம். ஆனால், உங்களது தன்னுணர்வற்ற மனம் இதைப் பற்றி கவலைப்படாது. இந்த நாட்டின் பிரதமர் ஆவதற்கு இந்த தன்னுணர்வற்ற மனம் ஆர்வம் காட்டாது. இந்த தன்னுணர்வற்ற மனம், எப்படி நினைவுடன் இருப்பது, உடல் உறுப்புகள் ஒற்றுமையாக இருப்பது எப்படி என்பதில் தான் ஆர்வம் காட்டும். ஆனால், தன்னுணர்வுள்ள மனமோ, உங்களிடம், "பிரதமராக ஆகுங்கள். மேலும், அப்படி பிரதமர் ஆவதற்கு உங்களது அன்பைத் தியாகம் செய்ய வேண்டுமா, அப்படியானால் அதை தியாகம் செய்யுங்கள். உங்களது உடலை அதற்காக தியாகம் செய்ய வேண்டுமா, அப்படியானால் அதையும் தியாகம் செய்யுங்கள். நீங்கள் உங்களது ஓய்வை தியாகம் செய்ய வேண்டுமானால், அதையும் தியாகம் செய்யுநங்கண்ள். முதலில், இந்த நாட்டின் பிரதமர் ஆகிவிடுங்கள்," என்று தான் கூறும். அல்லது, அளவுக்கு அதிகமாக சொத்து சேர்க்கச் சொல்வதும் இந்த தன்னுணர்வற்ற மனம் தான். ஆனால், இந்த தன்னுணர்வற்ற மனதிற்கு எந்த சொத்தும் தெரியாது. அதற்குத் தெரிந்ததெல்லாம், இயற்கையானவை மட்டும் தான். அந்த தன்னுணர்வற்ற மனம், இந்த சமுதாயத்தினால் தொடப்படாத ஒன்று; இது, விலங்குகள் அல்லது பறவைகள் அல்லது மரங்கள் போன்றது. தன்னுணர்வற்ற மனம் என்பது இந்த சமுதாயத்தினால், இந்த அரசியல்வாதிகளால் கண்டிக்கப்படாதது. அது, இன்னமும் சுத்தமாக இருப்பது.

எனவே, இந்த இரண்டாம் வகையான கனவுகளைக் கவனியுங்கள். அதைக் குறித்து தியானம் செய்யுங்கள். மேலும், அது தான் உங்களுக்கு, உங்களின் தேவை என்ன என்று தெரிவிக்கும். அந்தத் தேவைகளை நிறைவேற்றுங்கள். ஆனால், உங்களது ஆசைகளைப் பற்றி கவலைப்படாதீர்கள். நீங்கள் கஷ்டப்பட வேண்டும் என்று விரும்பினால், அதன்பிறகு, உங்களது தேவைகளை வெட்டி எறிந்துவிட்டு, ஆசைகளின் பின்னால் செல்லுங்கள்.

இப்படித்தான் நீங்கள் கஷ்டப்படுகிறீர்கள். நீங்கள் சந்தோஷமாக இருக்கிறீர்களா அல்லது கஷ்டப்படுகிறீர்களா என்பது மிகவும் எளிய விஷயம். மிகவும் எளிய விஷயம். ஒரு மனிதன், தனது தேவைகளைக் கவனித்து, அவைகளைப் பின்பற்றினால், ஒரு நதி கடலை நோக்கி ஓடுவதைப் போல செல்வான். அந்த நதி கிழக்கில் ஓட வேண்டுமா அல்லது மேற்கில் ஓட வேண்டுமா என்று கூறுவதில்லை. அது வெறுமனே பாய்ந்தோடிச் சென்று, அதன் வழியைத் தேடுகிறது. கிழக்கும் மேற்கும் அதனிடம் வேறுபாட்டை ஏற்படுத்துவதில்லை. கடலை நோக்கி ஓடுகின்ற நதிக்கு, எந்தவிதமான ஆசைகளும் கிடையாது. அது தனது தேவைகளை மட்டுமே அறியும். அதனால் தான்,

விலங்குகள் சந்தோஷமாக காணப்படுகின்றன. எதுவும் இல்லாமலேயே அவைகள் அந்த அளவுக்கு சந்தோஷமாக உள்ளனவே? ஆனால் நீங்களோ, அநேக பொருட்கள் இருந்தும்கூட, நீங்கள் சந்தோஷமாக இல்லையே? விலங்குகள் கூட அவற்றின் அழகிலும், ஆனந்தத்திலும் உங்களுக்கு மேலே சென்றுவிட்டன. நடப்பது என்ன? இந்த விலங்குகளுக்கு, அவற்றின் தன்னுணர்வற்ற மனதை கட்டுப்படுத்தவும், அவற்றை ஆட்டிப் படைக்கவும் ஒரு தன்னுணர்வுள்ள மனம் அவைகளுக்குக் கிடையாது. அவைகள் பிரிவினை இல்லாமல் இருக்கின்றன.

எனவே, இந்த இரண்டாம் வகை கனவுகள் உங்களுக்கு அதிக விஷயங்களை வெளிப்படுத்தும். இந்த இரண்டாம் வகை கனவுகள் மூலம், நீங்கள் உங்களது தன்னுணர்வை மாற்ற ஆரம்பிக்கிறீர்கள். உங்களது நடத்தையை மாற்ற ஆரம்பிக்கிறீர்கள்; உங்களது வாழ்க்கை முறையை மாற்ற ஆரம்பிக்கிறீர்கள். உங்களது தன்னுணர்வற்ற மனம் என்னவெல்லாம் கூறுகிறதோ, அந்த தேவைகளைக் கவனியுங்கள்.

உங்களது தன்னுணர்வற்ற மனம் சொல்வது தான் சரியானது என்பதை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள். ஏனெனில், அதில் தான் காலம் காலமாக உள்ள ஞானம் உள்ளது. நீங்கள் பல லட்சம் பிறவிகள் எடுத்துவிட்டீர்கள்; அதில் இந்த தன்னுணர்வுள்ள மனம், இந்தப் பிறவிக்குச் சொந்தமானது. இந்த மனமானது பள்ளிகளில், பல்கலைக் கழகங்களில், மேலும், நீங்கள் பிறந்துள்ள குடும்பம் மற்றும் சமுதாயத்தினால் பயிற்சி அளிக்கப்பட்டது. ஆனால், இந்த தன்னுணர்வற்ற மனமோ, உங்களது எல்லாப் பிறவிகளின் எல்லா அனுபவங்களையும் சுமந்து கொண்டிருக்கிறது. நீங்கள் ஒரு பாறையாக இருந்த போது பெற்ற அனுபவத்தையும் சுமக்கிறது; நீங்கள் ஒரு மரமாக இருந்த போது பெற்ற அனுபவத்தையும் சுமக்கிறது; நீங்கள் விலங்குகளாக இருந்த போது பெற்ற அனுபவத்தையும் சுமக்கிறது; அது, கடந்த காலத்தில் நீங்கள் பெற்ற அனுபவங்கள் எல்லாவற்றையும் சுமந்து கொண்டிருக்கிறது. இந்த தன்னுணர்வற்ற மனம், அபரிமிதமான ஞானம் உள்ளது. ஆனால், இந்த தன்னுணர்வுள்ள மனம், அபிரிமிதமான முட்டாள்தனமானது. அது, அப்படித்தான் இருந்தாக வேண்டும். ஏனெனில், இந்த தன்னுணர்வுள்ள மனம் என்பது வெறுமனே இந்த பிறவியில் உள்ளது; மிகவும் சிறியது; எந்த அனுபவமும் இல்லாதது. இது குழந்தைத்தனமானது. தன்னுணர்வற்ற மனம் என்பது, எல்லையற்ற ஞானம் மிக்கது. அது சொல்வதைக் கேளுங்கள்.

அதன்பின்னர், மூன்றாவது வகை கனவு ஒன்று உள்ளது. இந்த மூன்றாவது வகை கனவானது, உங்களது உச்ச தன்னுணர்விலிருந்து தொடர்பு கொள்வது. இரண்டாவது வகை கனவு, உங்களது தன்னுணர்வற்ற மனதில் இருந்து வருவது. இந்த மூன்றாம் வகை கனவுகள், மிகவும் அபூர்வமானவை; ஏனெனில், நாம் அனைவரும் இந்த உச்ச தன்னுணர்வின் தொடர்பை இழந்துவிட்டோம். ஆனாலும் கூட, இது வருகிறது; ஏனெனில், இந்த உச்ச தன்னுணர்வு உங்களுடையது. அது வேண்டுமானால், ஒரு மேகமாக மாறி வானத்திற்கு நகர்ந்து போயிருக்கலாம்; நீராவியாக மாறி வானத்திற்குப் போயிருக்கலாம். இதன் தூரம் வெகுதொலைவானதாக இருக்கலாம்; என்றாலும்கூட, இன்னமும் அது உங்களுக்குள் தான் நங்கூரம் பாய்ச்சியுள்ளது.



எனவே, இந்த உச்ச தன்னுணர்வு மனதில் இருந்து தகவல்கள் வருவது மிகவும் அபூர்வமானது. நீங்கள் மிக, மிக விழிப்புணர்வுடன் இருந்தால் மட்டுமே, இதை உணர ஆரம்பிக்க முடியும். இல்லையெனில், இது, உங்களது மனம் கனவுகளில் எழுப்புகின்ற தூசியில் காணாமல் போய்விடும். மேலும், விருப்பத்தை நிறைவு செய்கின்ற அந்த மனமும்; நிறைவேறாத, அடக்கி வைக்கப்பட்ட விஷயங்களைப் பற்றி கனவு கண்டு கொண்டே இருப்பதால், இந்த உச்ச தன்னுணர்வில் இருந்து வரும் தகவல்கள் காணாமல் போய்விடும். ஆனால், நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்க ஆரம்பித்துவிட்டால், இது ஒரு வைரம் போன்று ஜொலிக்கும். சுற்றிலும் உள்ள மற்ற கற்களைவிட, இது முற்றிலும் வேறுபட்டு இருக்கும்.

உங்களால் இந்த உச்ச தன்னுணர்வில் இருந்து வரும் கனவினை உணரவோ, கண்டு கொள்ளவோ முடிந்தால், அதை கவனியுங்கள். அதைக் குறித்து தியானம் செய்யுங்கள்; ஏனெனில், அது உங்களுக்கு வழிகாட்டியாக இருக்கும். அது, உங்களை உங்களது குருவிடம் அழைத்துச் செல்லும். உங்களுக்குப் பொருத்தமான ஒரு வாழ்க்கைக்கு உங்களை வழிநடத்திச் செல்லும். அது, உங்களை சரியான கட்டுப்பாட்டிற்கு அழைத்துச் செல்லும். அந்தக் கனவு, உங்களுக்குள் ஒரு வழிகாட்டி போன்று ஆகிவிடும். நீங்கள், உங்களது தன்னுணர்வுள்ள மனதினைக் கொண்டு, ஒரு குருவை கண்டு கொள்ள முடியும். ஆனால், அந்த குரு, வெறும் ஆசிரியராக மட்டுமே இருப்பார். அதற்கு மேற்பட்டவராக இருக்க மாட்டார். அதே போன்று, உங்களது தன்னுணர்வற்ற மனதினால் கண்டு கொள்கின்ற குருவானவர், நீங்கள் நேசிப்பவராக இருக்க முடியுமே தவிர, அதற்கு மேற்பட்டவராக இருக்க முடியாது. நீங்கள், அவரது ஒரு சில குறிப்பிட்ட தனிமனிதப் பண்பிற்காகவும், ஒரு குறிப்பிட்ட விதத்தில் அவர் இருப்பதற்காகவும் அவரை நேசிப்பீர்கள். ஆனால், உங்களது உச்ச தன்னுணர்வு மனம்

மட்டுமே உங்களை சரியானதொரு குருவிடம் அழைத்துச் செல்ல முடியும். அப்போது, அவர் ஒரு ஆசிரியர் போன்று இருக்க மாட்டார்; அவர் என்ன கூறுகிறார் என்பதிலோ அல்லது அவர் எப்படி இருக்கிறார் என்பதிலோ நீங்கள் கவரப்பட மாட்டீர்கள். அதற்கு மாறாக, இந்த மனிதர் தான் உங்களுக்குப் பொருத்தமானவர் என்றோ, நீங்கள் வளர்ச்சி அடைவதற்கு இந்த மனிதரால் தான் சாத்தியப்படும் என்றோ, இந்த மனிதர் தான் உங்களது ஆன்மாவாக ஆக முடியும் என்றோ, உங்களது உச்ச தன்னுணர்வு மனதினால் நீங்கள் வழி நடத்தப்படுவீர்கள்.

அதன்பின்னர், உங்களது முற்பிறவிகளில் இருந்து வருகின்ற நான்காவது வகை கனவுகள் உள்ளன. அநேக தடவைகள் இது வருகிறது. ஆனால், உங்களுக்குள் எல்லாமே குழம்பிப் போய் உள்ளது; உங்களால் எந்த வித்தியாசத்தையும் கண்டுபிடிக்க முடியவில்லை. அப்படி வித்தியாசத்தைக் கண்டுபிடிக்க, நீங்கள் உங்களுக்குள் இருப்பதில்லை.

எங்களது கீழை நாடுகளில் இந்த நான்காவது வகை கனவுகளில் நாங்கள் கடின ஆய்வு செய்துள்ளோம். இத்தகைய கனவுகளால் தான், நாம் மறுபிறவி என்னும் விஷயத்தில் தடைபட்டு நிற்கிறோம். இந்த கனவுகளின் மூலம், நீங்கள் கொஞ்சம் கொஞ்சமாக உங்களது கடந்த கால பிறவிகளைப் பற்றி தெரிந்து கொள்வீர்கள். நீங்கள் பின்னோக்கி, காலத்தில் பின்னோக்கி நகர்ந்து செல்வீர்கள். அதன்பிறகு, அநேக விஷயங்கள் உங்களிடம் மாறிவிடும்; ஏனெனில், அது கனவாக இருந்தாலும்கூட, நீங்கள் முற்பிறவியில் யாராக இருந்தீர்கள் என்பதை ஞாபகத்தில் கொண்டுவர முடிவதால், அநேக விஷயங்கள் அர்த்தமற்றவை ஆகிவிடும். மேலும், அநேக புதிய விஷயங்கள் அர்த்தமுள்ளவை ஆகிவிடும். உங்களது வாழ்க்கை முறையே மாறிவிடும். உங்களது பின்புலம் அப்படியே மாறிவிடும்.

உங்களது முற்பிறவியில் நீங்கள் அதிகமாக செல்வத்தைச் சேர்த்து வைத்து, நீங்கள் இந்த தேசத்தில் ஒரு பணக்காரராக உயிரை விட்டிருந்தாலும், உங்களுக்குள் அடி ஆழத்தில் நீங்கள் ஒரு பிச்சைக்காரர் போன்றவர் தான். மேலும், அதையே தான் இந்தப் பிறவியிலும் நீங்கள் மீண்டும் செய்கிறீர்கள். எனவே, உடனே அந்த பின்புலம் அப்படியே மாறிவிடும். நீங்கள் முற்பிறவியில் என்ன செய்தீர்கள், அவைகள் எல்லாம் எப்படி ஒன்றும் இல்லாமல் போயிற்று என்பதை உங்களால் நினைவில் கொள்ள முடிந்தால், உங்களால் அநேக பிறவிகளை நினைவுக்கு கொண்டு வர முடிந்தால், நீங்கள் அநேக தடவைகள் மீண்டும் மீண்டும் ஒரு வட்டப்பாதையில், ஒரு உடைந்த கிராமபோன் ரிக்கார்டு போன்று, மீண்டும் அதே காரியத்தையே செய்து



கொண்டிருந்தால் - இதில் சில பிறவிகளை மட்டும்கூட உங்களால் நினைவில் வைத்திருக்க முடிந்தால், நீங்கள் ஒரு சிறு விஷயத்தையும் கூட நீங்கள் புதிதாகச் செய்யவில்லை என்று அறிந்து, நீங்கள் திடீரென்று ஆச்சரியமடைவீர்கள். மீண்டும் மீண்டும் நீங்கள் செல்வத்தை சேர்த்து வைத்திருக்கிறீர்கள்; மீண்டும் மீண்டும் அரசியலில் அதிகாரத்துடன் இருப்பதற்கு நீங்கள் முயற்சி செய்திருப்பீர்கள். மீண்டும் நீங்கள் மிகச்சிறந்த அறிவாளி ஆகியிருப்பீர்கள். மீண்டும் மீண்டும் நீங்கள் காதலில் விழுந்துவிடுவீர்கள். மேலும், மீண்டும் காதல் கொண்டு வருகின்ற அந்த துன்பத்தில் கஷ்டப்பட்டிருப்பீர்கள். இப்படி, நீங்கள் ஒரே விஷயத்தை திரும்பத் திரும்ப செய்து வருவதை, நீங்கள் கண்டு கொள்ளும் போது, எங்களால் எப்படி அப்படியே இருக்க முடியும்? அதன்பிறகு, இந்தப் பிறவியில் நீங்கள் திடீரென்று உருமாற்றம் பெற்றுவிடுவீர்கள். பழைய வண்டிப் பாதையிலேயே நீங்கள் இனிமேல் போக மாட்டீர்கள்.

அதனால் தான் இந்த கீழைநாடுகளில், பல லட்சம் ஆண்டுகளாக, மக்கள், "பிறப்பு இறப்பு என்னும் இந்த வாழ்க்கைச் சக்கரத்தில் இருந்து வெளியே வருவது எப்படி?" என்று கேட்டு வந்திருக்கிறார்கள். அதே சக்கரம் தான், அதே கதை தான் மீண்டும் மீண்டும் ஒரு விதமான திரும்பச் செய்தல் தான் நடந்து வருகிறது. இதை நீங்கள் அறிந்து கொள்ளாத போது, நீங்கள் புதிய விஷயங்களைச் செய்து வருவதாக நினைத்துக் கொண்டு, நீங்கள் அதிக பரவசம் அடைகிறீர்கள். ஆனால், நீங்கள் ஒரே விஷயத்தைத் தான் மீண்டும் மீண்டும் செய்து வந்திருக்கிறீர்கள் என்பதை என்னால் காண முடிகிறது.

வாழ்க்கையில் எதுவுமே புதிதில்லை; இது ஒரு சக்கரம். அது ஒரே பாதையில் தான் நகர்ந்து செல்கிறது. நீங்கள், கடந்த காலத்தை மறந்து கொண்டே போகிறீர்கள். அதனால் தான், உங்களால் இப்படி பரவசம் அடைய முடிகிறது. நீங்கள், உங்களது முற்பிறவிகளை நினைவுக்குக் கொண்டுவர முடிந்தால், இந்த முழு பரவசமும் முடிந்து போய்விடும். அத்தகையதொரு நினைவில் நிகழ்வது தான் சந்நியாசம்.

சந்நியாசம் என்பது பழைய பாதையில் செல்லாமல் வெளியேறுவதற்கான முயற்சி, அந்த சக்கரத்திலிருந்து வெளியே குதிப்பதற்கானதொரு முயற்சி. நீங்கள் உங்களுக்குள்ளே, "பட்டது போதும்! நான் இனிமேல் ஒருபோதும இந்த பழைய முட்டாள்தனங்களில் கலந்து கொள்ளப் போவதில்லை. நான் அதிலிருந்து வெளியேறப் போகிறேன்," என்று கூறுவதாகும். சந்நியாசம் என்பது, இந்த சமுதாயத்தைவிட்டு வெளியே செல்வது அல்ல; உங்களது அந்த சக்கரத்தில் இருந்து வெளியேறுவது; உங்களுக்குச் சொந்தமான

அந்தப் பிறப்பு இறப்பு என்னும் உள் சக்கரத்தில் இருந்து வெளியேறுவது தான் ஆகும்.

இது தான் நான்காவது வகை கனவு.

அதன்பிறகு, ஐந்தாவது வகை கனவு, கடைசி வகை கனவு வருகிறது. இந்த நான்காவது வகை கனவு என்பது, நீங்கள் உங்களது கடந்த காலத்தில் பின்னோக்கிச் செல்வது. ஆனால், இந்த ஐந்தாவது வகை கனவானது, நீங்கள் எதிர்காலத்திற்கு முன்னே செல்வதாகும். அபூர்வமானது, மிகவும் அபூர்வமாக சில நேரங்களில் மட்டுமே இது நடக்கும். நீங்கள் திறந்த மனதுடன், வளைந்து கொடுக்கக் கூடியவராக, மிக மிக மென்மையானவராக இருக்கும் போது தான் இது நடக்கும். கடந்த காலம் ஒரு நிழலைக் கொடுக்கும். மேலும், இந்த எதிர்காலமும் ஒரு நிழலை கொடுக்கும். அது உங்களுக்குள் பிரதிபலிக்கும். நீங்கள், உங்களது கனவுகள் குறித்து விழிப்புணர்வுடன் இருந்தால், ஒருநாள் இந்த சாத்தியக்கூறு பற்றியும் நீங்கள் அறிந்து கொள்வீர்கள். எதிர்காலம் உங்களைப் பார்ப்பதையும் அறிந்து கொள்வீர்கள். வெறுமனே திடீரென்று ஒரு கதவு திறக்கும். அப்போது, எதிர்காலம் உங்களோடு தொடர்பு கொள்ளும்.

இவைகள் தான் ஐந்து வகையான கனவுகள். நவீன மனோதத்துவம், இரண்டாவது வகையை மட்டுமே புரிந்து கொண்டுள்ளது. மேலும், அதை அடிக்கடி முதல் வகையோடு குழப்பிக் கொள்கிறது. மற்ற மூன்று வகைகளும் கிட்டத்தட்ட அறியப்படாமலேயே இருக்கிறது.

நீங்கள் தியானம் செய்து, உங்களது உள் உயிரின் கனவுகளைப் பற்றி அறிந்து கொண்டால் இன்னும் அநேக விஷயங்கள் நடக்கும். முதலாவதாக - போகப் போக உங்களது கனவுகளைப் பற்றி எந்த அளவுக்கு நீங்கள் அதிகமாக அறிந்து கொள்கிறீர்களோ, அந்த அளவுக்கு நீங்கள் விழித்திருக்கும் நேரத்தைப் பற்றிய உண்மை குறித்த சமாதானம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறையும். இதனால் தான், இந்துக்கள் இதை ஒரு கனவு போன்றது என்று கூறுகின்றனர்.

இப்போது, இதற்கு எதிரான நிலை தான் உள்ளது. நீங்கள் விழித்திருக்கும் போது இந்த உலகம் உண்மையானது என்று சமாதானம் அடைகிறீர்கள். மேலும், நீங்கள் கனவு காணும் போது அந்த கனவுகளும் கூட உண்மையானவை என்று நினைக்கிறீர்கள். கனவு காணும் போது, அது உண்மையானது அல்ல என்று ஒருவர்கூட உணர்வதில்லை. கனவு காணும் போது, அந்தக் கனவு உண்மையானதாகத் தெரிகிறது; அது, முற்றிலும் உண்மையானதாகத் தெரிகிறது. காலையில் வேண்டுமானால்,



ஒருவேளை, நீங்கள் அது வெறும் கனவு என்று கூறலாம். ஆனால், அது முக்கியமல்ல. ஏனெனில், இப்போது வேறு மனம் வேலை செய்கிறது. இந்த மனம், எல்லாவற்றிற்கும் சாட்சி போன்று இருக்கவில்லை; இந்த மனம், அந்த வதந்தியை, கேட்க மட்டுமே செய்துள்ளது. காலையில் எழுந்தவுடன் விழித்துக் கொண்டு, அது ஒரு கனவு என்று கூறுகின்ற இந்த தன்னுணர்வுள்ள மனம், எல்லாவற்றிற்கும் சாட்சியாக இருந்த மனம் அல்ல. அப்படி இருக்கும் போது, இந்த மனம் எதையும் எப்படி கூற முடியும்? இது வெறுமனே ஒரு வதந்தியை மட்டுமே கேட்டுள்ளது.

இது எதைப் போன்றது என்றால், நீங்கள் தூங்கிக் கொண்டிருக்கும் போது, உங்களுக்கு அருகில் இரண்டு பேர் பேசிக் கொண்டிருந்தால், அப்போது அவர்கள் சத்தம் போட்டுப் பேசிக் கொண்டிருந்தால், நீங்கள் அவர்களில் பேசுவதில் சில வார்த்தைகளை இங்கு கொஞ்சம், அங்கு கொஞ்சம் கேட்பீர்கள். அப்போது, உங்களிடம் தெளிவற்ற ஒருசெய்தி பதிவாகி இருக்கும். இது தான் நடக்கிறது. உங்களது தன்னுணர்வற்ற மனம் கனவு காணும் போது, அதனுள் அபரிமிதமான வேலை நடக்கிறது. அப்போது, தன்னுணர்வுள்ள மனம் தூங்கிக் கொண்டிருக்கிறது. அது, அப்போது வெறும் வதந்தியை மட்டுமே கேட்பதால், காலையில் எழுந்தவுடன் அது, "அது எல்லாம் உண்மையானது அல்ல. அது வெறும் கனவு" என்று கூறுகிறது.

இப்போது, நீங்கள் கனவு காணும் போது, நீங்கள் அதை உண்மையானது என்று தான் உணர்கிறீர்கள். அர்த்தமற்ற விஷயங்கள் கூட உண்மையானவை போன்று தெரிகின்றன; தர்க்கவாதத்திற்கு உட்படாத விஷயங்கள் கூட உண்மையாகத் தெரிகின்றன. ஏனெனில், தன்னுணர்வற்ற மனதிற்கு தர்க்கவாதம் தெரியாது. நீங்கள், கனவில் சாலையில் நடந்து போய்க் கொண்டிருப்பீர்கள். அப்போது, ஒரு குதிரை எதிரே வருவதைப் பார்ப்பீர்கள். ஆனால், திடீரென்று அந்தக் குதிரை அங்கு இருக்காது; அந்தக் குதிரை உங்களது மனைவியாக ஆகி இருக்கும். அப்போது, உங்களது மனதில் எதுவும் நடக்காது. "இது எப்படிச் சாத்தியமாகும்?" என்று கேட்பதில்லை. அந்தக் குதிரை திடீரென்று உங்களது மனைவியாக ஆகிவிட்டதே? எந்தப் பிரச்சனையும் எழுவதில்லை; எந்தச் சந்தேகமும் எழுவதில்லை; உங்களது தன்னுணர்வற்ற மனதிற்கு சந்தேகப்படத் தெரியாது. இப்படிப்பட்ட அர்த்தமற்ற விஷயங்களைக் கூட நம்பிவிடும். அதன் உண்மை குறித்து இப்போது நீங்கள் சமாதானமாகிவிடுவீர்கள்.

ஆனால், நீங்கள் உங்களது கனவுகளைக் குறித்து விழிப்புணர்வு அடைந்து, அவைகள் உண்மையில் கனவுகள் தான் என்று உணரும் போது, இதற்கு நேர் எதிராக நடக்கும். அதாவது, அப்போது காண்பது

எல்லாம் உண்மையல்ல; அது மனதின் வெறும் நாடகம் என்று அறிவீர்கள். அங்கே, நீங்கள் தான் நாடக மேடை; நீங்கள் தான் நடிகர்கள். மேலும், நீங்கள் தான் கதாசிரியரும் கூட. நீங்கள் தான் இயக்குநர், நீங்கள் தான் தயாரிப்பாளர். மேலும், நீங்கள் தான் பார்வையாளர் - அங்கு யாரும் இருப்பதில்லை. இது வெறுமனே மனதின் படைப்பு. நீங்கள் இது குறித்து விழிப்புணர்வு பெற்றுவிடும் போது, நீங்கள் விழித்துக் கொண்டிருக்கும் போது இருக்கின்ற இந்த உலகம் கூட அதன் தன்மையை மாற்றிவிடும். அதன்பிறகு, நீங்கள் இங்கும் கூட அதைக் காண்பீர்கள். அதே நிலைதான் இங்கும் உள்ளது என்று கண்டு கொள்வீர்கள். ஆனால், அது இன்னும் அகலமான மேடையில் நடக்கிறது. ஆனால், கனவு அதுவே தான்.

இந்துக்கள் இந்த உலகை மாயை, அதாவது, கற்பனையானது, கனவு போன்றது, மனதின் படைப்பு என்று அழைக்கின்றனர். அவர்கள் கொள்கின்ற அர்த்தம் என்ன? இந்த உலகம் உண்மையானதல்ல என்று அர்த்தம் கொள்கிறார்களா? கிடையாது. இது உண்மையற்றது அல்ல. ஆனால், உங்களது மனம் இந்த உலகத்தோடு சேர்ந்து கலந்துவிடும் போது, நீங்கள் உங்களுக்குச் சொந்தமான ஒரு பொய்யான, உண்மையற்ற உலகை தோற்றுவித்து விடுகிறீர்கள். இந்த உலகில் எத்தனை மனங்கள் உள்ளனவோ, அத்தனை உலகங்கள் உள்ளன. இந்துக்கள் இந்த உலகினை மாயை என்று கூறும்போது, இந்த உண்மையான உலகோடு உங்களது மனம் சேரும் போது, அது மாயை என்றாகிவிடுகிறது என்ற அர்த்தத்தில் தான் ஆகும். உண்மை, எது இருக்கிறதோ அதை நாம் அறிவதில்லை. உண்மையும், உங்களது மனமும் சேரும் போது, அது மாயை, கற்பனை ஆகிறது.

உண்மையில், யாராவது விழிப்புநிலை அடையும் போது, ஒரு புத்தர் ஆகும் போது, அவர் அப்போது தனது மனதைக் கழித்துவிட்டு உண்மையை மட்டும் அறிந்து கொள்கிறார். அதன்பின்னர், இது தான் உண்மை; இதுதான் பிரம்மம், இறுதியான ஒன்று. ஆனால், அதோடு உங்களது மனம் சேர்ந்துவிடும் போது, எல்லாமே கனவாக ஆகிவிடுகிறது. ஏனெனில், மனம் என்பது கனவுகளை உருவாக்குகின்ற பொருளாக இருக்கிறது. மனதைக் கழித்துவிட்டால், எதுவும் கனவாக இருக்க முடியாது. உண்மை மட்டுமே மிஞ்சி இருக்கும்; அதன் ஸ்படிக தூய்மையில் இருக்கும்.

மனம் என்பது ஒரு கண்ணாடி போன்றது. அந்தக் கண்ணாடியில் இந்த உலகம் பிரதிபலிக்கப்படுகிறது. அந்த பிரதிபலிப்பு உண்மையானதாக இருக்க முடியாது. அந்த பிரதிபலிப்பு, வெறும் பிரதிபலிப்பு தான். இந்தக் கண்ணாடியானது, அங்கு இல்லாத போது,



இந்த பிரதிபலிப்பும் மறைந்துவிடும். இப்போது, நீங்கள் உண்மையானதைப் பார்க்க முடியும். ஒரு முழு நிலவு இரவு. மேலும், அங்குள்ள ஏரியின் தண்ணீர் சலனமற்று அமைதியாக இருப்பதால், அந்த நிலவு அதில் பிரதிபலிக்கப்படுகிறது. ஆனால், அப்போது நீங்கள் அந்த நிலவை கையில் பிடிக்க முயற்சி செய்கிறீர்கள். இதைத் தான் அநேக பிறவிகளாக நாம் ஒவ்வொருவரும் செய்து வருகிறோம். ஏரி என்னும் கண்ணாடியில் தெரியும் நிலவினைப் பிடிப்பதற்கு முயற்சி செய்கிறோம். மேலும், நிச்சயமாக நீங்கள் ஒருபோதும் வெற்றி பெற மாட்டீர்கள்; உங்களால் வெற்றிபெற முடியாது. அது சாத்தியமற்றது. ஒருவர் அந்த ஏரியைப் பற்றி மறந்துவிட்டு, அதற்கு நேர் எதிர் திசையில் பார்க்க வேண்டும். அங்கு தான் நிலவு உள்ளது. இந்த உலகம் மாயையாக, இந்த மனம் என்னும் ஏரியில் தெரிகிறது. நீங்கள் கண்களை மூடிக் கொண்டு கனவு காண்கிறீர்களா அல்லது கண்களைத் திறந்து கொண்டு கனவு காண்கிறீர்களா என்பதில் எந்த வேறுபாடும் கிடையாது. மனம் என்பது அங்கு இருந்தால், அங்கு நிகழ்வது எல்லாமே கனவு தான்.

நீங்கள் கனவுகள் குறித்து தியானம் செய்யும் போது அறிந்து கொள்கின்ற முதல் விஷயம் இதுதான்.

அடுத்தபடியாக, நீங்கள் அறிந்து கொள்ளும் இரண்டாவது விஷயம் என்னவென்றால், நீங்கள் ஒரு சாட்சி என்பது ஆகும். கனவு அங்கே இருக்கும்; ஆனால், நீங்கள் அதன் ஒரு பகுதியாக இருக்க மாட்டீர்கள். நீங்கள், உங்களது மனதின் ஒரு பகுதியாக அங்கு இருக்க மாட்டீர்கள். நீங்கள் அதைக் கடந்த நிலையில் இருப்பீர்கள். நீங்கள் மனதில் இருப்பீர்கள்; ஆனால், நீங்கள் அந்த மனதாக இருக்க மாட்டீர்கள். நீங்கள், மனதின் மூலமாகப் பார்ப்பீர்கள்; ஆனால், நீங்கள் அந்த மனம் அல்ல. நீங்கள் அந்த மனதைப் பயன்படுத்துவீர்கள்; ஆனால், நீங்கள் அந்த மனம் அல்ல. திடீரென்று நீங்கள் ஒரு சாட்சியாக இருப்பீர்கள்; ஒருபோதும் மனமாக இருக்க மாட்டீர்கள்.

மேலும், இந்த சாட்சி நிலை தான் இறுதியான, முடிவான அறிதல் ஆகும். அதன் பிறகு, நீங்கள் தூங்கிக் கொண்டிருக்கும் போது கனவு காண்கிறீர்களா அல்லது விழித்துக் கொண்டிருக்கும் போது கனவு காண்கிறீர்களா என்பது எந்த வேறுபாட்டையும் உருவாக்காது. நீங்கள் ஒரு சாட்சியாகவே இருப்பீர்கள். நீங்கள் இந்த உலகில் இருப்பீர்கள் ஆனால், இந்த உலகம் இனி எப்போதும் உங்களுக்குள் நுழைய முடியாது. பொருட்கள் இங்கே இருக்கும்; ஆனால், உங்களது மனம் பொருட்களில் இருக்காது, பொருட்களும் மனதில் இருக்காது. திடீரென்று சாட்சியாளன் உள்ளே வந்துவிடும் போது, எல்லாமே மாறிவிடும்.

நீங்கள் இந்த சாமர்த்தியத்தை அறிந்துகொண்டால், அதன்பின்னர் இது சுலபமானதாக இருக்கும். இல்லையெனில், இது கடினமாகத் தோன்றும்; கிட்டத்தட்ட சாத்தியப்படாத ஒன்றாகத் தெரியும். கனவு காணும் போது விழித்திருப்பது எப்படி? இது சாத்தியமில்லாதது போல் தெரியும். ஆனால், அது அப்படி அல்ல. இதற்கு மூன்றிலிருந்து ஒன்பது மாதங்கள் வரை ஆகும். ஒவ்வொரு நாள் இரவும் நீங்கள் தூங்கப் போகும் போது, தூக்கத்தில் விழும் போது, நீங்கள் அதை கவனிப்பதற்கும், விழிப்புணர்வுடன் இருப்பதற்கும் முயற்சி செய்கிறீர்கள்.

ஆனால், செயல் என்ற அளவில் உஷாராக இருப்பதற்கு முயற்சி செய்யாதீர்கள். அப்படிச் செய்தால், உங்களால் தூங்க முடியாது என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். செயலற்ற, அமைதியான விழிப்புணர்வு - அதாவது - தளர்வுடன், இயல்பாக, ஓய்வாக, உங்களது ஓரக்கண்ணால் பார்ப்பது போல் செயல்படுங்கள். அது குறித்து அதிக செயலில் இறங்காதீர்கள். அதிகம் அக்கறையற்ற, வெறுமனே அமைதியான விழிப்புணர்வுடன் இருங்கள். நதியின் கரையில் உட்கார்ந்து கொண்டு, அந்த நதி ஓடுவதைப் பார்ப்பது போல் வெறுமனே பார்த்துக் கொண்டு இருங்கள். இதற்கு மூன்று முதல் ஒன்பது மாதங்கள் ஆகும். அதன்பின்னர், திடீரென்று ஒருநாள் இந்த தூக்கம் என்பது ஒரு இருட்டுத் திரையைப் போல உங்கள் மீது விழும். சூரியன் மறைந்து இரவு வருவது போல அது உங்களைச் சுற்றியுள்ள எல்லாவற்றின் மீதும் பாயும். ஆனால், உங்களுக்குள் ஆழத்தில் ஒரு ஒளிச்சுடர் எரிந்து கொண்டே இருக்கும். நீங்கள் அப்போது அமைதியாக, மௌனமாக கவனித்துக் கொண்டிருப்பீர்கள். அதன்பின்னர், உங்களின் கனவு உலகம் ஆரம்பிக்கும். அதன்பின் அநேக நாடகங்கள், அநேக மன நாடகங்கள் நடக்கும். ஆனால், நீங்கள் அவற்றை கவனித்துக் கொண்டே செல்வீர்கள். போகப் போக இந்த வேறுபாடு உங்களிடம் வந்துவிடும். இப்போது, உங்களால் அது என்ன வகை கனவு என்று கண்டு கொள்ள முடியும். அதன்பின்னர், திடீரென்று ஒருநாள் நீங்கள் விழித்துக் கொண்டிருக்கும் போதும் கூட இது நடப்பதை அறிவீர்கள். அதன் தன்மையில் வேறுபாடு இருக்காது. இந்த முழு உலகமும் கற்பனை போன்று ஆகிவிடும். மேலும், இந்த உலகம் கற்பனையானதாக ஆகிவிடும் போது, அதன் சாட்சியாளன் மட்டுமே உண்மையாக இருக்க முடியும்.



# பின்னுரை

## கயிற்றில் ஆடும் ஊசலாட்டம்

இந்தியாவில் பழமையான கதை ஒன்று உள்ளது.

ஒரு பெரிய துறவி, தனது தலைமை சீடரிடம் ஏதோ ஒரு குறை இருப்பதால், அவன் அதைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்பதற்காக ராஜா ஜனகரின் அரச சபைக்கு அனுப்பி வைத்தார்.

அந்த இளைஞன் அவரிடம், "உங்களாலேயே எனக்கு கற்றுக் கொடுக்க முடியவில்லையென்றால், இந்த ஜனகர் எனக்கு எப்படி கற்றுக் கொடுக்க முடியும்? நீங்கள் மிகப்பெரிய துறவி, அவர் வெறும் ஒரு அரசர் தான். தியானத்தைப் பற்றியும், விழிப்புணர்வைப் பற்றியும் அவருக்கு என்ன தெரியும்?" என்று கேட்டான்.

அந்த துறவி அவனிடம், "எனது கட்டளைகளை நீ வெறுமனே பின்பற்றி நட. அவரிடம் போ, அவருக்கு தலை வணங்கு. நீ, நான் என்னும் அகந்தையோடு இருக்காதே. நாம் ஒரு சந்நியாசி. ஆனால், அவரோ ஒரு சாதாரண கிரஹஸ்தர் தானே என்றும், அவர் இந்த உலக இன்பத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்; ஆனால், நானோ ஆன்மீக வாழ்வு வாழ்கிறேன் என்று நினைக்காதே. அதையெல்லாம் மறந்துவிடு. அவரிடம் ஏதோ ஒன்றைக் கற்றுக் கொள்வதற்காகத் தான் நான் உன்னை அவரிடம் அனுப்புகிறேன். ஆகவே, இந்த நொடிப்பொழுதில் இருந்து அவர் தான் உனது குரு. மேலும், நானும் இங்கு உனக்கு கற்றுக் கொடுப்பதற்கு பலவழிகளில் முயற்சி செய்து பார்த்துவிட்டேன். ஆனால், உன்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஏனெனில், அதைப் புரிந்து கொள்வதற்கு உனக்கு ஒரு வேறுபட்ட பின்புலம் தேவை. ஜனகரின் அரச சபையும், அவரது அரண்மனையும் உனக்கு அதற்கான சரியான பின்புலத்தைக் கொடுக்கும். நீ வெறுமனே சென்று அவரிடம் தலை வணங்கு. இன்னும் சில தினங்களுக்கு எனக்குப் பதிலாக அவர் தான் உனது குரு," என்று கூறினார்.

வேண்டா வெறுப்பாக அந்த இளைஞன் சென்றான். அவன் ஒரு பிராமணன், உயர்ந்த ஜாதி! ஆனால், இந்த ஜனகர் யார்? அவர் செல்வந்தர், அவருக்கு பெரிய ராஜ்ஜியம் இருந்தது. ஆனால், அவர்

ஒரு பிராமணனுக்கு என்ன போதிக்க முடியும்? பிராமணர்கள், தாங்கள் தான் மற்றவர்களுக்குப் போதிக்க முடியும் என்று எப்போதும் நினைப்பார்கள். ஆனால், ஜனகர் பிராமணர் கிடையாது. அவர் ஒரு சத்திரியர்; இந்தியாவில் உள்ள போர்வீரர் ஜாதியைச் சேர்ந்தவர். அவர்கள், பிராமணர்களுக்கு அடுத்தபடியாக கருதப்பட்டனர். பிராமணர்கள் தான் முதலானவர்கள், முக்கியமானவர்கள், உயர்ந்த ஜாதியினர். எனவே, இந்த மனிதனிடம் தலை வணங்குவதா? இதுவரை யாரும் இது போன்று செய்ததில்லை. ஒரு பிராமணர் ஒரு சத்திரியரிடம் தலைவணங்குவது என்பது இந்திய மனப்பான்மைக்கு எதிரானது.

ஆனால், குரு சொல்லிவிட்டார். ஆகவே, அதைச் செய்தாக வேண்டும். வேண்டா வெறுப்பாக அந்த இளைஞன் சென்றான். மேலும், வேண்டா வெறுப்பாக அவன் ஜனகருக்கு தலை வணங்கினான். மேலும், அவன் தலை வணங்கும் போது, அவன் உண்மையில், தனது குருவின்மீது கோபம் கொண்டான். ஏனெனில், இப்படி ஜனகரின் முன் தலை வணங்குவது அவனது கண்களுக்கு அசிங்கமானதாகத் தெரிந்தது. அப்போது, அங்கே ஒரு அழகான பெண் நடனமாடிக் கொண்டிருந்தாள். மக்கள் எல்லோரும் மது அருந்திக் கொண்டிருந்தனர். மேலும், ஜனகர் இந்தக் கூட்டத்தினரிடையே உட்கார்ந்திருந்தார். இந்தச் செயல்களை அந்த இளைஞன் கண்டனம் செய்தான். ஆனாலும்கூட, அவன் தலைவணங்கினான்.

ஜனகர் சிரித்துக் கொண்டே அவனிடம், "நீ உனக்குள் இந்த அளவுக்கு கண்டனங்களை வைத்துக் கொண்டு எனக்குத் தலை வணங்க வேண்டிய அவசியம் கிடையாது. எனது அனுபவங்களை காண்பதற்கு முன்பே, நீ தப்பெண்ணம் கொள்ளாதே. உனது குருவிற்கு என்னைப் பற்றி நன்றாகத் தெரியும். அதனால் தான், அவர் உன்னை இங்கு அனுப்பி வைத்துள்ளார். ஏதோ ஒன்றைக் கற்றுக் கொள்வதற்கு உன்னை இங்கே அனுப்பி வைத்திருக்கிறார். ஆனால், கற்றுக் கொள்வதற்கான வழி இது கிடையாது," என்றார்.

அதற்கு அந்த இளைஞன், "எனக்கு அதைப் பற்றி கவலை இல்லை. அவர் அனுப்பினார், நான் வந்திருக்கிறேன். ஆனால், நான் காலையில் திரும்பச் சென்றுவிடுவேன். ஏனெனில், இங்கு நான் கற்றுக் கொள்வதற்கு ஒன்றும் இல்லை என்பதை என்னால் காண முடிகிறது. உண்மையில், உங்களிடம் இருந்து நான் ஏதாவது கற்றுக் கொண்டால், என்னுடைய இந்த வாழ்க்கையே வீணாகிவிடும்! மது அருந்துவதைக் கற்றுக் கொள்ளவும், அழகான பெண் ஆடுவதைப் பார்க்கவும், இந்த இன்பங்களை அனுபவிக்கவும் நான் இங்கு வரவில்லை," என்றான்.



ஜனகர் இன்னமும் புன்சிரிப்புடன், "நீ காலையில் போகலாம். ஆனால், நீ வந்துவிட்டதாலும், மிகவும் களைப்பாக இருப்பதாலும் இன்று இரவு மட்டும் இங்கு தங்கி ஓய்வெடுத்துவிட்டு, காலையில் நீ போகலாம். மேலும், இன்றைய இரவுப் பொழுது, ஏதாவது ஒன்றை நீ கற்றுக் கொள்வதற்கான பின்புலமாகக் கூட அமையலாம். யாருக்கும் தெரியும்," என்றார்.

இப்போது அவர் சொன்னது, இன்னும் புதிர் போல இருந்தது. அந்த இரவு, அவனுக்கு எப்படி கற்பிக்க முடியும்? சரி, அவன் இன்று இரவு இங்கு தான் இருந்தாக வேண்டும். எனவே, அதைப் பற்றி அதிக குழப்பம் வேண்டாம். அவன் அங்கு தங்கினான். அரசர், அவன் தங்குவதற்கு அந்த அரண்மனையிலேயே அழகானதும், ஆடம்பரமானதும் ஆன ஒரு அறையை ஏற்பாடு செய்தார். அந்த அரசர் அந்த இளைஞனோடு சென்றார். அவனுக்கு வேண்டிய உணவு வகைகளை ஏற்பாடு செய்தார். அவன் தூங்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்தார். மேலும், அவன் தூங்கப் போனவுடன், ஜனகர் போய்விட்டார்.

ஆனால், அந்த இளைஞன் அன்று இரவு முழுவதும் தூங்கவில்லை. ஏனெனில், அவன் மேலே பார்த்த போது, அவனது தலைக்கு மேலே ஒரு கூர்மையான வாள் ஒன்று வெறுமனே ஒரு மெல்லிய நூலில் கட்டி தொங்கவிடப்பட்டிருப்பதை அவன் பார்த்தான். இப்போது, இது மிகவும் ஆபத்தானது; எந்த நேரத்திலும் அந்த வாள் கீழே அறுந்து விழுந்து அந்த இளைஞனைக் கொன்றுவிடலாம். ஆகவே, அவன் அன்று இரவு முழுவதும் விழித்துக் கொண்டும், கவனித்துக் கொண்டும் இருந்தான். அப்போது தான், அந்த பேராபத்தைத் தவிர்க்க முடியும் என்று நினைத்தான். அடுத்த நாள் காலையில், அரசர் அவனிடம், "அந்த படுக்கை சுகமானதாக இருந்ததா, அந்த அறை வசதியாக இருந்ததா?" என்று கேட்டார்.

அதற்கு அந்த இளைஞன், "வசதியா! எல்லாமே வசதியாக இருந்தது. ஆனால், அந்த வாள் எதற்கு? நீங்கள் ஏன் இந்த தந்திரத்தை நடத்தினீர்கள்? இது மிகவும் கொடூரமானது! நான் மிகவும் களைத்துப் போயிருந்தேன். மேலும், நான் காட்டில் உள்ள எனது குருவின் ஆஸ்ரமத்திலிருந்து அதிக தூரம் கால்நடையாகவே நடந்து வந்திருந்தேன். ஆனால், நீங்களோ இப்படிப்பட்டதொரு கொடூரமான நகைச்சுவையை அரங்கேற்றிவிட்டீர்கள். இது என்ன வேலை? ஒரு மெல்லிய நூலில் உறையில்லாத வெறும் வாளை தொங்கவிட்டு விட்டீர்கள். எனவே, ஒரு சிறு காற்று அடித்தாலும்கூட போதும், நான்

காலியாகிவிடுவேன். நான் இங்கு தற்கொலை செய்து கொள்வதற்காக வரவில்லை," என்று பதில் கூறினான்.

அந்த அரசர் அவனிடம், "நான் உன்னிடம் ஒரே ஒரு விஷயத்தை மட்டும் கேட்க விரும்புகிறேன். நீ மிகவும் களைப்பாக இருந்தாய். எனவே, நீ சுலபமாக தூங்கிப் போயிருக்கலாம். ஆனால், உன்னால் தூங்க முடியவில்லை. என்ன நடந்தது! அங்கிருந்த ஆபத்து மிகப்பெரியது. அது, வாழ்வா அல்லது சாவா என்ற கேள்வி போன்றது. ஆகையினால் தான் நீ விழிப்புணர்வுடன், உஷாராக இருந்தாய். இது தான் எனது போதனையும் கூட நீ போகலாம். அல்லது, என்னைக் கவனிப்பதற்கு இன்னும் கொஞ்ச நாட்கள்கூட நீ இருந்துவிட்டுப் போகலாம்.

நான் எனது அரச சபையில் உட்கார்ந்து கொண்டிருந்தாலும் கூட, அங்கு அழகான பெண் நாட்டியமாடிக் கொண்டிருந்தாலும் கூட, நான் எனது தலைக்கு மேல் தொங்குகின்ற அந்த உறையில்லாத வெறும் வாளைப் பற்றி நான் உஷாராக இருந்தேன். அது கண்களுக்குத் தெரியாதது; அதன் பெயர் மரணம். நான் அந்த இளம் பெண்ணைப் பார்க்கவில்லை. உன்னால் அந்த அறையின் ஆடம்பரத்தை அனுபவிக்க முடியாமல் போனதைப் போல, நானும் மதுவை குடிக்க முடியவில்லை. எந்த நேரத்திலும் வரக்கூடிய அந்த மரணம் குறித்து நான் விழிப்புணர்வுடன் இருந்தேன். நான் இடைவிடாமல் தொடர்ந்து அந்த மரணம் பற்றிய விழிப்புணர்வுடனேயே இருக்கிறேன். எனவே, நான் இந்த அரண்மனையில் வாழ்ந்தாலும்கூட, நானும் ஒரு துறவி தான். உனது குருவிற்கு என்னைப் பற்றி தெரியும். மேலும், அவர் என்னைப் புரிந்து கொண்டவர். அவருக்கு எனது புரிதல்களும் தெரியும். அதனால் தான் அவர் உன்னை இங்கு அனுப்பி வைத்திருக்கிறார். நீ இன்னும் கொஞ்ச நாட்களுக்கு இங்கே தங்கினால், நீ சுயமாக அதையெல்லாம் கற்றுக் கொள்ளலாம்," என்று கூறினார்.

இன்னும் அதிக விழிப்புணர்வுடன் இருப்பது எப்படி என்று அறிந்து கொள்வதற்கு நீங்கள் விரும்புகிறீர்களா? வாழ்க்கையின் நிலையற்ற தன்மை குறித்து விழிப்புணர்வுடன் இருங்கள். மரணம் எந்த நேரத்திலும் நிகழலாம். அடுத்த நொடியேகூட அது உங்கள் கதவைத் தட்டலாம். நீங்கள் எப்போதும் உயிர் வாழப் போகிறீர்கள் என்று நினைத்துக் கொண்டிருந்தால், நீங்கள் விழிப்புணர்வு இல்லாமல் தான் இருக்க முடியும். ஆனால், மரணம் எப்போதும் மிக அருகில் இருக்கிறது என்றால், அதன் பிறகு, உங்களால் அந்த மரணத்தைப் பற்றி விழிப்புணர்வு இல்லாமல் எப்படி வாழ முடியும்? வாழ்க்கை என்பது



ஒரு நொடிப் பொழுதைப் போன்றும், ஒரு நீர்க்குமிழி போன்று இருந்தால், ஒரு குண்டூசி கொண்டு அந்த நீர்க்குமிழியைக் குத்தினால் போதும், அது இல்லாமல் போய்விடும். அப்படி இருக்கும் போது, உங்களால் எப்படி விழிப்புணர்வு இல்லாமல் இருக்க முடியும்?

எனவே, ஒவ்வொரு செயலிலும் விழிப்புணர்வை கொண்டு வாருங்கள். உங்களுக்குள் இரண்டு தளங்கள் உள்ளன. ஒன்று, மனம் என்னும் தளம். இரண்டாவது, மனம் என்பது இல்லாமல் இருக்கும் தளம். அல்லது, நான் இப்படியும் கூட சொல்லலாம். அதாவது, நீங்கள் உங்களது இருப்பின் மேற்பரப்பில் இருக்கும் தளம். அதே போன்று, நீங்கள் உங்களது இருப்பின் மையத்தில் இருக்கும் தளம்.

ஒவ்வொரு வட்டத்திற்கும் மையம் உண்டு. இதை நீங்கள் அறிந்திருக்கலாம் அல்லது இதை நீங்கள் அறியாமலும் இருக்கலாம். அந்த வட்டத்திற்கு மையமே கிடையாது என்று நீங்கள் சந்தேகம் கூட படலாம். ஆனால், அதற்கு ஒரு மையம் இருந்தாக வேண்டும். நீங்கள் ஒரு மேற்பரப்பு, நீங்கள் ஒரு வட்டம். எனவே, அங்கே ஒரு மையம் இருக்கிறது. அந்த மையம் இல்லாமல் நீங்கள் இருக்க முடியாது. உங்களது உயிரின் கரு அங்கே உள்ளது.



**உங்களது மையத்தில், நீங்கள் ஏற்கனவே ஒரு புத்தராக, ஏற்கனவே வீடு பேற்றினை அடைந்தவராக இருக்கிறீர்கள். மேற்பரப்பில், நீங்கள் இந்த உலகில் இருக்கிறீர்கள். மேற்பரப்பில் நீங்கள் இந்த மனதில், கனவுகளில், ஆசைகளில், கவலைகளில், இப்படி ஆயிரத்தோரு விளையாட்டுகளில் இருக்கிறீர்கள். மேலும், நீங்கள் என்பது இந்த இரண்டும் தான்.**



உங்களது மையத்தில், நீங்கள் ஏற்கனவே ஒரு புத்தராக, ஏற்கனவே வீடு பேற்றினை அடைந்தவராக இருக்கிறீர்கள். மேற்பரப்பில், நீங்கள் இந்த உலகில் இருக்கிறீர்கள். மேற்பரப்பில் நீங்கள் இந்த மனதில், கனவுகளில், ஆசைகளில், கவலைகளில், இப்படி ஆயிரத்தோரு விளையாட்டுகளில் இருக்கிறீர்கள். மேலும், நீங்கள் என்பது இந்த இரண்டும் தான்.

ஒரு சில நொடிப்பொழுதுகள் நீங்கள் ஒரு புத்தர் போல இருப்பதை நீங்கள் கண்டு கொள்கின்ற அந்த தருணங்கள், வாழ்வில் கண்டிப்பாக இருந்தே தீரும். புத்தரின் அந்த அதே கருணை, அதே

விழிப்புணர்வு, அதே அமைதி, அதே அழகு நிறைந்த உலகம், அதே ஆசீர்வாதங்கள், அதே வரப்பிரசாதங்கள் இருந்தே தீரும். இப்படி உங்களது சொந்த மையத்தைப் பற்றிய காட்சிகள் அங்கே இருந்தே தீரும். ஆனால், அவைகள் நிரந்தரமாக இருக்காது; மீண்டும் மீண்டும் நீங்கள் உங்களது வெளிப்பரப்பிற்கு திரும்பவும் தள்ளப்பட்டு விடுவீர்கள். அப்போது, நீங்கள் ஒரு முட்டாள் போன்றும், துக்கமாகவும், விரக்தியுடனும், வாழ்க்கையின் அர்த்தத்தை தவறிவிட்டவர் போன்றும் உணர்வீர்கள். ஏனெனில், நீங்கள் இப்படி இரண்டு தளங்களிலும், மேற்பரப்பு என்னும் தளத்திலும், மையம் என்னும் தளத்திலும் இருக்கிறீர்கள்.

போகப் போக, நீங்கள் மேற்பரப்பில் இருந்து மையத்திற்கும், மையத்திலிருந்து மேற்பரப்பிற்கும் மென்மையாக நகர்ந்து செல்லக்கூடிய நீங்கள், எப்படி உங்களது வீட்டிற்குள் போய் மீண்டும் திரும்ப வெளியே வருகிறீர்களோ, அதைப் போன்று உங்களால் போய்வர முடியும். நீங்கள் அப்போது எந்தப் பிரிவினையையும் உருவாக்குவதில்லை."நான் வீட்டிற்கு வெளியே அல்லவா இருக்கிறேன். எனவே, எப்படி என்னால் வீட்டிற்குள் போக முடியும்?" என்று கூறுவதில்லை. "நான் வீட்டிற்கு உள்ளே அல்லவா இருக்கிறேன். அப்படி இருக்கும் போது, என்னால் எப்படி வீட்டுக்கு வெளியே போக முடியும்?" என்று நீங்கள் கூறுவதில்லை. வெளியே சூரிய ஒளியுடன், கதகதப்பாக, மனதுக்கு இன்பமாக இருக்கும் போது, நீங்கள் வெளியே தோட்டத்தில் அமர்கிறீர்கள். அதன்பிறகு, வெயில் மேலும் மேலும் அதிகமாகி, உங்களுக்கு வியர்த்துக் கொட்டுகிறது. அப்போது, அது மனதிற்கு இதமாக இருப்பதில்லை; அதில் சுகம் இருக்காது. எனவே, நீங்கள் எழுந்து, வீட்டின் உட்பக்கம் சென்றுவிடுகிறீர்கள். அங்கே குளிர்ச்சியாக இருக்கும்; அங்கே அசௌகரியமாக இருக்காது. இப்போது, வீட்டின் உள்ளே மனதிற்கு இதமாக இருக்கும். இப்படி நீங்கள் உள்ளேயும், வெளியேயும் நகர்ந்து கொண்டு இருக்கிறீர்கள்.

இதே போன்று தான், விழிப்புணர்வும், புரிதலும் உடைய ஒருவன் மேற்பரப்பில் இருந்து மையத்திற்கும், மையத்தில் இருந்து மேற்பரப்பிற்கும் நகர்ந்து செல்கிறான். அவன் ஒருபோதும் எங்கேயும் நிலையாக இருப்பதில்லை. சந்தைக் கடையில் இருந்து சாமியார் மடத்திற்கும், வெளிமுகமாகச் செல்வதிலிருந்து உள்முகமாகச் செல்வதற்கும், அவன் தொடர்ந்து நகர்ந்து கொண்டே இருப்பான். ஏனெனில், இவைகள் இரண்டும் அவனது சிறகுகள். சிறகுகள் ஒன்றுக்கொன்று எதிரானவை அல்ல. அவைகள் எதிர் எதிர் திசைகளில் இருந்தாலும், அவைகளால் சமநிலையிலும் இருக்க முடியும். அவைகள்



இருந்தாக வேண்டும். இரண்டு சிறகுகளும் ஒரே பக்கத்தில் இருந்தால், இந்த பறவை வானத்தில் பறக்க முடியாது. அவைகள் சம நிலையில் இருக்க வேண்டும். அவைகள் எதிர் எதிர் திசையில் தான் இருக்க வேண்டும்; ஆனாலும்கூட, அவைகள் அதே பறவைக்குத் தான் சொந்தமானவை. மேலும், அவைகள் அதே பறவைக்குத் தான் சேவை செய்கின்றன. உங்களது அகமும், உங்களது புறமும் தான் உங்களது சிறகுகள்.

இதை நீங்கள் மிகவும் ஆழமாக நினைவில் கொள்ள வேண்டும். ஏனெனில், மனம் என்பது ஏதோ ஒரு பக்கத்தில் நிலைபெற்று இருப்பதற்கு முயற்சி செய்யும், அதற்கான சாத்தியங்கள் உள்ளது. சந்தைக் கடையிலேயே நிலைத்து நின்றுவிடுகின்ற மக்களும் இருக்கிறார்கள். அதை விட்டுவிட்டு அவர்களால் வரமுடியவில்லை என்று அவர்கள் கூறுவார்கள். தியானம் செய்வதற்கு அவர்களுக்கு நேரம் இல்லை என்று கூறுவார்கள். அப்படியே அவர்களுக்கு நேரம் இருந்தாலும், அவர்களுக்கு எப்படி தியானம் செய்வது என்று தெரியாது என்றும், அவர்களாலும் தியானம் செய்ய முடியும் என்கிற நம்பிக்கை அவர்களுக்கு இல்லை என்றும் கூட அவர்கள் கூறுவார்கள். அவர்கள், உலக இன்பங்களில் மூழ்கி இருப்பதால், அவர்களால் எப்படி தியானம் செய்ய முடியும்? என்று கூறுவார்கள். "துரதிருஷ்ட வசமாக, நாங்கள் எங்களது மனதை எப்போதும் வெளி விவகாரங்களில் திருப்புபவராகவே இருந்து வருகிறோம். எனவே, எப்படி எங்களால் உள்முகமாக திரும்ப முடியும்?" என்பார்கள். அவர்கள் ஒரே ஒரு சிறகினை மட்டுமே தேர்வு செய்திருக்கிறார்கள். மேலும், நிச்சயமாக அதனால் அவர்களுக்கு விரக்தி வருகிறதென்றால், அது இயற்கையானது தான். ஒரு சிறகு மட்டுமே இருந்தால் விரக்தி தான் வரும்.

**விழிப்புணர்வும், புரிதலும் உடைய ஒருவன் மேற்பரப்பில் இருந்து மையத்திற்கும், மையத்தில் இருந்து மேற்பரப்பிற்கும் நகர்ந்து செல்கிறான். அவன் ஒருபோதும் எங்கேயும் நிலையாக இருப்பதில்லை. சந்தைக் கடையில் இருந்து சாமியார் மடத்திற்கும், வெளிமுகமாகச் செல்வதிலிருந்து உள்முகமாகச் செல்வதற்கும், அவன் தொடர்ந்து நகர்ந்து கொண்டே இருப்பான். ஏனெனில், இவைகள் இரண்டும் அவனது சிறகுகள். சிறகுகள் ஒன்றுக்கொன்று எதிரானவை அல்ல.**

அதன் பின்னர், இன்னொரு வகை மனிதர்கள் இருக்கிறார்கள். அவர்கள் இந்த உலகத்தோடு விரக்தி அடைந்துவிட்டதால், இதை விட்டுவிட்டு தப்பி ஓடி, இமயலையில் உள்ள சாமியார் மடங்களுக்குப் போய் சந்நியாசி ஆகிவிடுவார்கள். அவர்கள் துறவிகள் ஆகி, தனிமையில் வாழ்ந்து கொண்டு, அவர்கள் மீது உள்முகமான ஒரு வாழ்க்கையைத் திணித்துக் கொள்வார்கள். அவர்கள், தங்களின் கண்களை மூடிக்கொள்வார்கள். அவர்கள் எல்லா கதவுகளையும், ஜன்னல்களையும் மூடிக் கொள்வார்கள். அவர்கள், லெபினிஸ்ஸின் ஜன்னல்கள் அற்ற மோனாட் போன்று ஆகிவிடுவார்கள். அதன்பிறகு, அவர்களுக்கு சலிப்பு ஏற்பட்டுவிடும்.

சந்தைக் கடையில் இருக்கும் போது, அவர்கள் களைப்புடனும், விரக்தியுடனும் இருப்பார்கள். அது, கிட்டத்திட்ட ஒரு பைத்தியக்கார வீடு போன்று ஆகிவிடும். அவர்களால் ஒய்வு என்பதைக் காண முடியாது. அங்கே தொடர்புகள் அளவுக்கு அதிகமாக இருக்கும். மேலும், போதுமான விடுமுறை கிடையாது. அவர்கள், அவர்களாகவே இருப்பதற்குப் போதிய இடம் அங்கு இருக்காது. அவர்கள், தங்களது ஆன்மாவை இழந்து கொண்டு, பொருட்களின் மீது விழுந்து கிடப்பார்கள். அவர்கள் மேலும் மேலும் உலக இன்பத்தை நாடுபவர்களாகவும், ஆன்மீகத்தை குறைவாக நாடுபவர்களாகவும் இருப்பார்கள். அவர்கள், தங்களின் திசைகளை இழந்துவிடுவார்கள். அவர்கள் உயிரோடு இருக்கிறார்கள் என்கிற தன்னுணர்வையே இழந்து விடுவார்கள். இதனால், அவர்கள் அதிலிருந்து தப்பி ஓடிச் செல்கின்றனர். இதில் விரக்தி அடைந்து அவர்கள் தப்பித்துச் செல்கின்றனர். இப்போது, அவர்கள் தனிமையில் வாழ முயற்சி செய்கின்றனர். உள்முகமாகச் செல்லும் ஒரு வாழ்க்கையை வாழ விரும்புகின்றனர். இதிலும், கூடிய விரைவில் சலிப்படைகின்றனர். அவர்கள் திரும்பவும் அடுத்த ஒரு சிறகை மட்டுமே தேர்வு செய்துவிட்டனர். ஆனால், திரும்பவும் ஒரே ஒரு சிறகு மட்டுமே தேர்வு செய்யப்பட்டுள்ளது. இப்படிப்பட்ட வழியில்தான், அவர்கள், வாழ்க்கையை தலைகீழாக கவிழ்த்துவிட்டனர். அவர்கள் மீண்டும் எதிர்துருவம் என்னும் அதே தவறில் மீண்டும் விழுந்துவிட்டனர்.

நான் இதற்காகவும் இல்லை, அதற்காகவும் இல்லை. நீங்கள் சந்தைக் கடையில் இருந்தாலும் கூட, அங்கேயும் தியானத்துடன் இருக்கின்ற திறமையை நீங்கள் பெற்றுக் கொள்ள வேண்டும் என்று நான் கூற விரும்புகிறேன். நீங்கள் மக்களோடு உறவு கொண்டு, அன்பு செலுத்தி, லட்சக்கணக்கான உறவுகளை ஏற்படுத்தி வாழ வேண்டும் என்று விரும்புகிறேன். ஏனெனில், அந்த உறவுகள் உங்களை



செழிப்பாக்கும். என்றாலும்கூட, சில சமயங்களில் இந்த உறவுகளுக்கெல்லாம் விடுமுறை அறிவித்துவிட்டு, உங்களது கதவுகளை மூடிக்கொண்டு, அதன்மூலம் உங்களது ஆன்மாவுடன் தொடர்பு கொள்ளும் தகுதி பெற்றவராகவும் நீங்கள் இருக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

மற்றவர்களோடு தொடர்பு கொள்ளுங்கள். ஆனால், அதே சமயம் உங்களோடும் தொடர்பு கொள்ளுங்கள். மற்றவர்களை நேசியுங்கள்; ஆனால், உங்களையும்கூட நேசியுங்கள். வெளியில் செல்லுங்கள்! இந்த உலகம் அழகானது, வீரதீர விளையாட்டுகள் நிறைந்தது; இது ஒரு சவால், இது உங்களை செழிப்பாக்கும். இந்த சந்தர்ப்பத்தைத் தவறவிட்டு விடாதீர்கள். இந்த உலகமானது, உங்களது கதவைத் தட்டி உங்களை அழைக்கும் போது, வெளியே செல்லுங்கள். பயப்படாமல் வெளியே செல்லுங்கள். அங்கே இழப்பதற்கு ஒன்றும் இல்லை; அங்கே எல்லாமே லாபம் தான். ஆனால், அதிலேயே மூழ்கி காணாமல் போய்விடாதீர்கள். சில சமயம் உங்களது வீட்டிற்கு வாருங்கள். சில சமயம் இந்த உலகை மறந்துவிடுங்கள். அது தான் தியானம் செய்யும் நேரம். ஒவ்வொரு நாளும் நீங்கள் சமநிலையில் இருக்க விரும்பினால், நீங்கள் உங்களது அகத்தையும், புறத்தையும் சமம் செய்ய வேண்டும். அவைகள் இரண்டும் சம அளவிலான எடைகளைத் தான் சுமக்க வேண்டும். அப்படி இருந்தால், நீங்கள் ஒருபோதும் கவிழ்ந்துவிட மாட்டீர்கள்.

"நதியில் நடந்து செல்லுங்கள். ஆனால், நதிநீர் உங்களது பாதங்களைத் தொடுவதற்கு அனுமதிக்காதீர்கள்," என்று ஜென் குருமார்கள் கூறுவதன் அர்த்தம் இதுதான். இந்த உலகில் இருங்கள்; ஆனால், இந்த உலகமாகவே இருந்துவிடாதீர்கள். இந்த உலகத்தில் இருங்கள்; ஆனால், இந் உலகம் உங்களுக்குள் இருப்பதற்கு அனுமதிக்காதீர்கள். நீங்கள் வீட்டிற்கு வந் உடன், ஏதோ, இந்த உலகமே மறைந்துவிட்டது போன்று எண்ணிக் கொண்டு நீங்கள் வீட்டில் இருங்கள்.

ஹோட்டாய் என்னும் ஜென் குரு, ஒரு கிராமத்தின் வழியாகப் போய்க் கொண்டிருந்தார். இந்த பூமியில் நடந்த மனிதர்களிலேயே மிகவும் அழகான மனிதர்களில் அவரும் ஒருவர். மக்களுக்கு, அவர் சிரிக்கும் புத்தர் என்று அறிமுகமானவர். அவர் எப்போதும் சிரித்துக் கொண்டே இருப்பார். ஆனால், சில சமயம் அவர் மரத்தின் அடியில் உட்கார்ந்துவிடுவார். இந்த கிராமத்திலும் அவர் கண்களை மூடிக் கொண்டு, ஒரு மரத்தின் அடியில் உட்கார்ந்துவிட்டார். சிரிக்கவில்லை, புன்சிரிப்புகூட இல்லை, முழு அமைதியுடன் இருந்தார். யாரோ அவரிடம், "ஹோட்டாய் நீங்கள் சிரிக்கவில்லையே?" என்று கேட்டார்.

அவர் கண்களைத் திறந்து கொண்டு, "நான் அதற்கு தயாராகிக் கொண்டிருக்கிறேன்," என்று கூறினார்.

கேள்வி கேட்டவருக்கு புரிந்து கொள்ள முடியவில்லை. எனவே, அவர் மீண்டும், "இப்படி, தயாராகிக் கொண்டிருக்கிறேன் என்று நீங்கள் கூறுவதன் அர்த்தம் என்ன?" என்று கேட்டார்.

அதற்கு ஹோட்டாய், "சிரிப்பதற்கு நான் என்னைத் தயார் செய்ய வேண்டும். நான் எனக்கு கொஞ்சம் ஓய்வு கொடுக்க வேண்டும். நான் எனக்குள் செல்ல வேண்டும். இந்த முழு உலகையும் நான் மறந்துவிட வேண்டும். அப்போது தான், நான் என்னுள் இருந்து திரும்பவும் புத்துயிருடன் வெளியே வந்து, என்னால் மீண்டும் சிரிக்க முடியும்," என்று பதில் கூறினார்.

உண்மையிலேயே, நீங்கள் சிரிக்க விரும்பினால், நீங்கள் அழுவது எப்படி என்பதைக் கற்றுக் கொள்ள வேண்டும். உங்களால் அழ முடியாது என்றால், உங்களுக்கு கண்ணீர் வராது என்றால், உங்களால் சிரிக்கவும் முடியாது. சிரிக்கின்ற ஒரு மனிதன், அழுகின்ற ஒருவனாகவும் இருப்பான். அப்போது தான், அந்த மனிதன் சமநிலையில் இருக்க முடியும். பேரானந்தத்தில் இருக்கின்ற ஒரு மனிதன், அமைதியான மனிதனாகவும் இருப்பான். பரவசத்தில் இருக்கின்ற ஒருவன், தனது மையத்தில் இருப்பவனாகவும் இருப்பான். அவைகள் இரண்டும் ஒன்றாகவே செல்பவை. இப்படிப்பட்ட இரு துருவங்களின் ஒற்றுமையின் மூலம், ஒரு சமநிலையில் உள்ள உயிர் பிறக்கும். மேலும், அது தான் நமது இலக்கு ஆகும்.



# நூல் ஆசிரியரைப் பற்றி

ஓஷோவின் போதனைகள் பிரிவுகளை மறுக்கின்றன. அவரது போதனைகளில் சமுதாயமானது இன்று எதிர்நோக்கியுள்ள அதி அவசரம் மிகுந்த சமூக மற்றும் அரசியல் பிரச்சனைகள் குறித்த தனிமனித தேடுதல் முதற்கொண்டு எல்லா விஷயங்களும் உள்ளன. அவரது புத்தகங்கள் எழுதப்பட்டவை அல்ல. ஆனால் முப்பத்தைந்து ஆண்டு காலம் சர்வதேச பார்வையாளர்கள் மத்தியில் அவர் சொற்பொழிவாற்றிய ஒலி மற்றும் ஒளிப்பதிவுகளில் இருந்து அவரது புத்தகங்கள் ஒலி மாற்றம் செய்யப்பட்டுள்ளன.

லண்டனில் இருந்து வெளிவருகின்ற சண்டே டைம்ஸ் (Sunday Times) என்னும் பத்திரிக்கை ஓஷோ அவர்களை இருபதாம் நூற்றாண்டை உருவாக்கிய ஆயிரம் மனிதர்களில் ஒருவராக விவரிக்கிறது. மேலும் அமெரிக்க நூலாசிரியராகிய டாம் ராபின்ஸ் (Tom Robbins) ஓஷோ அவர்களை இயேசுவிற்கு பின்னர் மிகவும் அபாயகரமான மனிதர் என்று விவரிக்கிறார்.

ஓஷோ தனது சொந்த செயல்பாடுகளைப் பற்றி கூறும்போது ஒரு புதுவிதமான மனித இனம் பிறப்பதற்கான சூழ்நிலைகளை உருவாக்குவதற்கு உதவிக் கொண்டிருப்பதாகக் கூறுகிறார். அவர் அடிக்கடி இந்த புதிய மனித இனத்தை ஜோர்பா என்னும் புத்தர் (Zorba the Buddha) என்று குணாதிசயப்படுத்தியுள்ளார். அவரது புதிய மனித இனமானது கிரேக்கத்தின் ஜோர்பாவைப் போன்று இவ்வுலக இன்பங்களையும், கௌதம புத்தரைப் போன்று ஆழ்ந்த அமைதி நிலையையும் ஆகிய இந்த இரண்டையும் அனுபவிக்கின்ற தகுதியுடையதாக இருக்கும் என்கிறார். கீழை நாட்டின் காலத்தை வென்ற ஞானமும், மேலை நாட்டின் விஞ்ஞானம் மற்றும் தொழில்நுட்பத்தின் அதி உயர்ந்த சக்தியும் ஆகிய இரண்டையும் ஒன்று சேர்க்கின்ற தொரு பார்வை அவரது செயல்களில் எல்லாப் பரிமாணங்களிலும் ஒரு நூல் போல் எல்லாவற்றையும் கோர்த்துக் கொண்டு செல்கிறது.

அவசர வேகத்தில் ஓடிக்கொண்டிருக்கின்ற இந்த நவீன வாழ்க்கை முறையை ஏற்றுக்கொண்டு அதற்குரிய தியான அணுகுமுறைகளை வகுத்ததன் மூலம் நவீன மனிதனின் அக மாற்றத்திற்கான விஞ்ஞானத்திற்கு புரட்சிகரமான பங்களிப்பை ஆற்றியவராகவும் ஓஷோ அறியப்படுகிறார். அவரது சுறுசுறுப்பூட்டும் தியானங்கள் (Active Meditations) மனிதனின் உடல் மற்றும் மனம் ஆகியவற்றில் சேர்ந்துள்ள அழுத்தங்களை முதலில் வெளியேற்றுகின்ற வகையில் வடிவமைக்கப்பட்டுள்ளன. அதனால் எண்ணங்களே இல்லாத தியானத்தின் அமைதி நிலையை அவர்கள் அனுபவிப்பது சுலபமாகி விடுகிறது.

# ஓஷோ சர்வதேச தியானிகள் கூடுமிடம்

அதிக விழிப்புணர்வு, ஒய்வு மற்றும் வேடிக்கையுடன் ஆக்கிக் கொள்கின்றதொரு இடமாக ஓஷோ சர்வதேச தியானிகள் கூடுமிடம் உள்ளது. இந்தியாவில் மும்பையின் தென்கிழக்கே நூறுமைல் தூரத்தில் உள்ள புனேயில் அமைந்துள்ள இந்த இடம், ஒவ்வொரு ஆண்டும் உலகம் முழுவதும் நூற்றுக்கு மேற்பட்ட நாடுகளில் இருந்து வருகின்ற ஆயிரக்கணக்கான மக்களுக்கு விதம் விதமான தியான நிகழ்ச்சிகளை அளிக்கிறது.

ஆரம்பத்தில் மகாராஜாக்களுக்கும், பிரிட்டிஷ் காலனி ஆதிக்கத்தின் செல்வந்தர்களுக்குமான ஒரு கோடை வாசஸ்தலமாக உருவாக்கப்பட்ட புனே தற்போது உயர் தொழில் நுட்ப தொழிற்சாலைகளும் அநேக பல்கலைக் கழகங்களும் நிறைந்துள்ள ஒரு நவீன நகரமாக மாறிக் கொண்டிருக்கிறது. கோரே கான் பார்க் (Koregaon Park) என்ற மரங்கள் சூழ்ந்த நகர்ப்பகுதியில் 40 ஏக்கர் நிலப்பரப்பில் இந்த இடம் உள்ளது. இந்த ரிசார்ட் வளாகத்திற்குள் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையில் உள்ள விருந்தினர்களுக்கே தங்குமிடம் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. மேலும் ரிசார்ட்டின் அருகில் அநேக விதத்திலான ஹோட்டல்களும், தனியார் அடுக்குமாடி வீடுகளும் சில நாட்கள் முதல் சில மாதங்கள் வரை தங்குவதற்கு கிடைக்கும்.

ஒவ்வொரு நாளும் நாம் நமது வாழ்க்கையில் படைப் பாற்றலுடனும் அதேசமயம் அமைதி, தியானம் ஆகியவற்றில் ஒய்வுடனும் குணத்தளவில் வாழ்கின்ற தகுதி பெறக்கூடிய ஒரு புதிய மனிதனை உருவாக்குகின்ற ஓஷோவின் பார்வையை அடிப்படையாகக் கொண்டே இந்த ரிசார்ட்டில் எல்லா தியான நிகழ்ச்சிகளும் வடிவமைக்கப் பட்டுள்ளன. அநேக நிகழ்ச்சிகள் நவீன குளிர்சாதன வசதிகள் நிறைந்த இடங்களில் நடக்கின்றன. அந்த நிகழ்ச்சிகளில் படைப்பாற்றல் கலைகள் முதல் முழு ஆரோக்கிய சிகிச்சைகள் வரை பலவிதமான தனிப்பட்ட நிகழ்ச்சிகளும், வகுப்புகளும், பட்டறைகளும் நடைபெறுகின்றன. மேலும் குழுசிகிச்சைகளும், ஆன்மீக விஞ்ஞான நிகழ்ச்சிகளும், விளையாட்டு மற்றும் பொழுது போக்கில் ஜென் அணுகுமுறைகளும், உறவுகள் சம்பந்தமான பிரச்சனைகளும் மற்றும் ஆண், பெண் இருவரின் வாழ்க்கையில் சிறப்பான மாறுதலைத் தரக்கூடிய நிகழ்ச்சிகளும் நடக்கின்றன. ஆண்டு முழுவதும் தனிப்பட்ட நபருக்கான நிகழ்ச்சிகளும், குழுக்களுக்கான பட்டறைகளும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. இதோடு கூட ஒரு நாள் முழுவதற்குமான தியான நிகழ்ச்சிகளும் நடைபெறுகின்றன.

ரிசார்ட் வளாகத்தில் உள்ள திறந்த வெளி உணவு விடுதியில் கம்யூனின் சொந்த விவசாலப் பண்ணையில் இயற்கை விவசாய முறையில் விளைவிக்கப்பட்ட காய்கறிகளினால் தயாராகின்ற இந்திய உணவு வகைகளும், சர்வதேச உணவு வகைகளும் கிடைக்கின்றன.

இந்த வளாகத்திற்குள் கம்யூனுக்கு என்று தனிப்பட்ட சொந்தமான பாதுகாக்கப்பட்ட சுத்திகரிக்கப்பட்ட குடிநீர் விநியோகமும் உள்ளது.

ஓஷோ மற்றும் அவரது செயல்பாடுகள் குறித்து மேலும் விபரங்களுக்கு www.osho.com பாருங்கள்.

இது பல்வேறு மொழிகளை உள்ளடக்கிய ஒரு வலைத்தளம். இதில், தியான ரிசார்ட்டின் வலைதள சுற்றுலா, இங்கு நடக்கின்ற தியான வகுப்புகளின் நாட்காட்டிகள், புத்தகங்கள் மற்றும் ஒலி நாடாக்களின் அட்டவணை, உலகம் முழுவதும் உள்ள ஓஷோ தகவல் மையங்களின் பட்டியல் மற்றும் ஓஷோவின் சில குறிப்பிட்ட சொற்பொழிவுகளும் இடம் பெற்றுள்ளன.

# தமிழ்நாட்டில் உள்ள ஓஷோ மையங்கள்

சென்னை : ஓஷோ கிளிம்ஸ், 23, திருவீதி அம்மன் கோவில் தெரு
ஆர்.கே. நகர், மந்தைவெளி பஸ் ஸ்டாண்ட் அருகில்,
சென்னை - 600 028

திருச்சி : ஸ்வாமி மோகன் பாரதி
ஓஷோ தர்மதீர்த்தா சன்யாஸ் ஆஸ்ரமம்
48 & 51, ஜாபர்ஷா தெரு
திருச்சி - 620 006

கோவை : ஓஷோ ப்ரேம் வீணா தியான மையம்
206, கௌதம் ஆர்கேட்
திருவெங்கடசாமி ரோடு (கிழக்கு)
கோவை - 641 002

திருப்பூர் : ஓஷோ சாஸ்வத் தியான மையம்
32, இராயபுரம் மெயின் ரோடு
திருப்பூர் - 641 601
www.osho_tamil.com

# இணைப்பு

1. மூல ஒலி வடிவத் தொகுப்புகள் பற்றிய தகவல்:

ஓஷோவின் நூல்கள் அவர் மக்கள் கூட்டத்திற்கு நேரடியாய் நிகழ்த்திய போதனைகளில் இருந்து எடுக்கப்பட்ட நகல்கள் ஆகும். ஓஷோவின் போதனைகள் யாவும் புத்தகங்களாய் வெளியிடப்பட்டிருப் பதோடு, பதிவு செய்யப்பட்ட ஒலி வடிவங்களாயும் கிடைக்கின்றன. பதிவு செய்த ஒலி வடிவங்கள் பற்றியும், புத்தக மூலாதாரப் பதிவேடுகள் பற்றியும் ஓஷோ நூலகத்தில் தகவல்கள் கண்டறிய முடியும். தகவல்களைப் பெற இணைய முகவரி www.osho.com

2. ஓஷோவைப் பற்றி:

தனி நபரின் செயல்நோக்கத் தேடலில் இருந்து இன்றைய சமுதாயம் எதிர்கொண்டிருக்கும் உடனடியான சமூக, அரசியல் பிரச்சினை கள் வரை ஒவ்வொன்றையும் பிரதிபலித்து, துணிச்சலாய் எதிர்த்து நின்றிருக்கிறார்.

அக உருமாற்ற விஞ்ஞானத்திலும், சமகால வாழ்வின் துரிதகதியைப் பேசும் தியானத்திலும் ஓஷோவின் புரட்சிகரமான பங்களிப்பு ஒரே மாதிரிதான்.

உடலிலும், மனதிலும் வளர்ந்து பெரிதாகும் உளைச்சலை (Stress) வெளியேற்ற இடமளிக்கும் வகையில் ஓஷோவின் அரிதான செயல் திறன் கொண்ட தியானங்கள் (Active Meditations) வடிவமைக்கப்பட்டி ருக்கின்றன. அதனால், ஆழ்ந்த அமைதி காண்பதும், எண்ணங்களற்ற தியான நிலையை அடைவதும் எளிதாகிறது.

புதிதாய் ஒரு மனிதப்பிறவி தோன்றுவதற்கான நிலைமைகளை உருவாக்கித் தருவதையே தம்முடைய குறிக்கோளாய்க் கொண்டிருந்தார் ஓஷோ. அந்த மனிதனை 'புத்த ஸோர்பா' (Zorba the Buddha) என்றும், அவனுடைய பாதங்கள் மண்ணில் அழுந்த ஊன்றியிருக்கும், கைகள் விண்வெளியில் நட்சத்திரங்களைத் தொட்டுக் கொண்டிருக்கும் என்றும் அவர் வர்ணித்தார். ஓஷோவின் அனைத்து நோக்கு முறைகளிலும் அனாதியான (Timeless) கிழக்கத்திய விவேகத்தையும், மேற்கத்திய விஞ்ஞான தொழில்நுட்ப ஆற்றலையும் உள்ளடக்கிய ஒரு பார்வை இருக்கிறது.

அந்தப் பார்வையின் காட்சிப் பரப்பெல்லையை நாம் புரிந்துகொண்டு வாழ்வில் செயற்படுத்தும் பட்சத்தில், அது மனித இனப் பண்பையே முழுமையாய் மாற்றக்கூடியதாகும்.

ஓஷோவின் நூல்கள் எழுதப்பட்டவையல்ல. அவர் முப்பத்தைந்து ஆண்டு காலத்தில் முன்னேற்பாடின்றி மக்களிடையே நிகழ்த்திய உரைகளிலிருந்து எழுத்து வடிவம் பெற்றவையாகும்.

ஓஷோவை, 'இருபதாம் நூற்றாண்டை உருவாக்கிய ஆயிரம் பேரில் ஒருவர்' என்று 'சண்டே டைம்ஸ்' (Sunday Times - London) பத்திரிகையும், 'இந்தியாவின் தலையெழுத்தை மாற்றியமைத்த பத்து பேரில்– காந்தி, நேரு, புத்தர் உள்ளிட்டவர்களில் ஒருவர் என்று 'சண்டே மிட்–டே' (Sunday Mid-Day) பத்திரிகையும் விவரிக்கின்றன.

ஓஷோ தியான மையம்:

மக்கள் விழிப்புணர்வு, ஓய்வு, வேடிக்கை விளையாட்டு இவற்றுடன் கூடிய புதிய வாழ்க்கை முறையின் அனுபவத்தைப் பெற வேண்டும் என்பதற்காக ஓஷோ தியான மையம் தோற்றுவிக்கப்பட்டது. அது இந்தியாவில் மும்பைக்குத் தென்கிழக்காய் (100 மைல் தொலைவு) புனேயில், நீண்ட வரிசையாய் நிழல்தரு மரங்கள் அணிசெய்யும் 'கோரேகான் பார்க்' பகுதியில் (40 ஏக்கர் பரப்பளவு) அமைந்துள்ளது. ஆண்டுதோறும் நூறு நாடுகளில் இருந்து வருகைதரும் ஆயிரமாயிரம் மக்களுக்குப் பலவகை நிகழ்ச்சி நிரல்களை மையம் வழங்குகிறது. வருகை புரிவோர் தங்குவதற்கு வளாகத்திற்குள்ளாயமைந்த புதிய ஓஷோ விருந்தினர் இல்லத்தில் வசதிகள் உண்டு.

தியான மையத்தின் பல்வேறு நிகழ்ச்சிகளும் புகழ்பெற்ற 'ஸென் தோட்டப் பூங்கா'வை அடுத்த பிரமிடு காம்ப்ளக்ஸில் நடைபெறும். மக்களுக்குப் புதிய வாழ்க்கை முறையை வடித்துக் கொடுக்கும் சாதனங்களால் அந்த நிகழ்ச்சி வடிவமைக்கப்பட்டிருக்கும். அவற்றில் ஒன்று ஓய்வு சார்ந்த தெரிநிலை (Relaxed Awareness) ஆகும். அதுவே தங்கள் வாழ்க்கை நெடுகிலும் அவர்கள் தொடரக்கூடிய அணுகுமுறையும் ஆகும்.

சுயத்தைக் கண்டறியும் வகுப்புகள், அமர்வுகள் பயிற்சித் தொடர்கள், தியானச் செயல்முறைகள் இவை ஆண்டு முழுவதும் அளிக்கப்படுகின்றன. உடற்பயிற்சிக்கும், உடல்நலம் காக்கவும் ஒரு திறந்தவெளி அரங்கம் உள்ளது. அங்கே ஸென் அணுகுமுறையில் விளையாட்டுகளையும், பொழுதுபோக்கையும் செய்து பார்க்க முடியும்.



பிரதான தியான அரங்கில் செயல்திட்ட நேரம் காலை 6 மணி முதல் இரவு 11 மணி வரையில் ஆகும். இதில் சுறுசுறுப்பானது, அமைதியானது என இரு தியான முறைகள் இடம்பெறும். தினமும் மாலைத் தியானக் கூட்டத்திற்குப் பிறகு, பல்வேறு கலாசாரங்களைக் கொண்ட இம்மையத்தின் திறந்தவெளி உணவருந்தும் பகுதிகளில் நண்பர் குழாமுடன் ஆட்டமும் பாட்டமுமாய் இரவு வாழ்க்கை உயிர்த் துடிப்போடு காணப்படும்.

மையம் பாதுகாப்பான முறையில் சுயமாய் தயாரித்து வடிகட்டிய குடிநீரையும், மையத்தின் சொந்த நிலத்தில் பயிரிடப்பட்ட தாவர வகைகளில் தயாரிக்கப்பட்ட உணவையும் வழங்குகிறது.

தியான மையத்திற்கு நேரடிச் சுற்றுப்பயணம் மேற்கொள்வோர் தேவையான தகவல்களை www.osho.com தளத்தில் பெற முடியும்.

இது 'ஆன்லைன்' பத்திரிகை, ஒலிஒளியுடன் கூடிய தகவல்வகை (Web Casting), ஓர் ஆடியோ புக் கிளப், முழுமையான ஆங்கில இந்தி உரை சேமிப்புகள், ஓஷோ ஒலிஒளி, புத்தக வெளியீடுகளின் முழுமையான விலைப்பட்டியல் இவற்றுடனான விரிந்து பரந்த இணைய தளம் ஆகும். ஓஷோ அபிவிருத்தி செய்த செயல்மிக்க தியான உத்திகளும், ஆற்றொழுக்கு போன்ற ஒளிக்காட்சி (Video) விளக்கங்களும் இதில் அடங்கியுள்ளன.

தியான மையத்தில் பங்கேற்போர் விரிவான தகவல்களைப் பெற அன்பு கூர்ந்து தொடர்பு கொள்ளவும்:

**OSHO COMMUNE INTERNATIONAL**
17, KOREGAON PARK, PUNE-411001. M.S. INDIA.
Phone : 0204019999 Fax : 0204019990
E-Mail : visitor@osho.net Website : www.osho.com

# BOOKS BY OSHO

**(in English Language)**

**Early Discourses and Writings**

A Cup of Tea
Dimensions Beyond The Known
From Sex to Superconsciousness
The Great Challenge
Hidden Mysteries
I Am The Gate
The Inner Journey
Psychology of the Esoteric
Seeds of Wisdom
The Fish in the Sea is Not Thirsty
The Great Secret
The Guest
The Path of Love
The Revolution

**Meditation**

The Voice of Silence And Now and Here (Vol. 1 & 2)
In Search of the Miraculous (Vol. 1 &.2)
Meditation: The Art of Ecstasy
Meditation: The First and Last Freedom
The Path of Meditation
The Perfect Way
Yaa-Hoo! The Mystic Rose

**Buddha and Buddhist Masters**

The Book of Wisdom
The Dhammapada: The Way of the Buddha (Vol. 1-12)
The Diamond Sutra
The Discipline of Transcendence (Vol. 1-4)
The Heart Sutra

**Indian Mystics**

Enlightenment: The Only Revolution (Ashtavakra)
Showering Without Clouds (Sahajo)
The Last Morning Star (Daya)
The Song of Ecstasy (Adi Shankara)

**Baul Mystics**

The Beloved (Vol. 1 & 2)

**Kabir**

The Divine Melody
Ecstasy: The Forgotten Language

**Jesus and Christian Mystics**

Come Follow to You (Vol. 1-4)
I Say Unto You (Vol.1 & 2)
The Mustard Seed
Theologia Mystica

**Jewish Mystics**

The Art of Dying
The True Sage

**Western Mystics**

Guida Spirituale (Desiderata)
The Hidden Harmony (Heraclitus)
The Messiah (Vol 1 & 2)
(Commentaries on Khalil Gibran's The Prophet)
The New Alchemy: To Turn You On
(Commentaries on Mabel Collins' Light on the Path)
Philosophia Perennis (Vol. 1 & 2)
(The Golden Verses of Pythagoras)
Zarathustra: A God That Can Dance
Zarathustra: The Laughing Prophet
(Commentaries on Nietzsche's Thus Spake Zarathustra)

**Sufism**

Just Like That
Journey to the Heart
The Perfect Master (Vol. 1 & 2)
The Secret
Sufis: The People of the Path (Vol. 1 & 2)
Unio Mystica (Vol. 1 & 2)
The Wisdom of the Sands (Vol. 1 & 2)



**Tantra**

Tantra: The Supreme Understanding
The Tantra Experience
The Royal Song of Saraha
(same as Tantra Vision, Vol. 1 )
The Tantric Transformation
The Royal Song of Saraha
(same as Tantra Vision, Vol. 2)
The Book of Secrets: Vigyan Bhairav Tantra

**The Upanishads**

Behind a Thousand Names
(Nirvana Upanishad)
Heartbeat of the Absolute
(Ishavasya Upanishad)
I Am That (Isa Upanishad)
The Message Beyond Words (Kathopanishad)
Philosophia Ultima (Mandukya Upanishad)
The Supreme Doctrine (Kenopanishad)
Finger Pointing to the Moon (Adhyatma Upanishad)
That Art Thou (Sarvasar Upanishad, Kaivalya Upanishad, Adhyatma Upanishad)
The Ultimate Alchemy, Vol. 1&2
(Atma Pooja Upanishad Vol 1 &2)
Vedanta: Seven Steps to Samadhi
(Akshaya Upanishad)
Flight of the Alone to the Alone
(Kaivalya Upanishad)

**Tao**

The Empty Boat
The Secret of Secrets
Tao: The Golden Gate (Vol. 1&2)
Tao:The Pathless Path (Vol. 1&2)
Tao: The Three Treasures (Vol 1-4)
When the Shoe Fits

**Yoga:**

The Path of Yoga (previously)
Yoga: The Alpha and the Omega (Vol. 1)
Yoga: The Alpha and the Omega (Vol. 2-10)

**Zen and Zen Masters**

Ah, This!
Ancient Music in the Pines
And the Flowers Showered
A Bird on the Wing
Bodhidharma: The Greatest Zen Master
Communism and Zen Fire, Zen Wind
Dang Dang Doko Dang
The First Principle
God is Dead:
Now Zen is the Only Living Truth
The Grass Grows By Itself
The Great Zen Master Ta Hui
Hsin Hsin Ming: The Book of Nothing
I Celebrate Myself: God is No Where,
Life is Now Here
Kyozan: A True Man of Zen
Nirvana: The Last Nightmare
No Mind: The Flowers of Eternity
No Water, No Moon,
One Seed Makes the Whole Earth Green
Returning to the Source
The Search: Talks on the 10 Bulls of Zen
A Sudden Clash of Thunder
The Sun Rises in the Evening
Take it Easy (Vol. 1 & 2 )
This Very Body the Buddha
Walking in Zen, Sitting in Zen
The White Lotus
Yakusan: Straight to the Point of Enlightenment
Zen Manifesto: Freedom From Oneself
Zen: The Mystery and the Poetry of the Beyond
Zen: The Path of Paradox (Vol. 1, 2 & 3)
Zen: The Special Transmission
Zen Boxed Sets
The World of Zen (5 Vol.)
Live Zen
This. This. A Thousand Times This
Zen: The Diamond Thunderbolt
Zen: The Quantum Leap from Mind to No-Mind

Zen: The Solitary Bird, Cuckoo of the Forest
Zen: All The Colors of The Rainbow (5 Vol.)
The Buddha: The Emptiness of the Heart
The Language of Existence
The Miracle
The Original Man
Turning In

**Osho : On the Ancient Masters of Zen (7 volumes)**
Dogen: The Zen Master
Hyakujo: The Everest of Zen with Basho's haikus
Isan: No Footprints in the Blue Sky
Joshu: The Lion's Roar
Ma Tzu: The Empty Mirror
Nansen: The Point of Departure
Rinzai: Master of the Irrational
*(Each volume is also available individually)*

**Responses to Questions**
Be Still and Know
Come, Come, Yet Again Come
The Goose is out
The Great Pilgrimage: From Here to Here
The Invitation
My Way: The Way of the White Clouds
Nowhere to Go But In The Razor's Edge
Walk Without Feet, Fly Without Wings and Think Without Mind
The Wild Geese and the Water
Zen: Zest, Zip, Zap and Zing

**Talks in America**
From Bondage To Freedom
From Darkness to Light
From Death To Deathlessness
From the False to the Truth
From Unconsciousness to Consciousness
The Rajneesh Bible (Vol. 2-4)
**The World Tour**
Beyond Enlightenment (Talks in Bombay)
Beyond Psychology (Talks in Uruguay)
Light on the Path (Talks in the Himalayas)
The Path of the Mystic (Talks in Uruguay)
Sermons in Stones (Talks in Bombay)
Socrates Poisoned Again After 25 Centuries (Talks in Greece)
The Sword and the Lotus (Talks in the Himalayas)
The Transmission of the Lamp (Talks in Uruguay)

**Osho's Vision for the World**
The Golden Future
The Hidden Splendor
The New Dawn
The Rebel
The Rebellious Spirit

**The Mantra Series**
Hari Om Tat Sat
Om Mani Padme Hum
Om Shantih Shantih Shantih
Sat-Chit-Anand
Satyam-Shivam-Sundram

**Personal Glimpses**
Books I Have Loved
Glimpses of a Golden Childhood
Notes of a Madman

**Interviews with the World Press**
The Last Testament (Vol. 1)

**Intimate Talks between Master and Disciple - Darshan Diaries**
A Rose is a Rose is a Rose
Be Realistic: Plan for a Miracle
Believing the Impossible Before Breakfast
Beloved of My Heart
Blessed are the Ignorant
Dance Your Way to God
Don't Just Do Something, Sit There
Far Beyond the Stars
For Madmen Only
The Further Shore



Get Out of Your Own Way
God's Got A Thing about You
God is Not for Sale
The Great Nothing
Hallelujah!
Let Go!
The 99 Names of Nothingness
No Book, No Buddha, No Teaching, No Disciple,
Nothing to Lose but Your Head Only Losers Can Win in This Game.
Open Door
Open Secret
The Shadow of the Whip
The Sound of One Hand Clapping
The Sun Behind the Sun Behind the Sun
The Tongue-Tip Taste of Tao This Is It
Turn On, Tune In and Drop the Lot
What Is, Is, What Ain't, Ain't
Won't You Join The Dance?

**Compilations**
After Middle Age:
A Limitless Sky At the Feet of the Master
Bhagwan Shree Rajneesh:
On Basic Human Rights
Jesus Crucified Again, This Time in Ronald Reagan's America
Priests and Politicians: The Mafia of the Soul
Take it Really Seriously

**Gift Books of Osho Quotations**
A Must for Contemplation Before Sleep
A Must for Morning Contemplation
India My Love

**Photo books**
Shree Rajneesh:
A Man of Many Climates, Seasons and Rainbows through the eye of the camera Impressions...
Osho Commune International Photo-book

**Books about Osho**
Bhagwan : The Buddha for the Future by Juliet Forman
Bhagwan Shree Rajneesh: The Most Dangerous Man Since Jesus Christ by Sue Appleton
Bhagwan : The Most Godless Yet the Most Godly Man by Dr. George Meredith
Bhagwan : One Man Against the Whole Ugly Past of Humanity by Juliet Forman
Bhagwan : Twelve Days That Shook the World by Juliet Forman
Was Bhagwan Shree Rajneesh Poisoned by Ronald Reagan's America? by Sue Appleton.
Diamond Days With Osho by Ma Prem Shunyo

*For any information about Osho Books & Audio / Video Tapes please contact:*


**SADHANA FOUNDATION**
17 KOREGAON PARK, PUNE-411001, MS, INDIA
Phone: 0204019999 Fax: 0204019990
E-mail: distrib@osho.net Website: www.osho.com

## ஓஷோ (ரஜனீஷ்) நூல்கள்

| | |
|---|---|
| ♦ வார்த்தைகளற்ற மனிதனின் வார்த்தைகள் | 40.00 |
| ♦ ஓர் அற்புதப் புதையல் | 60.00 |
| ♦ வாழ்வு, அன்பு, மகிழ்ச்சி | 70.00 |
| ♦ கடவுள் உங்கள் உள்ளேதான் இருக்கிறார் | 80.00 |
| ♦ தேடுதலை நிறுத்துங்கள் தேடுவது கிடைக்கும் | 80.00 |
| ♦ தியானம் (Meditation) (60 தியான முறைகளும் விளக்கங்களும்) | 150.00 |
| ♦ மதவாதிகளும் அரசியல்வாதிகளும் | 50.00 |
| ♦ நான் ஒரு வெண்மேகம் | 60.00 |
| ♦ புதிய குழந்தை | 40.00 |
| ♦ நம்பிக்கை நட்சத்திரமாய்... | 35.00 |
| ♦ உயர்நிலை காட்டும் தந்த்ரா | 110.00 |
| ♦ மனதின் இயல்பும் அதைக் கடந்த நிலைகளும் | 60.00 |
| ♦ யாகூசான், ஞானத்திற்கு நேர்வழி | 90.00 |
| ♦ ஸென் பரவெளியின் பரவசங்களும் பாடல்களும் | 70.00 |
| ♦ தந்த்ரா – ஓர் உன்னத ஞானம் | 70.00 |
| ♦ தந்த்ரா அனுபவம் | 90.00 |
| ♦ மனிதனின் புத்தகம் | 200.00 |
| ♦ தாவோ ஒரு தங்கக் கதவு | 200.00 |
| ♦ ரகசியமாய் ஒரு ரகசியம் | 175.00 |
| ♦ வாழும் கலை | 70.00 |
| ♦ தியானம் என்பது என்ன? | 30.00 |
| ♦ கடவுள் இறந்துவிட்டார் ஸென்னே வாழ்கிறது | 140.00 |
| ♦ கால்கள் இன்றி நட; சிறகுகள் இன்றி பற; மனம் இன்றி நினை | 125.00. |



# விழிப்புணர்வு

தியானத்தின் விஞ்ஞான விளக்கம் முழுவதுமே மையப்படுதல், மையத்தை நோக்கி செல்லுதல், அங்கு நிலைகொள்ளுதல்,
அங்கு வசித்தல் என்பதைத் தவிர வேறொன்றுமல்ல. அதன்பிறகு முழுப் பார்வையும் மாறிப்போகும்.






ISBN: 978-81-8345-104-8
9788183451048


விழிப்

சமநிலை





ஓஷோ

புது வாழ்விற்கான பார்வைகள்



# விழிப்புணர்வு

தியானத்தின் விஞ்ஞான விளக்கம் முழுவதுமே மையப்படுதல், மையத்தை நோக்கி செல்லுதல், அங்கு நிலைகொள்ளுதல்,
அங்கு வசித்தல் என்பதைத் தவிர வேறொன்றுமல்ல. அதன்பிறகு முழுப் பார்வையும் மாறிப்போகும்.



கவிதா
பப்ளிகேஷன்


ISBN: 978-81-8345-104-8